# ஆழ்வார்கள் அருளிய
# திவ்யபிரபந்தப் பிரவாகம்



திருமதி. பிரேமா விநாயகம்

# ஆழ்வார்கள் அருளிய திவ்யபிரபந்தப் பிரவாகம்

AALWARGAL ARULEEYA
DIVYAPRABHANDA PRAVAAKAM
BY
Smt. PREMA VINAYAGAM

திருமதி. பிரேமா விநாயகம்

ஸ்ருதி பதிப்பகம்
26/29, தர்மராஜா கோயில் தெரு,
சைதாப்பேட்டை,
சென்னை - 600 015.
☎ 044-24359502

## நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | ஆழ்வார்கள் அருளிய திவ்யபிரபந்தப் பிரவாகம் |
| ஆசிரியர் | : | திருமதி. பிரேமா விநாயகம் |
| மொழி | : | தமிழ் |
| முதற் பதிப்பு | : | ஜுலை 2007 |
| தாள் | : | 11.6 கி.கி. வெள்ளைத் தாள் |
| நூல் அளவு | : | 1X8 கிரவுன் 12.5X18.5 செ.மீ |
| பக்கங்கள் | : | 398 பக்கங்கள் |
| எழுத்து | : | 11 புள்ளி |
| வெளியிடுபவர் & உரிமை | : | ஸ்ருதி பதிப்பகம்<br>26/29, தர்மராஜா கோயில் தெரு,<br>சைதாப்பேட்டை,<br>சென்னை - 600 015. |
| அச்சிட்டோர் | : | மூவேந்தர் அச்சகம்<br>இராயப்பேட்டை,<br>சென்னை - 600 014.<br>தொலைபேசி : 28351189 |

விலை : ரூ.100.00



இந் நூல்

திருமலை - திருப்பதி தேவஸ்தான

நிதி உதவியுடன் அச்சிட்டு வெளியிடப்படுகிறது

✱ நன்றி ✱

**This Book**
**is Printed and Published with the Financial assistance of Tirumala-Tirupati Devasthaanams**
**Thanks and Hail to**

LOARD VENKATESWARA.



**POIGAI ALWAR**
Thiruvekka (Kanchi)
Aippasi - Thiruvonam



**BOODHATH ALWAR**
Thirukadal Mallai
Aippasi - Avittam



**PEY ALWAR**
Thirumayilai
Aippasi - Sathayam



**NAMMALWAR**
Alwar Thirunagari
Vaikasi - Visakam



**MADURA KAVI ALWAR**
Thirukkolur
Chiththirai - Chiththirai



**KULASEKARA ALWAR**
Thiruvanjikalam
Masi - Punarvasu



**THIRUMAZHISAI ALWAR**
Thirumazhisai
Thai - Makham



**PERIYALWAR**
Sri Villiputtur
Aani - Swathi



**THIRUMANGAI ALWAR**
Thirunagari (Thirukkuraiyalur)
Karthikai - Karthikai



**SRI ANDAL**
Sri Villiputtur
Aadi - Pooram



**THONDAR ADIPPODI ALWAR**
Thirumandangudi
Margazhi - Kettai



**THIRUPPANALWAR**
Thiruworiyur
Karthikai - Rohini

SRI.



SRIMATHE RAMANUJAYA NAMAHA :



His Honliness Appan Parakala Ramanuja Embar Jeeyar Swami
Head and Managing Trustee : Sri Embar Jeeyar Mutt
**30, M.M. Koil Street, Sriperumbudur, Pin - 602 105.**
**Kanchipuram District, Cell : 999432 3397.**

# அணிந்துரை

மனிதனுக்கு அறிவு, அன்பு, அறம், ஆன்மீகம் இவை சீராக அமைய இறைவன் அருள் இன்றியமையாதது. விண்ணையும் மண்ணையும் இணைக்கும் அறிவும் அன்பும் அறனும் வாய்ந்த ஆன்மிக அருள் நெறியே ஆழ்வார்கள் நமக்கு நல்கிய தீதிலா நன்னெறி, ஸ்ரீ வைஷ்ணவம் அல்லது திருமால் நெறி.

தற்காலத்தில் திருமால் நெறி குறித்து நூல்கள் பல வெளிவந்த வண்ணம் உள. ஆயினும் சீரான சிந்தனையும் தெளிவான விளக்கம், சுருக்கம், இனிமை வாய்ந்தவை சிலவே. அவைகளுள் ஒன்றாக "ஆழ்வார்கள் அருளிய திவ்யபிரபந்தப் பிரவாகம்" என்னும் தலைப்பில் திருமதி. பிரேமா விநாயகம் எழுதியுள்ள இந்த நூலைக் குறிப்பிடலாம்.

நற்றமிழால் நூல் செய்து நாட்டை உய்வித்தவர்கள் முதலாழ்வார்கள் மூவர் : பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார். அவர்களை அடியொற்றித் தம் கருத்துக்களை வீறுடன் வெளியிட்டவர் திருமழிசைப்பிரான். அதனையே வேத ஆதாரங்களுடன் வைதிக நெறி பிறழாமல் தம்

"வேதத்தின் உட்பொருட் பொருள் நிற்கப் பாடி நெஞ்சினுள் நிறத்தினார்" என்பார் மதுரகவி.

நம்மாழ்வாரின் நால்வேத நூலுக்கு ஆறு அங்கமாக ஆறு திவ்யபிரபந்தங்களை வெளியிட்டார் கடைசி ஆழ்வார் திருமங்கைமன்னன். இடையில் குலசேகரர் இராமா வதாரத்தில் மண்டினார். அடுத்து பெரியாழ்வாரும் அவரது திருமகளார் ஆண்டாளும் கண்ணனிடம் நெஞ்சைப் பறிகொடுத்து ஆய்ச்சியர் ஆயினர். பிறகு வந்த தொண்டரடிப்பொடி அரங்கனைத் தவிர அர்ச்சையில் வேறு எவரையும் பாடவில்லை. கடைசி ஆழ்வார் கலியனுக்கு முன்னவரான திருப்பாணரோ, ஆண்டாளை போன்று அரங்கனின் அடிமுதல் முடி வரை ஆழ்ந்து அனுபவித்து, அதிலேயே ஒன்றிவிட்டார்.

பகவானின் மே ன்மையும், நீர்மையும் ஒருங் கிணைந்த திருமேனி (அர்ச்சை) அனுபவமே ஆழ்வார்களின் தலையாய நோக்காயிற்று.

பற்பல நுட்பமான தகவல்களையும் சீரான ஆய்வு நெறியில் சிந்தித்து ஆசிரியை இந்நூலை நமக்குத் தந்துள்ளார். வைணவ நெறியை ஓரளவு முழுமையாக அறிய இந்நூல் பெரிதும் உதவும். ஒவ்வொரு வைணவரிடம் இந்நூல் இருப்பது அவசியம். வியந்து பாராட்டத்தக்க வைணவப்பணி இது.

அநேக மங்களா சாசனங்கள்

**A.P.R. எம்பார் ஜீயர்**

*Justice E. Padmanabhan*

Senior Advocate
(Former Madras High Court Judge &
Judicial Member APTEL)

## வாழ்த்துரை

ஆசிரியர் திருமதி. பிரேமா விநாயகம் பக்தியுடனும், பணிவுடனும் ஆய்ந்து எழுதியுள்ள "ஆழ்வார்கள் அருளிய திவ்ய பிரபந்தப் பிரவாகம்" என்னை பெரும் வியப்பில் ஆழ்த்திவிட்டது. ஆசிரியருக்கு வாய்ப்புக்கு நன்றி தெரிவிப்பதுடன் அவர் படைப்பை எவ்வளவு பாராட்டினாலும் தகும் என்பது எனது பணிவான கருத்து.

ஆசிரியரின் கல்வி, குடும்பப்பின்னணி, அவரது குடும்ப அலுவல்களை நினைத்துப் பார்க்கின், இந்த நூல் உயர்வர உயர் நலம் உடையவன் அருளால்தான் பிரவாகமாக வந்துள்ளது என்று கூறுவது மிகையாகாது.

நூலில், ஆசிரியரின் உயரிய கருத்துக்கள் சொல்லாடல், சொல் அமைப்பு, சொல்வார்ப்பு, சொல் அழகு, திறனாய்வு, வர்ண ஆய்வு, வைணவர்களின் உயரிய பழக்கவழக்கங்கள், சிவவிஷ்ணு அபேத விளக்கம், ஆழ்வார்களின் வாழ்வு நெறிமுறைகள் மற்றும் பக்திப்பிரவாகம், திருவுக்கும் திருவாகிய செல்வர்கள் பற்றிய விளக்கங்கள், ஆழ்வார்களின் காலத்து பாடல்களில் உள்ள சரித்திரம், இலக்கிய நயம் முதல் இலக்கிய கொள்ளை ஈராகவும், அக்கால ஸ்ரீவைஷ்ணவர்களின் நேர்மைத் திறமை, காவிய இனிமை, கருத்தாழமான திராவிட வேதம் பற்றிய விளக்கங்கள், ஆழ்வார்களின் வாழ்வு, வரலாறு, அவதரித்த தலவரலாறு, அதன் மகிமை, நீர்ப்பாயல் மற்றும் பல அரும் சொல்லின் பொருள் விளக்கம், எழினி ஆதனின் பிறந்த ஊர், தமிழ் செய்த மாறனவர்கள், பரமபதத்து எல்லை, தவப்பயன், மரணபலம், தனப்பிரயோஜனம், வேடர்களுடன் வேடரானவன், ஆதிவராக சேத்திரம் என்னும் திருவேங்கடத்தின் மூன்று பிரிவுகள் எவை, பிரச்சினைகளை உண்டாக்கி தீர்த்து வழிகண்ட தேவர்கள், இராமானுஜரின் ஆலய சீர்த்திருத்தம், எம்பெருமான் சாதி சமய

வேறுபாடற்றவன், எண்ணிலடங்கா ஞானக் கருத்துக்கள், விவரங்கள், பிரபந்தங்களின் விளக்கங்கள், மயர்வறமதிநலம் அருளிய அருள் செயல்கள், அவன் அமுது செய்த மிச்சம் உண்ணப் பெறவியலாதது பாவம் என்ற ஆழ்வார் கருத்தையும் பிரஞானக் கருத்துக்களையும் உளமார உன்னதமாக்கிய இந்நூலை ஆசிரியர் படைத்துள்ளது எல்லோராலும் பாராட்டத் தக்கது.

மிகக் குறைத்துக் கூறினும், இது ஒரு சிறந்த ஆராய்ச்சி நூல். டாக்டர் பட்டம் வாங்கித் தரும் நூலாக அமைந்துள்ளது என்றால் மிகையன்று. ஆசிரியரின் படைப்பு எப்படி நோக்கினும் பயனுள்ள வியப்புமிகு படைப்பாகும். இந்நூலை படித்தபின் யாம் கண்டு கொண்டது இந்த ஆசிரியருக்கு எம்பெருமானின் அன்பு நெஞ்சமும் கட்டுப்பட்டுள்ளது. அவனது அருளும் பிரவாகிக் கின்றது என்ற ரகசியத்தை இந்நூலில் 357ம் பக்கம் படிக்கும்கால் தெரிந்து பிரமிப்பும் பூரிப்பும் கொள்கிறேன்.

ஆசிரியரின் நூல்பணி வைணவ ஆராய்ச்சிப்பணி மேலும் தொடரவும் ஆசிரியரையும், திரு.விநாயகம் அவர்களின் குடும்பமும் நீடூழி வாழ்ந்து இவ்வுலகத்தில் தொண்டு செய்யவும் வேண்டி பல்லாண்டு பாடி நிறைவு செய்கிறேன்.

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
சேவடி செவ்வி திருக்காப்பு"

அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதிவலத் துறையும் சுடராழியும் பல்லாண்டு
படைபோர்புக்கு முழங்கும் அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே

என்றும் அன்புடன் வாழ்த்தும்

14-6-2007 ஏ. பத்மநாபன்.

**முனைவர் த.அமிர்தலிங்கம்** எம்.ஏ., பி.எச்.டி.,

ஆசிரியர், "திருக்கோயில்" (ஓய்வு)
1, மகாலட்சுமி நகர்,
மதனந்தபுரம், போரூர்,
சென்னை - 600 116.

## வாழ்த்துரை

"வைணவ நூற்செல்வர்" என வைணவ மகாசங்கத்தால் பாராட்டப் பெற்றுள்ள திருமதி. பிரேமா விநாயகம் அவர்கள் எழுதியுள்ள "ஆழ்வார்கள் அருளிய திவ்வியபிரபந்தப் பிரவாகம்" எனும் இவ்வரிய நூல் மேலும் பல பட்டங்களை அவருக்குப் பெற்றுத்தரும் என்பதில் எனக்கு ஐயமில்லை.

இந்துமதத்தின் தொன்மை, வைணவ சமயத்தின் மேன்மை, ஆழ்வார் - ஆசாரியர் தம் பெருமை, அருளிச் செயல்களின் சீர்மை, திவ்விய தேசங்களின் மகிமை இவை அனைத்தையும் கண்முன் கொண்டு வந்து நிறுத்தும் ஒப்பற்றதோர் நூலை எழுதி வெளியிடுவதன் வாயிலாக நம் தமிழ்த் திருநாட்டிற்கு மகத்தான தொண்டினைச் செய்துள்ளார். "கருவிலே திரு" வாய்க்கப் பெற்ற நூலாசிரியர் திருமதி. பிரேமா விநாயகம் அவர்கள்.

மணிவிழா நிறைவினைக் கண்டுள்ள அம்மையார் மணியான இந்நூலை எழுதி வெளியிட்டுள்ள தொண்டினால் "மங்கையர்க்குத் தனி அரசி" என்று தெய்வச் சேக்கிழார் போன்ற "தொண்டர் சீர் பரவுவார்" போற்றும் பெரும் சிறப்பிற்குத் தம்மை முற்றிலும் தகுதியுள்ளவராய் ஆக்கிக் கொண்டுள்ள சீர்மை இந்நூலை ஒருமுறை படித்தாலே நமக்குத் தெரியவரும்.

"அவரவர் தமதம தறிவறி வகைவகை
அவரவர் இறையவர் எனஅடி அடைவர்கள்
அவரவர் இறையவர் குறைவிலர் இறையவர்
அவரவர் விதிவழி அடைய நின்றனரே"

என்பது நம்மாழ்வார் அருட்பாசுரம்.

உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன் எம்பெருமான் என்று வாழும் வைணவ அன்பர்களும் கொண்டாடும் வகையில் வைணவ சமயத்தையும், சைவ சமயத்தையும் இணைத்தே நூல் எழுதிச் செல்லும் பாங்கை அம்மையார் இந்நூலில் கையாண்டுள்ள திறம் யாவரும் வியந்து போற்றுதற்குரிய ஒன்றாகும்.

திருமங்கையாழ்வார், திருஞானசம்பந்தர் வாழ்க்கை அருஞ்சிறப்புகளை இவர் வடித்துள்ள பாங்கு யாவரும் போற்றுதல் திண்ணமாகும். திவ்விய பிரபந்தப் பாசுரங்களுக்கு இணையான தேவாரப் பாசுரங்களையும் இணைத்துக் காட்டியுள்ள இவர்தம் சமயப் பொறையும், சீர்மையும் யாவரும் கடைப்பிடிக்க வேண்டிய ஒன்றாகும்.

"மதப்புரட்சி செய்த மகான்" ஸ்ரீஇராமானுஜர் தம் அற்புதத்தை இந்நூலில் தெள்ளத் தெளிவாக விளக்கியுள்ள நூலாசிரியர் திருமதி. பிரேமா விநாயகம் அவர்களின் எழுத்தும், பொருளும் பலமுறையும் பயின்று இன்புறத் தக்கன. "அதிகாரம் பெற்ற அரசுகளாலும் செய்யமுடியாத பெரும் மத, சமுதாயப் புரட்சிகளை எல்லாம் தனிமனிதராக நின்று ஸ்ரீஇராமானுஜர் நிறைவேற்றினார்" என்ற முன்னுரையுடன் அவருடைய அற்புதத் தொண்டினை நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்தியுள்ளார் திருமதி. பிரேமா விநாயகம் அம்மையார்.

"திருமலைக்குச் செல்லும் வழி எது?" என ஏற்றம் இறைத்துக் கொண்டிருந்த குடியானவன் ஒருவனிடம் இராமானுஜர் வழி வினவ, அவனும் வழிகாட்ட, எளியவன் என நினையாமல் அவனையும் தரையில் நெடுஞ்சாண் கிடையாக இராமானுஜர் வழிபட்ட அற்புத நிகழ்ச்சி, இந்நூலைக் கற்பாரை நெகிழச் செய்வது உறுதி. "யாரோ ஒரு கீழ்க்குலத்தோனைத் தேவரீர் வணங்கலாமா?" என்று பாகவத கோஷ்டியார் வினவ அதற்கு ஸ்ரீஇராமானுஜர் "பக்தி சாதிக்கு அப்பாற்பட்டது, இந்தப் பரம பாகவதன் இன்று நமக்குப் பேருபகாரம் செய்துள்ளான். திருமலைக்கு வழிகாட்டியிருக்கிறான். மோட்சத்துக்கு வழி காட்டுகிறான் திருமலையான். அவனை அணுக நமக்கு வழிகாட்டுகிறான் இந்த பாகவதன். பகவானுக்கு வழி காட்டுகிறவன் ஆசார்யனாகிறான்" என்று உபதேசம் புரிந்ததை நமக்கு எடுத்துக்காட்டி இதுபோன்ற பல அற்புத நிகழ்ச்சிகளை எல்லாம் மிக அற்புதமாக விவரித்துக் காட்டியுள்ள நூலாசிரியர் திருமதி. பிரேமா விநாயகம் அவர்கள் தமிழ்கூறு நல்லுலகின் போற்றுதலுக்கு உரியவர் என்பதில் ஐயமில்லை.

இத்தகைய அருமையான நூலைத் திருப்பதி தேவஸ்தானத்தார் அங்கீகரித்துப் பாராட்டி இப்பயன்மிகு பக்திப் பேரானந்தப் பெருநூலை வெளியிட நிதியுதவி வழங்கியுள்ளதால் வைகுண்டவாசனான சீனிவாசப் பெருமானே திருமதி.பிரேமா விநாயகம் அம்மையாரின் திருத்தொண்டினை அங்கீகரித்து அருள் புரிந்துள்ளமை தெளிவாகும். "வேங்கடவனின் பெருமையை ஆழ்வாராலேயே உணர்த்த முடியாது என்று தலைக் கட்டும்போது பாவியேன் எங்ஙனம் கூற இயலும்?" என்ற அம்மையாரின் பக்திமிகு வாசகங்கள் கற்பாரையும் கசிந்துருக வைக்கின்றன.

"திருச்சாளக்கிராமம்" திவ்யதேசத்தின் பெருமையை அம்மையார் எடுத்துக்காட்டி, "முக்தி நாராயண சேத்திர சாளக்கிராமத்தலத்தில் இருந்து எங்கள் வீட்டில் வந்து அன்புடன் குடிகொண்டுள்ளார். ஜன்மாந்திர தொடர்பிருந்தால்தான் இப்படி அவரே தேடிவருவாரென்று இதைக் கண்ணுற்ற பெரியவர்கள் கூறினார்கள்" என்று அம்மையார் விவரித்திருப்பதைக் காணும் போது இவர்தம் உள்ளமும், இல்லமும் திருக்கோயிலாய் • திவ்யதேசமாய் சிறப்புற்று விளங்கும் தன்மையை நாம் உணரமுடிகின்றது.

வாழ்க அம்மையாரின் திருத்தொண்டு! மென்மேலும் இவைபோன்ற ஆன்மீக நூல்களைப் படைத்துச் சகல செல்வ நலங்களும், வளங்களும் சிறந்தோங்கி வாழவேண்டுமென எல்லாம் வல்ல வைகுந்தவாசன் பொன்னார் திருவடிகளைப் போற்றிப் பணிகின்றேன்.

அன்புள்ள,

**த. அமிர்தலிங்கம்.**

# முகவுரை

இப்புண்ணிய பாரதத்தில் பிறந்ததற்கு யான் நற்றவம் செய்த பேறாக கருதி என் உரையை எழுதுகிறேன்.

வைணவம் சங்ககாலத்திலேயே தமிழகத்தில் வேரூன்றி இருந்தது. "மாயோன் மேய காடுறை உலகம்" என்று தொல்காப்பியமும், "ஆய்ச்சியர் குரவை" மூலம் சிலப்பதிகாரமும் மாலின் மாண்பை போற்றுகின்றன. ஆக சங்க இலக்கியத்தை ஒட்டிய கால அளவையில் தொடங்கி, கி.பி.பத்தாம் நூற்றாண்டு வரையில் பரந்து விரிந்த கால எல்லையை அடிப்படையாகக் கொண்டு, தமிழகத்தில் பக்தி பனுவல்களாகவும், வரலாற்றுப் பெட்டகமாகவும் விளங்கும் அருள் அனுபவப் பெரும் பேற்று நூல்களே ஆழ்வார்கள் அருளிய "நாலாயிர திவ்யப் பிரபந்தம்" ஆகும்.

வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத வான் பொருளாகிய இறைவனை எளிய மக்களும் மனம் பதித்து வணங்கும் வண்ணம் அமைந்துள்ளது இப்பாசுரங்கள். இவர்களின் இந்த அனுபவப் பதிகங்கள் அனைவருள்ளத்திலும் இறைவனைக் காணவும், சிந்திக்கவும் வைக்கும் அற்புதப் பாடல்களாகும்.

இப்பிரபந்தங்கள் பற்றியும்; இதுபற்றிய வரலாற்று நூல்களை படித்துத் தெளிந்தேன். இவ்வரலாறு பற்றி அறிந்த ஆன்றோர்கள் அநேகம் பேர் இருப்பார்கள். ஆனால் தெரியாதவர்களும் இருப்பார்கள் அல்லவா? அவர்களும் தெரிந்து கொள்ள வேண்டுமென்று விரும்பினேன். வாழ்க்கைக்குப் பொருள் வேண்டும். நாம் வாழும் வாழ்க்கைக்கும் பொருள் வேண்டுமல்லவா? என்ற இடையறா சிந்தனையின் உந்துதலினால் இந்நூலை எழுதப் புகுந்தேன்.

ஸ்ரீ இராமபிரானுக்கு இலங்கை நோக்கிப் பாலம் கட்ட வானரசேனை முயற்சித்ததைப் பார்த்த சிறு அணிலும் தன்னால் முடிந்த சேவையை செய்ததாம். அதுபோல யானும் சிறு அணிலாக விழைந்தேன்.

எமக்கும் திருமலை பெருமானின் அநுக்கிரகம் ஒருசிறு துளியாவது இருக்கிறது போலும். திருமலை திருப்பதி தேவஸ்தானமே இந்நூலுக்கு அங்கீகாரம் அளித்த சேதியை அறிந்த போது ஒருநிமிடம் என்னை மறந்தேன். பெருமானை மானசீகமாக தரிசித்து மகிழ்ந்தேன்.

அரும்பாக முகிழ்க்கும் மொட்டு, மலர்ந்து மணம் வீசும் போது, தானும் மகிழ்ந்து, அனைவரையும் மகிழ்விக்கிறது அதன் வாசம். தெய்வீகத்தை உணரச் செய்கிறது. அதுபோலத்தான் வாழ்வில் ஆன்மீக உணர்வு முகிழ்ந்தவுடன் கொஞ்சம் கொஞ்சமாக இதயம் விரிகிறது. பிறகு மலர்ந்து மணம் வீசுகிறது. அதிலே ஆன்மீக மணம் மனம் பெற்றவர்க்கும் ஆனந்தம், சுற்றியுள்ளவர்களுக்கும் பேரானந்தம். அவர்கள் வாழும் சூழ்நிலையே தெய்வீக மாகிறது. இறைவன் நாமத்தைச் சொல்லிச் சொல்லி மனம் புனிதமாகிறது.

இத்தகுதிச் சான்றாக பெரும்பான்மையர்கள் நமக்களித்த முக்தி தரும் இப்பொக்கிஷத்தை, ஞானத் தமிழை, பக்தியை அடுத்து வரப்போகும் நம் அனைத்து சந்ததியினரும் பயன்பெற பேணிக்காப்பது நம் அனைவரின் கடமையாகும். "தெய்வமே மனுஷ ரூபானாம்" என்பார்கள். அது உண்மை. உயிர்நலம் கொடுத்த எம் பெற்றோர், வாழ்க்கை நலம் கொடுத்த எம்மை பெறாமல் பெற்றோர் பாதம் பணிந்து வணங்குகிறேன்.

இம்முயற்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்த பெரியோர்கள் திரு. P.K. சந்திரசேகரன், நிறுவனர், தெய்வீக இயல் இசை மன்றம் அவர்களுக்கும் திரு. அமிர்தலிங்கனார், (ஆசிரியர், திருக்கோயில் (ஓய்வு)) அவர்களுக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

வணக்கத்துக்குரிய சான்றோர் பெருமக்கள் இந் நூலுக்கு வாழ்த்துரை எழுதியது யான் பெற்ற பெரும் பேறாகக் கருதுகிறேன். மிக்க விருப்போடு எமது எழுத்துக்களுக்கு கணினி வடிவம் அளித்து உதவிய எம் மருமகள் திருமதி. ஜெயந்தி சுரேஷ்பாபு அவர்களுக்கும், இந்நூல் உருவாக, புத்தகமாக வெளிவர உறுதுணை புரிந்த எம் மகனார் வயலின் கலைஞர், திரு. வி. சுரேஷ்பாபு, மிருதங்கக் கலைஞர், திரு. பையூர் கோபால கிருஷ்ணன் அவர்களுக்கும் மிக்க நன்றி!

மிக சிறந்த முறையில் புத்தகத்தை உருவாக்கித் தந்த மூவேந்தர் அச்சகத்தாருக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதுபோல ஒவ்வொரு விதத்திலும் எமக்கு உறுதுணையாயிருந்த எம்மக்கள், குடும்ப உறுப்பினர்கள், நண்பர்கள் என அனைவருக்கும் மிக மிக நன்றி!!

பால் -- துவக்க நிலை என்றால்
நெய் -- பக்குவ நிலையாகும்.

யான் அப்பக்குவ நிலையை அடைய இன்னும் எத்தனை காலம் ஆகுமோ?

நன்றி!

இப்படிக்கு,
**திருமதி. பிரேமா விநாயகம்**

# பொருளடக்கம்

# ஸ்ரீ ராம ஜெயம்
# ஸ்ரீ வைணவம்

இந்து மதத்தின் ஒரு பிரிவான வைணவம் மிக உயர்ந்தது. காலங்கடந்த தொன்மை மிக்கது. ஆழமான பக்தி உணர்வும் நுணுக்கமான விளக்கங்களும் நடைமுறைப் படுத்திக் காட்டப்பட்ட தெய்வீக மணம் கமழும் பொலிவு பெற்றது. சரணாகதித் தத்துவம் எனப்படும் உயர்ந்த இலட்சியத்தைக் குறிக்கோளாகக் கொண்டது.

முழுமையாக அவனிடம் நமது ஜீவாத்மாவை சரணாகதிப் பண்ணிக் கொள்ளுதலே சரணாகதித் தத்துவம் ஆகும். இந்த ஜீவாத்மா உலகின் பிற காரியங்களுக்காக வந்ததன்று. பரமாத்மாவோடு ஐக்கியம் அடைவதற்கே, இந்த ஜீவாத்மா உலகில் பயணம் செய்கிறது. ஐக்கியம் அடைவதற்கு முதலில் சரண் புகுவதே முக்கியம். இவ்வித மான பாதையில் நமது ஜீவாத்மாவை செலுத்துவதற்கு ஒருவன் தெரிந்து கொண்டால் அந்த ஜீவாத்மாவிற்குப் பரமாத்மா காவலனாக வருவான்.

இதற்கு நிறைய உதாரணங்கள் கூறலாம். அவற்றுள் நடந்த சம்பவம் ஒன்றான இத்தொகுப்பினை மட்டும் பார்க்கலாம்.

எம்பெருமான் ஸ்ரீராமானுஜனின் சிஷ்யர்களில் பராசுரப்பட்டர் என்பவர் தலைசிறந்தவர் ஆவார். இப்பராசுரப்பட்டர், அவரது சிஷ்யரான நஞ்சியரும் ஒரு சமயம் திருவெள்ளறை என்னும் திருப்பதிக்குச் சென்று கொண்டிருந்தனர். கதிரவன் மறையும் நேரமாகிவிட்டதால் மேலும் பயணத்தைத் தொடர முடியாமல் பாதிரி என்னும் ஊரில் இரவு தங்க வேண்டியதாயிற்று. அவ்வூரில் உள்ள

ஒரு வேடுவன் வீட்டை அடைந்து இரவு தங்குவதற்கு இடம் வேண்டினர். இந்த இரு வைணவச் சான்றோர்களையும் கண்ட வேடன் மிகவும் மகிழ்ச்சியடைந்தான். அவர்களை வணங்கி இனிய முகத்துடன் வரவேற்றான்.

அவர்களுக்குத் தேனும், தினை மாவும், பாலும் கொடுத்து உபசரித்தான். அவற்றை உண்டு பசிநீங்கி அமர்ந்து ஓய்வு எடுத்தார் பட்டர். தனது சிஷ்யனை நோக்கி, இவ்வேடன் நமது பெருமை அறிந்தவனும் இல்லை, நாம் இவனுக்கு எந்த உதவியும் செய்யவும் இல்லை, நாம் இவனுடைய குடிசைக்கு வந்தோம் என்பதற்காக நம்மிடம் அன்பும் பக்தியும் கொண்டு உபசரித்தான். என்னே இவனது பக்தியும் பண்பும். இப்படித்தான் ஸ்ரீமந்நாராயணனும் தனது கருணையால், தன்னை பக்தியுடன் வணங்குபவர்களுக்கு அருள் செய்கின்றார். இவன் ஒரு சிறந்த திருமாலடியவன் என்று பாராட்டினார்.

பின்பு பட்டர் வேடுவனைப் பார்த்து, நீ இன்று வேட்டைக்குச் சென்ற இடத்தில் ஏதேனும் விஷேசம் உண்டா? என்று கேட்டார். வேடன் உண்டு என்று சொல்லி நடந்ததைச் சொல்ல ஆரம்பித்தான். நான் இன்று வேட்டைக்குப் புறப்படும் போது என் மகள் விளையாட ஒரு முயல் குட்டி வேண்டும் என்றாள். ஆனால் என் தாயோ வேட்டைக்குச் செல்லுமிடத்தில் எந்த ஒரு குட்டியையும் தாயிடமிருந்து பிரித்துவிடாதே என்று கூறி அனுப்பினாள். இருவர் வார்த்தைகளையும் கேட்டுக் கொண்டே வேட்டைக்குப் புறப்பட்டேன்.

இன்று நடுப்பகல் வரையிலும் எந்த ஒரு விலங்கும் பறவையும் வேட்டைக்கு கிடைக்கவில்லை. சாயங்காலம் வரையிலும் எந்த வேட்டையும் கிடைக்காமையால் சோர்வு அடைந்து வீடு திரும்பினேன். வழியில் ஒரு சிறு புதரில் இரு முயல் குட்டிகளைக் கண்டேன். விரைந்து சென்று அவற்றை

எடுத்துக்கொண்டு, மகள் விருப்பத்தை பூர்த்தி செய்து விடலாம் என்று மகிழ்வுடன் சிறிது தூரம் நடந்தேன்.

இரை தேடச் சென்ற முயல் புதரில் குட்டிகளைக் காணாமல் கதறியது. தாய் முயலின் குரலைக் கேட்ட என் கையிலிருந்த முயல் குட்டிகள் மறுகுரல் கொடுத்துக் கத்தின. குட்டிகளின் குரலைக் கேட்ட திசையில் ஓடிவந்த முயல் என் கையில் குட்டிகள் இருப்பதைக் கண்டது. அப்போது என் தாயார் சொன்ன "எந்த ஒரு குட்டியையும் தாயிடமிருந்து பிரித்து விடாதே" என்ற குரல் காதில் ஒலித்தது. இதற்கிடையில் தாய் முயல் என்னைச் சுற்றிச் சுற்றி வந்து கத்தியது. நான் என்ன செய்வது என்று புரியாமல் திகைத்து நின்றுவிட்டேன்.

என் மகளின் வேண்டுகோள், என் தாயின் அறிவுரை, முயலின் கதறல், குட்டிகளின் தவிப்பு இவை ஒவ்வொன்றும் மாறி மாறி என் மனத்தில் குழப்பத்தை உருவாக்கின. இதற்குள் தாய் முயல் என் காலடியில் விழுந்து, என் கால்களைப் பிராண்டித் தன் குட்டிகளை விட்டுவிடும்படிச் சொல்லாமல் சொல்லியது. இனியும் என் மனம் உறுதியாக இருக்க முடியவில்லை. மெழுகுபோல் மனம் உருகியது. என் கைகள் தளர்ந்தன. எனது கைகளின் பிடியிலிருந்து குட்டிகளைக் கீழே இறக்கி விட்டேன். குட்டிகள் மகிழ்ந்து தன் தாயிடம் ஓடின. இதைக் கண்டு முயல் பிரிந்த உயிர் மீண்டும் வந்ததைப்போல பெரிதும் மகிழ்ந்தது. தனது நன்றியைக் காட்ட என் மேல் குதித்துப் பிராண்டியது.

தனது நன்றியைத் தெரிவித்த முயல், குட்டிகளுடன் சேர்ந்து மகிழ்ந்து துள்ளிக் குதித்து ஓடியது என்று கூறி முடித்தான் வேடன்.

பகுத்தறிவு இல்லாத ஐயறிவுடைய முயல் சரணாகதித் தத்துவத்தை அறிந்ததில்லை. இயற்கையாகவே தனது குட்டிகளுக்காக வேடன் கால்களில் விழுந்தது. வேடனும் சரண்யத்தை (அதாவது தன்னை வந்தடைந்து காப்பாற்ற வேண்டுவதை) அறிந்தவனும் இல்லை. தன்னிடம் இயற்கையாகவே உள்ள கருணையினால் குட்டிகளை விட்டுவிட்டான். முயலின் செயலையும், வேடன் செயலையும் பெரிதும் பாராட்டினார் பட்டர். அவனது செயல், ஸ்ரீமந்நாராயணன் இராமவதார காலத்தில் தன்னைச் சரணடைந்த சுக்ரீவன், விபீடணன் ஆகியோரைக் காத்து இரட்சித்த செயலோடு ஒத்துள்ளது என்பதை எடுத்துக் காட்டினார்.

பிறப்பால் எளிய வேடுவக் குலத்தில் தோன்றியவன் ஆனாலும் செயலால் தெய்வத்தன்மை அடைந்தான் என்பதையும் விளக்கினார். எவன் ஒருவன் பிற உயிர்களையும் தன் உயிரினைப் போன்று காக்கின்றானோ, அவன்தான் மனிதன் என்றும், அவன் கடவுளால் விரும்பப்படுகிறான் என்றும், கொலைத் தொழில் புரிவது கொடிய பாவம் என்றும் விளக்கினார். இதைக் கேட்ட வேடன் மனம் திருந்தினான். இதனால் திருமாலைப் போலவும், வேடனைப் போலவும் நம்மைத் தஞ்சம் அடைந்தவர்களைக் காக்க வேண்டுமென்பதையும், கொலைத் தொழில் புரிவது இழிவானது என்பதையும் உணர்கின்றோம்.

"உடல் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்" என்ற ஆழ்வாரின் பாசுரப்படி எம்பெருமானும், வைணவச் சித்தாந்தங்களும் இரண்டறக் கலந்துள்ளன. வைணவச் சித்தாந்தத்தின் ஆழமான கருத்துக்களில் தூய்மையான பக்தியும், சாதி, சமய வேறுபாடற்ற தன்மையும் மிகச் சிறந்தவைகளாகும்.

# தூய்மையான பக்தி

இன்று உலக மக்களிடையே பலவிதமான மத நம்பிக்கைகள் காணப்படுகின்றன. இதில் வைணவ நம்பிக்கை தனித்தன்மை பெற்று மிளிர்கிறது. அதாவது வைணவர்கள் சரணாகதித் தத்துவத்தில் முழு நம்பிக்கை வைத்து உன்னிடம் சரண் புகுந்த எனக்கு வேறு புகலிடம் ஏது என்றும், "நின்னுளேனாய் யான் பெற்ற நம்மை இவ்வுலகினில் யார் பெறுவர்" என்ற ஆழ்வாரின் திருவுளக் கருத்தின்படியும் பெருமாள் (விஷ்ணு) ஒருவனே சர்வ தேவதைகளையும், சர்வ லோகங்களையும் படைத்தவன். அவனே சர்வ தேவதாலயம், அவன் ஒருவனே தங்கள் தெய்வம் என்று நம்பி அதனின்றும் சற்றும் பிறழாது, மறந்தும் புறந்தொழா மாந்தராய் வாழ்கின்றனர். வைணவக் கொள்கையைக் கொச்சைப்படுத்தாமல் அன்றுதொட்டு இன்றுவரை முறை வழுவாது பின்பற்றுகின்றனர். தினந் தோறும் திருவாராதனம் (நித்திய பூஜை) முடித்துவிட்டே உலகியல் கர்மங்களில் ஈடுபடுகின்றனர். வைணவச் சமயக் குறியீடான திருமண் தரித்துக் கொள்ளுதல், வைணவ அடியார்களின் பெயர்களையே தமக்கும், தம் குடும்பத்தில் உள்ளவர்களுக்கும் வைத்துக் கொள்ளுதல் வைணவ ஆச்சாரியார்கட்குப் பகவானுக்குச் சமமான அந்தஸ்து அளித்தல் போன்றவற்றில் சற்றும் தொய்வில்லாத பாரம்பரியத்தை விடாது பின்பற்றுகின்றனர்.

## சாதி சமய வேறுபாடற்றது

வைணவம் சாதி, சமய வேறுபாடற்றது. எவனொருவன் தன்னை விஷ்ணுவுக்கு அடிமை என்று நினைக்கிறானோ அவனே வைணவன். இக்கருத்துக்கு இயைந்தவர்கள் எக்குலத்தவராய் இருந்தாலும் அவர்கள் வைணவர்களே. மதத்துவேசம் என்பது இங்கு இல்லை. இதற்கு எத்தனையோ உதாரணங்கள் காட்டலாம். சிலவற்றை மட்டும் ஈண்டு காண்போம்.

1. இராமானுஜரின் ஆச்சார்யர்களுள் ஒருவரான திருக்கச்சி நம்பிகள் தாழ்குலத்தைச் சார்ந்தவர். அவர் உண்டு முடித்த எச்சில் இலையில் உண்பதே தனக்குப் பெரும்பாக்கியம் என்று கருதியவர் இராமானுஜர். ஆச்சார்ய லட்சணத்தை உலகுணரச் செய்ததே வைணவம்தான்.

2. ஸ்ரீரங்கத்தை முஸ்லீம்கள் கொள்ளையிட்டுச் சென்றபோது டில்லி பாதுஷாவினால் கொண்டு செல்லப்பட்ட ஒரு ரங்கநாதர் விக்கிரகத்தின்மீது பாதுஷாவின் மகள் மனதைப் பறிகொடுத்து அப்பெருமானிடமே அடைக்கலமாகி விட்டாள். பின்னால் அந்த விக்கிரகத்தை மீட்டுக் கொண்டு வந்தபோது பாதுஷாவின் மகளும் பிரிவாற்றாமை யால் பின்தொடர்ந்து வந்து அந்த ரங்கநாதனிடமே ஐக்கியமாகிவிட அப்பெண்ணுக்குத் துலுக்க நாச்சியார் என்றே பெயரிட்டுப் பெருமைப்படுத்திப் போற்றித் துதித்தனர் வைணவர்கள். இந்நிகழ்வை நினைவுகூறும் முகத்தான் ஸ்ரீரங்கத்தில் மார்கழி மாதம் நடைபெறும் ஏகாதசி திருவிழா பகல் பத்துத் திருநாளிலே உற்சவப் பெருமாளான நம் பெருமாள் முஸ்லீம் இனத்தவரைப்போன்று லுங்கி வஸ்திரம்

கட்டிக்கொண்டு இந்த துலுக்க நாச்சியாருக்கு காட்சி தரும் வழக்கம் தொன்றுதொட்டு இன்றும் நடந்து வருகிறது. துலுக்க நாச்சியாருக்கு எம்பெருமான் ஒருவனே புகலிடம். அவனின்றித் தனக்கு வேறு கதியில்லை என்ற (சரணாகதி பூண்ட) வைணவ சித்தி விளைந்ததால் ஆச்சாரியர் ஸ்தானத்தில் வைத்துத் தொழத்தக்கப் பெருமை பெறுகிறார்.

இதேபோன்று கர்நாடக மாநிலத்தில் உள்ள மேலக்கோட்டை திருநாராயணபுரத்தில் செல்லப் பிள்ளை பெருமாளிடம் இரண்டறக் கலந்த துலுக்க நாச்சியாரின் வரலாறும் மேற்படி நிகழ்வோடு ஒப்பு நோக்கத் தக்கதாகும்.

3. சிதம்பரத்திற்கு அருகே உள்ள ஸ்ரீமுஷ்ணத்தில் தீர்த்தவாரி கொண்டாடப்படும் இரண்டு தினங்களில் முஸ்லீம்கள் திருப்பாவை பாடிப் பரவசத்துடன் கலந்து கொள்கின்ற நிகழ்ச்சியும் வைணவத்தில் சாதி சமய வேறுபாடின்மையும் பரம்பொருள் ஒருவனே என்பதையும், சரணாகதியே ஆத்ம விமோசனம் என்பதையும் தெளிவாக்கு கின்றது.

4. அமெரிக்காவின் பாஸ்டன் நகரத்திலிருந்து வந்த கிறித்துவப் பாதிரியார் திருவட்டாறு திவ்ய தேசத்தின் (திருவட்டாறு — மலைநாட்டுப் பதிகளுள் ஒன்று) மாண்பினைப் புகழ்ந்து தனது பெயரை அனந்த சைதன்யர் என்று மாற்றிக் கொண்டு அங்கேயே நெடுங்காலம் வாழ்ந்ததும் எடுத்துக்காட்டத் தக்கதாகும்.

5. சைவத் திருக்கோயில்களில் பெருமாள் எழுந்தருளி யிருப்பதும், வைணவத் திவ்யதேசங்களில் சிவபிரானுக்குச் சன்னிதிகள் இருப்பதும் சைவ — வைணவ ஒற்றுமை கருதி உண்டாக்கப்பட்டதாகக் கூறினாலும் வைணவத்தின் கடவுளான விஷ்ணுவிடமிருந்து இவைகள் உண்டானவை என்ற தத்துவத்தைக் காட்ட வந்ததே ஆகும்.

பாண்டி நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்றான திருக்குறுங்குடியில் பெருமாளுக்குப் பக்கத்தில் சிவனும் நிற்கிறார். இங்கு தினந்தோறும் வழிபாடு நடைபெறும்போது சிவனுக்கும் பூஜைகள் நடந்தேறிவிட்டதா என்று கேட்கும் பாவனையில் இங்குள்ள ஜீயர் சுவாமிகள் "பக்கம் நின்ற பண்பர்க்குக் குறையாதும் உளதோ" என்று வினவுவார். குறையொன்றுமில்லை என்று பட்டர்கள் பதில் மொழிவர். இந்தச் சுவையான நிகழ்ச்சி இன்றும் நடைபெறுவதைக் காணலாம்.

6. இதேபோல் தொண்டை மண்டல திவ்ய தேசங்களில் சமய வேறுபாடற்ற நிலைமை நிலவுவதையும், சோழநாட்டுத் திவ்யதேசமான திருக்கண்ணங்குடியில் ஒரு நாளில் பெருமாள் விபூதி அணிந்து வருதலையும், விஷ்ணுவுக்கும் சிவனுக்கும் உள்ள தொடர்பினையும் இந்நூலில் பல ஸ்தலவரலாறுகளில் ஆங்காங்கே எடுத்தாளப் பட்டுள்ளமை வைணவம் சாதி, சமய வேறுபாடு கட்கு அப்பாற்பட்டதென்பதைத் தெள்ளிதின் விளக்கும்.

இதுபோன்ற உயர்ந்த கருத்துக்களைக் கொண்டது வைணவம்.

தொன்மை இந்தியாவில் ஒரு காலத்தில் வராஹ அவதார வழிபாடுகள் மட்டும் அதிகமாக இருந்ததென்று உணர முடிகின்றது. அதாவது ஸ்ரீராம, கிருஷ்ண, விபவ அவதாரங்களாக எம்பெருமான் மானிட ரூபத்தில் தோன்றுவதற்கு முன்பு உண்டான மச்ச, கூர்ம, நரசிம்ம, வராஹ அவதாரங்களில் வராஹ அவதார வழிபாடு மட்டுமே இந்தியா முழுவதும் மேன்மையுற்றிருந்ததாகச் சொல்லலாம்.

திருமலை, திருக்கடன்மல்லை என்னும் மாமல்லபுரம், திருவிடவெந்தை (திருவிடந்தை) தஞ்சை மாமணிக் கோவில், திருவில்லிபுத்தூர் ஆகியன வராஹத் தலங்களேயாகும். அதாவது இங்கெல்லாம் தற்போதுள்ள மூர்த்திகளின் வழிபாடும், தற்போதுள்ள அமைப்பிலான ஸ்தலங்கள் கட்டப்படுவதற்கு முன்பு வராஹ மூர்த்திகளும், வராஹ வழிபாடுகளும் மட்டும் இருந்தது என்பதை யாரும் மறுக்க முடியாது.

## வைணவப் புராணங்கள்

1. பதினெட்டுப் புராணங்களுள், கருட புராணம், நாரத புராணம், விஷ்ணு புராணம், பாகவத புராணம் ஆகியன விஷ்ணு, விஷ்ணுவின் தோற்றம், பல்வகைப்பட்ட அவதார நிலைகளைப்பற்றி பரக்கத் தெரிவிக்கின்றன. இதில் பராசர முனிவரால் இயற்றப்பட்ட விஷ்ணு புராணம் அனைவராலும் போற்றி வணங்கப்பட்டதாகும்.

2. வால்மீகியின் இராமாயணமும், வியாசரின் பாரதமும்.

3. செவ்வைச் சூடுவார் என்னும் புலவரால் வடமொழியிலிருந்து 5000 செய்யுட்கள் கொண்டதாக ஆக்கப்பட்ட பாகவத புராணம்.

4. அதிவீரராமபாண்டியன் என்னும் மன்னனால் விருத்தப் பாக்களால் இயற்றப்பட்ட நள சரிதம்.

5. வட மலையப்பர் என்பாரால் தமிழாக்கஞ் செய்யப்பட்ட மச்ச புராணம், கருட புராணம், வராஹ புராணம்.

6. பகவத் கீதை.

7. மகாகவி காளிதாசரின் 2480 செய்யுட்கள் கொண்ட ரகுவம்சம் (இதனை அரிகேசரி என்பார் தமிழ்ப்படுத்தியுள்ளார்).

8. இராமானுஜரின் விசிஷ்டாத்வைதம் மற்றும் இவராக்கிய பிற நூல்கள்.

9. வேதாந்த தேசிகரின் குரு பரம்பரை பிரபாவமும் மற்றும் அவரருளிய பிற நூல்களும்.

10. மணவாள மாமுனிகளின் உபதேச ரத்தினமாலை.

11. பிள்ளைப் பெருமாளையங்காரின் அஷ்ட பிரபந்தம்.

12. அருளாளப் பெருமாளின் ஞான சாரம், பிரமேய சாரம், சப்த காதை, மாறனகப் பொருள், திருப்பதிக் கோவை.

13. நாலாயிரத் திவ்யப்பிரபந்தம்.

14. துளசி இராமாயணம், கம்ப இராமாயணம், வில்லி பாரதம்.

15. பாரத வெண்பா எனப்படும் சங்க காலத்து நூலான பெருந்தேவனாரின் பாரதம்.

16. ஆழ்வார்களின் பாசுரங்கட்கு அருளப்பட்ட வியாக்யானங்கள்.

17. முமூச்சப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசனபூஷணம், ஆச்சார்ய ஹ்ருதயம் என்னும் நூல்கள்.

18. ஆங்காங்கே கிடைக்கும் ஸ்தல புராணங்கள்.

இத்தகைய நூல்களால் அறியப்படும் வைணவம்தான் ஆத்மாவிற்கு மோட்சத்தை அடைய பாதை காட்டும் வழிகாட்டிகளாகும்.

# அவதார தரிசனம்

## ஓம் நமோ நாராயணா
## விஷ்ணு

இவனே இறைவன். இவனே சகல ஜீவராசிகளுக்கும், தேவர்கட்கும், சகல லோகங்களுக்கும் ஆத்மாவாக இருப்பவன். "சர்வம் விஷ்ணுமயம் ஜகத்". இந்த மகாவிஷ்ணு பரமபதத்தில் அமர்ந்த திருக்கோலத்தில் எந்நேரமும் நித்தியசூரிகளால் பல்லாண்டிசைக்க சகல லோகங்களையும் காத்தருள்கிறான்.

இவர் உலகு படைப்பதற்காகவும், பக்தர்கட்காகவும் தம்மை ஐந்து வடிவங்களில் உண்டாக்கித் தரிசனம் தருகிறார் என்பது மரபு. அவைகள் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அருச்சை என ஐந்து வகைப்படும். இதனை விரிவுறக் காணலாம்.

### பரம்

பரமபத்தில் திருமகள், மண்மகள் எனப்படும் பூமாதேவி, நீளாதேவி என்ற தேவிமார்களுடன் எழுந்தருளியிருக்கிறார். இங்கு பகவானுக்கோ, மற்றவர்கட்கோ, பசி, தாகம், தூக்கம், துக்கம், அயர்வு என்பன கிடையாது. இங்குள்ளவர்களையே நித்ய சூரிகள் என அழைப்பதுண்டு. இவர்கள் அத்தம்பதிகளின் அழகிலும் கல்யாணக் குணங்களிலும் ஈடுபட்டு எப்போதும் அவர்களைச் சாம கானத்தில் புகழ்ந்துகொண்டு ஆனந்தித்திருப்பர். அத்தம்பதிகளோ இவர்களின் சேர்த்தியில் ஆனந்தம் கொண்டிருப்பர். இவ்வுலகிற்குப் பாட்டுக் கேட்கும் உலகு என்று பெயர்.

## வியூகம்

ஸ்ரீமந்நாராயணன் பரமபதமாகிய இந்த வைகுண்டத்திலிருந்து புறப்பட்டு வெள்ளையந்தீவு என்று சொல்லப்படும் சீராப்தி என்ற பாற்கடலில் பக்தர்களின் தரிசனத்திற்காகவும் தன்னைக் கீழ்கண்ட வியூகமாகப் பிரித்து ஆதிசேடனின் படுக்கையில் திருமகளும், பூமகளும் திருவடி வருட யோக நித்திரை செய்து அறிதுயிலமர்ந்த நிலையில் உள்ளார். இதைத்தான் "உறங்குவதுபோல யோகு செய்து" என்பார் நம்மாழ்வார்.

இந்த வியூகத்தில் (வியூகம் என்றால் விரிவு படுத்துதல் எனப் பொருள்)

கிழக்கு நோக்கிச் சிரிப்புடன் கூடிய வாசுதேவனாகவும்
தெற்கு நோக்கிச் சிங்கமுகம் கொண்ட சங்கர்ஷனனாகவும்
வடக்கு நோக்கிய வராகமுகம் கொண்ட பிரத்யுமனனாகவும்
மேற்கு நோக்கிய ருத்ரமுகம் கொண்ட அனிருத்னாகவும்

தம்மை வியூகப்படுத்திச் சர்வ திக்குகளையும் நோக்கியுள்ளார்.

தேவர்கள் தமக்குத் துன்பம் நேரிடும்போதெல்லாம் இந்தப் பாற்கடலின் கரையில் வந்து நின்று ஸ்ரீமந் நாராயணனைப் பற்றியெழுப்பி தமது முறையீட்டினைத் தெரிவித்து அபயக் குரல் கொடுப்பர். எம்பெருமானும் அபயமளிப்பான். எனவே இந்த உலகிற்குக் கூப்பாடு கேட்கும் உலகு என்று பெயர்.

இந்த வியூக வாசுதேவனுடன் மற்றைய மூன்று உருவங்களும் பிரளய காலத்தில் ஐக்கியமாகி விடுகின்றன என்பது ஐதீகம்.

## விபவம்

விபவம் என்ற வடசொல்லுக்கு இறங்கி வருதல் என்று பொருள். பக்தர்கட்காகவும் உலகுய்யவும் இரண்டிடங்களிலிருந்து இறங்கி வருதல், ஸ்ரீஇராமனாகவும், ஸ்ரீகிருஷ்ணனாகவும், பூவுலகில் தோன்றின அவதாரங்களை விபவம் என்பர். இவைகள் பூர்ணாவதாரம், அமிசாவதாரம், ஆவேச அவதாரம் என்று வகைப்படும்.

இராம, க்ருஷ்ண, வாமன, பரசுராம அவதாரங்கள் பூர்ணாவதாரம். மச்சாவதாரம், வராக அவதாரம் போன்றன அமிசாவதாரம்.

நரசிம்மம் - ஆவேச அவதாரம்.

## அந்தர்யாமித்வம்

இதில் ஒவ்வொரு ஜீவாத்மாவின் உள்ளிருந்தும் அதைத் தாங்கி நிற்பதாக ஐதீகம். அந்தர்யாமியாக — மறைமுகமாக (உள்ளுக்குள் உணர்வாய், உணர்வுக்குள் உயிராய்) மானிடர்களின், ஞானிகளின், பக்தர்களின் உள்ளத்திலிருந்து தம் சக்தியை வெளிப்படுத்தும்.

## அருச்சை

நம்மைப்போன்ற சாமான்ய மனிதர்கள் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம் என்னும் இவைகளைக் கண்ணால் காண்பதும், கருத்தால் தீண்டலும் அரிதே. ஆம் பரமபதத்திற்குச் செல்ல நாம் நித்யசூரிகளாக இல்லை. வியூகத்தைக் காண நாம் தேவர்களாயில்லை. விபவ அவதாரங்கள் நிகழ்ந்த காலக்கட்டத்தில் நாம் எப்படிப்பட்ட ஜென்மங்களாக இருந்தோம் என்பதை உணருமாறில்லை.

அந்தர்யாமித்யமாய் இருப்பதை அறியும் ஆற்றலும் நமக்கு இல்லை. எனவேதான் ஒரு மனிதன் (ஒரு பக்தன்) தங்கம், வெள்ளி, கல், மரம், சாளக்கிராமம் முதலிய வஸ்துக்களில் யாதாயினுமொரு கருப்பொருளில் தன் மனதிற்குகந்தவாறும், சாஸ்திரங்களில் கூறியமுறை வழுவாமலும் மேற் சொன்னவற்றில் ஏதாயினுமோர் உருவத்தைப் பிரதிட்டை செய்து வழிபடும் முறைக்கு அருச்சை அல்லது அர்ச்சாவதார வழிபாடு என்று பெயர். இதனையே விக்ரக ஆராதனை அல்லது உருவ வழிபாடு என்றும் சொல்வர்.

மனிதர்கள் செய்யாமல், பக்தர்களின் வேண்டு கோளுக்காக எம்பெருமான் தானேயுகந்து அர்ச்சாவதார மூர்த்தியாக எழுந்தருளியதுண்டு. பக்தர்கள் விரும்பிய உருவங்களில் இந்த அர்ச்சா வடிவங்களில் தன்னை வெளிக்காட்டியதுண்டு.

நம் போன்று இந்தக் கலியுகத்தில் வாழ்பவர்கட்கு அர்ச்சாவதாரம் போன்று எளிதாக வேறென்ன இருக்க முடியும். அல்லது இதை விடுத்தால்தான் நம் மனதில் பக்திக்கு அடைக்கலம் அளித்து உய்விக்க வேறு என்ன உபாயம் இருக்க முடியும்.

"புகலொன்றில்லா அடியேன் நின்னடிக்கீழ் புகுந்தொழிந்தேனே" என்றாற்போல் இதை விட்டால் நமக்குப் புகலேது. முக்தியடைந்தவன் பரமபதத்திலிருந்து கொண்டு எப்போதும் எம்பெருமானின் திவ்யத்தில் மூழ்கியிருக்கிறான். எனவே அவன் பூலோகத்தில் நித்ய சேவை சாதிக்கும் திருமலை வேங்கடவனையோ, குடந்தைக் கிடந்த ஆராவமுதனையோ, துவாரகாபுரி கண்ண பிரானையோ சேவிக்க எண்ணினால் அது முடியாதாம். இதைத்தான் ஆழ்வார் போயினால் பின்னை இத்திசைக்குப் பிணை கொடுக்கினும் போக ஒட்டான் என்கிறார்.

அதாவது பரமபதத்தில் இருக்கும் முக்தனை எம்பெருமான் போகவொட்டான்.

எனவே பூவுலகில் வந்தவனுக்கு அர்ச்சா மூர்த்தியை விட்டால் வேறு யார் அடைக்கலம். எனவே அர்ச்சாவதாரமே நம்மை இறைவனிடம் நெருக்கிக் கொண்டு சென்று பரமபதத்து நித்ய சூரிகளில் ஒருவனாக ஆக்கும். நம்மையெல்லாம் உய்விக்கும் பொருட்டே எம்பெருமான் அர்ச்சாவதார மூர்த்திகளாய் இங்கு எழுந்தருளியுள்ளான். எனவே எளிது எளிது நமக்கு அர்ச்சாவதாரமே எளிது.

இதைத்தான் நமக்கு ஆழ்வார்கள் காட்டிக் கொடுத்தனர். வேதம் தமிழ் செய்த மாறனான நம்மாழ்வார் இந்த அர்ச்சாவதாரமே நமக்கு எளிது என்று அடையாளங் காட்டிப் போந்தார் என்கிறார் மணவாளமாமுனிகள்.

செய்ய பரத்துவமாய் சீரார் வியூகமாய்
துய்ய விபவமாய்த் தோன்றியிவற்றுள் - எய்துமவர்க்கு
இந்நிலத்தில் அர்ச்சாவதாரம் எளிதென்றான்
பன்னு தமிழ்மாறன் பயின்று.

இவ்வாறு பரம், வியூகம், விபவம், அந்தர்யாமித்வம், அருச்சை என்னும் எம்பெருமானின் இவ்வைந்து நிலைகளை, வேதத்தைத் தமிழில் விரித்துரைத்த நம்மாழ்வார் குறிப்பால் உணர்த்திச் சென்றுள்ளார்.

விண்மீதிருப்பாய், மலைமேல்நிற்பாய், கடற்சேர்ப்பாய்
மண்மீதுழல்வாய், இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்
என்மீதியன்ற புறவண்டத்தாய் எனதாவி
உன்மீதாடி உருக்காட்டாதே ஒளிப்பாயோ?

விண்மீதிருப்பாய் - பரத்துவம் (பரமபதம்)
மலைமேல் நிற்பாய் - விபவம் (அவதார புருஷனாக இறங்கி வந்தது)
கடல் சேர்ப்பாய் - வியூகம் (திருப்பாற்கடலில் 5 வியூகமாகப் பிரித்து)
மண்மீதுழல்வாய் - அர்ச்சை (திவ்யதேசங்களிலும் பிற ஸ்தலங்களிலுமுள்ள அர்ச்சா மூர்த்திகள்)
என் மீதியன்ற புறவண்டத்தாய் - அந்தர்யாமியாய் கலந்தது.

இந்தியாவில் உள்ள ஸ்தலங்களைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தலாம்.

1. ரிஷிகளால் ஏற்படுத்தப்பட்ட ஸ்தலங்கட்கு அர்ஷம் என்று பெயர்.
2. புராணங்களில் பரிந்துரைக்கப்பட்ட ஸ்தலங்கட்கு பௌராணிகம் என்று பெயர்.
3. தானே தோன்றியவைகள் ஸ்வயம் வ்யக்த ஸ்தலம் என்றும் அல்லது சைத்தம் என்றும் மொழிவர்.
4. பிரம்மாதி தேவர்களால் தவம்செய்து உண்டாக்கப் பட்டவைகளைத் தைவம் என்பர்.
5. மன்னர்களாலும், அடியார்களாலும் பிரதிட்டை செய்யப்பட்டவைகளை மானவம் என்பர்.
6. ஆச்சார்ய புருஷர்களால் அபிமானிக்கப்பட்டதை அபிமான ஸ்தலம் என்பர்.

இத்தகைய அமைப்பிலோ அல்லது இதில் குறிப்பிடாத வாறு வேறு வகையில் கட்டப்பட்ட ஸ்தலத்திற்கு ஆழ்வார்களின் பாசுரஞ் சூட்டப்பட்டதாகில் அப்பெருமாள் மங்களாசாசனம் செய்யப்பட்டவராக ஆகிறார். அத்தலம் திவ்யதேசமாகிறது. அங்கு எம்பெருமான் நித்ய வாசஞ்

செய்கிறான். இந்த ஸ்தலங்கள் கிளிகொத்திய மாங்கனி யாகத் திகழ்பவைகளாகும்.

எம்பெருமானின் அம்சங்களே ஆழ்வாராக அவதரித் தார்கள். அதாவது எம்பெருமானின் சார்ங்கம் என்னும் வில்லே ஓர் ஆழ்வாராக அவதாரம். பிராட்டியே ஸ்ரீ ஆண்டாளாக அவதாரம் செய்தார். இவ்விதம் எம் பெருமானின் அம்சங்களே ஆழ்வாராக வந்து மங்களா சாசனம் செய்ததால் அத்தலம் திவ்யதேசமாயிற்று. திவ்யம் என்ற வடசொல்லுக்குத் தெய்வத்தன்மை பொலிந்தது என்று பொருள். ஆழ்வார்களின் பாசுரங்கள் பெறப்பட்ட ஸ்தலங்களில் எம்பெருமான் நித்ய சான்னித்தியம் கொண்டுள்ளான். அதாவது அங்கேயே வாழ்கிறான் என்று பொருள்.

திவ்யமான மங்கள அர்ச்சா ரூபம், திவ்யப்பிரபந்த மென்னும் மங்களாசாசனமாகிய பாமாலையால் கட்டுண்டு திவ்யதேசமாக ஆகி நம்மையும் (பரமபதத்தில்) வைக்கும் படியான நித்ய சூரியாக ஆக்குகிறது. பரமபதத்திலிருந்து வரப்பெற்ற திவ்ய சூரிகளால் அவர்களது திவ்யம் பொருந்திய மொழிகளால் மங்களாசாசனம் செய்யப் பட்டவை திவ்ய ஸ்தலங்களாகும்.

அணுவிற்குள் அண்டமும், அண்டத்திற்குள் அணுவும் இருப்பதைப் போன்று திவ்ய சூரியே இங்கு வந்து திவ்யதேசங்களைக் காட்டிச் செல்கிறார். அந்த திவ்ய தேசங்களில் ஈடுபட்டே ஒருவர் திவ்ய சூரியாகிவிடுகிறார்.

நாராயண மந்திரம் மூன்று பதங்களாயிருப்பதைப் போல இந்த ஸ்தலங்களை (திவ்யதேசங்கள் என்று சொல்லப்படும் ஸ்தலங்களை) மூன்று திவ்யங்கள் சூழ்ந்துள்ளன. அதாவது

கோவில் திவ்யமாகிறது. பெருமாள் ஒரு திவ்யம், மங்களாசாசனப் பாசுரம் திவ்யப் பிரபந்தமாகிறது.

நாராயண மந்திரம் எனப்படும் திருமந்திரம் எட்டெழுத்துக்களால் (எட்டிழைகளால்) ஆனது. இந்த திவ்யதேசங்களும் சப்த புண்ணியங்கள் எனப்படும் ஏழு புண்ணியங்களுடன், ஆழ்வார்களின் மங்களாசாசனத்தையும் சேர்த்து எட்டெழுத்தான திருமந்திரத்தின் சக்தியைப் பெற்று அஷ்டாச்சர மந்திரத்தின் பலனைத் தரச்கூடிய ஸ்தலங்களாக அமைகிறது. ஏழு புண்ணியங்கள் என்பவை,

ஷேத்ரம் வநம் நதி ஸிந்து புரம்
புஷ்கிணி ததா
விமானம் ஸப்த புண்யஞ்ச யத்ர தேஸ

இவ்வேழு புண்ணியங்களும் ஒருங்கே அமையப்பெற்று ஆழ்வார்களின் மங்களாசாசனமும் ஒரு தலத்திற்கு அமையுமாயின் அது அஷ்டாச்சர மந்திரம் நிலை பெற்ற இடமாகும். இத்தனையும் ஒருங்குகூடிய ஸ்தலத்தை திவ்யதேசமெனச் சொல்வதில் தடையுமுண்டோ. இவ் விதம் இந்தியாவில் ஆழ்வார்கள் பன்னிருவரால் மங்களா சாசனம் செய்யப்பட்ட திவ்யதேசங்கள் 108.

இந்த 108 திவ்ய தேசங்களில் இரண்டு ஸ்தலங்கள் இந்நிலவுலகில் பார்க்க முடியாதவைகளாகும். ஒன்று பரம பதம். மற்றொன்று பாற்கடல். எஞ்சிய 106 திவ்ய தேசங்களில் வடநாட்டு ஸ்தலங்கள் 12. அதில் திருமலை என்னும் திருவேங்கடமும், அஹோபிலம் என்னும் சிங்கவேள் குன்றமும் விந்திய மலைக்கு இப்பால் தென்னாட்டிலேயே அமைந்துள்ளன. எனவே தென்னாடு மட்டும் 96 திவ்ய தேசங்களுடைத்து. இவைகள் தென்னாட்டில் அமைந்ததற்கு ஒரு காரணமுண்டு. இதற்குத்

தஞ்சை என். எஸ். தத்தாச்சார்யாரின் திருநறையூர் ஸ்தல வரலாற்று நூலில் காணப்படும் கருத்து அப்படியே இங்கு தரப்படுகிறது.

முற்காலத்தில் புண்ணிய ஸ்தலங்களை மனிதர்கள் தாங்கள் நினைத்த இடத்தில் ஏற்படுத்தினார்களில்லை. பூமியின் உள்ளே மனித ஜீவாதார சக்திக்குத் தேவையான ஒரு நரம்பு குறிப்பிட்ட இடத்தில் மட்டும் குறுக்கே ஓடி இருக்குமாம். அதற்குத்தான் தரித்ரீசாரம் எனப் பெயர். அது நியூட்டன் கண்டுபிடித்த புவியீர்ப்பு சக்தியின் பெரும் பகுதியாகும். இத்தகைய இடம் நம் இந்தியாவில் சிறப்பாகத் தென்பகுதியில் அதிகமாக இருப்பதால்தான் இந்தியாவையே உண்மையான ப்ருத்வி (பூமி) என மகாகவி காளிதாசனும் கூறினார். ஆகவேதான் அந்த நரம்பு இழையோடும் தென்னாட்டின் பகுதியில் ஆலயங்கள் பல தோன்றின.

புகழ் மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு என்றாற்போல் 108 திவ்ய தேசங்களில் 82 திவ்ய தேசங்களைத் தன்னகத்தே கொண்டது நம் தமிழ்நாடு.

இந்த 108 திவ்ய தேசங்கள் எங்கெங்கு உள்ளன என்று படம் பிடித்துக் காட்டுகிறது ஒரு பழம் பாடல்.

ஈரிருபதாஞ் சோழம் ஈரொன்பதாம் பாண்டி
ஓர்பதின்மூன்றாம் மலைநாடு ஓரிரண்டாம் - சீர்நடுநாடு
ஆறோடீரெட்டுத் தொண்டை அவ்வட
நாடாறிரண்டு கூறும் திருநாடு ஒன்றாக் கொள்.

அதாவது,

| | | | |
|---|---|---|---|
| சோழநாட்டில் | - | 40 | திவ்ய தேசங்கள் |
| பாண்டி நாட்டில் | - | 18 | திவ்ய தேசங்கள் |
| மலை நாட்டில் | - | 13 | திவ்ய தேசங்கள் |
| நடு நாட்டில் | - | 2 | திவ்ய தேசங்கள் |
| தொண்டை நாட்டில் | - | 22 | திவ்ய தேசங்கள் |
| வட நாட்டில் | - | 12 | திவ்ய தேசங்கள் |
| திருநாட்டில் | - | 1 | திவ்ய தேசம் |
| | | 108 | |

இந்த 108 திவ்ய தேசங்களில் 106-னைச் சேவித்தவர்களை அவர்கள் இப்பூவுலகில் வாழவேண்டிய காலக் கட்டாயம் முடிவுற்றதும் எம்பெருமானே இரண்டு திவ்ய தேசங்கட்கும் அழைத்துச் சென்று காட்சி தருகிறார் என்பது தலையாய வைணவக் கொள்கையாகும்.

12 ஆழ்வார்களில் மதுரகவியாழ்வார் திவ்ய தேசங்கள் எதனையும் மங்களாசாசனம் செய்யவில்லை. அவர் நம்மாழ்வாரைப்பற்றி மட்டும் ஒரு பதிகம் அருளிச் செய்தார். வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த மாறன் என்று நம்மாழ்வாரிடம் மட்டும் ஆழங்கால் பட்டு அவர் ஆழ்வாரானார். மீதி பதினொரு ஆழ்வார்களும் கீழ்க்கண்டவாறு மங்களாசாசனம் செய்துள்ளனர்.

| ஆழ்வாரின் பெயர், | | மங்களாசாசனம் செய்த திவ்யதேசங்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. பொய்கையாழ்வார் | - | 6 |
| 2. பூதத்தாழ்வார் | - | 13 |
| 3. பேயாழ்வார் | - | 15 |

| | | |
|---|---|---|
| 4. திருமழிசையாழ்வார் | - | 17 |
| 5. நம்மாழ்வார் | - | 37 |
| 6. குலசேகராழ்வார் | - | 9 |
| 7. பெரியாழ்வார் | - | 18 |
| 8. ஸ்ரீ ஆண்டாள் | - | 11 |
| 9. தொண்டரடிப் பொடியாழ்வார் | - | 1 |
| 10. திருப்பாணாழ்வார் | - | 3 |
| 11. திருமங்கையாழ்வார் | - | 86 |

இந்த 108 திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருக்கும் திருமால் மூன்று நிலைகளில் பக்தர்கட்குக் காட்சியளிக்கிறார். அவைகள் நின்ற திருக்கோலம், அமர்ந்த திருக்கோலம், சயன (கிடந்த) திருக்கோலம். திருக் கோலங்களில் ஆலயங்களில் அமைக்கப்படும் திருமால், யோகம், போகம், வீரம், ஆபிசாரிகம் என நால் வகைப்படுவர். யோகிகள் யோக மூர்த்திகளையும், குடும்பத்தில் உள்ளவர்கள் போக மூர்த்திகளையும், வீரர்கள் வீர மூர்த்திகளையும், பகைவர்கட்குத் துன்பம் விளைவிக்க விரும்புவர்கள் ஆபிசாரிக மூர்த்திகளையும் வணங்குவர். இன்று போக, யோக மூர்த்திகளே பழக்கத்தில் அமைந்துள்ளன. வீர மூர்த்திகள் மிக அரிது.

108 திவ்யதேசங்களில் நின்ற திருக்கோலத்தில் எம பெருமான் எழுந்தருளியுள்ள தலங்களின் எண்ணிக்கையே அதிகமாகும். நின்றது 67. இதில்,

| | |
|---|---|
| கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம் | 39 |
| மேற்கு நோக்கி நின்ற திருக்கோலம் | 12 |
| தெற்கு நோக்கி நின்ற திருக்கோலம் | 14 |
| வடக்கு நோக்கி நின்ற திருக்கோலம் | 2 |

இதேபோல் அமர்ந்த திருக்கோலத்தில் உள்ள ஸ்தலங்களின் எண்ணிக்கை 17. இதில்,

| | |
|---|---|
| கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் | 13 |
| மேற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் | 3 |
| தெற்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் | இல்லை |
| வடக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம் | 1 |

இதேபோல் சயனத் திருக்கோல ஸ்தலங்கள் 24. இதில்,

| | |
|---|---|
| கிழக்கு நோக்கிய சயனம் | 18 |
| மேற்கு நோக்கிய சயனம் | 3 |
| தெற்கு நோக்கிய சயனம் | 3 |
| வடக்கு நோக்கிய சயனம் | இல்லை |

ஒரே சன்னிதியில் நின்ற, இருந்த, கிடந்த என்ற மூன்று திருக்கோலம் உண்டு. அவ்வாறு அமைந்த ஸ்தலங்கள் பல உண்டு. உதாரணத்திற்கு, திருநீர்மலை, திருக்கோட்டியூர், மதுரை, கூடலழகர், திருவல்லிக்கேணி போன்றவைகளைக் கூறலாம்.

அமர்ந்த திருக்கோலத்தில் உள்ள பெருமாள் ஒரு கரத்தை மேல்நோக்கி (அருளும் முகத்தான்) வைத்துள்ளதற்கு அபயஹஸ்தம் என்று பெயர். மற்றொரு கரத்தைக் கீழ்நோக்கி வைத்திருப்பதற்குத் தன்னடிக் கீழ் சரணடைந்து உய்யுங்கள் என்பது பொருள்.

# சங்க காலத்தில் வைணவம்

வைணவம் சங்க காலத்திலேயே தமிழகத்தில் வேரூன்றிய சமயம்.

"மாயோன் மேய காடுறை உலகம்"

என்றும்,

மாயோன் மேய "மன்பெருஞ் சிறப்பில்
தாவா விழுப்புகழ் பூவை நிலையம்"

என்றும் தொல்காப்பியம் கூறும் நூற்பாக்கள் மாயோனாகிய திருமாலின் சிறப்பை உணர்த்தும்,

கணங்கொள் அவுணர் கறந்துபொலந்தார்
மாயோன் மேயஓண் நன்னாள் -- மதுரை காஞ்சி

புள்ளணி நீள்கொடிச் செல்வன் -- திருமுருகாற்றுப்படை

காந்தளம் சிலம்பில் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன் -- பெரும்பாணாற்றுப்படை

மேற்கண்டவாறு சங்க இலக்கியங்கள் திருமாலைப் போற்றுகின்றன. சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவை மாலின் மாண்பினைக் கூறும்.

சங்கம் மருவிய காலமான இருண்ட காலத்தில் களப்பிரர் ஆதிக்கத்தில் வைணவ சமயமும் ஒளி குன்றி இருண்டது. களப்பிரர் ஆட்சி அகன்று பல்லவரும் பாண்டியரும் செந்தமிழ் நிலத்தே செங்கோலோச்சியபோது சைவம் புத்துயிர் பெற்றதுபோல வைணவமும் புத்துயிர் பெற்றது.

வைணவ சமயத்தை வாழ்விக்க வந்த சான்றோர்களை ஆழ்வார்கள் என்றும் ஆசார்யர்கள் என்றும் கூறுவர். இறைவனாகிய திருமாலின் குணங்களில் ஈடுபட்டு ஆழ்ந்தவர்கள் ஆழ்வார்கள் என வழங்கினர். ஆழ்வார்களுக்குப் பின்னே தோன்றி, அவர்களுடைய சொல்லையும் செயலையும் பின்பற்றி, வைணவத்தை வளர்த்தவர்கள் ஆசார்யர்கள் எனப்பட்டனர். அங்ஙனம் ஆழ்வார்கள் வழிவந்தவர்கள் பலர். அவர்களுள் (1) சீநாத முனிகள், (2)உய்யகொண்டார், (3) மணக்கால்நம்பி, (4) ஆளவந்தார், (5) இராமாநுசர் எனும் ஐவர் முக்கியமானவர்கள். ஆழ்வார்கள் வழியில் வந்த குரவர்களுள் இவர்களே வைணவ சமயம் வளர்வதற்குக் காரணமாவார்கள்.

இவர்களுள் சீநாத முனிகள், ஆளவந்தார், இராமாநுசர் எனும் மூவரும் முதன்மையானவர்கள். வைணவப் பெரியோர்களின் வரலாற்றைக் கூறும் நூல்கள் பல உள்ளன. அவற்றுள் காலத்தால் முற்பட்டவை இரண்டு. அவை:

(1) இராமாநுசர் காலத்தில் இருந்த கருட வாகன பண்டிதர் கவிதையில் இயற்றிய திவ்விய சூரி சரிதை.

(2) நம்பிள்ளைக் காலத்தவரான பின் பழகிய பெருமாள் ஜீயர், மணிப்பிரவாள நடையில் இயற்றிய ஆறாயிரப்படி குருப் பரம்பரை.

## நாதமுனிகள் அவதாரம்

சங்கு இனங்கள், முத்துக்களை உமிழும் அழகிய காவேரியாற்றங்கரையில் வீர நாராயணபுரம் என்னும் திருப்பதி ஒன்று உண்டு. அப்பதியில் உள்ள பொய்கைகளில் பூத்துப் பொலியும் புதிய மலர்களினின்று பெருகிவரும் தேனை வண்டுகள் உண்டு பாடும் இன்னிசையும், இல்லந்தோறும் மறையவர்கள் ஓதும் வேத ஒலியும் என்றும் எங்கும் கேட்கப்படும். அவ்வூரில் பல கலைகளையும் நன்கு கற்றுணர்ந்த மறையவர்கள் பலர் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் எம்பெருமானிடத்துப் பேரன்பு வாய்ந்து, பரமபாகவதர்கள் என்று யாவரும் சொல்லும்படி விளங்கினார்கள். அவர்கள் உள்ளம், உரை, செயல் என்னும் மூன்றும் ஒத்தவர்கள். அவர்களுள், சொட்டைகுலம் என்னும் குலத்தவர் இருந்தனர்.

அக்குலத்தில் ஈசுவர முனிகள் என்பார் ஒருவர் தோன்றித் தென்மொழி, வடமொழி என்னும் இருமொழிகளிலும் உள்ள பல கலைகளையும் நன்கு கற்றுணர்ந்து, மற்றையோர் எல்லோரினும் சிறந்து விளங்கினார்.

அவருக்கு ஓர் அருமருந்தென மைந்தர் அவதரித்தார். ஈசுவர முனிகள் அம்மைந்தருக்கு நாதமுனி என திருப்பெயரிட்டனர். நாதமுனிகள் ஏழிசைகளையும், தென்மொழி, வடமொழி கலைகளையும் நன்கு பயின்று, திருமகள் நாதன்பால் நீங்காத அன்பும், சிறந்த ஒழுக்கமும் உடையவராய் விளங்கினார்.

அவர், இசை உணர்வில் தும்புரு நாரதர்களையும், மறையறிவிற் பிரமனையும், தென்மொழி வன்மையில் அகத்தியரையும், திருமகள் நாதன் அன்பில் துருவனையும்,

ஒப்பானவராய் திகழ்ந்தனர். அவரைக் கண்டவர்கள் எல்லோரும் "இவர் உலகு உய்யத் தோன்றிய பெரியோராவார்" என்று கூறுவார் ஆயினர். அவர், கற்பென்னும் மாண் குணம் அமைந்த நல்லியலாரை மணந்து இல்லறத்தைப் பல்லறம் ஆற்றிப் பொலிவுறச் செய்தனர். அவருக்கு ஒரு மைந்தன் பிறந்தனர். அவர், அம் மைந்தருக்குத் தம்முடைய தந்தையார் பெயராகிய ஈச்சுவர முனிகள் என்பதையே பெயராக இட்டனர். அவரும் தென்மொழி, வடமொழிக் கலைகள் பலவற்றையும் கற்று உணர்ந்து, சிறந்த அறிஞராய் விளங்கித் தக்கார் ஒரு மெல்லியலாரை மணந்து இல்லறத்தை இனிது நடத்துவராயினர்.

# நாதமுனிகள் வடநாட்டுப் பதிகளுக்குச் செல்லுதலும் மீண்டு வருதலும்

நாதமுனிகள் தம்முடைய தந்தையாருடனும் மைந்தருடனும் அப்பதியில் எழுந்தருளியுள்ள மன்னனாரை அன்புடன் வணங்கி அப்பெருமானுக்குப் பல தொண்டு களைப் புரிந்து வந்தனர். நாதமுனிகள் அவ்வாறு தொண்டு புரிந்து வருகையில், அவருக்குக் கண்ணன் இனிது விளங்கி அருளிய மதுரை, திருவாய்ப்பாடி, பிருந்தாவனம், யமுனைக்கரை முதலிய திருப்பதிகளைச் சேவிக்க வேண்டும் என்னும் விருப்பு உண்டாயிற்று. உடனே நாதமுனிகள், மன்னனார் திருமுன் சென்று வணங்கித் தம்முடைய விழைவை விண்ணப்பித்தனர். மன்னனாரும் அருச்சகர் மூலமாக விடையளித்தருளினார். உடனே நாதமுனிகள், தன்னுடைய குடும்பத்தாருடன் புறப்பட்டுச் சென்று, வடமதுரை, சாளகிராமம், துவரை, அயோத்தி, வதரி முதலிய திருப்பதிகளுக்குச் சென்று, அப்பதிகளில் எழுந்தருளியுள்ள திருமகள் நாதனை வணங்கிப் பின்பு மிக்க கம்பீரமான தோற்றத்தோடு பல சுழிகளையும் உடையதாய் விளங்கும் யமுனை ஆற்றங்கரையில் உள்ள "கோவர்த்தனபுரம்" என்னும் பதியில் எழுந்தருளியிருக்கும் "யமுனைத்துறைவன்" என்னும் பெருமானுடைய திருவடித் தாமரைகளை அன்பின் மிகுதியால், கண்களினின்றும் அருவியென நீர்ப் பெருகி வரப் பல படியாகப் போற்றிப் பணிந்தனர். கண்ணன் களிப்புற்று ஆடிப்பாடி விளங்கிய அப்பதியும், அந்நதியும் நாதமுனிகள் மனத்தை முற்றும் கவர்ந்துவிட்டன. ஆதலின் நாதமுனிகள் அப்பதியிலேயே உறைய வேண்டும் என்று விருப்பம் கொண்டு, அவ்வாறே அப்பதியில் குடும்பத்துடன் இருந்து, அப்பதியில் எழுந்தருளியுள்ள யமுனைத் துறைவனை வணங்கி அப்

பெருமானுக்குத் தம்முடைய தந்தையார் முதலியவர்களுடன் பல தொண்டுகள் புரிந்து வருவாராயினர்.

நாதமுனிகள் அப்பதியில் அவ்வாறு தொண்டு செய்து கொண்டிருக்கையில் ஒரு நாள் இரவில் அவர் கனவில் மன்னனார் தோன்றி, "அப்பனே! நம்முடைய வீர நாராயணபுரத்திற்கு மீண்டும் வருவாயாக", என்று பணித்தருளினார். மறுநாள் நாதமுனிகள் தம் தந்தை யாரிடமும் மைந்தரிடமும் அக்கனவைக் கூறி, அவர்களோடு ஆய்ந்து, யமுனைத் துறைவனாகிய பெருமான்பாற் சென்று, அதனை விண்ணப்பித்தனர். அம்முதல்வனும் அர்ச்சகர் மூலமாக விடை கொடுத்தருளினான். நாதமுனிகள் உடனே தம் தந்தையார் முதலியவர்களுடன் புறப்பட்டுப் புருடோத்தமன் என்னும் சங்கநாதம், சிங்கவேள் குன்றம், அகோபிலம், திருவேங்கடம், திருக்கடிகை, திருப்புட்குழி, திருக்கச்சி, திருவயிந்திபுரம், திருக்கோவிலூர், திருவரங்கம், திருக்குடந்தை முதலிய திருப்பதிகளுக்குப் போய் அப்பதிகளில் எழுந்தருளியுள்ள ஒரு முதலாகிய இறைவன் அடிகளை வணங்கி மீண்டும் வீர நாராயணபுரத்திற்கு வந்து மன்னனாரை வணங்கிப் போற்றி நின்றார். அப்பதியில் உள்ளவர்கள் நாதமுனிகளையும், அவர்தம் குடும்பத் தினரையும் வரவேற்று, அவர்களுக்குத் தக்க திருமாளிகை அமைத்துக் கொடுத்து அவர்களுக்கு வேண்டிய அமுதுபடி முதலியவற்றையும் அளித்து வரலானார்கள்.

நாதமுனிகள் தந்தையாருடனும், மைந்தருடனும் சேர்ந்து, ஒரு நந்தவனம் அமைத்து, மன்னனாருக்கு மாலை கட்டிச் சாத்தல், திருவிளக்கு அமைத்தல் முதலிய தொண்டுகளைக் குறைவர நடத்தி வந்ததோடு அமையாமல், பலருக்கும் மெய்ப்பொருள் நூல்களின் அரும்பொருள்களை விளக்கியுரைத்து வரலாயினர்.

# நாதமுனிகள் ஆழ்வாரிடத்து நாலாயிரம் முதலியவற்றைப் பெறுதல்

நாத முனிகள், இங்ஙனம் மன்னனார் தொண்டுகள் முதலியவற்றை நடத்திக் கொண்டிருக்கையில், மேல் நாட்டிலிருந்து வைணவர் இருவர் வந்து, மன்னனாரைச் சேவித்து, அவர் திருமுன், "ஆராவமுதே" என்று தொடங்கும் திருவாய்மொழியின் பதினொரு பாசுரங்களையும் ஓதி மன்னனாரை வணங்கி நின்றனர். அதன் முதலீற்றுப் பாசுரங்களை அடியில் காண்க.

"ஆரா அமுதே அடியேன் உடலம் நின்பால் அன்பாயே
நீராய் அலைந்து கரைய உருக்கு கின்ற நெடுமாலே
சீரார் செந்நெல் கவரிவீசும் செழுநீர் திருக்குடந்தை
ஏரார் கோலம் திகழக் கிடந்தாய் கண்டேன் எம்மானே"

"உழலை என்பில் பேய்ச்சி முலையூடவளை உயிருண்டான்
கழல்கள் அவையே சரணாகக் கொண்ட குருகூர்ச் சடகோபன்
குழலில் மலியச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்தும்
மழலை தீர வல்லார் காமர் மானேய் நோக்கியர்க்கே"

அப்போது அங்கு மன்னனாரைச் சேவிக்க வந்த நாதமுனிகள், அவற்றைக் கேட்டு, அவற்றில் மிக்க விழைவுடையவராய், அவர்களை நோக்கி, "திருமால் அன்பிற் சிறந்த அடியீர்! நீங்கள் ஓதிய பாசுரங்களுள் ஈற்றுப் பாசுரத்தில் ஆயிரத்துள் இப்பத்தும் என்பது காணப் படுதலின், இப் பாசுரங்கள் ஆயிரம்பாசுரங்களைக் கொண்ட ஒரு பிரபந்தத்தைச் சேர்ந்தவை என்பது புலனாகின்றது. அப்பிரபந்தம் உங்களுக்கு முற்ற வருமோ? என்று கேட்டனர்.

அவர்கள், "அருங்குணப் பெரியீர்! நாங்கள் அறிந்தவை இப்பதினோரு பாசுரங்களே" என்றார்கள். நாத முனிகள், அறிஞர்களே! உங்கள் நாட்டில் இப்பிரபந்தம் கொண்ட ஏடுகள் உளவோ? இப்பிரபந்தத்தை முற்றும் பாடம் செய்தார் உளரோ?" என்று கேட்டனர்.

"அருங்குணப் பெரியீர்! எங்களுக்கு மட்டுமே இப்பதினோரு பாசுரங்கள் வரும், மற்றையோருக்கு அவையும் வாரா," என்றார்கள். நாதமுனிகள், அவர்களுக்கு மன்னனாரின் தீர்த்தத்தை அருளி, மற்றும் செய்வன செய்து, அவர்களைப் போகவிட்டனர். பிறகு தனக்குள் பல வகையாக எண்ணி, "இப்பிரபந்தம் சடகோபர் அவதரித்த திருக்குருகூர் நகரில் இருத்தல் வேண்டும்", என்று கருதி, ஆழ்வார் திருநகருக்குச் சென்று, அப்பதியில் உள்ளார் சிலரை வினவினார். அவர்கள், "அன்புடைப் பெரியீர்! எங்கட்கு அப்பிரபந்தம்பற்றி ஒன்றும் தெரியாது. இப்பதியில் கலையறிவு, ஒழுக்கம், திருமகள் நாதன்பால் அமைந்த அன்பு, எல்லா உயிர்களிடத்தும் பேரருள் முதலிய சிறந்த குணங்கள் ஒருங்கு அமையப் பெற்ற பராங்குசதாசர் என்னும் திருப்பெயரை உடைய பெரியார் ஒருவர் இருக்கின்றார். தேவரீர், அவர்பால் சென்றால், அப் பிரபந்தத்தைப்பற்றி அறிதல் கூடும்" என்று கூறி அவர் இருப்பிடத்தையும் தெரிவித்தார்கள்.

நாதமுனிகள், அவரை வாழ்த்திச் சென்று, அவர்கள் கூறிய அப்பராங்குசதாசர்பாற் சென்று, அவரைக் கண்டு வணங்கி, "அன்பிற்சிறந்த பெரியீர்! ஸ்ரீசடகோபர் அருளிய பிரபந்தத்தின் ஏடுகள் இங்கு உளவோ?" என்று கேட்டனர். அவர், நாதமுனிகளை நோக்கி, "அருங்குணச் செல்வரே! அப்பிரபந்தம் மறைந்து வெகு நாட்கள் ஆகிவிட்டன. அதனை அருளிய சடகோபருடைய சீடரான மதுரகவிகள்,

அவரைப்பற்றிப் பாடியதும் பதினோரு பாசுரங்கள் கொண்டதும் ஆகிய கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்னும் பிரபந்தம் ஒன்று உளது. அது, "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்று தொடங்கப்பட்டிருத்தலின் அப்பெயர்த்தாயிற்று.

எங்கள் குரவர் அதனை எனக்கு அருளி, "அப்பனே! ஆழ்வார் திருமுன் சென்று இருந்து, அவர்பால் ஒன்றி நின்ற மனத்தராய் இக்கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் பிரபந்தத்தைப் பன்னீராயிரம் முறை உருப்போடுகின்றவர் களுக்கு முன் ஆழ்வார் தோன்றி அருள்வார் என்று உரைத் தருளினார் என்று கூறி அப்பிரபந்தத்தை நாதமுனிகளுக்கு அருளினார்.

நாதமுனிகள் அப்பிரபந்தத்தைப் பெற்றுக்கொண்டு அவரை வணங்கிச் சென்று, ஆழ்வார்கள் வீற்றிருந்த திருப்புளி அடியில் இருந்து, "கண்ணிநுண் சிறுத்தாம்பு" என்னும் பிரபந்தத்தினை அன்புடன் பன்னீராயிரம் முறை செபித்தனர். நாதமுனிகள் "நிறைந்த நெஞ்சமோடு எத்திறத்து ஆசான் உவக்கும் அத்திறம் அறத்திற் றிரியாப் படர்ச்சி," என்று சீடருக்கு உரைத்த இலக்கணம் நன்கு அமைந்தவர் ஆதலின், அவருக்கு முன் ஞானதேசிகராகிய நம்மாழ்வார், தேன் நிறைந்த மகிழ மலர்த்தொடை திருப்புயத்தில் இலங்கச், சிரத்தில் திருமுடிப் பொலியப், பரிதியை ஒப்ப ஒளிர் விடும் குண்டலங்கள் காதுகளில் திகழக் குளிர்ச்சியோடு கூடிப் பொலியும் திருமுகச்சோதி விளங்க, முத்திரைத் திருக்கையோடு தோன்றி நாத முனிகளை நோக்கி, "அன்பிற்சிறந்த அருங்குணச் செல்வரே! அரும்பெரும் யோகத்தின் அமர்ந்திருப்போர், திருமகள் நாதன் திருவடிக்கமலங்களை இடைவிடாமல் சிந்தையுள் திகழ வைத்துத் துதித்தல்போல நீர், நெடும்போதாக உம்முடைய நெஞ்சில் நம்மையே கருதி வைத்துத் துதித்துக்

கொண்டிருந்ததற்குக் காரணம் யாது? என்று உரைப்பீர்" என்று கேட்டருளினார்.

நாதமுனிகள் எழுந்து வணங்கி நின்று, "எந்தையீர்! தங்கள் அருளிச்செயலைப் பெற வேண்டும் என்னும் விருப்பமே அதற்கு காரணம்", என்றனர். நம்மாழ்வாரும், நாதமுனிகளை உவப்புடன் நோக்கியருளித் திருமகள்நாதன் தமக்கு உயர்வற மதிநலம் அருளினார்போல் அவருக்கு மெய்ஞானக் கண்ணை அளித்தருளித் தாம் அருளிச் செய்த திருவாய்மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்னும் நான்கு பிரபந்தங்களையும், பொய்கையார், பூதத்தார், பேயார், திருமழிசையார், நம்மாழ்வார், குலசேகரர், பெரியாழ்வார், கோதை நாச்சியார், தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணர், திருமங்கை மன்னர், அருளிச் செய்த பிரபந்தங்களையும், திருமந்திரத் தையும், மற்றும் உள்ள நூல்களின் அரும்பொருள்களையும் திருவாய் மலர்ந்தருளி, அட்டாங்கயோகத்தின் நுட்பங் களையும் கூறி அருளினார். இதில் மதுரகவியார் அருளிய பிரபந்தத்தை நாத முனிகள் முன்பே பெற்றனர் ஆதலின், மற்றையோர் அருளிய பிரபந்தங்களே ஈண்டுக் குறித்துரைக்கப்பட்டன. இவையாவும் சேர்ந்ததே நாலாயிர திவ்வியப் பிரபந்தமாகும்.

ஆழ்வார்கள் அருளிச் செய்த அட்டாங்கயோகம் பற்றியும் அதன் நுட்பங்களைப்பற்றியும் சிறிது பார்ப்போம்:

அட்டாங்கயோகம் என்பதற்கு எட்டு அங்கங்களோடு கூடிய யோகம் என்பது பொருள். அவ்வெட்டு அங்கங்கள் ஆவன:

1. இயமம், 2. நியமம், 3. ஆதனம், 4.பிராணாயாமம், 5. பிரத்தியாகாரம், . தாரணை, 7.தியானம், 8. சமாதி என்பனவாம்.

அவற்றுள் 1. இயமம் ஆவன: கொல்லாமை, மெய்மை கூறுதல், திருடாமை, பிறர் பொருட்கண் விழைவுறாமை, ஐம்பொறிகளையும் அடக்கல் ஆகும்.

2. நியமம் ஆவன: தவம், சௌசம், (அதாவது உடலை நீரினாலும், மனத்தை மெய்மொழியாலும் தூயனவாக்கல் ஆகும்) தத்துவ நூல் ஆராய்ச்சி, (தத்துவம்- உண்மைப்பொருள்) பெற்றது கொண்டு மகிழ்தல், கடவுள் வழிபாடு என்பனவாகும்.

3. ஆதனம்:- (இருப்பு): அது பத்திரம், கோமுகம், பதுமம், கேசரி, சுவத்திகம், சுகாதனம் என அறுவகையாகும். அவற்றுள் பதுமம் இரண்டு உள்ளங்கால்களையும் மாறி மாறி தோன்றவைத்தல்.

4. பிராணாயாமம் ஆவன: இரேசுகம், பூரகம், கும்பகம், என்பனவாம். அவற்றுள், இரேசுகம் ஆவது: மூக்கின் வலப்பால் துளையின் வழியாக வாயுவை விடுதல், பூரகமாவது: மூக்கின் இடப்பால் துளையின் வழியாக வாயுவை உள்ளுக்கு இழுத்தல். கும்பகமாவது: வாயுவை உள்ளே அடக்கல் ஆகும்.

5. பிரத்தியாகாரம் ஆவது: ஐம்பொறிகளையும் புலன்களிற் செல்லாதபடி தடுத்து உள்நோக்கி இழுத்தல் ஆகும்.

6. தாரணை ஆவது: அந்தக்கரணம் தைலதாரை போன்று இடைவிடாது ஒருமுகப்பட்டிருத்தல் ஆகும்.

7. தியானமாவது: கடவுளிடத்தில் விட்டுவிட்டுச் செல்லும் அந்தக்கரணத்தின் பெருக்காம்.

8. சமாதியாவது: உண்டாயிருக்கும் வாசனைகளின் வெளிப்பாடும் உளவாகி, அந்தக்கரணம் ஒருமுகமாய் மாறி இருத்தல் ஆகும்.

அட்டாங்கயோகத்தின் சாராம்சங்களைப்பற்றி சிறிதளவேனும் தெரிந்து கொண்டோம்.

## நாதமுனிகள்

நாதமுனிகள், நம்மாழ்வார்பால் ஆராத காதல் உடையவராய், அவரையும் பொலிந்து நின்ற பெருமானையும் சேவித்துக்கொண்டு, அப்பதியில் உறையலானார். வீர நாராயணபுரத்தில் எழுந்தருளியிருப்பவராகிய மன்னனார், ஒரு நாள் இரவு நாதமுனிகள் கனவில் தோன்றி, "அப்பனே! நீ பெற்ற நாலாயிரத்தை நம்முன் வந்து, ஒருருக் கூறுவாயாக", என்று அருளினார். நாதமுனிகள் பொலிந்து நின்ற பெருமானையும், ஆழ்வாரையும் சேவித்து, மன்னனார் தம் கனவில் தோன்றி அருளியதை விண்ணப்பித்தனர். ஆழ்வார் அருச்சகர் மூலமாக "அன்பனே! இப்பிரபந்தங் களை அன்புடையார்கள் எல்லோருக்கும் கூறி அவர்களை இவற்றுள், வல்லராம்படி செய்து, உய்விப்பாயாக," என்று அருளி விடையளித்தனர்.

நாதமுனிகள், ஆழ்வார்பால் விடை பெற்றுக் கொண்டு வீரநாராயணபுரத்திற்கு மீண்டும் வருகையில் வழியில் உள்ள திருப்பதிகளை, அவ்வவ் பதிகளுக்கு உரிய அருளிச் செயல்களால் போற்றிச் சேவித்துக் கொண்டு, வீர நாராயணபுரத்திற்கு வந்து, மன்னனார் பணித்தருளியபடி அவர் திருமுன் நாலாயிரத்தையும் ஒருருக் கூறினார். மன்னனார் உவப்பு மிக்கவராய் நாதமுனிகள் கனவில் எழுந்தருளி அவரை நோக்கி, "அப்பனே! நீ இவற்றை இயற்றமிழுக்கு உரிய வகையில் வகுத்து, அவற்றிற்கு இசையும் அமைத்திடுக," என்று அருளினார்.

நாதமுனிகள், தம்முடைய மருமக்களும், இசையில் வல்லவர்களும் ஆகிய கீழையகத்தாழ்வார், மேலையகத் தாழ்வார் என்பவர்களை அழைத்து மன்னனார் கட்டளையைத் தெரிவித்து, முன்னே வேதவியாசர்,

வேதத்தை நான்காக வகுத்து அவற்றிற்கு உதாத்தம், அநுதாத்தம் முதலிய உச்சரிப்பு முறைகளையும் அமைத்தாற்போல நாலாயிரத்தை, முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திருவாய்மொழி என்னும் நான்கு பகுதிகளாக வகுத்து, அவற்றிற்குத் தேவகானத்தை அமைத்து, அவற்றைத் தம்முடைய மருமக்களைக் கொண்டு பாடும்படிச் செய்தனர். அதனால் நாலாயிரம் உலகில் பரவுவதாயிற்று.

நாதமுனிகள் வீரநாராயணபுரத்தில் மன்னனாருக்கு வழக்கம்போல, நாள்தோறும் தொண்டு புரிந்து வரலானார். அப்பொழுது 1. உய்ய கொண்டார், 2.குருகைக் காவலப்பன், 3. நம்பி கருணாகரதாசர், 4. ஏறுதிருவுடையார், 5. திருக்கண்ண மங்கை ஆண்டான், 6. வானமாமலை தேவியாண்டான் 7.உருப்பட்டூர் ஆச்சான் பிள்ளை 8. சோகத்தூர் ஆழ்வான் என்னும் எண்மர் நாதமுனிகள் திருவடிகளை வந்தடைந்தார்கள். நாதமுனிகள் அவர்களுக்கு மந்திரங்களுட் சிறந்ததாகிய துவயத்தின் பொருளைக் கூறியருளி, திருவாய்மொழி முதலிய திவ்விய பிரபந்தங்களையும் அவர்கள், ஓதச்செய்து, திருமகள் நாதன்றன் கரிய கோலத் திருவுருவைத் தம்முடைய மனமலரில் அமைத்துக் கொண்டு, யோகத்தில் எழுந்தருளியிருந்தனர்.

பின் உய்யக்கொண்டார், குருகை காவலப்பனை அழைத்து, யோக ரகசியத்தைப் பயில்வித்தார். பின் வேதாந்தம் முதலிய நூல்களையும், திருவாய்மொழி முதலிய திவ்விய பிரபந்தங்களையும் உலகிற் பரவுவதற்கு ஆவன செய்யுமாறு அருளினார். தம்முடைய மைந்தர் ஈச்சுவர முனிகளை நோக்கி, "ஐயா! உமக்கு ஓர் அருமை மைந்தன் உண்டாவான், அவனுக்கு யமுனைத் துறைவன் என்று பெயரிடுக" என்றும், "அம்மகவிற்கு நாம் உங்களுக்குச் சொன்ன நூற்பொருள் களையும் யோகத்தின் அரும் பொருட்களையும் உபதேசிப்பீராக" என்று பணிந்தருளினான்.

தன் இறுதிக் காலம் வரை யோகத்தில் ஆழ்ந்திருந்து அடியார் நிலாகின்ற வைகுந்தமாநகரை அடைந்தார். உய்யகொண்டார், குருகை காவலப்பன், ஈச்சுவர முனிகள் முதலானோர், நாதமுனிகளது தூய திருமேனியைச் சேவித்துத் தங்கள் கண்ணினும், நெஞ்சினும் அத்திருமேனியின் வடிவைத் தேக்கிக்கொண்டு, துயரம் மிக்கவர்களாய்க் கிடந்து, துடித்துத் தாங்களே தேறி, இறுதியிற் செய்தற்கு உரியனவற்றை ஈச்சுவரமூர்த்திகளைக் கொண்டு செய்வித்துத், திருப்பள்ளி படுத்தி, மற்றும் செய்ய வேண்டியவற்றையெல்லாம் வீரநாராயணபுரத்தில் வைத்துச் செய்து முடித்தார்கள்.

நாதமுனிகள், எப்போதும் யோகத்திலே அமர்ந்திருந்த இடத்திற்கு அருகாகிய இடத்தில் குருகைக் காவலப்பன் யோகத்தில் அமர்ந்தார். நாதமுனிகள் திருநட்சத்திரம், ஆனிமாதம், அனுடநாள்.

நாதமுனிகள் திவ்வியப் பிரபந்தங்களைப் பெற்றமை குறித்துக் குருபரம்பரை கூறும் வரலாறு இதுவேயாகும். காலத்தாற்பின் தோன்றிய சடகோபர் திவ்விய சரித்திரம்! மற்றும் வைணவ ஆசாரியர்கள் முதலிய 2 நூல்களிலும் அதிக வேறுபாடின்றி இத்தகையதொரு வரலாறே கூறப்பட்டுள்ளது. புராணிகத் தன்மையுடன் சொல்லப்பட்ட வரலாறு இது. வைணவ உலகம் இந்நிகழ்ச்சியை உண்மையென்றே போற்றிக் கொண்டாடுகிறது. யோக நிலையிலேயே அவர் திவ்வியப் பிரபந்தங்களைப் பெற்றிருக்கக் கூடுமென்றும், யோகக் கலையினைத் (நாதயோகம்) தம் சீடர்களுக்குக் கற்றுக் கொடுப்பதற்கு முன்பே அவர் காலமாகிவிட்டதாலும், அவர் இயற்றிய யோக ரகசியம் போன்ற நூல்கள் கிடைக்காமல் போய்விட்டதாலும், அக்கலைபற்றி ஒன்றும் தெரிந்துகொள்ள முடியவில்லை என்றும் சிலர் கருதுகின்றனர். ஆயினும் இவ்வரலாற்றின்மூலம், நாதமுனிகள் ஆழ்வார்களின்

பாசுரங்களை அரும்பாடுபட்டுத் திரட்டித் தொகுத்தார் என்பதுவே நாம் அறிய வேண்டிய செய்தியாகும்.

நாதமுனிகள் கி. பி. 813-இல் பிறந்து 918 வரை வாழ்ந்தவர் என்றும் ஆழ்வார்கள் அனைவரும் அவருக்கு முற்பட்ட காலத்தவர் என்றும் கூறுவர் மு. இராகவையங்கார். இவ்வாழ்வார்கள் தன்னுடைய சோதிக்கு எழுந்தருளி நெடுங்காலம் கழிந்த பிறகே வீரநாராயணபுரத்தில் நாதமுனிகள் தோன்றினார் என்று ஆறாயிரப்படி குருபரம்பரையும் குறிப்பிடுகின்றது. இவற்றால் ஆழ்வார்களுக்கும், ஆசாரியார் களும் முதல்வராகக் கூறப்படும் நாதமுனிகளுக்கும் இருந்த நீண்ட கால இடைவெளியை நாம் உணரக்கூடும். இவ்விடைவெளியை இட்டு நிரப்பும் நோக்கத்துடனேயே நம்மாழ்வாரிடமிருந்து திவ்வியப் பிரபந்தங்களை நாதமுனிகள் யோக நிலையிற் பெற்றதாக வைணவ நூல்கள் குறிப்பிடுகின்றன. அன்றியும் ஆழ்வார்களுள் நம்மாழ்வார் ஒருவரே ஆசாரிய நிலை பெறுபவர் (குருபரம்பரையில் இடம் பெறுபவர்) ஆவார். அவருக்குப் பின் வந்த ஆசாரியர்களுள் முதல்வராகக் கருதப்படும் நாதமுனிகளை நம்மாழ்வாருடன் தொடர்புபடுத்தும் முயற்சியாகவும் இவ்வரலாறு எழுந்தது எனலாம்.

"நாதனுக்கு நாலாயிரம் உரைத்தான் வாழியே" என்று நம்மாழ்வாரைப் போற்றும் வாழித் திருநாமத் தனியனிலும் இத்தொடர்பு வலியுறுத்தப்படுதல் காணலாம். நாதமுனிகளின் அரும்பெரும் முயற்சியினாலேயே ஆழ்வார் பாசுரங்கள் தேடித் தொகுக்கப்பட்டன என்பது உண்மை. அவராலேயே திவ்வியப் பிரபந்தங்கள் நிலைபெற்று வாழ்கின்றன என்பதிலும் கருத்து வேறுபாட்டுக்கு இடமில்லை. எனவேதான் "தமிழ்மறை இன்னிசை தந்த வள்ளல்" என்று அவர் போற்றப்படுகிறார். வேதவியாசருடனும் ஒப்பிடப்படுகிறார். பெரியமுதலியார் என்றும் சிறப்பிக்கப்படுகின்றார்.

## நாதமுனிகளின் தொகுப்பும் நூல் அடைவும்

நாதமுனிகள் ஆழ்வார் பாசுரங்களை இயல், இசைக்குத் தக்கவாறு இருபெரும் பகுதிகளாக இயற்பா, இசைப்பா எனப் பிரித்தார். இப்பகுப்பினைச் "செய்யும் தமிழை இயலிசையிற் சேர்த்து" என அழகியநம்பிதாசரின் குருபரம்பரை குறிப்பிடுகின்றது. "இத்திவ்விய பிரபந்தங்களை, திவ்ய கானத்திலேயடைத்து இயலும், இசையுமாக்கிப் பாடுவித்தருள இது லோகத்திலே பிரஸித்தமாயிற்று" என்று ஆறாயிரப்படி குருபரம்பரையும் கூறுகின்றது.

பாசுரங்களை இயற்பா, இசைப்பா எனப் பிரித்த நாதமுனிகள் இயற்பாக்களை ஒரு பகுதியாகவும், இசைப்பாக்களை மூன்று பகுதிகளாகவும் வகுத்தருளினார். 593 பாடல்கள் இயற்பாக்களாகவும், மற்றவை இசைப்பாக்களாகவும் வகுக்கப்பட்டிருக்கின்றன. இயற்பாப் பகுதியில் முதலாழ்வார் மூவருடன் (பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்) திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் ஆகிய மூவரின் பிரபந்தங்களும் இடம் பெற்றுள்ளன. இசைப்பாவில் முதலாழ்வார் மூவரையும் தவிர ஏனைய ஒன்பதின்மர் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. இவை யாவும் பண்ணுடன் பாடுவதற்கு உகந்தவை என்னும் கருத்திலேயே, இசைப்பா என்று தனியாகப் பிரித்துத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. இயற்பாவில் அடங்கிய பிரபந்தங்களை, சப்தரஸப் பிரதானமாகையாலே இயற்பா என்று தொகுத்ததாகக் கோயிலொழுகு கூறுகின்றது.

நாதமுனிகள் இசைப்பாக்களை, தேவகானத்திலே ஏறிட்டுச் சேவித்ததாகவும், இயற்பாவை, இயலாகச் சேவித்து வந்ததாகவும் அந்நூல் மேலும் குறிப்பிடுகின்றது. இதனால் இசைப்பா - இயற்பா என்ற பாகுபாட்டினைத் தெளிவாக உணர முடிகின்றது. இப்பாகுபாடும் பழைய தமிழ் இலக்கிய மரபைத் தழுவியதாகும் என்பர் ஏ. வி. சுப்ரமணிய அய்யர். (இவர் எழுதிய "தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி" எனும் நூலில் இவ்வாறு குறிப்பிடுகின்றார்.)

இயற்பாப் பிரபந்தங்களுக்குப் பண், தாளம், குறிக்கப்பட்ட பதிப்புகள் பின்னாளில் வெளிவந்துள்ளன. இது மிகமிகப் பிற்பட்ட காலத்து வழக்கமே ஆகும் என்பர்.

இசைப்பா தொகுதிகள் மூன்றாவன: 1. முதலாயிரம், 2. பெரிய திருமொழி, 3. திருவாய்மொழி இயற்பாத் தொகுதி ஒன்று. அது இயற்பா என்றே வழங்குகிறது. இவ்விரு பகுப்பிலும் அடங்கும் பிரபந்தங்களும் பாசுரங்களின் எண்ணிக்கையும் வருமாறு :

முதலாயிரம் (10 பிரபந்தம்)

| நூற்பெயர் | பாடியோர் பெயர் | பாசுரங்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. திருப்பல்லாண்டு | பெரியாழ்வார் | 12 |
| 2. பெரியாழ்வார் திருமொழி | பெரியாழ்வார் | 416 |
| 3. திருப்பாவை | ஆண்டாள் | 30 |
| 4. நாச்சியார் திருமொழி | ஆண்டாள் | 143 |
| 5. பெருமாள் திருமொழி | குலசேகராழ்வார் | 105 |
| 6. திருச்சந்த விருத்தம் | திருமழிசையாழ்வார் | 120 |
| 7. திருமாலை | தொண்டரடிப்பொடியாழ்வார் | 45 |
| 8. திருப்பள்ளியெழுச்சி | தொண்டரடிப்பொடியாழ்வார் | 10 |
| 9. அமலனாதிபிரான் | திருப்பாணாழ்வார் | 10 |
| 10. கண்ணிநுண்சிறுத்தாம்பு | மதுரகவியாழ்வார் | 11 |
| | பிரபந்தங்கள் 10க்கு | 947 |

இரண்டாம் ஆயிரம் - பெரிய திருமொழி
(3 பிரபந்தம்)

| | | |
|---|---|---|
| 1. பெரிய திருமொழி | திருமங்கையாழ்வார் | 1084 |
| 2. திருக்குறுந்தாண்டகம் | திருமங்கையாழ்வார் | 20 |
| 3. திருநெடுந்தாண்டகம் | திருமங்கையாழ்வார் | 30 |
| | ஆக பிரபந்தங்கள் 3க்கு | 1134 |

மூன்றாம் ஆயிரம் - இயற்பா
(10 பிரபந்தம்)

| | | |
|---|---|---|
| 1. முதல் திருவந்தாதி | பொய்கையாழ்வார் | 100 |
| 2. இரண்டாம் திருவந்தாதி | பூதத்தாழ்வார் | 100 |
| 3. மூன்றாம் திருவந்தாதி | பேயாழ்வார் | 100 |
| 4. நான்முகன் திருவந்தாதி | திருமழிசையாழ்வார் | 96 |
| 5. திருவிருத்தம் | நம்மாழ்வார் | 100 |
| 6. திருவாசிரியம் | நம்மாழ்வார் | 7 |
| 7. பெரிய திருவந்தாதி | நம்மாழ்வார் | 87 |
| 8. திருவெழுக்கூற்றிருக்கை | திருமங்கையாழ்வார் | 1 |
| 9. சிறிய திருமடல் | திருமங்கையாழ்வார் | 1 |
| 10. பெரிய திருமடல் | திருமங்கையாழ்வார் | 1 |
| | ஆக பிரபந்தங்கள் 10க்கு | 593 |

நான்காம் ஆயிரம்
(ஒரே பிரபந்தம்)

| | | |
|---|---|---|
| 1. திருவாய்மொழி | நம்மாழ்வார் | 1102 |
| | ஆக பிரபந்தம் 1க்கு | 1102 |

24 பிரபந்தங்களுக்கு மொத்தப்பாசுரங்கள்: 3776

நாலாயிர அடைவில் ஆழ்வார்களின் பிரபந்தங்கள் அவர்களது கால வரிசைப்படி அமைக்கப்பெறவில்லை. பெரியாழ்வாரின் பல்லாண்டுடன் தொடங்கி நம்மாழ்வாரின் திருவாய்மொழியோடு நூல் நிறைவுறுகிறது.

## அருளிச்செயல்

ஆழ்வார்களின் பிரபந்தங்களை "அருளிச்செயல்" எனக் குறிப்பதே வைணவ மரபாகும். மணவாள மாமுனிகள் உபதேச ரத்தின மாலையில் அருளிச்செயல் என்றே குறிப்பிடுகின்றார்.

"ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல் வாழி"

"ஆழ்வார்களையும், அருளிச்செயல்களையும்"

"ஆழ்வார்கள் சீர்மை அறிவாரார்?
அருளிச்செயலை அறிவாரார்?"

என்பன அவர் கூற்றுக்கள். ஆழ்வார்களைக் கூறி அடுத்த நிலையில் அவரது படைப்புக்களைக் குறிக்குமிடம் தோறும், அருளிச்செயல் என்றே அவர் பாடுதல் காணலாம். ஆசாரிய ஹ்ருதயம் என்னும் நூல், அருளிச்செயல் என்பதனோடு திவ்யப்பிரபந்தம் என்னும் பெயராலும் ஆழ்வார்களின் பிரபந்தங்களைக் குறிப்பிடுகின்றது.

# திவ்வியப் பிரபந்தம்

நாளடைவில் ஆழ்வார்கள் தமிழ்ப் பாசுரங்களை, திவ்வியப் பிரபந்தம் என்னும் வடமொழிப் பெயர் கொண்டு குறிப்பது வழக்குக்கு வந்துவிட்டது. ஆறாயிரப்படி குருபரம்பரை, கலியனருள் பாடு, கோயிலொழுகு போன்ற நூல்களில் திவ்வியப் பிரபந்தம் என்னும் பெயர் காணப்படுகிறது. பிரபந்தம் என்னும் வடசொல், நன்றாகக் கட்டப்பட்டது என்னும் பொருளில் நூலைக் குறிப்பதாகும். அதனோடு திவ்வியம் என்னும் அடை சேர்ந்து திவ்விய பிரபந்தம் ஆயிற்று. திவ்வியம் என்னும் சொல் தெய்வீகமான பொருள்களைக் குறிக்கப் பயன்பட்டுள்ளது. வைணவ நெறியில் இறைவன் எழுந்தருளியுள்ள தலங்கள் திவ்விய தேசம் எனப் பெயர் பெறுகின்றன.

இறைவனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற தெய்வப் புலவர்களான ஆழ்வார்கள், திவ்விய சூரிகள் எனச் சிறப்பிக்கப் படுகின்றனர். எனவே அவர்களால் பாடப்பெற்ற பிரபந்தங்களும், திவ்வியப் பிரபந்தங்கள் ஆயின. வைணவத்தில் பிரமாணம் (உண்மை அறிதற்குக் கருவியாய் இருப்பது) - பிரமேயம் (பிரபமாணத்தால் அறியப்படும் பொருள். பிரமாதா (உண்மை அறிவுடையோன்) என்னும் மூன்றும் திவ்யம் என்னும் அடைமொழி கொடுத்தே வழங்கப்படுகின்றன. திவ்விய பிரபந்தம் எனும் பெயருக்கு இவ்வழக்கே அடிப்படையாகின்றது.

பாசுரங்கள் எண்ணிக்கையைக் கருத்திற்கொண்டு, நாலாயிரம், நாலாயிரப் பிரபந்தம் என்னும் பெயர்களும் இந்நூலுக்கு வழங்கியுள்ளன. எனினும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்னும் பெயரே இன்று நிலை பெற்றுள்ளது. இப்பிரபந்தங்களைச் "செய்யதமிழ் மாலைகள்" எனவும் குறிப்பதுண்டு. இது அருகிய வழக்கே. மேலே குறித்த பெயர்களில் அன்றி, "சந்தமிகு தமிழ்மறை" என்னும் பெயரிட்டு இந்நூலை ஒருவர் பதிப்பித்துள்ளார் என்பது புதிய செய்தியாகும்.

# வைணவ புராண இலக்கியம்

ஆறாம் நூற்றாண்டு தொடங்கித் தமிழ் மொழியில் திருமாலையே பரம்பொருளாகக் கொண்டு போற்றும் நூல்கள் எழுத் தலைப்பட்டன. இக்காலப் பகுதியில் முதலாழ்வார் மூவர் பாடிய மூன்று அந்தாதிகளும் தோன்ற, தொடர்ந்து ஒன்பதாம் நூற்றாண்டு வரையில் பல ஆழ்வார்களின் பாசுரங்கள் தோன்றின. 9-ஆம் நூற்றாண்டில் தோன்றிய நம்மாழ்வாரின் பாசுரங்கள் தமிழில் வைணவ நெறியைத் தனிப்பெரு நெறியாக அமைத்தன. அந்த நூற்றாண்டில் பிறந்த நாதமுனிகள் தொடங்கி 1137-ல் பரமபதித்த இராமாநுசர் வரையில் வைணவ ஆசாரிய பரம்பரை சிறந்து வளர்ந்தது.

இந்த வைணவ நெறி ஆழ்வார் பாசுரங்களைப் போல் தமிழில் கால் கொள்ளாமல் வடமொழியையே அடிப்படையாக வைத்து நூல் செய்தது. தமிழும் வடமொழியும் கலந்த "மணிப்பிரவாளம்" என்ற புதிய உரைநடையைச் சமய வியாக்கியான நூல்களுக்காகப் பயன் படுத்திக் கொண்டது. 9, 16-ஆம் நூற்றாண்டுகட்கு இடைப்பட்ட காலப் பகுதியில் நூல் எழுதிய வைணவப் பெரியோர்கள் சிறந்த தமிழ்ப் புலமை பெற்றிருந்தபோதிலும், சாத்திர வியாக்கியான நூல்களை மணிப்பிரவாள உரைநடையில் மட்டுமே எழுதினர். இலக்கியத் துறையைக் கண்ணெடுத்தும் நோக்கவில்லை. இக்கருத்துக்கு இலக்காக வேதாந்த தேசிகர் தமிழிலும் வடமொழியிலும் தோத்திர, சாத்திர நூல்கள் பல செய்தார். மணவாள மாமுனிகள் தமிழில் சில தோத்திர நூல்கள் செய்தார். 16-ஆம் நூற்றாண்டுகட்கு முந்திய நூற்றாண்டுகளில் சைவ சமயத்தில் எழுந்த இலக்கிய வெள்ளம் எல்லோரையும் சமய நெறியில் ஈடுபடுத்தியது. இக்காலத்தில் எழுந்த சமயப் பேரிலக்கியங்கள் கந்தபுராணம், உபதேசக் காண்டங்கள்,

திருவாதவூரடிகள் புராணம், அருணகிரிநாதர் முருகன் புகழ்பாக்கள் என்பன. இவற்றால் எழுந்த அலைகள் கரைகடந்து மோதியபோது, அம்மோதல் வைணவரையும் தாக்கியது. விழித்துக் கொண்டவர்களில் பெரும்புலவர் பலரும் தோன்றினர். இவர்கள் எக்காலத்திலும் இல்லாதவாறு வைணவ சார்பாக பெரும் நூல்கள் செய்தனர். அவை:

1. ஸ்ரீ பாகவத புராணம் அல்லது இதிகாச பாகவதம்
2. மகா பாகவதம் அல்லது புராண பாகவதம்
3. திருக்குருகை மான்மியம்
4. கூடற் புராணம்
5. இரு சமய விளக்கம்

முதல் இரண்டும் இதிகாசம் (பாகவதம்)
மூன்றாவது தலபுராணம். 5வது சமயவிசாரமாக உள்ளது.

**இலக்கிய வகைகள்:-**

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் உள்ள "பல்லாண்டு" "பள்ளியெழுச்சி" "பாவை" "மடல்கள்" "மாலை" ஆகியவை பொருள் அடிப்படையில் எழுந்த இலக்கியங்களாகக் கருதத்தக்கவை. இவையேயன்றி வேறு சில இலக்கியங்களுக்கான கூறுகளும் திவ்வியப் பிரபந்தத்தில் காணப்படுகின்றன.

நாலாயிர அடைவில் ஆழ்வார்களின் பிரபந்தங்கள் பெரியாழ்வாரின் பல்லாண்டுடன் தொடங்கப் பெறுவதால், நாம் முதலில் பெரியாழ்வாரின் வரலாற்றுடன் இப்பிரபந்தங்களைத் தொடங்குவோம்.

# பெரியாழ்வார்

பாண்டிய நாடு முத்தும் முத்தமிழும் பெற்றதனால் பொலிவுற்று விளங்கும் நாடாக விளங்கியது. அப்பாண்டிய நாட்டில் புத்தூர் என்னும் ஊரை அடுத்த காட்டில் வாழ்ந்த வேடர் குலத் தலைவனுக்கும் அவனது மனைவியாகிய மல்லிக்கும், வில்லி, கண்டன் என்னும் இரு புதல்வர்கள் பிறந்து, வேட்டையாடுவதில் வல்லவர்களாக விளங்கினர்.

ஒரு நாள் வில்லியும், கண்டனும் வேட்டையாடப் புறப்பட்டுச் சென்றனர். கண்டன் புலியைப் பின்தொடர்ந்து சென்று அம்புகள் ஏவியபோது அம்பிற்குத் தப்பிய புலி அவனைக் கொல்லவும், பின்னால் வந்த வில்லி இக்காட்சியைக் கண்டு வருந்தினான். அவ்வளவில் திருமகள்நாதனின் அருளால் வில்லியின் தம்பி கண்டன் உயிர் பெற்று எழுந்ததோடு, வில்லி பெருஞ்செல்வமும் பெற்றான். அதனால் அவன் அந்த இடத்தில் திருமாலுக்கு உயர்ந்த ஒரு கோயிலை எழுப்பினான். அக்கோயிலைச் சூழப் பல அழகிய தெருக்களை அமைப்பித்து, அத்தெருக்களில் எழிலார் மாடங்களை உடைய வீடு களையும் கட்டுவித்தான். பின்பு புத்தூரில் உள்ளாரை அவ்வூரில் குடியேறச் செய்து குடியேறியவர்களது ஊராகிய புத்தூர் என்பதோடு தன் பெயராகிய வில்லி என்பதையும் சேர்த்து "வில்லிபுத்தூர்" என்று அத்திருப்பதிக்குப் பெயரிட்டுக் கோயிலின்கண் சிறப்பாகப் பூசை செய்தற்குரிய வழிகளையும் செய்து முடித்தான். அப்பதியைச் சூழ்ந்த இடத்திற்கு "மல்லி நாடு" என்ற பெயரைத் தனது தாயின் நினைவாக வில்லி பெயரிட அப்பெயரே அந்நாட்டிற்கு வழங்கப்பெறுவதாயிற்று.

வில்லிபுத்தூரில் குடியேறிய மறையவர்களுள் முகுந்தபட்டர் என்னும் முன்குடுமிச் சோழிய பிராமணர்

ஒருவர் இருந்தார். அவர் பதுமவல்லி என்னும் மங்கை நல்லாளை மணந்து இல்லறம் என்னும் நல்லறத்தை இனிது நடத்தி வந்தகாலத்தே, திருமகள்நாதனின் அருளால் அவருக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. அந்த ஆண் மகவே பிற்காலத்தில் போற்றிப் புகழப்படும் பெரியாழ்வார் ஆவார்.

பெரியாழ்வார் ஸ்ரீவில்லிபுத்தூரில் (கி.பி. 9-ஆம் நூற்றாண்டில்) குரோதன ஆண்டு ஆனித் திங்கள், வளர் பிறையில் பொருந்திய ஏகாதசி திதியில் ஞாயிற்றுக் கிழமையன்று சுவாதி நட்சத்திரத்தில் ஸ்ரீகருடாமிசராய் அவதரித்தருளினார்.

பெற்றோர் இவருக்கு விட்டுசித்தன் என்ற பெயரை வைத்துத் தக்க வயதில் கல்வி கற்பிக்கத் தொடங்கினர். பின்னர், இவருக்குத் திருமாலுக்குத் தொண்டு செய்வதே சிறந்தது எனத் தோன்றியது. எனவே மூதாதையர் ஈட்டி வைத்திருந்த பொருட்குவியலினின்றும் ஒரு பெரும் பகுதியைக் கொண்டு நீர்பாங்கான நிலத்தினைத் தேர்ந்தெடுத்து வேலி வளைத்து அதில் பல வகை மலர்ச் செடிகளையும் பயிரிட்டு, அம்மலர்களால் அழகிய மாலைகளைக் கட்டி அப்பகுதியில் உள்ள வடபெருங் கோயிலின்கண் எழுந்தருளியிருக்கும் திருமாலிற்குச் சார்த்தி வருவாராயினர்.

அப்பொழுது பாண்டிய நாட்டில் வல்லவ தேவன் என்னும் அரசன் செங்கோலோச்சி வந்தான். அவன் பாண்டியர்தம் குலத்திற்கு ஓர் எழில்மிக்க விளக்குப் போன்றவன். பல கலைகளைத் தேர்ந்தவன். அவன் எல்லாத் துறைகளிலும் சிறந்து விளங்கினான். எனினும், அவன் அறக்கள வேள்வியிலும் மாட்சிமையடைய வழி யாது எனச் சிந்தித்து உண்மைப் பொருளை உணர்தலே அதற்கு வழி என முடிவு செய்தான். அவ்வமயம் வேத வேதாந்தங்களைக்

கற்ற செல்வநம்பி என்னும் புரோகிதர் அரசனிடம் வர, அவரை நோக்கிய அரசன் "அந்தமிழ் இன்பத்தை எவ்வாறு பெறலாம்" எனக் கேட்டான். அதற்கு மறைவராகிய செல்வநம்பி, "வேதமுடிவாகிய பரம்பொருள் இன்னது என்பதை வித்துவான்கள்மூலம் நிச்சயித்து அவ்வழியாலே பெறலாம்" என்று அறிவிக்க, அரசனும் அங்ஙனமே ஆகுக என்றான். பின்னர் அரசன் தனது அரியணைக்கு முன்புறத்தில் ஒரு தோரணக் கம்பத்தை நட்டு, கிழிச்சிறையிலே பொற்குவியலை இட்டு, அப்பொற்கிழியை அக்கம்பத்தில் கட்டித் தொங்கவிட்டு, தான் கூறும் உண்மைப் பொருளால் இப்பொற்கிழி தானே அறுந்து விழும்படி எவர் செய்கின்றாரோ அவருக்கு இப்பொற்கிழி உரியதாம் என்று எல்லா இடங்களுக்கும் பறையறைந்தும், தூதர்கள்மூலமும் அறிவித்தான். பலர் வந்து சொல்மாரி பொழிந்தும் பொற்கிழி அறுபடவில்லை.

திருமகள்நாதன் விட்டுசித்தர் கனவில் தோன்றி, பாண்டியன் அவைக்குச் சென்று பொற்கிழி தானே அறும்வண்ணம் உண்மைப் பொருளை உணர்த்தும்படி அறிவிக்க, அங்ஙனமே விட்டுசித்தரும் இறைவன் பணியை மேற்கொண்டு மறுநாள் காலை பாண்டியனது நகர் சென்றார். பாண்டிய வேந்தனாகிய வல்லப தேவரும், செல்வநம்பியும் சென்று விட்டுசித்தரை வரவேற்றனர். விட்டுசித்தரைக் கண்டு அரசன் வணங்கி, "அருளிற்சிறப்புடையீர்! தங்கள் வருகையால் என் மனம் மகிழ்ச்சியுற்றது" எனக் கூறினான். அவையில் அரசன் அவருக்குச் சிறந்ததோர் இருக்கை தந்து அமரச் செய்தான்.

அப்பொழுது அங்கிருந்த புலவர்கள் விட்டுசித்தரை அவமதிக்கும் முறையில் பார்த்து, "கற்றார் அவையில் சென்று ஒன்றினைக் கூறுதலால் உண்டாகும் இழிவை எண்ணாது வந்தமை, குருட்டுக்கண் இருட்டைக் கண்டு

அஞ்சுமோ?" என்ற பழமொழிக்கு ஒப்பாக உள்ளது என்று தங்களுக்குள் இவரைக் குறித்து உரையாடிக்கொண்டனர். புலவர்கள் இங்ஙனம் பேசிக் கொண்டிருக்கையில் அரசன் குறிப்பின்படி செல்வநம்பி, விட்டுசித்தரை நோக்கி, "தங்கள் வேதமுடிவாய் உள்ள உண்மைப் பொருளை எங்களுக்கு உணர்த்தல் வேண்டும்" என உரைத்தார்.

வைகுந்தவாசனாகிய திருமாலின் திருவருள் பெற்றதன் காரணமாக அவையின் இடையில் வந்து அவை வணக்கம் கூறிய விட்டுசித்தர், வேதமுடிவாய் உள்ள உண்மைப் பொருளை தம் சொற்கள் கொண்டு விளக்க உரையாற்றினார். விட்டுசித்தரால் ஆற்றப்பெற்ற அவ்விளக்க உரை, கேட்டாற் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாகிய சொற்களால் அமைந்த ஆய்வுரையாகவும், அவரால் கூறப்பட்ட சொற்கள் யாவும், பிறிதோர் சொல் அச்சொல்லை வெல்லும் தன்மை இல்லாமல் விழுமிய பொருள் பொதிந்ததாகவும், உண்மைப்பொருளை உணர் தற்கு ஏற்றதாகவும் இருந்தது. உடனே பொற்கிழி கட்டியிருந்த கம்பம் பொற்கிழி இவர் அருகு வரும்படி வளையலாயிற்று. விட்டுசித்தரும் பொற்கிழியை அறுத்துக் கொண்டார். வேந்தனும், செல்வநம்பியும் ஏனையோரும் விட்டுசித்தரை வணங்கிப் போற்றினர்.

பின்னர் அரசன் கட்டளையினால் ஏவலர் அந்நகர மாடங்கள் தோறும் கொடிகளை ஏற்றி, தோரணக் கம்பங்கள் நாட்டி, மலர் மாலைகள் கட்டித் தொங்கவிட்டனர். வல்லப தேவனாகிய பாண்டிய மன்னன் விட்டுசித்தருக்கு "பட்டர்பிரான்" என்னும் பட்டம் வழங்கிப் பட்டத்து யானையின்மீது அவரை ஏற்றி, நகர் உலா வரச்செய்தான். விட்டுசித்தர் உலாவி வரும் வீதிகள் யாவும் அலங்காரம் செய்யப்பட்டிருந்தன. "வேதங்கள் ஓதி விரைந்து கிழி அறுத்த பட்டர்பிரான் வந்தார்" என்னும் வாழ்த்தொலிகள்

முழங்க விட்டுசித்தரும் வீதிகள்தோறும் உலாவந்த விழா சீரிய முறையில் நடைபெற்றது. அங்ஙனம் உலாவருதல் நிகழ்ந்த காலத்து பரமபதத்தின் தலைவனாக விளங்கும் உலக இரட்சகரான திருமாலனவர் அயன், அரன், இந்திரன் முதலியோர் புடைசூழக் கருடன்மீது இவர்ந்து வந்து, விட்டுசித்தருக்கும், அரசருக்கும் காட்சியளித்தார்.

முதலும் ஈறும் இல்லாத முதற்பொருள் ஆகியவரும், அமரர்கள் அதிபதியும், உயர்வற உயர்நலம் உடையவரும், பரமபதத்தில் சித்தரும் முத்தரும் சேவிக்க விளங்கும் பரம்பொருள் ஆனவரும், பீதாம்பரதாரியும் ஆகிய பரந்தாமனது எழிலைக் கண்ணுற்ற விட்டுசித்தர் என்னும் நாமம் கொண்ட பட்டர்பிரான் அன்பின்மிகுதியால், இறைவன் எழில் நிலை பெற்றிருக்கும் வகையில் பல்லாண்டு பாடி வாழ்த்துவராயினர்.

மன்னர் அரசனிடமும் செல்வநம்பியிடமும் விடை பெற்றுக்கொண்டு, வில்லிபுத்தூரை அடைந்த விட்டுசித்தர் கிழியறுத்துக் கொணர்ந்த பொன்னைக் கொண்டு வடபெருங் கோயிலைப் புதுப்பித்து அதனை அங்குள்ள திருமாலுக்கே ஆக்கினார். பின்பு கண்ணனது திருஅவதாரச் சிறப்பினை நாற்பத்து நான்கு திருமொழிகளாகப் பாடினார். இவற்றின் மொத்தப் பாசுரங்கள் நானூற்று அறுபத்தொன்று ஆகும். திருப்பல்லாண்டின் பாசுரங்கள் பன்னிரண்டு ஆகும். ஆக விட்டுசித்தரால் பாடப்பட்ட பாசுரங்களின் எண்ணிக்கை நானூற்று எழுபத்து மூன்று ஆகும். இவருடைய பாசுரங்கள் பெரியாழ்வார் திருமொழி என்று வழங்கப்பட்டு, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் முதற்கண் அமைக்கப்பட்டுள்ளன.

விட்டுசித்தர் திருமாலைப் பல்லாண்டு பாடி வாழ்த்தினமையால், "பெரியாழ்வார்" என்று இவரை வைணவப் பெரியார்கள் கூறலாயினர். பெற்றோரால்

விட்டுசித்தர் என்று வழங்கப்பட்ட இவருக்கு வழங்கும் வேறு பெயர்கள் (1) பெரியாழ்வார், (2) பட்டர்பிரான், (3) ஸ்ரீ வில்லிபுத்தூர்கோன், (4) கிழியறுத்தான், (5)புதுவைக்கோன்.

பெரியாழ்வாரால் பாடப்பெற்ற தலங்கள்: திருவரங்கம், திருவெள்ளாறை, திருப்பேர்நகர், கும்ப கோணம், திருக்கண்ணபுரம், திருச்சித்திரக்கூடம், திரு மாலிருஞ்சோலைமலை, திருக்கோட்டியூர், ஸ்ரீவில்லி புத்தூர், திருக்குறுங்குடி, திருவேங்கடம், திருவயோத்தி, சாளக்கிராமம், வதரியாச்சிரமம், திருக்கங்கைக் கரைக்கண்டம், துவாரகை, வடமதுரை, திருவாய்பாடி, திருபாற்கடல், பரமபதம்.

## பெரியாழ்வார் திருமொழி
## முதற்பத்து
## திருப்பல்லாண்டு

மக்கள் தன்னலத்தையே விரும்புகிறார்களே! பிறர் நலத்தையும் எண்ண வேண்டாவோ! தம்முடைய நன்மையை விரும்பியே பகவானிடம் செல்லுகிறார்கள், வேண்டியவற்றைக் கேட்டுப் பெறுகிறார்கள்: பகவானுக்கு ஒருமுறைகூடப் பல்லாண்டு பாடுவதில்லை! உலகின் தன்மையை அறிந்து பெரியாழ்வாரின் திருவுள்ளம் குமுறுகிறது. பல்லாண்டு பாடலாம் வாருங்கோள் என்று எல்லோரையும் அழைக்கிறார். பல்லாண்டு பாடுவதே (மங்களாசாஸனம் செய்வதே) அடியார்களின் கடமை! அவர் காட்டிய வழியைத்தான் பின்பற்றுவோமே!

பெரியாழ்வார் இறைவனுக்குப் பாடிய திருப் பல்லாண்டு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் என்னும் தொகுப்பின் தொடக்கப் பகுதியாக அமைகிறது. இங்ஙனம்

முதலாவதாக இடம் பெற்றமை அதன் பெருஞ் சிறப்பை நன்கு புலப்படுத்தும் என்பர். "உள்ளதுக்கெல்லாம் சுருக்காய்த் தான் மங்கலமாதலால்" என்று இப்பிரபந்தத்தின் பெருமையினைக் குறிப்பிடுகின்றார். வைணவ ஆசாரியரான மணவாள மாமுனிகள், திருமாலாகிய இறைவனுக்கு ஆழ்வார் திருப்பல்லாண்டு கூறும் முறையில் இது அமைந்துள்ளது. பல்லாண்டு இலக்கியத்திற்கான தோற்றக் களங்கள் ஆராயத்தக்கன. ஒருவனை நெடுங்காலம் வாழ்வாயாக என வாழ்த்தும் உலகியல் வழக்கமே இதற்கு அடிப்படையாகலாம். ஒருவனின் குழந்தைப் பருவத்திலேயே இங்ஙனம் வாழ்த்துதல் தொடங்கிவிடுகிறது.

"பண்ணேர் மொழியாரைக் கூவி முளையாட்டிப்
பல்லாண்டு கூறுவித்தேன்"(பெ. ஆ. தி. 3. 3. 9.)

என்று அசோதை ஆய்ச்சியரைக் கொண்டு கண்ணனுக்குப் பல்லாண்டு கூறுவித்ததைப் பாடுகின்றார் பெரியாழ்வார். இங்கே தாய் தன் குழந்தைக்குப் பல்லாண்டு கூறுவிக்கும் உலகியல் வழக்கம் சடங்குசார் தன்மை பெறுவதைக் காணலாம். முளைப்பாலிகை வளர்த்தல், மகளிர் பலரை அழைத்துப் பல்லாண்டு கூறச் செய்தல் ஆகியவை சடங்கியல் தன்மையின் அடையாளங்கள் ஆகும்.

இங்ஙனம் குழந்தைப் பருவத்தில் தொடங்கும் வாழ்த்து மனித வாழ்வில் பல்வேறு நிலைகளிலும் தொடர்கின்றது. கல்விக் கற்கத் தொடங்கையிலும், திருமணத்தின்போதும் வாழ்விற் செயலாண்மையுடன் முயற்சிகளை மேற்கொள்ளும்போதும் ஒருவனை வாழ்த்துதல் இயல்பாக உள்ளது. இத்தகைய உலகியல் மரபு மட்டுமின்றிப் பழந்தமிழ் நூல்களில் உள்ள அரச வாழ்த்துப் பாடல்களும் இவ்வகை இலக்கியத்துக்குத் தோற்றுவாய்

செய்துள்ளன. புறநானூற்றுப் பாடல்கள் பல அரசர்களுக்கு வாழ்த்துக் கூறும் துறைகளைக் கொண்டுள்ளன.

"கொண்டல் மாமழை பொழிந்த
நுண்பல் துளியினும் வாழியபலவே!"

"நீ நீடு வாழிய நெடுந்தகை.....
கடுவளி தொகுப்ப ஈண்டிய
வடுஆழ் எக்கர் மணலினும் பலவே!"

"நீல மணிமிடற்று ஒருவன்போல
மன்னுக பெரும நீயே!"

இவ்வடிகளில் புலவர்கள் தம்மை ஆதரித்த புரவலர்களை நீடு வாழுமாறு மனமுவந்து வாழ்த்தியதை காணலாம். அரசர்கள் அல்லது தலைமக்களுக்குப் பெண்கள் பல்லாண்டு கூறும் உலக வழக்கினைப் பெரிய திருமொழி (6-2-5), திருவாய்மொழி (7-6-11), பாசுரங்களாலும் அறியப்படுகிறது.

இறைவனுக்குப் பல்லாண்டு பாடும் மரபு இருந்ததையும் அது இசையாகப் பாடப்பட்டது என்பதனையும் திருநாவுக்கரசரின் திருவாரூர்ப் பதிகத்தால் அறியலாம். பல்லாண்டுப் பாடுவோரை, "பாடுவார் பணிவார் பல்லாண்டிசை கூறுபக்தர்கள்" எனக் குறிப்பிடுகிறார் அவர்.

"பண்பல பாடிப் பல்லாண் டிசைப்ப"
என்பது பெரியாழ்வார் திருமொழி. (1-9-5)

"பாண்தேன் வண்டறையும் குழலார்கள்
பல்லாண்டிசைப்ப"
என்பது பெரிய திருமொழி. (6-2-5)

"நாமகளோடும் பல்லாண்டு இசைமின்"
என்பது திருவாசகம்.

"பன்னிருவர் ஆதித்தர் பல்லாண்டு எடுத்திசைப்ப"
என்பது ஆதிஉலா.

"பங்கயில் ஆசி கூறப் பல்லாண்டு இசைபரவ"
என்பது கம்பராமாயணம்.

இவற்றால், "பல்லாண்டு வாழ்க" என வாழ்த்துதல் பொருளில் அமைந்த இசைப்பாட்டினைப் "பல்லாண்டிசை" எனக் குறிக்கும் வழக்கு இருந்தமை அறியலாம். அங்ஙனம் பாடுவாரைப் பல்லாண்டிசைப்பர் என்று திருப்பாவையும் குறிப்பிடுகின்றது. பல்லாண்டு என்னும் இலக்கிய வகைக்குரிய தொடக்கக் கால நூல்களாக நமக்குக் கிடைப்பன பெரியாழ்வாரின் திருப்பல்லாண்டும், சைவத்தில் பின்னர் தோன்றிய சேந்தனாரின் திருப்பல்லாண்டுமே ஆகும். இவையிரண்டும் இசைப்பாக்கள் என்பதனை முறையே, "முதலாயிரம்", "திருவிசைப்பா" என்னும் இசைப்பாத் தொகுதிகளில் இவை இடம்பெறுவதைக் கொண்டு அறியலாம்.

சீவல்லபன் என்னும் பாண்டியனது அவையில், நாராயணனே பரம்பொருள் என்ற பரத்துவ நிர்ணயம் செய்து பொற்கிழிப் பெற்றார் பெரியாழ்வார். அகமகிழ்ந்த பாண்டியன் அவரை யானைமீது ஏற்றி ஊர்வலம் செய்வித்தான். அப்போது இறைவன் திருமகளுடன் கருடன்மேல் ஆழ்வாருக்குக் காட்சியளிக்க, அவனுக்கு என்ன தீங்கு நேருமோ? என்று, தாய் உள்ளத்துடன் காப்பிடக் கருதினார் பெரியாழ்வார். யானையின் மணிகளையே தாளமாகக் கொண்டு,

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா உன்
சேவடி செவ்வி திருக்காப்பு"

என்று பல்லாண்டு பாடத் தொடங்கினார். "பல்லாண்டு" எழுந்த சூழலை வைணவ நூல்கள் இவ்வாறு விவரிக்கின்றன.

வைணவ மரபில் ஆழ்வார்களையும், ஆசாரியர்களையும், வாழ்த்திப் பாடும் வாழித்திருநாமச் செய்யுட்களையும், இவ்வகையினவாகக் கருதலாம். ஆசாரியர்களை வாழ்த்திப் பாடும் பாடல்கள் சில:

"அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ
சடகோபன் தண்டமிழ் நூல் வாழ -- கடல்சூழ்ந்த
மண்ணுலகம் வாழ மணவாள மாமுனியே
இன்னுமொரு நூற்றாண்டிரும்".

- நித்யானுஸந்தானம் - பக்கம் 136

"நானிலமுந் தான்வாழ நான்மறைகள் தாம்வாழ
மாநகரின் மாறன் மறைவாழ -- ஞானியர்கள்
சென்னியணி சேர் தூப்புல் வேதாந்த தேசிகரே
இன்னுமொரு நூற்றாண்டிரும்".

- கொமாண்டூர் அநந்தாசார்யர் தேசிக பிரபந்தம்

இவ்வகையான வாய்ப்பாட்டில் இன்றளவும் வைணவப் பெரியோர்களுக்கு வாழ்த்துக்கூறும் மரபு தொடர்கின்றது.

"ஆரண நூல் வாழ அருளிச்செயல் வாழ
தாரணியோர் தாமு முடன்வாழ -- ஏரணிசீர்
மன்னுபுகழ் அண்ணங் காரியனாம் மாகுருவே
இன்னுமொரு நூற்றாண்டிரும்".

ஆர். அரங்கராஜன் (தொ. ஆ.) உபந்யாசகர் ஹஸ்தபூஷணம்

இந்த நூற்றாண்டில் வைணவப் பேரறிஞராக வாழ்ந்து மறைந்த பி. ப. அண்ணங்கராசாரியாருக்கு முந்தையோர் மரபில் அடியார்கள் கூறிய வாழ்த்து இது. இவையாவும் பல்லாண்டு பாடும் மரபைத் தழுவி எழுந்தவையே. "நீடு வாழ்க" என வாழ்த்துக் கூறும் உலகியல் வழக்கு உள்ளவரை, "பல்லாண்டு" என்னும் இலக்கியம் ஏதோ ஒரு வடிவில் அல்லது வகையில் வாழ்வு பெற்றிருக்கும் என்று கருதலாம்.

இன்றைய நம் வாழ்க்கை முறையில் நாம் ஒருவருக்கொருவர் கடிதம் எழுதும்பொழுதும், வாழ்த்து மடல் அனுப்பும்போதும் "வாழ்வாங்கு வாழ்க" என்றும், "வாழ்க வளமுடன்" என்றும், "இன்றுபோல் என்றும் வாழ்க" என்றும் வாழ்த்துகிறோம். நம்மை அறியாமலேயே நம் முன்னோர்களின் வாழ்க்கை நெறி நம்முள் பரவி நிற்பதே காரணம் எனலாம். நாமெல்லாம் பெரியாழ்வாரின் வழித் தோன்றல்கள்தானே! அப்பெரியாரின் பாதத் துளியின் சிறுத்துமி தானே!

### பெரியாழ்வார் திருமொழி
### பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு

"அடியோ மோடும் நின்னோடும் பிரிவின்றி
ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும்
சுடர் ஆழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்ச
சன்னியமும் பல்லாண்டே".

— திருப்பல்லாண்டு, 2.

அடியவர்களாகிய எங்களோடும், உம்மோடும் பிரிவில்லாமல் பல ஆயிரம் வருடங்கள் வாழ்க! நல்ல வடிவோடு உமது மார்பினில் வலது பக்கத்தில் வசிக்கின்ற மங்கையாரான பெரியபிராட்டியும் பல ஆயிரம் வருடங்கள் வாழ்க! நல்ல உருவத்தைப் பெற்று பராக்கிரமத்துடன் உமது வலக்கையிலே நிற்கும் ஒளிவிடுகின்ற சக்கரமும் பல ஆயிரம் வருஷங்கள் வாழ்க! ஆயுதங்களோடு யுத்தங்களில் புகுந்து ஆரவாரம் செய்கின்ற அந்தப் பாஞ்ச சன்னியம் என்ற சங்கும் பல வருடம் வாழ்க!

லீலாவிபூதி ஆகிய இந்த உலகத்தில் உள்ள தம்மைப் போன்றவர்களுக்கும், நித்திய விபூதியாகிய பரமபதத்தில் இருக்கும் பெரிய பிராட்டி முதலியவர் களுக்கும் இதில் மங்கலம் வேண்டுப்படுகின்றது.

குழல் ஊதின போது

"கருங்கண் தோகை மயிற்பீலி யணிந்து
கட்டி நன்கு(உ)டுத்த பீதக ஆடை
அருங்கல உருவின் ஆயர் பெருமான்
அவன் ஒருவன் குழல் ஊதினபோது
மரங்கள் நின்று மதுதாரைகள் பாயும்
மலர்கள் வீழும் வளர்கொம்புகள் தாழும்
இரங்கும் கூம்பும் திருமால் நின்ற நின்ற
பக்கம் நோக்கி அவை பெய்யும் குணமே".

-- பெரியாழ்வார் திருமொழி, 3, 6, 10.

கருத்த கண்கள் அமைந்த மயிலிறகுகளைத் தலையில் அணிந்து, அழகாக உடுத்துக்கொண்ட பீதாம்பரத் தையும் அருமையான ஆபரணங்களையும் தரித்த திருமேனி

உடையவனான இடையர்களுக்கு அதிபதியான பிரசித்தி பெற்ற ஒப்பற்றவனாகிய கண்ணன் குழல் ஊதினபோது அறிவற்ற மரங்களும் அசைவற்று நின்று மகரந்தப் பொடிகளை (தேனை) தாரையாகப் பெருக்கும். புஷ்பங்களும் கீழே விழும். மேல் நோக்கி வளரும் கிளைகளும் தாழும். அம்மரங்கள் உருகும். கைக் கூப்புவதைப்போல கொம்புகளைக் குவிக்கும். இப்படியாக அந்த மரங்கள் கண்ணன் நிற்கும் பக்கங்களையெல்லாம் நோக்கிச் செய்யும் குணம் (வழிபாடு) இருந்தபடிதான் என்னே!

பெரியாழ்வார் கண்ணபிரானது குழலோசையைக் கேட்டுத் தாம் பக்திப்பரவசமாகி ஆனந்தம் அடைவதைப் போல, மரங்களும் மற்றவையும் அவ்விதமே அநுபவிக்கின்றன என்றார். கண்ணனது குழலூதுதலின் சிறப்பு இது!

### எங்ஙனம் படைத்தான் கொலோ...

"நாவ காரியம் சொல்லிலாதவர்
நாள் தொறும் விருந்தோம்புவார்
தேவ காரியம் செய்து வேதம்
பயின்றுவாழ் திருக்கோட்டியூர்
மூவர் காரியமும் திருத்தும்
முதல்வனைச் சிந்தியாத அப்
பாவகாரிகளைப் படைத்தனன்
எங்ஙனம் படைத்தான் கொலோ!"

– பெரியாழ்வார் திருமொழி, 4, 4, 2.

நாக்கினால் சொல்லக் கூடாதவற்றைச் சொல்லி அறியாதவர்களும், தினந்தோறும் விருந்தினர்களை

உபசரிப்பவர்களும், பகவத் ஆராதனம் பண்ணிக்கொண்டும், வேதங்களை ஓதிக்கொண்டும் இருப்பவர்களுமாகிய (ஸ்ரீ வைஷ்ணவர்கள்) வாழ்கின்ற திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருப்பவனும் மும்மூர்த்திகளுடைய காரியங் களையும் செய்து தலைகட்டுமவனும் (எல்லார்க்கும்) முதல்வனுமான எம்பெருமானை நினையாத அப்படிப்பட்ட பாவிகளைச் சிருஷ்டித்தவன் எதற்காகச் சிருஷ்டித்தானோ! (அறியோம்).

### அப்போதைக்கு இப்போதே சொல்லி வைத்தேன்

"துப்பு(உ)டையாரை அடைவதெல்லாம்
சோர்விடத்துத் துணையாவர் என்றே
ஒப்பிலேன் ஆகிலும் நின் அடைந்தேன்
ஆனைக்கு நீ அருள் செய்தமையால்
எய்ப்பு என்னை வந்து நலியும்போது அங்(கு)
ஏதும் நான் உன்னை நினைக்க மாட்டேன்
அப்போதைக்(கு) இப்போதே சொல்லி வைத்தேன்
அரங்கத் தரவணைப் பள்ளியானே".

– பெரியாழ்வார் திருமொழி, 4, 10, 1.

அடியார்களைக் காப்பதில் வல்லவராகிய உம்மை அடைவது, சோர்வு வரும் (சாகும்) காலத்தில் நீர் துணை ஆவீர் என்ற எண்ணத்தினால் அல்லவா! உமக்குத் தகுதி இல்லாதவன் என்றாலும், நீர் கஜேந்திரனுக்கு அருள் செய்தவர் ஆதலால் (எனக்கும் அப்படிச் செய்வீர் என்ற நம்பிக்கையால்) நான் உம்மிடம் சரணம் அடைந்தேன். (மரணக் காலத்தில் உண்டாகக்கூடிய) இளைப்பு என்னை மேலிட்டு வருத்தும்போது உம்மை ஒன்றும் நினைக்க மாட்டேனே! (நினைக்க முடியாமலும் போதலும் கூடும்) ஆதலால், அந்தக் காலத்துக்காக (அந்திமக் காலத்துக்குப் பதிலாக) நல்ல அறிவோடு கூடிய இந்தச் சமயத்திலேயே

எனது விண்ணப்பத்தைச் சொல்லி வைத்தேன். திருவரங்கத்தில் திருஅனந்தனாகிய பாம்பின்மீது பள்ளி கொண்டிருப்பவனே!

## பிரானார் பேணும் திருக்கோயில்!

"உற்ற உறுபிணி நோய்காள்! உமக்கு ஒன்று
சொல்லுகேன் கேண்மின்
பெற்றங்கள் மேய்க்கும் பிரானார் பேணும்
திருக்கோயில் கண்டீர்
அற்றம் உரைக்கின்றேன் இன்னம் ஆள்வினைகாள்!
உமக்கு இங்கோர்
பற்றில்லை கண்டீர் நடமின் பண்டன்று
பட்டினம் காப்பே".

– பெரியாழ்வார் திருமொழி 5,2,6

நெடுநாட்களாக இருக்கிற மிகுந்த வருத்தத்தை உண்டாக்குகிற நோய்களே! உங்களுக்கு ஒரு வார்த்தை சொல்லுகிறேன் கேளுங்கள். எனது சரீரம் இப்போது பசுக்களை மேய்க்கும் பிரானான கிருஷ்ணன் விரும்பி எழுந்தருளியுள்ள திருக்கோயிலாக உள்ளது. இதை தெரிந்து கொள்ளுங்கள். (பிறவிக் கடலில்) என்னை ஆழ்த்துகிற வினைகளே! உங்களுக்கு இன்னும் ஓர் உறுதியான வார்த்தையும் சொல்கிறேன். இனி ஓர் ஆதரவும் கிடையாது. ஆதலால் நீங்கள் இவ்விடத்தை விட்டுப் போய் விடுங்கள் (எம்பெருமானுடைய) பட்டணமாகிய இது பழைய நிலைமையை உடையது அல்ல, அவனால் காக்கப் பெற்றுள்ளது.

## உனக்குப் பணி செய்திருக்கும் தவம் உடையேன்!

"உனக்குப் பணி செய்திருக்கும் தவம்
உடையேன், இனிப்போய் ஒருவன்
தனக்குப் பணிந்து கடைத்தலை நிற்கை நின்
சாயை அழிவு கண்டாய்
புனத்தினைக் கிள்ளிப் புதுவலி காட்டிஉன்
பொன் னடிவாழ்க என்று
இனக்குறவர் புதிய(து) உண்ணும்
எழில் மாலிருஞ் சோலை எந்தாய்!"
-- பெரியாழ்வார் திருமொழி, 5, 3, 3.

விளைநிலங்கள் உண்டாக்கும் தினைக்கதிர்களைக் கிள்ளி வந்து, அவைகளை எம்பெருமானாகிய உனக்குப் புதிய உணவாக அமுது செய்வித்து, உன் பொன்போன்ற திருவடிகள் என்றென்றும் வாழ வேண்டும் என்று (காப்பிட்டு) குறவர் கூட்டங்கள் அப்பிரசாதத்தை உறவினர்களோடு உண்ணுகிற அழகிய திருமாலிருஞ் சோலையில் (எழுந்தருளியிருக்கும்) எம்பெருமானே! உனக்குத் தொண்டு பண்ணிக் கொண்டிருக்கும் தவத்தை உடைய அடியேன் இனிமேல் புறம்பே போய் வேறொருவனுக்கு வேலை செய்து கொண்டு (அவனுடைய) வீட்டு வாசலில் நிற்க வேண்டியதாக வருமானால் அது உன்னுடைய மேன்மைக்குக் குறையாகும் என்பதைத் திருவுள்ளத்தில் கொண்டருள வேண்டும்.

## அமுத ஆறுதலைப்பற்றி வாய்க் கொண்டதே!

"பறவை ஏறு பரம புருடா! நீ என்னைக் கைக்கொண்டபின்
பிறவி என்னும் கடலும் வற்றிப் பெரும்பதம் ஆகின்றதால்
இறவு செய்யும் பாவக்காடு தீக்கொளி இ வேகின்றதால்
அறிவை என்னும் அமுத ஆறுதலைப் பற்றி வாய்க்
கொண்டதே." -- பெரியாழ்வார் திருவாய்மொழி, 5-4-2.

(கருடனாகிய) பறவை மேல் ஏறிவரும் பரம புருஷனே! நீ என்னை (உனக்கு) ஆளாக்கிக் கொண்ட பிறகு பிறவிக்கடல் வற்றிப் போயிற்று, அதனால் உயர்ந்த பதவி கிடைக்கப் பெற்றேன். (இந்த ஆத்மாவிற்கு) அழிவைச் செய்கிற எனது பாவங்களாகிற காடு நெருப்புப் பட்டு வெந்து போகின்றது, ஞானம் என்னும் அமிருத நதி மேன்மேலும் பெருகிச் செய்கின்றது.

## என்னையும் உன்னில் இட்டேன்!

"பொன்னைக் கொண்டு (உ)ரைகல் மீதே நிறமெழ
உரைத்தாற் போல்
உன்னைக் கொண்டுஎன் நாவகம்பால் மாற்றின்றி
உரைத்துக் கொண்டேன்
உன்னைக் கொண்டு என்னுள் வைத்தேன் என்னையும்
உன்னில் இட்டேன்
என் அப்பா என் இருடீகேசா
உயிர்க் காவலனே".

- பெரியாழ்வார் திருமொழி, 5-4-5.

பொன்னை நிறம் பார்ப்பதற்காக உரைகல்லில் இட்டு உரைப்பதுபோல, உன்னை என்னுடைய நாக்கில் உட்கொண்டு மாற்று அழியும்படி உரைத்துக் கொண்டேன். (அறிவதற்கு அரியனான) உன்னை என் நெஞ்சினுக்குள் அமைத்தேன். என்னையும் உன்னிடம் வைத்தேன். என் தந்தையே! எனது இந்திரியங்களுக்கு நியாயமாமகனே! எனது ஆத்மாவைக் காக்க வல்லவனே!

## ஸ்ரீ ஆண்டாள்

முன்பு திரேதா யுகத்தில் விதேக நாட்டில் மிதிலை நகரில் ஜனக மன்னன் யாக சாலை அமைத்தற்பொருட்டுக் கலப்பைக் கொண்டு பூமியை உழுகையில், அவ்வுழுப்படைச்சாலிலே, ஸ்ரீ தேவியின் அம்சமாக ஒரு மகள் தோன்ற, அவளை அவ்வரசன் தன் புத்திரியாகப் பாவித்துச் சீதை என்று பெயரிட்டு வளர்த்தான். அச்சீதையே அயோத்தி வேந்தன் தசரதனுக்குக் குமாரனாக அவதாரம் செய்த திருமகள்நாதன் மணந்து, மனைவியைக் காரணமாகக் கொண்டு நல்லோரைக் காத்தார். ஸ்ரீ தேவி புவியில் தோன்றி, புவியில் உள்ள மறச்செயல்கள் மறையவும். அறச்செயல்கள் தழைத்து உலகம் உய்யவும் வேண்டி திருமாலின் அவதாரமாகிய இராகவனுக்கு இனிய துணைவியானார். அதுபோலவே, பின்பு கலியுகத்தில் பாண்டிய நாட்டில் ஸ்ரீ வில்லிபுத்தூரில் பெரியாழ்வார் இறைவனுக்கு மலர் மாலை கட்டித் தருவதற்காக அமைக்கப்பட்ட நந்தவனத்தில் துளசி மலரில் (கி. பி. 9-ஆம் நூற்றாண்டில்) கள ஆண்டு ஆடி மாதம் வளர்பிறையில் சதுர்த்தசி திதியில் செவ்வாய்க் கிழமையன்று பூர நட்சத்திரத்தில் பூமி பிராட்டியார் அமிசமாய்ப் பெண் குழந்தை தோன்றியது. அங்ஙனம் அவதரித்த அப்பெண் குழவியை நந்தவனத்தில் பார்த்த பெரியாழ்வார் பெருங்களிப்புக் கொண்டு, அக்குழவியைத் தனது மகளாகப் பாவித்துக் கோதை எனப் பெயரிட்டு வளர்க்கலானார்.

இந்நிலவுலகின்கண் திருமால் அடியவர்களாக அவதரித்து, ஆழ்வார்களெனச் சிறப்பித்துக் கூறப்பெறும் பன்னிருவருள், பரமனைப் பக்தியினாலும், நாயகி பாவத்தினாலும், சொல் மலர்களாகிய பாமாலையைச் சுவைப்படச் சித்தரித்ததோடு அமையாது, தாமே நாயகியாக வேண்டும் எனும் எண்ணத்தோடு, அரங்கனை ஆராதித்து,

அவனை நாயகனாகவும் அடைந்துய்யும் பேறு பெற்ற செல்வியே இக்கோதையாவாள். வில்லிபுத்தூரார், கோதை என்னும் அப்பெண் குழவிக்குப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து, பரம ஞானத்தைப் போதித்தார்.

தந்தை முதலியோர் கண்டு வியக்கும்படி இளமை தொடங்கி எம்பெருமான் பக்கத்திலே பக்திப் பெருவேட்கை கொண்டு அவனையே தாம் மணம் செய்து கொள்ளக் கருதி, அப்பிரானது பெருமைகளையே எப்போதும் சிந்தித்தல், துதித்தல் முதலியன செய்து வாழ்ந்த கோதையார், நாள் தோறும் விட்டுசித்தர் என்னும் பெரியாழ்வார் வடபெருங் கோயிலானுக்குச் சாத்துவதற்காகக் கட்டி வைத்த திருமாலையை அவரில்லாத காலத்து எடுத்துத் தம் குழலிலே தரித்துக் கொண்டு, அப்பெருமானுக்கு, நான் நேரொத்திருக்கின்றேனோ எனச் சிந்தித்தல் வழக்கம். மாலை சூட்டிக் கொள்ளுதலுடன் சிறந்த அணிகலன்களை அணிந்து, உயர்ந்த பட்டாடை உடுத்தித் தம்மை அலங்கரித்து அந்த ஒப்பனை அழகைக் கண்ணாடியிலே கண்டு, தந்தையார் காணாதவாறு மலர்மாலையைக் களைந்து முன் போலவே செண்டாகச் சுற்றிப் பூக்குடலையினுள்ளே வைத்து விடுவது அவரது தினசரி வழக்கம். இதனை அறியாது ஆழ்வார் அம்மாலையைக் கொண்டு சென்று இறைவனுக்குச் சாத்தி வர, பெருமானும் விருப்புடன் அதனை ஏற்றருளினார்.

இங்ஙனம் பல நாட்கள் சென்றபின் ஒரு நாள் வெளியில் சென்ற ஆழ்வார் விரைவில் வீட்டிற்கு எழுந்தருளியபோது, மலர் மாலையைக் கோதை சூடி இருத்தலைப் பார்த்துக் கோபம் கொண்டு, கடிந்துரைத்து, அன்று வடபத்திரசாயியாகிய இறைவனுக்கு மாலை அணியப்படாமல் அத்திருப்பணிக்கு முட்டுப்பாடு நேர்ந்ததற்கு மனம் வருந்தி இருந்தார். அற்றை நாளிரவில்

இறைவன் ஆழ்வாரது கனவில் வந்து, மாலைக் கொணராததற்குக் காரணத்தை வினவி அறிந்து, பின்னர் அவள் சூடிக்கொடுத்த மாலையே நறுமணமிக்கு, நமது உள்ளத்திற்கு நனி விருப்பமானது. ஆதலின் இனி அத்தன்மைத்தான மாலையை நமக்குக் கொண்டு வருவாய் என்றருளி மறைந்தனன்.

பின்பு துயில் நீங்கப் பெற்ற விட்டுசித்தர் தமக்கு மகளாக வாய்த்துள்ள கோதை, மலர் மங்கையின் அவதாரம் எனக்கொண்டு அவளுக்கு, "ஆண்டாள்" என்றும், மாதவனுக்குரிய மலர் மாலையைத் தாம் சூடிக்கொண்டு பார்த்த பின்பு, கொடுத்தது காரணமாக, "சூடிக்கொடுத்த நாச்சியார்" என்றும் திருப்பெயரிட்டு அழைத்து வந்தார். ஆண்டாள் தமது பருவம் வளரும்தோறும் இறையறிவும், பக்தியும் உடன்வளர்ந்து வரப்பெற்று, தமக்கு ஏற்றக் காதலனாகக் கருதிய கடல்வண்ணன் விருப்பமாகக் காதல் அதிகரித்தவராகி, இனி அவனை ஒரு நொடிப்பொழுதும் கூடாதிருக்க முடியாது என்னும் கருத்துடன் கண்ணனது பிரிவை ஆற்றாத ஆயர்மங்கையர் போலத் தாமும் நோன்பு நோற்று உயிர் தரிப்பவராய், அவ்வெண்ணத்தை "திருப்பாவை", "நாச்சியார் திருமொழி" என்ற திவ்வியப் பிரபந்தங்களின் மூலமாக இறைவனிடத்து விண்ணப்பஞ் செய்து வாழ்ந்திருந்தார்.

இந்நிலையில் பெரியாழ்வார் கோதையாரது மணவினையைப்பற்றிப் பேசத் தொடங்கிய காலையில், ஆண்டாள், மானிடர்க்கென்று பேச்சுப்படின் வாழ்கிலேன் என்று சொல்ல, பட்டர் பிரான் பின் எங்ஙனம் நிகழ்வது? என்று கேட்க, சூடிக்கொடுத்த சுடர்க்கொடியார் யான் பெருமாளுக்கே உரியவளாக இருக்கின்றேன் என்றுரைத்தார்.

திருவரங்கநாதனது மேல் அளவற்ற இன்பம் அடைந்து, அவனிடமே மனத்தைச் செலுத்தி, அவனுக்கே தம்மை மணமகளாக நிச்சயித்து, அவ்வமலனையே எப்போதும் எண்ணியிருந்தார் கோதையார். கோதையாருக்குத் திருவரங்கநாதன்பால் உண்டான விருப்பமிகுதியை அறிந்த பட்டர்பிரான், தனது மகளின் மனம் மகிழ,

"குடதிசை முடியைவைத்துக் குணதிசை பாதம்நீட்டி
வடதிசை பின்புகாட்டித் தென்திசை இலங்கைநோக்கித்
கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலும்"

திருவரங்கத்தின் வரலாற்றினைத் தெரிவித்தார். கோதையாரும் திருவரங்கநாதனைக் குறித்து,

"கருப்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ,
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ!
மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச் சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே"

என்பார். பின் கோதைநாச்சியார் தன் ஆற்றாமையைத் தணித்துக் கொள்ள எண்ணி வில்லிபுத்தூரை, ஆயர்பாடியாகவும், அப்பகுதியிலிருந்த பெண்களையும் தம்மையும், ஆயர்குல மங்கைகளாகவும், வடபெருங் கோயிலை நந்தகோபன் மனையாகவும், அப்பெருமானைக் கண்ணனாகவும் கருதித் திருப்பாவையைப் பாடியருளிப் பின்பு பதினான்கு திருமொழிகளைப் பாடியருளினார். இதற்கு நாச்சியார் திருமொழி என்று பெயர். ஆழ்வாரும், நம்பெருமான் இவளைக் கடிமணம் புரிதல் கைகூடுமோ? என்றெண்ணி இருக்கையிலே, திருவரங்கச் செல்வன் ஆழ்வாரது கனவில் தோன்றி, "உமது திருமகளைக் கோயிலுக்கு அழைத்துக் கொண்டு வாரும். அவளை யாம்

ஏற்போம்" என்றருளினார். பின்பு திருவரங்கநாதர் கோயில் பரிவாரமாகியுள்ளவர் கனவிலும் தோன்றி, "நீவிர் குடை, கவரி, விருதுகள், வாத்தியங்கள் முதலிய பல சிறப்புகளுடன் ஸ்ரீ வில்லிபுத்தூருக்குப் போய், பட்டர்பிரானாருடைய அருமைச் செல்வியாகிய கோதையை அவரது தந்தையாருடன் நம்பால் அழைத்து வருவீராக" என்று பணித்தருளினார். பிறகு பாண்டிய நாட்டிறையோனாகிய வல்லப தேவன் கனவிலும் தோன்றி, "நீ பலருடன் ஸ்ரீ வில்லிபுத்தூருக்குச் சென்று, பட்டர்நாதருடைய மகளாம் கோதையை முத்துப் பல்லக்கில் ஏற்றி நம் திருவரங்கத்திற்கு அழைத்து வருவாயாக" என்றருளினார். கோதையாரும் அன்றிரவுத் தாம் பலவகைக் கனவுகளைக் கண்டதாகத் தோழியிடம் கூறினாள்.

அக்கனவில் திருமணவினைகள் அனைத்தையும் முறையே கண்டதாகப் பத்துப் பாடல்களில் அவர் பாடியுள்ளார். அவற்றுள்,

"மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதனன் வந்தென்னைக்
கைத்தலம் பற்றக் கனாக் கண்டேன் தோழீநான்!"

என்பதும் ஒன்று.

பாண்டிய வேந்தன் வல்லப தேவனும் ஏவலாளரைக் கொண்டு, விடியற்காலைக்குள் ஸ்ரீவில்லிபுத்தூரையும், திருவரங்கத்தையும் இணைக்கும் நடுவில் உள்ள நெடுவழியில் தண்ணீர் தெளித்தும், பூம்பந்தரிட்டும், தோரணங்கட்டியும், வாழை கமுகு நாட்டியும் நன்றாக அலங்கரித்து, நாள் வகை சேனைகளையும் கொண்டு ஆழ்வார் பக்கல் வந்து சேர்ந்து இறைவன் கூறியவற்றை

ஆழ்வாருக்கு உணர்த்தினான். பின்பு கோயிற் பரிவார மாந்தர் பட்டநாதரை வணங்கி இரவு தம் கனவில் திருவரங்கத்து அமலன் காட்சியளித்துக் கூறிய செய்திகளை அறிவித்தனன்.

பட்டர்பிரான் இறைவனது அன்பினை வியந்து பாராட்டினார். பின்னர் மறையவர்கள் பலர் புண்ணிய நதிகளினின்று நீரினைக் கொண்டு வந்தார்கள். கோதையாருடைய தோழிகள் அந்நீரினால் கோதையாரை நீராட்டிப் பொன்னாடை உடுத்திவிட்டுப் பலவாறு ஒப்பனை செய்த பின், தோழியர் புடைசூழக் கோதையார் சென்று தமக்கென அமைந்த மணிச்சிவிகையில் ஏறினார். ஏனையோர் பல்லக்கிலும், தேர் முதலிய ஊர்திகளிலும் சென்றார்கள். மற்றும் பலர் கோதையாருடைய சிவிகைக்கு முன்னும் பின்னுமாக நடந்து சென்றார்கள்.

இங்ஙனம் திருவரங்கம் நோக்கிச் செல்லுங் காலத்துப் பலர், "ஆண்டாள் வந்தாள்! சூடிக் கொடுத்த சுடர்க்கொடி வந்தாள்! சுரும்பமர் குழற் கோதை வந்தாள்! திருப்பாவை பாடிய செல்வி வந்தாள்! பட்டர்பிரான் புதல்வி வந்தாள்! வேயர் குல விளக்கு வந்தாள்! தென்னரங்கம் தொழும் தேசி வந்தாள்!" என்று முன்னே கட்டியங் கூறிச் செல்வாராயினர். அரசன், பட்டநாதர் முதலாயினருடன் கோதையாரின் சிவிகை திருவரங்கம் பெரிய கோயிலை அடைந்து, பெரிய பெருமாளுடைய முன் மண்டபத்தை அடைந்தது.

பின் கோதையார் பெருமாளைச் சேவிக்கப் பண்ணுவிக்கையில், அத்திருமாலின் அழகு இரும்பைக் காந்தம் இழுப்பதுபோல ஆண்டாளைக் கவரத் தொடங்கியது. சூடிக்கொடுத்த நாச்சியார் சிலம்பு ஆர்க்க, சீரார் வளையொலிப்ப, கொடியேரிடையாட, காதளவு

மோடிக்கயல்போல் மிளிருங் கடைக்கண் பிறழ, அன்ன மென்னடைக் கொண்டு அருகிற்சென்று, இன்பக்கடலில் ஆழ்ந்து திருவரங்கன் திருவடிவருடக் கருதி, நாக பரியங்கத்தை மிதித்தேறி, நம் பெருமானது திருமேனியின் கண்மறைந்து, அவனை என்றும் பிரியா திருப்பவளாயினார்.

அவ்வண்ணம் அரும்பேறு பெற்றதை தரிசித்து ஆழ்வாரும், அவரது சீடனான வல்லப தேவனும், ஏனையோரும் வியப்புற்றிருக்கையில், திருவரங்கமுடையான் அர்ச்சகர் முகமாக ஆழ்வாரை அருகில் அழைத்து, "கடல் மன்னனைப்போன்று நீரும் நமக்கு மாமனாராய் விட்டீர்" என்று முகமன் கூறித் தீர்த்தம், திருப்பரிவட்டம், மாலை, திருச்சடகோபம் முதலியன வழங்கி, வில்லிபுத்தூர் உறைவானுக்கே தொண்டு பூண்டிரும் என்று திருவாய் மலர்ந்து விடைகொடுத்து அருளினான். ஆழ்வாரும் ஸ்ரீவில்லிபுத்தூருக்குச் சென்று, முன் போலவே இறைவனுக்கு மாலை அணிவிப்பதில் ஈடுபடுதலுடன் ஆர்வமென்பதோர் பூவையும் இட்டுக்கொண்டு எண்பத் தைந்து ஆண்டுகள் வாழ்ந்திருந்து, இறைமையின் இருப்பிடத்தை அடைந்தார்.

ஸ்ரீ ஆண்டாளால் பாடப்பெற்ற பாடல் தலங்கள்: திருவரங்கம், திருக்கண்ணபுரம், திருமாலிருஞ் சோலைமலை, ஸ்ரீவில்லிபுத்தூர், திருவேங்கடம், துவாரகை, வடமதுரை, திருவாய்ப்பாடி, திருப்பாற்கடல் முதலியனவாம்.

## பாவை

பாவை என்னும் இலக்கிய வகையும் திவ்வியப் பிரபந்தத்தில் காணலாம். ஆண்டாள் பாடிய திருப்பாவை இவ்வகையினதே. நாதமுனிகளின் அடைவுப்படி முதலாயிரத் தில் மூன்றாம் பிரபந்தமாக இது இடம் பெறுகிறது. இந்நூலின் ஏற்றம் கருதி வைணவர்கள் இதனை "உபநிடதம்" என்றே போற்றிக் கூறுவர். கண்ணபிரானை அடையும் பொருட்டு மார்கழி மாதத்தில் கன்னியர் நோக்கும் நோன்பினைப் பாடுபொருளாகக் கொண்டு இந்நூல் இயற்றப்பட்டுள்ளது. "பாவை நோன்பு" "நீராடல்" ஆகிய இரண்டுமே திருப்பாவையில் முதன்மை பெறுகின்றன.

புறநானூற்றுப் பாடல் ஒன்று மகளிரின் பாவை விளையாட்டுடன் நீராடலையும் இணைத்துக் கூறுகின்றது. பொதுவாக நீர் நிலைகளை ஒட்டிய இடத்தேதான் பெண் களால் இப்பாவையாடல் மேற்கொள்ளப்பட்டது. "பொய்கை சூழ்ந்த பொழில்மனை மகளிர் கைசெய் பாவை" என்று அகநானூறும் இதனை உறுதி செய்யக் காணலாம்.

அடுத்து "நீராடல்" தமிழர்தம் அகவாழ்விலும், புறவாழ்விலும் சிறப்பிடம் பெற்றமைக்குச் சங்க நூல்களில் சான்றுகள் உள்ளன. தலைவனும் தலைவியும் ஆற்றிலும், குளத்திலும், பொழிலிலும், தம் நாட்டெல்லைக் கடந்தும் விளையாடுதற்குரிய எனத் தொல்காப்பியம் கூறுகின்றது. அதற்கேற்ப அகத்திணை சூழலில் நீராடலைச் சங்க நூல்கள் விவரித்துரைக்கின்றன. குறிஞ்சி நிலத்தினர் அருவியிலும், சுனையிலும், நெய்தல் நிலத்தினர் கடலிலும், மருத நிலத்தினர் ஆற்றிலும் நீராடுவர். ஐங்குறுநூற்றில் நீராடலைப்பற்றிய பத்துப் பாடல்கள் "புனலாட்டுப்பத்து" என்னும் தலைப்பில் அமைந் துள்ளன. குறுந்தொகை, அகநானூறு, நற்றிணை, கலித்தொகை,

ஐங்குறுநூறு, பரிபாடல் ஆகிய நூல்களில் புதுப்புனலாடல் விரிவாகப் பேசப்படுகிறது.

அகநானூற்றில் மணமகளை நீராட்டும் செய்தி சடங்கியலாகச் சித்தரிக்கப்படுகிறது. கடலில் நீராடினால் தீது நீங்கும் என்னும் நம்பிக்கையும் அந்நாளில் தோன்றிவிட்டது. "தீது நீங்கக் கடலாடியும்" என்பது பட்டினப்பாலை. நீராடல் சமயச் சார்பு பெறுவதற்கு முன்னர் கடல் நீராட்டுக் குறித்து உண்டான இந்நம்பிக்கை கவனத்திற் கொள்ள வேண்டிய ஒன்றாகும். இங்ஙனம் தமிழர் வாழ்வில் சிறப்புற்றிருந்த நீராடல், மகளிர் மட்டுமே ஆடும் தைந்நீராடலாக மாற்றம் பெறுவதையும் சங்க நூல்கள் காட்டுகின்றன.

"பெயரினுந் தொழிலினும் பிரிபவையெல்லாம் மயங்கல் கூடா வழக்கு வழிப்பட்டன" என்னும் தொல்காப்பிய நூற்பாவிற்கு உரை எழுதிய இளம்பூரணர், தைந்நீராடலுக்கு உரியோராக மகளிரை மட்டுமே காட்டுகிறார். தை மாதத்தில் மகளிர் பலர் திரள் திரளாகச் சென்று நீராடியதை ஐங்குறுநூற்றுச் செய்யுள் ஒன்று உணர்த்துகின்றது.

பாவை விளையாட்டு, தமிழர்களின் நீராடல் வேட்கை ஆகியவற்றை இணைத்துப் பார்த்தால் இவற்றின் வளர்ச்சியாகவே ஆண்டாளின் திருப்பாவை அமையக் காணலாம். கன்னியர் காலையில் துயிலெழல், ஐயமும், பிச்சையும் அளித்தல், குள்ளக்குளிரக் குடைந்து நீராடல், நாடு செழிக்க நல்ல மழையினை வேண்டுதல் ஆகியன திருப்பாவையில் (7-9, 2, 13, 3) இடம் பெறுகின்றன.

இங்கு ஓர் ஐயம் எழக் கூடும். சங்க நூல்கள் "தைந்நீராடல்" என்றே குறிக்க, ஆண்டாளும், மாணிக்கவாசகரும் தம் பாவை நூல்களில் "மார்கழி நீராடல்" எனக் குறிப்பது ஏன்? என்னும் ஐயமே அது. மார்கழி

நீராடலாகிய பாவை நோன்பு, தைந்நீராடலினும் வேறானது என்பர் எஸ். வையாபுரிப்பிள்ளை. இவ்விரண்டுமே ஒன்றே எனக் கருதுபவர் மு. இராகவையங்கார். இதனை "மார்கழி நோன்பாகிய தைந்நீராடல்" என்னும் கட்டுரையில் அவர் தெளிவுபடுத்துகிறார். பரிபாடல் கூறுவதுபோல மார்கழிப் பௌர்ணமியில், திருவாதிரையில் தொடங்குவதாகிய இந் நீராட்டு, தைத்திங்களிலும் தொடர்ந்து நடந்ததால் தைந்நீராடல் எனப் பெயர் பெற்றதாக அவர் விளக்குகிறார். இதனால் சங்கச் செய்யுட்களிற் குறிக்கப்பட்டுள்ள தைந்நீராடலும், திருப்பாவை - திருவெம்பாவை கூறும் மார்கழி நீராடலும் ஒரு நோன்பையே குறித்து, வழங்கிய இரு வேறு பெயர்கள் என்பதை அறியலாம்.

திருப்பாவையின் ஒவ்வொரு பாசுரமும் "எம்பாவாய்" என்று முடிவதாலும், மார்கழி நோன்பினைப் "பாவை" என்னும் சொல்லாற் குறிப்பதாலும், "திரு" என்னும் அடை சேர்த்து இந்நூல் "திருப்பாவை" என்னும் பெயர் பெற்றது.

*திருப்பாவை முப்பதாம் பாசுரத்தில்* "கோதை சொன்ன சங்கத் தமிழ்மாலை முப்பது" என்னும் அடி காணப்படுகிறது. இதனைச் சுட்டிக்காட்டி "சங்கத்தமிழ் மாலை முப்பது" என்பதே இந்நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர் ஆகும் என்பர். ஆயினும் "திருப்பாவை" என்னும் காரண இடுகுறிப் பெயரே நிலை பெற்றுவிட்டது.

பக்திநெறிக் காலத்துப் பாவை நூல்களாக இன்று நமக்குக் கிடைத்திருப்பவை ஆண்டாளின் திருப்பாவையும், மாணிக்கவாசகரின் திருவெம்பாவையும் ஆகும். இவ்விரு நூல் களுக்கும் முந்தையனவாக வேறு பாவை நூல்கள் இருந்தனவா எனத் தெரியவில்லை. பாவை இலக்கிய வரலாற்றை நோக்குகையில் ஓர் உண்மை நமக்குப் புலப்படாமல் போகாது. தொடக்கத்தில் மகளிர் விளையாட்டாக இருந்த பாவை, பின் பாவைப் பாட்டாக மாறி சமயத் துறையில் நோன்புப் பாடலாக

அமைந்து, பிற்காலத்தில் சமுதாய நிலைக்கு ஏற்பப் பல்வேறு பாவை நூல்களுக்கும் வித்திட்டுள்ளது என்னும் உண்மைதான் அது.

### திருப்பாவை தனியன்கள்
### உய்ய கொண்டார் அருளியவை
### நேரிசை வெண்பா

"அன்ன வயற்புதுவை யாண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவை பல்பதியம், - இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை, பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு".

"சூடிக் கொடுத்த சுடர்க் கொடியே! தொல்பாவை,
பாடி யருளவல்ல பல்வளையாய், - நாடிநீ
"வேங்கடவற் கென்னைவிதி" என்ற இம்மாற்றம்
நாங்கடவா வண்ணமே நல்கு".

- ஆண்டாள் திருவடிகளே சரணம்.

### முதலாயிரம்
### கோதை நாச்சியார் அருளியது!
### நாராயணனே நமக்குப் பறை தருவான்

"மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில்
நீராடப் போதுவீர்! போதுமினோ நேரிழையீர்
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வ சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏர் ஆர்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார் மேனிச் செங்கண் கதிர்மதியம் போல்முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்(து) ஏலோர் எம்பாவாய்!"

- திருப்பாவை, 1.

அழகான ஆபரணங்களை அணிந்தவர்களும், செல்வம் நிறைந்த திருவாய்ப்பாடியில் இளம் பருவமுடைய பெண்களே! மாதங்களில் சிறந்த மார்கழி மாதமாயும், பௌர்ணமியையுடைய மங்கல தினமாகவும் வாய்த்துள்ளது. மார்கழி நோன்பிற்காக நீராட்டத்தைச் செய்ய விருப்ப முடையவர்களே! வாருங்கள்! (ஏன் என்றால்) கூரான வேலாயுதத்தை உடையவனும், துஷ்டர்களைக் குரூரமாகத் தண்டிப்பவனுமான ஸ்ரீநந்தகோபருடைய திருமகனாய், அழகான கண்களையுடைய யசோதை பிராட்டியாருக்குச் சிங்கக்குட்டி போன்றவனாய் கரிய மேகம் போன்ற சரீரத்தையும், செந்தாமரை போன்ற சிவந்த கண்களையும் பிரகாசத்திற்கு சூரியனையும், சந்தோஷத்திற்குச் சந்திரனை யும் ஒத்த திருமுகத்தையும் உடையவனான ஸ்ரீமந் நாராயணன், தானே நமக்கே, நம்முடைய நோன்பிற்கு வேண்டிய பறை முதலிய பொருட்களைக் கொடுப்பான்.

திருப்பாவை என்பது மார்கழி மாதத்தில் அனுசரிக்கப்பட்டு வந்த ஒரு நோன்பாகும். கோபகன்னிகள் தாங்கள் கிருஷ்ணனை நாயகனாக அடைய வேண்டி, மார்கழி மாதத்தில் காத்யாயனி தேவியைக் குறித்துச் செய்த விரதத்தை அடிப்படையாகக் கொண்டது. ஸ்ரீ ஆண்டாளே நோன்பு நோற்பதாகக் கொண்டு இயற்றப்பெற்றது இப்பிரபந்தம். அவளுக்கு ஸ்ரீவில்லியுத்தூரே ஆயற்பாடி யாயிற்று. தன்னோடு ஒத்த பருவச் சிறுமிகளே கோபியர் கன்னியர் ஆனார். வடபெருங்கோயில் உடையானே கண்ணன் ஆனான்.

திருப்பாவை முதல் ஐந்து பாசுரங்களில் கண்ணபிரானை அடைய வேண்டிய உபாயத்தைச் சொல்கிறாள். அடுத்த பத்துப் பாடல்களில் இடைப் பெண்களை எழுப்புகிறாள். பிறகு ஐந்து பாசுரங்களால் கண்ணனுக்கு அந்தரங்கமானவர்களை எழுப்பி, அடுத்த

ஐந்து கவிகளால் கண்ணனைத் துயில் எழுப்பித் தான் வேண்டுவதைப் பிரார்த்திக்கிறாள். முடிவில் தாங்கள் விரும்பும் கிருஷ்ண அனுபவத்தை அவனே தர வேண்டும் என்று பிரபந்தம் பூர்த்தி அடைகிறது. பகவானுக்குத் தொண்டு செய்வதே வாழ்க்கையில் பெறக்கூடிய பெரும்பேறு என்பது திருப்பாவையின் உள்ளுறைப் பொருள்.

## நீங்காத செல்வம் நிறைந்து...

"ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றி நீராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து
ஓங்கு பெருஞ் செந்நெல் ஊடு கயலுகளப்
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்(து) ஏலோர் எம்பாவாய்".

- திருப்பாவை, 3.

திரிவிக்கிரமனாக வளர்ந்து மூன்று உலகங்களையும் திருவடிகளால் அளந்த புருஷோத்தமனுடைய திருநாமங்களைப் பக்தியுடன் பாடி, நாங்கள் எங்கள் நோன்புக்கு என்று சொல்லி நீராடினால், தேசமெங்கும் வியாதி முதலிய தீமைகள் எல்லாம் நீங்கி, மாதந்தோறும் மூன்று மழை பெய்திடும். அதனால் மீன்கள் வளர்ந்து, பருத்த செந்நெற் கதிர்களிடையே போக இடம் பெறாமல் துள்ளவும், புள்ளிகளையுடைய வண்டுகள் மலர்ந்திருக்கிற நெய்தல் பூவிலே உறங்கவும், உதார குணமுடைய பெரிய பசுக்கள் (பால் கறப்போர்) சலியாமல் கறக்க, ஒருப்பட்டு உட்கார்ந்து, பசுக்களின் பருத்த மடிகளை இரு கைகளாலும்

கறக்க, வெள்ளத்தாலே குடங்களை நிறையச் செய்யும். இப்படி அழிவில்லாத செல்வம் நிறைந்திடும்.

## தீயினில் தூசு ஆகும்!

"மாயனை மன்னு வடமதுரை மைந்தனை
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கை
தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனை
தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூ(சு) ஆகும் செப்(பு) ஏலோர் எம்பாவாய்"

- திருப்பாவை, 5.

ஆச்சரியமான குணமும், செயல்களை உடையவனும், வடமதுரையில் திருவவதரித்த பராக்கிரமம் உடையவனும், பரிசுத்தமாய் ஆழம்மிகுந்த நீர்ப் பெருக்கத்தையுடைய யமுனைத் தீரத்தை உடையவனும், இடையர் குலத்தில் உதித்த அழகிய (இரத்தின) தீபம் போன்றவனும், தாயாகிய யசோதைப் பிராட்டியின் திருவயிற்றை விளங்கச் செய்தவனுமான தாமோதரனை நாம் பரிசுத்தமாய் வந்து அடைந்து, தூய பூக்களைத் தூவி, வணங்கி, வாயாரப் பாடி, மனமாரத் தியானம் பண்ண, முன் செய்த பாபங்களும், பின்பு (நம்மை அறியாமல் நேரிடத்தக்க) வர இருக்கின்ற பாபங்களும் நெருப்பில் இட்ட பஞ்சுபொதி அழிந்து போகும். (எனவே அந்தப் பகவானுடைய திருநாமங்களைச் சொல்லிச் சிந்தியுங்கள்)

## உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது!

"கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து (உ)ண்போம்
அறிவொன்றும் இல்லாத ஆயக்குலத்து (உ)ன்தன்னை
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாம் உடையோம்
குறை வொன்றும் இல்லாத கோவிந்தா! உன் தன்னோ(டு)
உறவேல் நமக்கிங்கொழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும் சீறியருளாதே
இறைவா! நீ தாராய் பறை ஏலோர் எம்பாவாய்".

திருப்பாவை, 28.

பசுக்களின் பின்னே போய்க் காட்டை அடைந்து (கட்டுச் சோற்றை) உண்டு காலங்கழிப்பவர்கள் நாங்கள், அறிவில்லாத இடைக்குலத்தில் உன்னை எங்கள் குலத்தவனாகப் பெறுவதற்குத் தக்க புண்ணியம் உடையவர் களானோம். ஒருவகைக் குறையும் இல்லாதவனாகிய கோவிந்தனே, பகவானே! உன்னோடு எங்களுக்கு உண்டான உறவானது இங்கே உன்னாலும் எங்களாலும் ஒழிக்க ஒழிய மாட்டாது. அறியாத சிறுபெண்களான நாங்கள் அன்பினால் உன்னைச் சாதாரணப் பெயராலே அழைத்தது குறித்து கோபிக்காமல் எங்களுக்கு வேண்டியவற்றைத் தந்தருள வேண்டும்.

கல்வி குலம் முதலிய உலகப் பெருமைகள் இல்லாதவர்க்கும் பக்தியினால் பகவானுடைய அருளைப் பெறுதல் எளிதாகும் என்பது கூறப்படுகிறது. உன்தன்னோடு .... ஒழியாது - பகவானுக்கும் ஆன்மாக்களுக்கும் உள்ள சம்பந்தம் அனாதியும் நித்தியமும் ஆனது: அதைப் பகவானாலும் ஆத்மாக்களாலும் தனியாகவும் சேர்ந்தும் ஒழிக்க முடியாது. "என்று நீ அன்று நான்" (தாயுமானவர்)

## உனக்கே நாம் ஆட் செய்வோம்!

"சிற்றஞ்சிறுகாலே வந்து உன்னைச் சேவித்து (உ)ன்
பொற்றாமரையடியே போற்றும் பொருள் கேளாய்
பெற்றம் மேய்த்து (உ)ண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொல்வான் அன்று காண் கோவிந்தா
எற்றைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும் உன் தன்னோடு
உற்றோமே ஆவோம் உனக்கே நாம் ஆட்செய்வோம்
மற்றைநம் காமங்கள் மாற்(று) ஏலோர் எம்பாவாய்".
- திருப்பாவை, 29.

அதிகாலையிலே உன்னைத் தேடி வந்து, வணங்கி, உன்னுடைய அழகிய திருவடித் தாமரைகளைத் துதிக்கும் குறிப்பைக் கேட்டருள வேண்டும். பசுக்களை மேய்த்துண்ணும் இடைக்குலத்தில் தோன்றியுள்ள நீ, நாங்கள் செய்யும் குற்றேவல்களை ஏற்றுக் கொள்ளாமற் போதல் தகாது. கோவிந்தனே! (பசுக்களைக் காத்தவனே) "இன்றைக்கு ஒரு பலனைப் பெற்று விலகுவதற்காக அல்ல: எக்காலத்தும் (எப்பிறவியிலும்) ஏழுஏழுப் பிறவிகளிலும் உன்னோடு சம்பந்தம் உடையவர்கள் ஆகக் கடவோம். உனக்கே நாங்கள் அடிமை செய்யக்கடவோம். எங்களுடைய மற்ற எல்லா விருப்பங்களையும் தவிர்த்தருள வேண்டும்.

ஜீவர்கள் பகவானுக்குத் தொண்டு செய்ய வேண்டும். தொண்டு செய்யும்போது தமக்கென ஒரு பலனையும் கருதாமல் இருக்க வேண்டும். பகவானுடைய ப்ரீதி ஒன்றுக்காகவே செய்தல் வேண்டும். இந்தக் கோரிக்கைக்கு மாறாக எவ்வித நினைவுகளும், ஆசைகளும் உண்டாகாமல் இருக்க வேண்டும். இதுவே பகவானிடம் வேண்டுவதற்குரிய மிக உயர்ந்த பிரார்த்தனையாகும்.

## ஆண்டாள் அருளிச் செய்த நாச்சியார் திருமொழி

### மானிடவர்க்கு என்று பேச்சுப்படில் வாழகில்லேன்!

"வானிடை வாழும் அவ் வானவர்க்கு
மறையவர் வேள்வியில் வகுத்த அவி
கானிடைத் திரிவதோர் நரிபுகுந்து
கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப
ஊனிடை ஆழி சங்கு (உ)த்தமர்க் கென்று
உன்னித் தெழுந்த என் தட முலைகள்
மானிடவர்க் கென்று பேச்சுப்படில்
வாழ கில்லேன் கண்டாய் மன்மதனே!"

- நாச்சியார் திருமொழி, 1, 5.

மன்மதனே! தேவலோகத்தில் வாழ்கின்ற அந்தத் தேவர்களுக்காக (இங்குள்ள) அந்தணர்கள் தாங்கள் செய்கின்ற யாகங்களில் கொடுக்கும் அவிசை (உன்னைக்) காட்டிலே திரிகின்ற நரியொன்று (அங்கு) புகுந்து அதைத் தனக்கு ஆக்கிக் கொள்வதையும், மூக்கினால் மோப்பத் தையும் செய்வதுபோல், (சத்துருக்களுடைய உடலைப் பிளப்பதற்காக) திருமேனியில் சக்கரத்தையும் சங்கையும் உடைய புருஷோத்தமனுக்கு உபயோகமாகும்படி கிளர்ந்து எழுந்த எனது பெருத்த முலைகளானவை மனிதர்களுக்கு என்கிற வார்த்தை என் காதில்படுமேயானால் என்னால் உயிர் தரித்திருக்க முடியாது. இதை அறிவாயாக.

ஆண்டாள் இளம் பிராயம் முதல் கண்ணனையே தனது நாயகனாக வடித்து, தனது உடல், பொருள், ஆவி எல்லாவற்றையும் உரிமையாக்கி, அவனிடத்திலேயே மனம் ஈடுபட்டவளாக வாழ்ந்து வந்தாள். ஆதலால் மனிதரை

மணப்பதான பேச்சையே கேட்கச் சகியாதவளானாள் என்பது கருத்து.

**வைகுந்தன் என்பதோர் தோணி**

"என்பு(உ)ருகி இனவேல் நெடுங்கண்கள்
இமை பொருந்தா பலநாளும்
துன்பக் கடல்புக்கு வைகுந்தன் என்பது ஓர்
தோணி பெறாது (உ)ழல்கின்றேன்
அன்புடையாரைப் பிரிவுறும் நோய்
அது நீயும் அறிதி குயிலே!
பொன்புரை மேனிக் கருளக் கொடியுடைப்
புண்ணியனை வரக் கூவாய்"
- நாச்சியார் திருமொழி, 4, 5.

குயிலே! எலும்புகள் உருகிப் போனதுமல்லாமல் வேல் போன்ற காதளவும் நீண்டிருக்கிற என்னுடைய கண்களானவை நெடுங்காலமாக இமை கொட்டவில்லை. துக்கக் கடலிலே அமிழ்ந்து அதைக் கடப்பதற்கு ஸ்ரீவைகுந்த நாதன் என்று சொல்லப்படுகிற ஒரு தோணியைக் கிட்டப் பெறாமல் தடுமாறுகிறேன். காதலரைப் பிரிந்து படுகிற விசனத்தை நீயும் அறிவாயல்லவா? ஆதலால் பொன்நிறம் உள்ள சரீரத்தையும் கருடக்கொடியையும் உடைய தரும வடிவான கிருஷ்ணனை வரும்படி நீ கூவ வேண்டும்.

**கனாக் கண்டேன் தோழி நான்!**

"இம்மைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மை உடையவன் நாராயணன் நம்பி
செம்மை உடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மி மிதிக்கக் கனாக் கண்டேன் தோழீ நான்!"
- நாச்சியார் திருமொழி, 6, 8.

தோழி! இப்பிறப்புக்கும் ஏழ்ஏழ் பிறவிகளுக்கும் துணையாகி, நமக்கு உடையவனான நாராயணனான கிருஷ்ணன் (தமது தாமரை மலர் போன்ற) சிவந்த திருக்கைகளாலே என் காலைப் பிடித்து அம்மி மிதிக்க வைப்பதாக நான் ஒரு கனவு கண்டேன்.

கல்யாணக் காலத்தில் மணமகளின் காலைப் பிடித்து ஓர் அம்மிமீது ஏற்றி வைப்பது ஒரு சடங்கு. இப்பதிகம் ஸ்ரீ வைணவர்களுடைய விவாக காலத்தில் "ஆசீர்வாதம் செய்யும்போது ஓதப்படுவது".

## தம்மை உகப்பாரைத் தாம் உகப்பர்!

"செம்மை உடைய திருவரங்கர் தாம் பணித்த
மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டு இருப்பர்
தம்மை உகப்பாரைத் தாம் உகப்பர் என்னும் சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பார் ஆர் இனியே?"
- நாச்சியார் திருமொழி, 11, 10.

(நினைவும் சொல்லும் செயலும்) ஒரே தன்மையாய் உள்ள திருவரங்கச் செல்வராகிய கிருஷ்ண பகவான் அருளிச் செய்த உண்மையான பெருமை வாய்ந்த கீதா வாக்கியத்தை விஷ்ணு சித்தர் (பெரியாழ்வார்) கேட்டு அதன்படி நடந்து ஒழுகுவார், "தம்மைக் கொண்டாடுபவர் களைத் தாம் கொண்டாடுவார்" என்கிற பழமொழி பகவானிடத்திலேயே பொய்யாய்ப் போய்விட்டால் இனி மெய்யாக்குவார்கள் யார்?

மெய்ம்மைப் பெருவார்த்தை - "எல்லாத் திருநாமங் களையும் விட்டு என்னையே சரண் அடைக: நான் உன்னை எல்லாப் பாவங்களின்றும் விடுவிப்பேன்: துயரப்படாதே" என்பது. (பகவத்கீதை அத் 18. சுலோ 66.)

முதலாயிரம்

பொடித்தான் கொணர்ந்து பூசீர்கள்

"நடையொன்றில்லா உலகத்து நந்தகோபன் மகன் என்னும்
கொடிய கடிய திருமாலால் குளப்புக்கூறு கொளப்பட்டு
புடையும் பெயர கில்லேன் நான் போட்கன் மிதித்த
அடிப்பாட்டில்
பொடித்தான் கொணர்ந்து பூசீர்கள் போகா உயிர் என்
உடம்பையே". - நாச்சியார் திருமொழி, 13, 6.

இந்த லோகத்திலே ஒரு மரியாதை அற்றவனாய் ஸ்ரீநந்த கோபருடைய பிள்ளையான கிருஷ்ணனாய் (தன் காரியத்தையே கவனிக்கும்) கொடியவனாய் (பிறர் துன்பம் அறியாத) கல் நெஞ்சனாய் இருக்கும் திருமாலாலே மிதித்த இடத்திலே மிதியுண்டு நான் பக்கத்திலும் கூட நகரச் சக்தியற்றவனாக இருக்கிறேன். வெட்கங் கெட்டவனான கிருஷ்ணன் மிதித்த இடத்தில் உள்ள பொடியைக் கொண்டுவந்து பூசிப்பாருங்கள் (அது செய்தீர்களாகில்) பிராணன் என் உடம்பை விட்டுப் போகாது.

கண்ணன்மீதுள்ள அன்பின் மிகுதியினால் பிரிவாற்றாது வாட்டம் அடையும் ஆண்டாள், அதைத் தீர்ப்பதற்கு அவனோடு சம்பந்தப்பட்ட ஏதாவது ஒரு பொருளே மருந்தாகும் என்கிறாள்.

விருந்தா வனத்தே கண்டோமே!

"கார்த்தண் கமலக் கண் என்னும்
நெடுங் கயிறு படுத்தி என்னை
ஈர்த்துக் கொண்டு விளையாடும்
ஈசன் தன்னைக் கண்டீரோ?
போர்த்த முத்தின் குப்பாயாப்
புகர் மால் யானைக் கன்றேபோல்
வேர்த்து நின்று விளையாட
விருந்தா வனத்தே கண்டோமே".
- நாச்சியார் திருமொழி, 14-4.

மேகம் போல, குளிர்ந்த தாமரை மலர்ந்தாற் போலிருக்கிற, திருக்கண்களாகிற நீண்ட கயிற்றிலே என்னை அகப்படுத்தி இழுத்துக்கொண்டு விளையாடும் ஈசனாகிய கிருஷ்ணனைக் கண்டீரோ? முத்துச் சட்டைப் பூண்டு புள்ளிகளையுடைய பெரிய யானைக்குட்டிப்போல (வெயிலும் பாராமல் பசுக்களைப் புல்லுள்ள இடம் தேடி மேய்த்ததாலே) வேர்வையுற்று நின்று விளையாடுவதைப் பிருந்தாவனத்திலே கண்டோம்.

கண்ணனுடைய அருட்பார்வையில் பட்டவர்கள் அதனுடைய கவர்ச்சிக்குத் தப்ப முடியாமல், அவனுக்கே தனது உள்ளத்தைப் பறிகொடுத்து விடுவார்கள் என்பது இதன் கருத்து.

# குலசேகராழ்வார்

"வேழமுடைத்து மலைநாடு" என்று ஔவையாரால் பாடப்பெற்ற சேரநாட்டினைச் சேர மன்னர்கள் தமிழகத்தின் தலைமை வேந்தர்களாகத் திகழ்ந்து ஆட்சி செய்து வந்தார்கள். அங்ஙனம் ஆட்சி புரிந்த அச்சேர மன்னர் மரபில் திட விரதன் என்பவன் அன்புக்கும் அருளுக்கும் இருப்பிட மானவனாய்த் தோன்றினான். அவ்வேந்தர்பிரான் கொல்லிநகரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செலுத்தி வந்தான். அச்சேரமன்னன் திருமகள்நாதனாகிய திருமாலிடத்து அன்புடையோனாய், வீரமும் கொடையும் ஒருங்கமைந்தவனாய் விளங்கினான்.

அவ்வேந்தர் வேந்தனுக்குக் கடலினின்று உதயமாகும் இளம்பரிதி எனக் குலசேகரர் உதித்தார். குலசேகரர் கொல்லிநகரில் (கி. பி. 8-ஆம் நூற்றாண்டு) பராபவ ஆண்டு மாசித் திங்கள் வளர்பிறையில் அமைந்த துவாதசி திதியில் வெள்ளிக்கிழமையன்று புனர்பூச நட்சத்திரத்தில் கௌஸ்துப அமிசராய் அவதரித்தருளினார்.

குலசேகரர் குழந்தைப் பருவத்திலே மழலைச் சொற்களாலும், செங்கீரை ஆடுதலாலும், சப்பாணி கொட்டு தலாலும், சிறுதேர் உருட்டுதலாலும் பெற்றோர்களை மகிழ்வித்தார். இளமைப் பருவத்தில் தென்மொழி, வட மொழி முதலியன நன்கு பயின்று மன்னர்கட்குரிய யானை யேற்றம், குதிரையேற்றம், வில், வாள் முதலிய படைக்கலப் பயிற்சிகளைக் கற்றுத் தேர்ந்து, "இவரை ஒப்பாரும் மிக்காரும் இலர்" என்னும்படி சிறந்து விளங்கினார். தந்தையாரும் இவரின் சீரிய நிலையினைக் கண்டு அவரை இளவரசனாக்கினார்.

குலசேகரர் தமது தந்தையாருக்குப்பின் நாட்டின் ஆட்சி முறையை ஏற்றுச் சிறந்த முறையில் செங்கோலோச்சினார். இவரது சிறப்பில் பொறாமை கொண்ட சோழனும், பாண்டியனும் ஒன்று கூடிப் போர் தொடுத்தனர். அவர்களைக் குலசேகரர் வென்று தமிழகத்தின் சக்கரவர்த்தியானார்.

இதைக் "கொல்லி நகர்க்கிறை கூடல் கோமான்", "கொல்லி காவலன் மாலடி முடிமேற் கோலமாம் குலசேகரன்" என்ற ஆறு, ஏழாம் திருமொழியினால் காணலாம். பாண்டிய வேந்தன், குலசேகரரது ஆண்மையின் திறத்தை வியந்து தன் செல்வப் புதல்வியை அவருக்குத் திருமணம் செய்து கொடுத்தான்.

குலசேகரருக்குள்ள அகப்பற்று, புறப்பற்றினை நீக்கி வைகுந்தநாதன் அவருக்கு "மயர்வற மதி நலம்" அருளி, தனது "உயர்வற உயர் நலம்" உடைய வடிவத்தை உணரும்படி கடைக்கணித்தருளினார். இதனால் அவருக்குத் தத்துவம் விளங்கியது. அவர்தம் வாழ்நாட்கள், "ஊமனார் கண்ட கனவிலும் பழுதாய்க் கழிந்தொழிந்தன" என்பார். "ஆதிமூலமே என்றழைத்த யானையைக் காத்தவனும், சிருங்கி பேரத்துப் புளிஞர்வேந்தனாகிய குகனைத் தனது தோழன் என்றழைத்து என் தம்பி உனது தம்பியாவான் என்று கூறியவனும், அரசவையில் அரவக் கொடியோனால் அல்லுற்று அவதிப்பட்ட பாஞ்சாலிக்குப் பொன்னாடைகள் அருளியவனுமாகிய எம்பெருமானுடைய அருஞ்செயல்களை எண்ணி ஏத்தாது கழித்த நாட்கள் யாவும் பிறந்தும் பிறவாத நாட்களாகும்" என்பார். திருமாலைக் கண்டுகளிக்கும் நாள் என்றோ? என ஏங்குவார். இதையே அவர் தாம் பாடிய பெருமாள் திருமொழியிலும் கூறுகின்றார்.

பின்னர் இறைவனது நினைவில் ஈடுபட்ட குலசேகரரது மனம், இறைவனது எழில்மிக்க காதையைக் கேட்டலில் விருப்பம் கொண்டது. எனவே, அவர் ஒரு பெரியார் இடத்து நாள்தோறும் இராமகாதையைக் கேட்பார். அப்பெரியாரும் இராமனது அவதாரத்தையும், விசுவாமித்திரரோடு கானகம் சென்று தாடகையை வதைத்த இயல்பினையும், அகலிகையின் சாப விமோசனத்தையும், மைதிலியை மணந்ததையும், பரசுராமரது வில்லை வளைத்து மன்னர்களின் பகையைப் போக்கியதையும், கேகயன் மகள் சொல்லால் அயோத்தியை விடுத்துக் கங்கையை அடைந்து குகனோடு தோழமை பூண்டு, பின் வனம் போய்ப் புக்கதையும் முறையாக நாள்தோறும் கூறி வந்தார். பின்னர் பரதன் வர, பாதுகையளித்து அவனை அனுப்பிவிட்டுச் சித்திரகூடம் சென்றதும், இலங்கை வேந்தனது தங்கை சூர்ப்பனகையினது மூக்கை இலக்குவன் நீக்கியதுமாகிய வரலாறுகளையும் அப்பெரியார் கூறினார்.

அடுத்ததாக, சூர்ப்பனகை சினங்கொண்டு கரனிடம் சென்று கூற, கரன் என்னும் இரக்கமில்லா அரக்கன் தேரின் மீது ஏறிப் படைவீரர்கள் யாவரும் புடைசூழவும், முரசங்கள் ஒலிக்கவும், யாளிகள், சிங்கங்கள், புலிகள், யானைகள், கரடிகள், பன்றிகள் முதலியவை பூட்டப்பட்ட தேர்களுடன் கடல் பொங்கி எழுந்து வந்தாற்போன்ற இயல்போடு காலனும் கண்டு அஞ்சும்படி இராம, இலக்குவனர்களை அழிக்க வந்தான் என மேலும் கதை கூறிய பெரியார் சொல்லியபோது, குலசேகரர் இவை நிகழ்கால நிகழ்ச்சி என்ற எண்ணத்தவராய், தம் படைத் தலைவர்களை அழைப்பித்து, படைகளைத் திரட்டிக் கொண்டு வரும்படிக் கூறி, தாமும் தேரில் ஏறிச் சென்று இராமருக்கு உதவ ஆயத்தமானார். இவரின் மனநிலையை அறிந்த அமைச்சரும், ஏனையோரும் அவரை ஆசுவாசப்படுத்தி சகஜ நிலைக்கு மாற்றினார்கள்.

சில நாட்கள் கழித்து மன்னன் அமைச்சர்களை அழைத்து "இவ்வுலக வாழ்வில் என் மனம் ஈடுபடாமல் உள்ளது. இவ்வரசு எனக்கு வேண்டாம்" என்றுரைத்துத் தமது மூத்த மகனுக்கு முடிசூட்டிவிட்டு, மைந்தர்க்கெல்லாம் கூற வேண்டிய அரசியலறங்கள் அனைத்தும் அறிவித்து, அமைச்சர்களிடமும், அம்மைந்தர்களிடமும் இசைவு பெற்று, திருமாலின் அடியவர்களுடன் இறைவனை நாவார வாழ்த்தி மகிழலாயினார்.

இவர் பெரிய பெருமாளாகிய இராமனிடத்தில் பேரன்புடையவர் ஆதலினால் இவரைப் "பெருமாள்" என்றும், குலசேகரப் பெருமாள் என்றும் வைணவப் பெரியார்கள் கூறலாயினர். இவர் அருளிய திருமொழிகளின் தொகைக்குப் "பெருமாள் திருமொழி" என்னும் பெயர் வழங்கலாயிற்று. இவர் அருளியவை பத்துத் திருமொழிகள். இரண்டு, ஐந்து, ஆறு ஆகிய திருமொழிகள் பத்துப் பாசுரங்களைக் கொண்டவை. மூன்றாந் திருமொழி ஒன்பது பாசுரங்கள் கொண்டது. ஏனைய திருமொழிகள் ஒவ்வொன்றும் பதினோரு பாசுரங்கள் கொண்டவை. ஆக இவர் அருளிய பாசுரங்களின் தொகைநூற்று ஐந்தாம்.

குலசேகர ஆழ்வாரால் பாடப்பட்ட தலங்கள்:

1. திருவரங்கம்,
2. திருக்கண்ணபுரம்,
3. திருச்சித்திரகூடம்,
4. திருவித்துவக்கோடு,
5. திருவேங்கடம்,
6. திருவயோத்தி,
7. திருப்பாற்கடல்

முதலியனவாகும்.

## பெருமாள் திருமொழித் தனியன்கள்

**உடையவர் அருளிச் செய்தது:**

**மணக்கால் நம்பி அருளிச்செய்தது என்று கூறுவாரும் உளர்.**

**நேரிசை வெண்பா.**

"இன்னமுதம் ஊட்டுகேன் இங்கேவா பைங்கிளியே,
தென்னரங்கம் பாட வல்ல சீர்ப் பெருமாள் - பொன்னஞ்
சிலை சேர் நுதலியர்வேள் சேரலர்கோன், எங்கள்
குலசேகரன் என்றே கூறு".

**மணக்கால் நம்பி அருளியது**

**கட்டளைக் கலித்தொகை**

"ஆரம் கெடப்பர னன்பர் கொள் ளாரென்று, அவர்களுக்கே
வாரங்கொடு குடப் பாம்பில்கை யிட்டவன், மாற்றவரை
வீரங் கெடுத்த செங் கோல் கொல்லி காவலன்
வில்லவர்கோன்,
சேரன் குலசே கரன்முடி வேந்தர் சிகாமணியே".

## ஸ்ரீ குலசேகரப் பெருமாள் அருளிச் செய்த பெருமாள் திருமொழி

**என்று கொலோ புரளும் நாளே?**

"தூராத மனக்காதல் தொண்டர்தங்கள்
குழாம் குழுமித் திருப்புகழ்கள் பலவும்பாடி
ஆராத மனக்களிப்போ(டு) அழுத கண்ணீர்
மழை சோர நினைந்(து) உருகி ஏத்தி நாளும்
சீர் ஆர்ந்த முழவோசை பரவைகாட்டும்
திருவரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும்
போர் ஆழி அம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தில் என்று கோலோ புரளும் நாளே?"
- பெருமாள் திருமொழி, 1. 9.

ஒருக்காலும் தணியாத ஆசையையுடைய மனம் உடையவராய், அடியார்களுடைய கூட்டத்திலே கலந்து, திருநாமங்கள் பலவற்றையும் பாடித் தெவிட்டாத மனக் களிப்பாலே கண்களில் இருந்து ஆனந்தக் கண்ணீர் மழை போலப் பெருக, அவனை நினைந்து உருகித் துதித்து, நாள்தோறும் சிறப்புமிக்க வாத்தியங்களின் ஓசை கடலொலி போன்றதாய் உள்ள திருவரங்கக் கோயிலிலே அரவணை யில் பள்ளிகொள்ளும், சக்கராயுதத்தைக் கையிலே உடைய ஈசுவரனைக் கண்டு ஆனந்தக் கூத்தாடிப் பூமியில் புரளும் நாள் என்று வருமோ?

## தொண்டர் அடிப்பொடி ஆட நாம்பெறில்!

"தோடு(உ)லாமலர் மங்கை தோள் இணை
தோய்ந்ததும் சுடர் வாளியால்
நீடுமாமரம் செற்றதும் நிரைமேய்த்ததும்
இவையே நினைந்து
ஆடிப்பாடி அரங்கவோ! என்று அழைக்கும்
தொண்ட ரடிப்பொடி
ஆட நாம்பெறில் கங்கை நீர் குடைந்(து) ஆடும்
வேட்கை என் ஆவதே".
- பெருமாள் திருமொழி, 2, 2.

இதழ் மிகுந்துள்ள தாமரைப்பூவில் வீற்றிருக்கும் இலக்குமி பிராட்டியின் திருத்தோள்களோடு அணைந் தருளினதும், ஒளிமிக்க ஒரே அம்பாலே உயர்ந்த மாமரங்கள் ஏழையும் எய்ததும், பசு நிரையை மேய்த்ததும், (ஆகிய இந்த லீலைகளையே) நினைந்து ஆடிப் பாடி "ஓ அரங்கனே!" என்று கூப்பிடுகிற அடியார்களின் பாதத் தூளியிலே நாம் மூழ்கப் (அப்பாக்கியத்தை) பெற்றால் கங்கையினிலே நீராடும் ஆசையினால் என்ன பலன் உண்டாகும்?

### பேயனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே!

"பேயரே எனக்கு யாவரும் யானும் ஓர்
பேயனே எவர்க்கும் இது பேசி என்
ஆயனே! அரங்கா! என்றழைக் கின்றேன்
பேயனாய் ஒழிந்தேன் எம்பிரா னுக்கே".
- பெருமாள் திருமொழி, 3, 8.

(உலகப் பற்று உடையார்) எல்லோரும் (பகவானையே விரும்பும்) எனக்குப் பேயர் போலத் தோன்றுகின்றனர். (அவர்கள் மதிப்பிலே) நானும் ஒரு பேயனாகத் தோன்றுகின்றேன். இதைப்பற்றிப் பேசுவதில் என்ன பயன்? கிருஷ்ணனே! என்றும் திருவரங்கனே! என்றும் கூப்பிடுகின்றேன். எனது பெருமானுக்கே பித்தனாகி விட்டேன்.

### மீனாய்ப் பிறக்கும் விதி உடையேன் ஆவேனே!

"ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வான் ஆளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்
தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடச் சுனையில்
மீனாய்ப் பிறக்கும் விதி உடையேன் ஆவேனே".
- பெருமாள் திருமொழி, 4, 2.

அழியாத இளமையாகிய செல்வத்தையுடைய அரம்பை முதலான தேவ மாதர்கள் சூழ்ந்து நிற்க, சுவர்க்கத்தை ஆளுகையாகிய செல்வத்தையும் (இந்திர பதவியையும்) பூலோகத்தை ஆளுகையையும் நான் விரும்ப வில்லை, தேன் மிகுந்துள்ள புஷ்பங்களுடைய சோலை சூழ்ந்த திருவேங்கடமலையில் உள்ள நீர்ச்சுனைகளிலே மீனாக வாவது பிறக்கத்தக்க விதியுடையவனாக ஆவேன்.

**படியாய்க் கிடந்து உன் பவளவாய்க் காண்பேனே**

"செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின் கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து (உன்) பவளவாய் காண்பேனே".
- பெருமாள் திருமொழி, 4 - 9.

செடிபோல (திரும்பத் திரும்ப முளைக்கும்) கொடிய வினைகளை அழிக்கும் விஷ்ணுவே, மேன்மையானவனே! திருவேங்கட மலையில் எழுந்தருளியிருப்பவனே! உன் கோயிலினுடைய வாசலிலே (உன்னை வணங்க வரும்) அடியார்களும், தேவர்களும், தேவமாதர்களும் (ஆவலோடு) இருந்து நடந்து செல்லும் படியாகக் கிடந்து உம்முடைய பவளம் போன்ற வாயைக் காண வேண்டும். படியாய் ...... காண்பேனே - படியைப்போல எனக்கென்று ஒரு செயலும் இல்லாமல், உன் திருவுள்ளப்படியே அமைந்து கிடந்தாவது, உனது காட்சியை, தரிசனத்தை எப்போதும் பெற வேண்டும். இக்காரணம் பற்றியே வைணவ ஆலயங்களில் மூலஸ்தானத்திற்கு முன்னுள்ள வாசற்படி "குலசேகரன்படி" என்று வழங்கப்படும்.

**நின்னையே தான் வேண்டி நிற்பன்**

"நின்னையே தான் வேண்டி நீள் செல்வம் வேண்டாதான்
தன்னையே தான் வேண்டும் செல்வம் போல், மாயத்தால்
மின்னையே சேர்திகிரி வித்துவக் கோட்டம்மா
நின்னையே தான் வேண்டி நிற்பன் அடியேனே".
- பெருமாள் திருமொழி, 5, 9.

உன்னையே வேண்டிப் பெருஞ்செல்வத்தை விரும்பாதவனையே வலிய வந்து அடையும் செல்வம்போல மின்னல் போன்று ஒளிவிடும் சக்கராயுதத்தையுடைய, வித்துவக் கோட்டில் எழுந்தருளியுள்ள பெருமானே, உம்முடைய மாயையால் நீர் என்னை விரும்பாவிட்டாலும், அடியேன் உம்

ஒருவரையே விரும்பி நிற்பேன். இறைவனையே வேண்டிச் செல்வத்தை வேண்டாது இருப்போர்க்குச் செல்வம் அடிமை செய்ய முன் வந்து நிற்கும் என்கிறார்.

### மார்வில் மன்னிடப் பெற்றிலேன்!

"தண்ணந் தாமரைக் கண்ணனே! கண்ணா!
தவழ்ந்தெழுந்து தளர்ந்த ஓர் நடையால்
மண்ணில் செம்பொடி ஆடிவந்து என்தன்
மார்வில் மன்னிடப் பெற்றேன் அந்தோ!
வண்ணச் செஞ்சிறு கைவிரல் அனைத்தும்
வாரி வாய்க் கொண்ட அடிசிலின் மிச்சில்
உண்ணப் பெற்றிலேன் ஓ! கொடுவினை யேன்
என்னை என் செய்யப் பெற்றது எம்மோயே".
- பெருமாள் திருமொழி - 7, 6.

குளிர்ந்த அழகியதான தாமரைபோன்ற திருக்கண் களையுடைய கிருஷ்ணனே! நீ தவழ்ந்து கொண்டு எழுந் திருந்து தளர் நடையாலே, சிவந்த புழுதி மண்ணில் விளையாடி அக்கோலத்தோடே வந்து, என்னுடைய மார்பில் கட்டிக்கொண்டு பொருந்தும்படிக் கிடக்க நான் பெற வில்லையே! ஐயோ, அழகியதாய், சிவந்த சிறிய கையில் ஐந்து விரல்களாலும் வாரிக்கொண்டு நீ அமுது செய்த உணவினுடைய எச்சிலை நான் உண்ணப் பெறவில்லையே! (அப்படி அனுபவிக்கப் பெறாத) பெருமா பாவத்தைப் பண்ணினேனே.. ஐயோ! என் தாயாரானவர் என்னை எதற்காகப் பெற்றாளோ? (என் பிறவி வீணாயிற்று)

இப்பதிகத்தில் குலசேகராழ்வார் தம்மைத் தேவகியாகப் பாவித்து, கண்ணனது பால லீலைகளை (யசோதை பிராட்டி அனுபவித்ததுபோல) தாம் அனுபவிக்கப் பெறாமையைக் குறித்து நொந்து கொள்கிறார்.

**இறைஞ்சுமினோ எப்பொழுதும்...**

"அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றி
அடல் அரவப் பகை ஏறி அசுரர் தம்மை
வென்றிலங்கு மணி நெடுந்தோள் நான்கும் தோன்ற
விண் முழுதும் எதிர்வரத்தன் தாமம் மேவி
சென்றினிது வீற்றிருந்த அம்மான் தன்னைத்
தில்லை நகர்த் திருச்சித்ர கூடம் தன்னுள்
என்று(ம்) நின்றான் அவன் இவன் என்றேத்தி நாளும்
இறைஞ்சுமினோ எப்பொழுதும் தொண்டீர்! நீரே".

- பெருமாள் திருமொழி, 10, 10.

(இராமாவதார முடிவில் பரமபதம் செல்லும்) அந் நாளில் சர அசரங்களையெல்லாம் பரமபதத்துக்கு அனுப்பி, வலிமையுடைய பாம்புகளுக்கெல்லாம் பகைவன் ஆன பெரிய திருவடி என்கிற கருடன்மீது ஏறிக்கொண்டு, அசுரர் களை ஜெயிக்கையாலே விளங்குகின்ற அழகிய நீண்ட நான்கு திருத்தோள்கள் தோன்றவும், பரமபதத்தில் உள்ளோர் எல்லோரும் எதிர்கொண்டுவரத் தன்னுடைய வைகுண்டத்திலே போய்ப்புகுந்து இனிதாக சிங்காதனத் திலே தன் பெருமை தோன்ற எழுந்தருளியிருந்த ஈசனாகிய தில்லைநகர் திருச்சித்திரக் கூடத்தில் நித்தியமாக வாழ்பவனை, தொண்டர்களாகிய நீங்கள் அவன் அப்படிப் பட்டவன், இப்படிப்பட்டவன் என்று இடைவிடாமல் துதித்து, நாள்தோறும் வணங்குங்கள்!

ஸ்ரீ இராமபிரான் வைகுந்தத்திற்கு எழுந்தருளுமுன் அயோத்தியில் வாழ்ந்த சராசரங்கள் எல்லாவற்றிற்கும் தனது அளவற்ற கருணையினால் பரமபதம் அருளினன். ஆகையால் அந்த அருள் மூர்த்தியை வணங்குங்கள் என்கிறார். (சர அசரங்கள் - இடம் விட்டு இடம் செல்லக் கூடியவையும், செல்லக் கூடாதவையும் ஆகிய இருவகை உயிர்ப் பொருள்கள்.

# திருமழிசையாழ்வார்

"தொண்டை நன்னாடு சான்றோருடைத்து" என்று தமிழகம் தழைக்க நீதி நூல் வகுத்த ஔவையாரால் பாராட்டப்பெற்ற தொண்டை நாட்டில், கடலுக்கு மேற்கில் காஞ்சிபுரத்திற்குக் கிழக்கில் ஒரு தலம் உளது. அது பூமிக்கு அணியாக விளங்குவது. திருமழிசை என்று பெயர் பெற்ற அப்பதி அந்தணர்கள் பரிவுடன் பயிலும் வேத ஒலிகளைக் கொண்ட தலமாக மட்டுமின்றி, பார்க்கவர் என்னும் முனிவர் திருமாலைக் குறித்து, "தீர்க்க சத்திர யாகம்" செய்யும் இடமாகவும் அமைந்திருந்த காலத்தே, அம் முனிவரது மனைவியார் கருவுற்றுப் பன்னிரண்டு திங்கள் கழித்து (கி. பி. 7-ஆம் நூற்றாண்டு) சித்தார்த்திரி ஆண்டு தைத் திங்கள் ஞாயிற்றுக்கிழமை அன்று மக நட்சத்திரத்தில் திருமாலின் ஆழி அம்சமாய், கை, கால் முதலிய உறுப்புகள் இல்லாத ஒரு பிண்டத்தைப் பெற்றெடுத்தார். பார்க்கவ முனிவரும் அவர் மனைவியாகிய கனகாங்கி என்னும் தேவமாதும் மன வருத்தம் கொண்டு அப்பிண்டத்தை ஒரு பிரம்புப் புதரின்கீழே போட்டுவிட்டுப் போனார்கள். பிறகு ஆழியங்கையனாகிய திருமால் - திருமகள் சமேதராய் அங்கு எழுந்தருளி அப்பிண்டத்தை அன்புடன் நோக்கி அருள் புரிய அதனால் அப்பிண்டம் ஓர் அழகிய ஆண்மகவாகும் உறுப்புக்கள் அமையப் பெற்றது. இது,

"சிக்கென்று சின்னக்கால் சீருடைப்பின் கண்ணுயிராய்
ஒக்கஉறுப் பாய்ந்தறிவார் உண்ணிறைந்தான்"

என்கிறபடியே, எல்லா அவயவங்களும் அமைந்த அழகுள்ள ஆண் குழவியாகி அழத் தொடங்கிற்று.

இறைவனின் திருவருளால் உயிர் அமையப் பெற்று, பசி தாகங்களில் ஈடுபட்டு, மக்கள் இல்லாத பிரம்புப் புதரில்

அழுதுகொண்டிருந்த அக்குழந்தையின்முன் எம்பெருமான் எழுந்தருளி, இவருடைய பசி தாகம் தீரும்படி அருள் பாலித்து, ஆராவமுதான தம் திருக்கோலத்தைக் காட்டி மறைந்தார். குழந்தையாகிய திருமழிசையாழ்வாரும் அவரை விட்டுப் பிரிந்து ஆற்றமாட்டாமல் மீண்டும் அழத் தொடங்கினார்.

அங்கு அப்பொழுது, திருவாளன் என்றொருவன் பிரம்பு அறுக்கப் போய், அவ்விடத்தில் இக்குழந்தையின் அழுகுரலைக் கேட்டுத் தேடிச் சென்று அக்குழந்தையைக் கண்டு மிக்க மகிழ்ச்சியுடன் அதனை எடுத்து, பெற்றோர்கள் எங்கேனும் உளரோ எனத் தேடிப் பார்த்தான். அங்கு ஒருவரும் காணப்பட்டிலராதலைக் கண்ட அவன், "மகப்பேறு இல்லாத குறையைத் தீர்க்கக் கருதிய திருமகள் நாதன் இக்குழவியை நமக்களித்தனன்" என்னும் உவகை கொண்டு, இல்லம் நோக்கிச் சென்று, தனது மனைவியான பங்கயச் செல்வியார் கையில் கொடுத்து, கிடைத்த வரலாற்றையும் அவளிடம் கூறினான்.

அந்நங்கை நல்லாளும் அக்குழந்தையை அன்புடன் வாங்கி முத்தமளித்து, தானே பெற்றவர் எனக் கண்டோர் கூறும் தன்மையில் மார்புடன் மகிழ்வோடு அணைத்துக் கொள்ள, அவள் மார்பிலும் பால் சுரந்தது. ஆயினும், அப்பாலை மகவு உண்டிலது. இக்குழந்தையாகிய திருமழிசையாழ்வார் பாலுண்ணல் முதலானவற்றில் ஆசையற்று, எம்பெருமானுடைய குணங்களையே தாரகமாக வுடையராய்ப் பேசுவது அழுவது ஒன்றுமின்றி, சிறுநீர் கழித்தல் முதலியனவுமில்லாமல், எல்லா உறுப்புக்களும் பரிபூரணமாகப் பெற்றவராய் எழுந்தருளியிருந்தார்.

இத்தகு வியப்பான செய்தியைக் கேட்டு, திருமழிசையில் வாழ்பவரும், திருமகள்நாதன்பால் பேரன்பு

உடையவரும், கற்றுணர்ந்தவருமான ஒரு முதியவர், அக்குழவிக்குக் கொடுக்கப் பாலைக் காய்ச்சி எடுத்துக்கொண்டு வந்து அம்மகவின்முன் வைத்து, "இதை அமுது செய்தருள வேண்டும்" என்று வேண்ட, அக் குழவியும் அப்பாலமுதை அருந்திற்று. அதனைக் கண்ணுற்ற பங்கயச் செல்வியாரும் திருவாளனும், நாள்தோறும் பாலமுது கொணர்ந்து பாலகனைப் பருகுவிக்கச் செய்ய வேண்டும் என்று அம்முதியவரைப் பரிவுடன் வேண்ட, அம்முதியவரும் அவ்வாறே நாள்தோறும் தம்முடைய மனைவியாரோடு பாலமுதைக் கொணர்ந்து அக்குழவியை உண்பிக்க, அவ்வருமை மகவும் அப்பாலை உண்டு வந்தது. ஒரு நாள் இவர்களது எண்ணத்தை அக்குழந்தை அறிந்து, அன்று அவர்கள் கொணர்ந்த பாலமுதில் சிறிது நிற்கும்படி வைத்து எஞ்சியதை உண்டது. இதனை அம்முதியவர்கள் அருந்த, அவர்கள் இளமைப் பருவத்தினையுடையவர்களாகி, பின் அவரது மனைவியார் கர்ப்பவதியாகிப் பத்துத் திங்கள் நிறைந்தபின், ஓர் ஆண் மகவைப் பெற்றாள். அப் பிள்ளைக்குக் கணிகண்ணன் எனப் பெயரிட்டு, மக்களுக்கு மாட்சியளிக்கும் கலைகள் யாவற்றையும் அவர்கள் கற்பித்தார்கள்.

பார்க்கவ முனிவருக்கும் அவரது மனைவியாகிய கனகாங்கிக்கும் மகவாகி, திருவாளன், பங்கயச் செல்வி ஆகிய இருவரின் செல்வ மைந்தராகி, திருமழிசை என்னும் தலத்தில் அவதரித்த காரணத்தினால் திருமழிசையாழ்வார் என்ற திருநாமத்தோடு வளர்ந்த இவர், ஏழு ஆண்டுகள் கழிந்தபின், அஷ்டாங்க யோகம் புரியும் கருத்தினர் ஆகி, அதற்குப் பரம்பொருளின் தியானம் இன்றியமையாதது என நூல்களின் வாயிலாக உணர்ந்தார். உலகக் காரணனாக விளங்கும் பரம்பொருளாம் முதற்பொருளின் தத்துவத்தை உணரப் பற்பல சமயங்களிலும் புகுந்து ஆராய வேண்டுமென்னுங் கருத்தினைக் கொண்ட அவர் சாக்கியம்,

சமணம் என்னும் சமயங்களில் உள்ள நூல்களை ஓதியுணர்ந்தார். ஆனால், அவற்றில் பசையில்லாமல், பின் சைவ சமயத்தை அடைந்து, சிவவாக்கியர் என்னும் திருநாமத்துடன் சைவராய் விளங்கி அச்சமய நூல்களை ஆராய்ந்தவாறே அவர் பல தலங்களுக்குச் சென்று, சிவபிரானைச் சேவித்துவிட்டுத் திருமயிலையை அடைந்தார். அங்கு பூஞ்சோலையில் இருந்த பேயாழ்வார், சிவவாக்கியர் என்ற பெயருடன் சைவராக விளங்கும் திருமழிசையாழ்வாரைத் தடுத்தாட்கொள்ள வேண்டும் என்னும் நோக்கத்துடன் அவரிடம் மரங்கள் தோன்றுவதற்கு விதை காரணமாக இருப்பதுபோல் சத்துவ குணம் உடைய பொருள் எதுவோ அதுவே உலகத்து எல்லாப் பொருள்களின் தோற்றத்திற்கும் காரணமாகின்ற முதற் பொருள் ஆகும் என்ற உண்மையினை உணர்த்தினார்: மேலும், அம்முதற்பொருளை உணர்ந்து அடைந்து வீடு பெறுதலே ஞானத்தின் பயன் ஆகும் என்று எண்ணம் சிவவாக்கியரின் மனத்தில் எழச் செய்து, அத்தகைய முதற்பொருளாய் விளங்கி முத்தி நிலை அளிக்கும் முதல்வன் திருமகள்நாதனாகிய திருமாலே என்று நிலை நாட்டி இதர சித்தாந்தங்கள் நிலையற்றவை என்றும் விளக்கினார். இவ்வாறு சைவராக இருந்து, சைவ மதத்தில் சிவவாக்கியர் என்னும் பெயருடன் விளங்கிய திருமழிசை யாழ்வாருக்குப் பேயாழ்வார் நாராயணனின் திருமந்திரத்தை முறைப்படி உபதேசிக்க, திருமழிசையார் ஸ்ரீவைணவர் ஆனார்.

திருமழிசையாழ்வார் ஜகந்நாதனான ஸ்ரீமந் நாராயணனைத் தியானம் செய்துகொண்டு திருமழிசையில் உள்ள "கஜேந்திர ஸரஸ்" என்னும் குளத்தின் கரையில் பல்லாண்டுகள் யோகத்தில் எழுந்தருளியிருந்தார்.

பிறகு திருமழிசைப் பிரானார் அவ்விடத்தினின்றும் அகன்று ஒரு மலைக்குகையை அடைந்து, அங்கு யோகத்தில் அமர்ந்திருந்தார். அந்நிலையில் பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார் ஆகிய முதலாழ்வார்கள் மூவரும் பல தலங்களுக்குச் சென்று வருகையில், ஓரிடத்தில், இவ்வுலகில் காணப்படாததாகிய பேரொளியைக் கண்டு வியப்பெய்தி, இதை ஆராயக் கடவோம் என்று எங்கும் திரிந்து வந்து குகையில் எழுந்தருளியிருந்த பக்திசாரரை நெஞ்சென்னும் உட்கண்ணால் கண்டுகொண்டு, அவரை நோக்கி, "பார்க்கவரின் அருந்தவப் பேறானவரே! தங்கள் நலம் பொலிந்து விளங்குகின்றதோ?" என்று கேட்டார்கள். திருமழிசையார், "தாமரை, குருக்கத்தி, செவ்வல்லி என்னும் முப்பூக்களும் உலகில் புகழ் எய்த வந்த மெய்ஞ்ஞானச் செல்வர்களே! உங்கள் அருள் நலம் பெற்றவனாகிய என் நலம் பொலிந்து விளங்குதற்குத் தடையாவது யாதுளது?" என்றார். அவர்கள் அன்பின் மிகுதியால் கண்களில் நீர் மல்க ஒருவரையொருவர் ஆலிங்கித்துக் கொண்டு, மிகவும் பக்தியுடன் யோகத்தில் எழுந்தருளியிருந்து பின்பு யாவரும் திருமயிலைக்கு எழுந்தருளி, பேயாழ்வார் திருவவதரித்தருளின கைரவ தீர்த்தத்தின் கரையில் சில காலம் யோகத்தில் எழுந்தருளியிருந்தனர். பின் முதலாழ்வார்கள் மூவரும் திருமழிசைப் பிரானிடம் விடை பெற்றுக்கொண்டு அவரை அரிதிற் பிரிந்து சென்றார்கள்.

பின்பு ஆழ்வார் தம்முடைய திருவவதாரத் தலமான திருமழிசைக்கு எழுந்தருளி, சாத்துகைக்குத் திருமண் வேண்டி கல்லிச் சோதித்த இடத்தில் திருமண் அகப்படாமல் வருந்தித் துயில் கொள்ள, அவரது கனவில் திருவேங்கடநாதன் எழுந்தருளி, திருமண் உள்ள இடத்தைக் குறிப்பிட்டுக் கூறியருளினான். இவரும் அங்கே திருமண் கண்டு எடுத்துப் பன்னிரண்டு திருநாமம் அணிந்து கொண்டு,

"ஆல நிழல்கீழ் அறநெறியை நால்வர்க்கு
மேலை யுகத்துரைத்தான் மெய்த்தவத்தோன்--ஞாலம்
அளந்தானை ஆழிக் கிடந்தானை ஆல்மேல்
வளர்ந்தானைத் தான்வணங்கு மாறு"
என வணங்கினார்.

இப்படியாகச் சில நாள் சென்ற பின்பு, கச்சியில் உள்ள திருவெக்காவுக்குச் சென்று, அப்பதியில் அரவணையில் துயில் அமர்ந்துள்ள இறைவனைச் சேவித்து, பொய்கையாழ்வார் அவதரித்தருளின் பொய்கைக் கரையில் தியானம் செய்து கொண்டு, யோகத்தில் எழுந்தருளி இருந்தார். அக்காலத்தில் இவரருளால் பிறந்த கணிகண்ணர் வந்து, இவருடைய திருவடிகளில் வணங்கி, அவர் திருவருளைப் பெற்று, அவருக்குச் சீடர் ஆகிப் பல தொண்டுகள் செய்து வரலாயினார்.

அப்பொழுது அங்கு வாழ்ந்து வந்த ஒரு முதியவள் திருமழிசையாழ்வாரின் மாட்சியை உணர்ந்து வந்து, நாள் தோறும் அவர் உள்ள இடத்தை அலகு கொண்டு தூய்மைப்படுத்திக் கோலமிட்டு அலங்கரித்து வரலானாள். ஒரு நாள் ஆழ்வார் யோகத்திலிருந்து திருக்கண்களை விழித்துப் பார்த்து, முதியாள் செய்யும் தொண்டிற்குகந்து, அம்முதியவளை நோக்கி, "உனக்கு வேண்டியதைக் கேள். ஒரு வரம் தருகிறேன்" என்றருளிச் செய்ய, அவளும் ஆழ்வாரைக் குறித்து, "அடியேனுக்கு இக்கிழத்தனம் போகும்படி அருள் பாலிக்க வேண்டும" என்ன, ஆழ்வாரும், அப்படியேயாகக் கடவது என்று அவளுக்கு அருள, தேவ மாதர்களும் இவ்வுரு பொற்பாவையோ? பொன்தானோ? என்று ஐயுறும்படி அவளும் அழகுமிக்க இளநங்கையாகிப் பக்திசாரரை வணங்கித் தன் இருப்பிடம் அடைந்தாள். அவளது அழகில் மனத்தைப் பறிகொடுத்த பல்லவராயன் ஏக்கமுற்றவனாய் உறக்கமின்றி அவளையே எண்ணி, பின்

அமைச்சர்கள் மூலம் அவளது விருப்பத்தையும் அறிந்து, அவளைத் தனது கருத்திற்கிசைந்த மனைவியாகப் பெற்றான். பல்லவராயனும் நாளுக்கு நாள் கிழத்தனத்தை அடையலானான். பின் ஒரு நாள் மனைவியிடம் அவளுக்கு ஆழ்வாரால் ஏற்பட்ட அருளை உணர்ந்தான். கணவனாகிய காவலனுக்குத் தனக்கு இளமைத் தன்மை ஏற்பட்ட வரலாற்றினை உணர்த்தியதோடு அமையாத அம்மையார், ஆழ்வாரின் சீடரும், நாள்தோறும் அரண்மனைக்குப் பிச்சை ஏற்றதற்காக வருகின்றவரும் ஆகிய கணிகண்ணாின் துணை கொண்டு ஆழ்வாரின் அருளைப் பெறுவீராயின் தங்களுக்கும் இளம்பருவம் எய்தும் எனக் கூறினாள்.

அங்ஙனமே அம்மன்னனும் மறுநாள் கணிகண்ணர் வந்ததும் அவரிடம் அவரது குரவரை அழைத்துக் கொண்டு வர வேண்டும் என்று வேண்ட, அதற்கவர், எம் குரவர் எவர் மனைக்கும் வாரார் என்ன, அரசன், அங்ஙனமாயின் நீரே நம்மீது ஒரு பாட்டுப் பாடுதல் வேண்டும் என்று கேட்டான். அதற்குக் கணிகண்ணர், யான் வாய்கொண்டு மானிடம் பாட வந்த கவியல்லேன் என்ன, அரசன் அவரை நோக்கி, திருமாலின் அமிசம் பெற்றவர்கள் அரசர்களாதலினால் அரசரைப் பாடுதல் குற்றமாகாது. ஆதலினால் பாடுதல் வேண்டும் என்று வற்புறுத்திக் கூறினான். கணிகண்ணரும்,

> "ஆடவர்கள் எங்ஙன் அகல்வார் அருள்சுரந்து
> பாடகமும் ஊரகமும் பாம்பணையும் நீடியமால்
> நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
> மன்றார் பொழிற்கச்சி மாண்பு"

என்று பாடினார். அரசன் கணிகண்ணரை நோக்கித் திருமாலைப் பாடியதன் காரணத்தை வினவ, அதற்குக் கணிகண்ணனார் அரசனிடம், தாங்களே அரசர்கள் திருமாலின் அமிசம் என அறிவித்ததால் திருமாலைப்

பாடுவதும் அரசரைப் பாடுவதே அன்றோ? ஆதலின் திருமாலைப் பாடினேன் என்றார். மன்னன் அதனைச் செவியேற்றுச் சினங்கொண்டு, இன்றே நீர் நமது நகரைவிட்டுச் செல்வீராக எனக் கடிந்து கூறினான்.

கணிகண்ணரும் சடக்கெனப் புறப்பட்டுத் தமது குருவரான பக்திசார முனிவராகிய திருமழிசையாழ்வார் முன் சென்று வணங்கி, நடந்த செய்தியை அறிவித்து, அடியேன் இவ்விடத்தினின்றும் விடை கொள்ளுகிறேன் என்று கூற, ஆழ்வாரும் அவரிடத்து, நானும் எம்பெருமானை எழுப்பிக்கொண்டு வருகின்றேன். அதுவரையிலும் இங்கு இருப்பீர் என்று சொல்லிக் கோயிலுக்குச் சென்று, அரவணைச் செல்வனாகிய வைகுந்தவாசனை நோக்கி,

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா-துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்"

என்று பாடினார். அப்பெருமானும் திருமழிசையார் பின்னால் தம் பைந்நாகப் பாயைச் சுருட்டிக்கொண்டு எழுந்தருள, மற்றும் அத்தலத்து ஆலயங்களில் பொருந்தியுள்ள தேவர்களும் பின்தொடர எழுந்தருள்கின்ற காலத்து, அக்காஞ்சிமா நகரம், கோசல நாட்டுக் குரிசில் கானகம் நோக்கிச் செல்கின்ற காலத்து இராமனைவிட்டுப் பிரிந்தமையால் எழில் இழந்த அயோத்தியைப் போன்று பொலிவு அற்று இருள் சூழப் பெற்றது. அந்நகரக் காவலனாகிய பல்லவராயன் அமைச்சர்களை அழைப்பித்துத் தனது நகரம் பொலிவிழந்து காண்பதற்குக் காரணம் கேட்க, அமைச்சர்களும் ஒற்றர்கள்மூலம் நிகழ்ந்த செய்தியை அறிந்து அரசனுக்குக் கூறினார். அரசனும் மிக வருந்தி

அமைச்சர்கள் முதலியவருடன் கணிகண்ணரைத் தேடிச் சென்று, அவரது காலில் விழுந்து வணங்கி, அறியாமையால் தான் கூறிய கொடுமொழியைப் பொறுத்து மீண்டும் கச்சிப்பதிக்கு எழுந்தருள வேண்டும் என வேண்டினார். கணிகண்ணரும் திருமழிசையாழ்வாரை மீண்டும் எழுந்தருளவேண்டும் என வேண்ட, ஆழ்வாரும் வைகுந்த நாதராகிய சொன்னவண்ணம் செய்த பெருமாளைப் பார்த்து,

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டும்--துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்படுத்துக் கொள்"

என்று விண்ணப்பம் செய்ய, திருமாலும் தேவர்களுடன் மீண்டும் கச்சிப்பதியை அடைந்து, தம் பைந்நாகப் பாயை விரித்துப் பள்ளி கொண்டருளினார். அம்முதல்வன் கணிகண்ணர் முதலியவர்களுடன் சென்று ஓர் இரவு தங்கிய இடத்திற்கு ஓரிரவிருக்கை என்பது பெயராயிற்று. காஞ்சி நகரம் முற்றும் முன்போல் பொலிவுற்று விளங்கியது. அரசன் முதலான அனைவரும் மகிழ்வெய்தினார்கள். திருமழிசையாழ்வாரும் அவ்விடத்திலே பின்னையுஞ் சில காலம் யோகத்தில் எழுந்தருளியிருந்தார்.

பின்பு திருமழிசையாழ்வார், வைகுந்தமாநகரைத் தரத்தக்க பெருமையுடைய கும்பகோணம் என்னும் திருக்குடந்தையில், ஏரார் கோலம் திகழக் கிடக்கும் ஆராவமுதனைக் கண்டு சேவிக்க எண்ணமுடையராய், காஞ்சியினின்றும் எழுந்தருளும்பொழுது, இடையில் உள்ள பெரும்புலியூர் என்கிற கிராமத்தில் சென்று, ஒரு திண்ணையில் எழுந்தருளியிருந்தார். அத்திண்ணையிலே இருந்து வேதம் ஓதிக்கொண்டிருந்த பார்ப்பனர்கள் இவரைக் கண்டு, நான்காம் வருணத்தினனாகிய இவன் கேட்க நாம்

வேதம் ஓதல் தகாது என எண்ணித் தவிர்ந்திருக்க, ஆழ்வாரும் அவர்கள் கருத்தை அறிந்து திண்ணையை விட்டிறங்கினார். மறையவர்கள் உடனே வேதம் ஓதத் தொடங்கி, விட்ட வாக்கியம் தோன்றாமையால் தவறித் தடுமாற, ஆழ்வாரும் அதைக் கண்டு, கருநெல்லை நகத்தால் பிளந்து குறிப்பால் காட்டியருள, பின்பு அவர்களுக்கு விடுபட்ட வாக்கியம் தோன்றி, அவர்கள் தெளிந்து வந்து ஆழ்வாரை வணங்கி, பிழையைப் பொறுத்தருள்க என வேண்ட, பக்திசாரரும் அவர்களுக்குப் பல இன்மொழி களைக் கூறி விடை பெற்றுக்கொண்டு சென்றார்.

பின்னர் அப்பகுதியில் பக்திசாரர் பிச்சை ஏற்றுச் செல்லுங்காலத்து, அவ்வூர்த் திருக்கோயிலில் எழுந்தருளி இருக்கும் எம்பெருமான் இவ்வாழ்வார் எழுந்தருளுகிற திருவீதிகள்தோறும் தம் திருமுகத்தைத் திருப்பி அருளுவார் ஆயினார். இந்தச் செயலை அக்கோயில் அர்ச்சகராகிய நம்பியார் கண்டு, சில பார்ப்பனருக்குக் காட்டினார். அவர்கள் அந்தக் கிராமத்தில் யாகம் செய்யும் பெரும்புலியூர் அடிகளுக்கு யாகசாலையில் சென்று இவரது பெருமையைக் கூற, அவரும் உடனே அங்கு வந்து, பக்திசாரரையாக சாலைக்கு எழுந்தருளவேண்டும் என்று வணங்கிப் போற்றி விண்ணப்பம் செய்து அழைத்துச் சென்று உபசரித்துச் சிறந்ததோர் பீடத்தில் வீற்றிருக்கச் செய்தார். பின்னர் யாகத் தலைவர் யாகத்தில் செய்யும் அக்கிரப் பூசையை ஆழ்வாருக்குச் செய்யுங்காலத்து, வேள்விச் சடங்கர்கள் பக்திசாரரை இழிவுபடுத்திப் பேச யாகத் தலைவர் ஆழ்வாரை நோக்கி, இவர்கள் இப்படிப் பேச நான் கேட்க மாட்டேன் என்று மிகவும் வருந்தி விண்ணப்பம் செய்தார். ஆழ்வாரும் அச்சடங்கர்களுக்கு நல்லறிவு உண்டாகும்படி செய்தல் வேண்டும் என்ற எண்ணத்துடன் எம்பெருமானை எண்ணி,

"அக்கரங்கள் அக்கரங்கள் என்றுமாவ தென்கொலோ
இக்குறும்பை நீக்கியென்னை ஈசனாக்க வல்லையேல்
சக்கரங்கொள் கையனே சடங்கர்வா யடங்கிட
உட்கிடந்த வண்ணமே புறம்பொசிந்து காட்டிடே"

என்று பாடியருளினார். திருமாலும் யாவரும் காணும்படி ஆழ்வாருடைய திருமேனியில் திருப்பாற்கடலின்கண் தாம் பள்ளிகொண்டுள்ள காட்சியைக் காண்பிக்க பக்திசாரரும் அச்சாரூப நிலையைப் பெற்று யாவரும் காண இருக்கும்படி அருளினார். முன்பு கண்டபடி பேசிய சடங்கர்கள் எல்லோரும் இக்காட்சியினால் உள்ளம் மாறி ஆழ்வாரது திருவடிகளில் விழுந்து வணங்கி, ஆழ்வாரே அக்கிரப் பூசைக்கு உரியவர் எனப் பல முறை போற்றி, தாம் செய்த செயல்களை மன்னித்தருளுமாறு வேண்டினர். பக்திசாரரும் அவர்களுக்குப் பல நன்மொழிகளைக் கூறி, பெரும்புலியூர் அடிகளிடத்தும், அவர்களிடத்தும் விடை பெற்றுக்கொண்டு திருக்குடந்தைக்கு எழுந்தருளினார்.

திருக்குடந்தை என்னும் கும்பகோணத்தை அடைந்த ஆழ்வார் ஆராவமுதனைச் சேவித்து, பின் தாம் அது வரையில் பாடிய பாசுரங்களையெல்லாம் காவிரி நீரில் விட்டார். அவற்றுள் நான்முகன் திருவந்தாதிப் பாசுரங்களும், திருச்சந்த விருத்தப் பாசுரங்களும் எதிர்த்து வர, அவற்றை எடுத்துக் கொண்டு ஆராவமுதனைச் சேவித்தார். பிறகு அவ்விரண்டு நூல்களையும் உலகத்திற்கு உதவி அப்பதியில் பல்லாண்டுகள் எழுந்தருளியிருந்தார் என்று சொல்லப் படுகிறது. இங்ஙனம் திருமழிசையாழ்வார், அன்ன ஆகாரங்களை விட்டு, காய் கிழங்குகளைச் சிறிது அமுது செய்து, நெடுங்காலம் நானிலத்தில் நாடுய்யும் நல்வழி யினைப் பாசுரங்கள்மூலம் உணர்த்தியருளினார் என்பர் அறிஞர். இவருடைய பாசுரங்கள் யாவும் தத்துவப் பொருளை உணர்த்துவதோடு, வைகுந்தநாதனின் அன்பை

உண்டாக்கி, இயற்கை வருணனைகள் எழிலாக அமையப்பெற்று பொருட் செறிவும், மிடுக்கும், இன்பமும் வாய்ந்தனவாய் விளங்குகின்றன.

திருமழிசையாழ்வாரால் பாடப்பெற்ற பாடல் தலங்கள்: (1) திருவரங்கம், (2) அன்பில், (3) திருப்பேர்நகர், (4) கும்பகோணம், (5) கவித்தலம், (6) திருக்கோட்டியூர், (7)திருக்கூடல், (8) திருக்குறுங்குடி, (9) திருப்பாடகம், (10)திருவூரகம், (11) திருவெக்கா, (12) திருவெவ்வுளூர், (13)திருவேங்கடம், (14) திருப்பாற்கடல், (15) துவாரகை, (16)பரமபதம் முதலியனவாம்.

## திருமழிசையாழ்வார் அருளிச் செய்த திருச்சந்த விருத்தம்

### திருச்சந்த விருத்தத் தனியன்கள் திருக்கச்சி நம்பிகள் அருளிச் செய்தவை

"தருச்சந்தப் பொழில்தழுவு தாரணியின் துயர்தீர
திருச்சந்த விருத்தம் செய் திருமழிசைப் பரன்வரு மூர்,
கருச்சந்தும் காரகிலும் கமழ்கோங்கும் மணநாறும்,
திருச்சந்தத் துடன்மருவு திருமழிசை வளம்பதியே".

### இரு விகற்ப நேரிசை வெண்பா

"உலகும் மழிசையு முள்ளுணர்ந்து, தம்மில்
புலவர் புகழ்க்கோலால் தூக்க, - உலகு தன்னை
வைத்தெடுத்த பக்கத்தும், மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது".

பூமியிலே மிகவும் சிறந்த இடம் திருமழிசை, உலகின் மற்ற பாகங்களைப் புகழாகிற தராசுக் கோலின் ஒரு

தட்டில் வைத்து, திருமழிசையை மற்றொரு தட்டில் வைத்தால், திருமழிசையை வைத்த தட்டே வலுவாக இருக்கும் என்பதே இத்தனியன்களின் கருத்தாகும்.

தமிழ் மொழியிலுள்ள பாவினங்களுள் ஒன்றான விருத்தத்தினால் ஆகியது இப்பிரபந்தம். இனிய ஓசையை உடையது. அதனால் சந்த விருத்தம் எனப்பட்டது. எம்பெருமானின் பெருமைகளை அனுபவித்து மகிழ்கிறவர் இவ்வாழ்வார். "இவ்வுலகில் உள்ள மக்கள் பகவானை நினைக்காமல் இப்படித் துன்புறுகிறார்களே! துன்பம் நீக்கும் வழி யாது?" என்று சிந்தித்தார். ராஜஸ, தாமஸ நூல்களால் மனம் கலங்கி தேவ தாந்தரங்களை நாடுவதுதான் துன்பமடையக் காரணம் என்று தெளிந்தார். ஸ்ரீமந் நாராயணனே பரதேவதை, தத்துவப் பொருள் என்பதை விளக்குவதற்காகவே இப்பிரபந்தத்தை அருளியுள்ளார். பர வ்யூஹ, விபவ, அர்ச்சாவதாரங்களில் எம்பெருமான் காட்டிய பெருமைகளை வாசித்தும், கேட்டும் அவனையே வணங்கி வழிபட்டும் பொழுதுபோக்கும் பாக்கியத்தை எம்பெருமான் எனக்குக் கொடுத்திருக்கிறானே! என்னே கருணை! என்று பகவானிடமிருந்து தாம் அடைந்த நற்பயன்களை இப்பிரபந்தத்தில் கூறி மகிழ்கிறார்.

## திருச்சந்த விருத்தம்

"நின்றது எந்தை ஊரகத்(து) இருந்தது எந்தை பாடகத்து
அன்று வெக்கணைக் கிடந்த(து) என் இலாத முன் எலாம்
அன்று நான் பிறந்திலேன் பிறந்த பின் மறந்திலேன்
நின்றதும் இருந்ததும் கிடந்ததும் என் நெஞ்சுளே".

- திருச்சந்த விருத்தம், 64.

பகவான் திரு ஊரகம் என்னும் திருப்பதியிலே நின்றருளினதும், திருப்பாடகம் என்னும் திருப்பதியில்

வீற்றிருந்ததும், (எனக்கு ஞானம் பிறக்காத காலமாகிய) அன்று திருவெக்கா என்னும் திருப்பதியில் பள்ளி கொண்டருளினதும், நான் அவரை நாடாத முற்கால மெல்லாம், அக்காலத்தில் நான் ஞானப்பிறவி பெற்றிலேன். அப்பிறவி பிறந்தபின் ஒரு கணப்பொழுதும் மறக்கவில்லை. பின்பு பகவான் நின்றதும், இருந்ததும், பள்ளிகொண்டதும் என்னுடைய நெஞ்சுக்குள்ளே ஆயின.

பகவானிடம் பக்தி செய்தலும், அவன் அருளைப் பெறுதலுமே மனிதப் பிறவியின் பயன்களாம். அவைகளைப் பெறாதபோது ஆழ்வார் தம்மைப் பிறந்திலேன் என்கிறார்.

<u>ஒப்பிடுக:</u>

"கற்றார் பற்றறுக்கும் பிறவிப் பெருங்கடலே
பற்றா வந்தடியேன் பிறந்தேன், பிறந்தபின்னை
வற்றா நீர்வயல் சூழ்வயலாலி அம்மானைப்
பெற்றேன் பெற்றதுவும் பிறவாமைப் பெற்றேனே"
- பெரிய திருமொழி, 8, 9.

"மற்றுப் பற்றெனக்கு இன்றிநின் திருப் பாதமே மனம் பாவித்தேன்.
பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாத தன்மை வந்து எய்தினேன்". சுந்தரர் தேவாரம், 8.

**அன்பில் அன்றி யாவர் காணவல்லரே?**

"புன்புல வழி அடைத்து அரக்கு (இ)லச்சினை செய்து
நன்புல வழி திறந்து ஞானநற் சுடர்கொளீஇ
என்பில் எள்கி நெஞ்சு(உ)ருகி உள்கனிந்தெழுந்ததோர்
அன்பில் அன்றி ஆழியானை யாவர் காண வல்லரே?"
-- திருச்சந்த விருத்தம், 76.

புலன்கள் அற்பமான (இன்பங்களை நாடும்), அந்த வழியை அடைத்து, அரக்கு முத்திரையிட்டு (பகவானை நாடும்) நல்ல வழி திறந்து ஞான தீபத்தை ஏற்றி, பக்தியினால் சரீரம் எலும்பு அளவாகக் குறைந்து நெஞ்சுருகி, உள்ளே பக்குவமாகி (பரமபக்தி ரூபமாகப் பெருகி) எழுந்த ஓர் அன்பினால் அல்லாமல் திருவாழியைக் கையில் தரித்திருக்கும் ஈசனைக் காண்பதற்கு யார் வல்லவர்?

## குற்றம் நற்றமாகவே கொள்

"வைது நின்னை வல்லவா பழித்தவர்க்கும், மாறில் போர்
செய்து நின்று செற்ற தீயில் வெந்தவர்க்கும் வந்துன்னை
எய்தலாகும் என்பர் ஆதலால் எம்மாய! நாயினேன்
செய்த குற்றம் நற்றமாகவே கொள் ஞாலநாதனே!"
- திருச்சந்த விருத்தம், 111.

துதிக்கப் படுவதற்குரியனான உன்னை மிகுதியாக வைது நிந்தித்த சிசுபாலன் முதலியவர்க்கும் (உன்னுடன்) ஒப்பில்லாத யுத்தத்தைச் செய்து உன்னுடைய கோபமாகிய நெருப்பில் வெந்து போன (இராவணன், கம்சன் முதலிய) வர்க்கும் உன்னை வந்து அடையலாகும் என்று ஆன்றோர் சொல்கின்றனர். அதனால் என் மாயனே! உலக நாதனே! வேறு கதியில்லை. உன்னையே புகலாகக் கொண்ட எளியேன் செய்த குற்றத்தைக் குணமாகவே நீ கொண்டருள வேண்டும்.

## எத்தினால் இடர்க் கடல் கிடத்தி?

"அத்தனாகி அன்னையாகி ஆளும் எம்பிரானுமாய்
ஒத்(து) ஒவ்வாத பல் பிறப்பு ஒழித்து நம்மை ஆட்கொள்வான்.
முத்தனார் முகுந்தனார் புகுந்து நம்முள் மேவினார்
எத்தினால் இடர்க் கடல் கிடத்தி? ஏழை நெஞ்சமே!"
திருச்சந்த விருத்தம், 115.

முக்தியை அளிப்பவனும் முகுந்தனுமான பகவான் (ஆத்மா சம்பந்தப்பட்ட மட்டில்) ஒன்றையொன்று ஒத்தும் (உடல் சம்பந்தப்பட்ட மட்டில்) ஒன்றுக்கொன்று ஒவ்வாமலும் இருக்கிற நமது பல பிறப்புக்களைப் போக்கி, நம்மை அடிமைகொள்ளுகைக்காக (நன்மையைச் செய்யும்) தகப்பனுமாகி, (பிரியத்தைச் செய்யும்) தாயுமாகி, அடிமை கொள்ளுதற்குரிய நாதனுமாகிப், பிரவேசித்து நம்மிடத்திலே விரும்பிப் பொருந்தினார். அறிவிலியான நெஞ்சமே! நீ எதனால் துக்கக் கடலில் கிடக்கிறாய்?

ஒத்து ஒவ்வாத பல்பிறப்பு - வாழ்க்கைப் பயனைப் பெறுவதற்கு அநுகூலமானதும், அநுகூலமில்லாததும் ஆன இருவகைப்பட்ட பல பிறவிகள் என்பதுவாம்.

## தொண்டரடிப் பொடியாழ்வார்

சோழநாட்டில் உள்ள திருமண்டங்குடியில் கி.பி. 8ஆம் நூற்றாண்டு பராபவ ஆண்டில், அந்தணர் வருணத்தில், மார்கழித் திங்களில், கேட்டை நட்சத்திரத்தில் ஸ்ரீவன மாலையின் அம்சராய் தொண்டரடிப் பொடியாழ்வார் அவதரித் தருளினார். இவர் இயற்பெயர் விப்ரநாராயணர் என்பது. இவர் திருநந்தவனக் கைங்கரியத்தை மேற்கொண்டு திருவரங்கத்தில் வாழ்ந்து வந்தவர். தேவதேவி என்ற ஒரு தேவதாசியினால் மயக்குண்டு, அவள் வலையில் சிக்கிக் கிடந்த இவர், திருவரங்க நாதனுடைய திருவருளால் அம்மயக்கம் தெளிந்து உய்வு பெற்றவர். ஸ்ரீவைணவர்களுடைய பாததூளியாய், அவர் கட்கு கீழ்ப்படிந்து அடிமை பூண்டு ஒழுகி, அதனால் "தொண்டரடிப் பொடி" என்ற திருநாமம் பெற்றவர். இவர் அருளிச் செய்த பிரபந்தங்கள் திருமாலை, திருப்பள்ளியெழுச்சி என்னும் இரண்டுமாம்.

மாலை என்னும் பெயரில் திவ்வியப் பிரபந்தத்தில் உள்ள இலக்கிய வகை "திருமாலை" ஆகும். இது முதலாயிரத்து ஏழாம் பிரபந்தமாக இடம்பெறுகிறது. இவ்வாழ்வார் பாடிய "திருப்பள்ளியெழுச்சி" முதலாயிரத்தில் எட்டாம் பிரபந்தமாக அமைகின்றது. இவ்விரண்டு நூல்களிலும் உள்ள மொத்தப் பாசுரங்கள் 55 மட்டுமே. இங்ஙனம் குறைந்த அளவே பாடிய தொண்டரடிப் பொடியாழ்வார் "மாலை", "திருப்பள்ளியெழுச்சி" என்னும் இரண்டு வகையான இலக்கியங்களைப் படைத்திருப்பது குறிப்பிடத்தக்கச் செய்தியாகும். மாலை என்பது பலவகைப் பிரபந்தங்களில் ஒன்று. ஒரு பொருளைக் குறித்துப் பலவகைச் செய்யுள் பாடுவதே மாலை என்னும் பிரபந்தமாகும். ஒரு வகை மலரால், அல்லது பலவகை மலரால் தொடுக்கப்படுவது மாலை. அதுவே உவமையாகு பெயராய் ஒரு வகை செய்யுள்

அல்லது பலவகைச் செய்யுள்களால் தொகுக்கப்படும் பிரபந்தத்தை உணர்த்தி நிற்கின்றது.

பூமாலை, பாமாலை ஆகிய இரண்டிலும் உள்ள தொடுத்தல் என்னும் வினையொப்புமை நோக்கத் தக்கது. பழந்தமிழ் மாலைகளைப் பார்த்தோமானால் திருக்குறளுக்குச் சிறப்புப் பாயிரமாகப் புலவர் பல்லோர் அதனைப் புகழ்ந்து பாடிய பாடல்களின் தொகுப்பிற்கு "திருவள்ளுவ மாலை" என்னும் பெயரும் உண்டு. காரைக்கால் அம்மையாரின் "திருவிரட்டை மணிமாலை", அப்பரின் "திருஅங்கமாலை" தொண்டரடிப் பொடியாழ்வாரின் "திருமாலை" போல்வன பக்திக் காலத்தில் தோன்றிய மாலைகள் ஆகும். முறையே பதினோராந் திருமுறை, திருநாவுக்கரசர் தேவாரம், நாலாயிர திவ்விய பிரபந்தம் முதலியவற்றுள் மாலை என்னும் நூல்கள் காணப்படுகின்றன. பதினோராந் திருமுறையில் மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை (கபில தேவர்) கோயில் நாண்மணி மாலை, (பட்டினத்தார்) விநாயகர் திருவிரட்டை மணிமாலை, திருநாவுக்கரசு தேவர் திருவேகாதச மாலை (நம்பியாண்டார் நம்பி) போன்ற மாலைகளும் உள்ளன. நாற்பது பிரபந்தங்களின் தொகுப்பாகிய பதினோராம் திருமுறையைப் பிரபந்தமாலை என்று வழங்குவது உண்டு. தனி நூல்களேயன்றிப் பல நூல்களின் தொகுப்பும் மாலை எனப் பெயர் பெற்றதற்கு இது சான்றாகிறது.

திருமாலை என்பதில் திரு என்னும் சொல் சிறப்புப் பொருளைக் காட்டி மாலைக்கு அடைமொழியாய் நின்றது. இப்பிரபந்தம் அரங்கம் மேய அண்ணலைப்பற்றிப் பாடுவதால் "திருமாலை" எனச் சிறப்பித்துக் கூறப்பட்டது. இந்நூல் வடமொழியில் அமைந்த "விஷ்ணுதர்மம்" என்னும் நூலின் சாரம் என்பர். "திருமாலை யறியாதவன் பெருமாளையறியான்" என வழங்கும் பழமொழியாலும் இதன் சிறப்பினை அறியலாம்.

மாலை தொடுப்போர் மணமிக்க மாலைகளுக்கிடையே மணமற்ற இலைகளை வைத்துத் தொடுப்பதும் உண்டு. அதுபோலவே ஆழ்வாரும் தமது குறைகளை (15-17, 21, 25-35) இடையிடையே கூறிச் செல்கின்றார். எனவே இப்பிரபந்தம் மாலை எனப் பெயர் பெற்றது பொருத்தமாகும்.

ஏனைய ஆழ்வார்களின் பாசுரங்களிற் போலக் கண்ணனைப்பற்றிய தொன்மக் கதைகள் இங்கு இடம் பெறவில்லை. நாயகி பாவத்திலும் ஆழ்வார் பாடவில்லை. அவற்றைச் சுட்டிக்காட்டும் ஜெர்மானிய அறிஞரான பிரெட் ஹெலம் ஹார்டி, "திருமாலை - ஆழ்வாரது தனிப்பட்ட பக்தி அனுபவத்தின் வெளிப்பாடு ஆகும்" என்கிறார். இக்கருத்து ஏற்புடையதாகவே தோன்றுகிறது.

"மாலை என்பது தோத்திர ரூபமான பிரபந்தம்" என்பர் வை. மு. கோபால கிருஷ்ணமாச்சாரியர். பொதுவாக பக்தி இலக்கியங்களில் தோத்திரம் முக்கியமான ஒரு கூறு எனினும், திருமாலையில் அதுவே மேலோங்கியிருத்தல் காணலாம். "தோத்திரம் அல்லது பிரார்த்தனை" என்பது கடவுளிடம் உலகியல் பயன்களை வேண்டிச் செய்யும் விண்ணப்பம் அன்று! அது கடவுளின் புகழ் பாடி ஏத்துதற்குரிய செயலாகும். கடவுளோடு ஒன்றி உறவு கொள்ளுதற்குரிய செயலும் அதுவே. நம்பிக்கை மிகுந்து உலகியல் பயன்களைக் கருதாத காலத்தில் இத்தகைய பிரார்த்தனையே பெரிதும் மேற்கொள்ளப்பட்டது என்பர் அறிஞர். இக்கருத்துக்கு ஏற்பவே திருமாலைப் பாடல்கள் தோத்திரத் தன்மை பெற்றுத் திகழ்கின்றன.

தொண்டரடிப் பொடியாழ்வார் அருளிய "திருப்பள்ளி யெழுச்சி" முதலாயிரத்தில் எட்டாம் பிரபந்தமாக அமைகின்றது. திருவரங்கப்பெருமானைத் துயிலுணர்த்தும்

வகையில் ஆழ்வார் இந்நூலினைப் பாடியிருக்கிறார். பள்ளி யெழுச்சி என்பதற்குத் "துயிலெழுப்புகை" என்பது பொருள். அங்ஙனம் துயிலெழுப்பும் பொருண்மையில் பாடப்பட்ட பிரபந்தத்துக்கும் அதுவே பெயராயிற்று. கடவுளைத் துயில் எழுப்பும் பாடல்களைக் கொண்ட பிரபந்தங்கள், "திரு" என்னும் அடை சேர்த்துத் திருப்பள்ளியெழுச்சி எனப்பட்டன. மாணிக்கவாசகர் இறைவனைத் துயிலுணர்த்திய பாட்டும் "திருப்பள்ளி யெழுச்சி" எனும் இப்பெயராலேயே வழங்கி வருகின்றது.

பள்ளியெழுச்சிக்கான தோற்றுவாயினைத் தொல் காப்பியத்தில் காணலாம். தொல்காப்பியர் காலத்தில், பழந்தமிழகத்தில் அரசர் உறங்கப்புகு முன்னரும், விழித் தெழும் போதும் பாடும் வழக்கம் இருந்திருக்கிறது. உறங்கத் தொடங்கும் முன் பாடுதலை, "கண் படை கண்ணிய கண் படை நிலை" எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. உறங்கிய அரசன் விழித்தெழுகையில் அரசனைப் புகழ்ந்து பாடும் பாட்டு "துயிலெடைநிலை" எனப்பட்டது. அங்ஙனம் புகழ்ந்து பாடுவோர் "சூதர்" எனப்பட்டனர்.

"தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்
சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்"

என்று தொல்காப்பியம் இதனைச் சுட்டுகின்றது.

"அடுதிறல் மன்னரை அருளிய எழுகெனத்
தொடுகழல் மன்னனைத் துயிலெடுப் பின்று"

என்று ஐயனாரிதம் கூறுவார்.

இங்ஙனம் அரசர்களுக்குப் பாடி வந்த "துயிலெடை நிலையே" பக்தி நெறிக் காலத்தில் கடவுளைத் துயிலெழுப்பும் பாடலாக மாறியது. அப்போது, துயிலெடை நிலை என்ற பெயரும் மாறி, திருப்பள்ளியெழுச்சி என்ற புதுப்பெயரும்

அமைந்துவிட்டது. உள்ளடக்கத்தில் ஏற்பட்ட மாற்றம் பெயர் மாற்றத்துக்கும் வழி வகுத்தது. இந்நிலையில் அரசருக்குப் பாடும் துயிலெடைநிலைப் பாட்டில் சாயலை நாம் திருப்பாவையில் காணலாம்.

வைகறையில் நந்தகோபனின் அரண்மனைக்குச் சென்ற இடைக்குலப் பெண்கள் வாயிற்காப்போனின் இசைவு பெற்று நந்தகோபன், அசோதை, கண்ணபிரான், பலதேவன் ஆகியோரைத் துயில் எழுப்புகின்றனர்.

"எம்பெருமான் நந்தகோபாலா எழுந்திராய்"
"எம்பெருமாட்டி அசோதாய் அறிவுறாய்"
"உம்பர்கோ மானே உறங்காது எழுந்திராய்"
"...... செல்வா பலதேவா உம்பியும் நீயும் உறங்கேல்"
(தி. பா. 17)

மேற்குறித்த நால்வரையும் முறையே துயிலெழுப்புமாறு வேண்டுகின்றனர். துயில் எழுப்பும் பாங்கில் அமைந்த விளிகளும் இசை இனிமையும் இங்கு கருதத் தக்கன. உலகியலில் ஒருவரைத் துயில் எழுப்பும் பொருட்டுப் பாடி வந்த நாட்டுப் பாடல் ஒன்றின் இலக்கிய வடிவம்போல இவ்வடிகள் அமைந்துள்ளன.

ஆண்டாள் என்னும் அடியாரால் "கண்ணன் என்னும் கருந்தெய்வம்" (நா. தி. மொ. 13-1) துயிலெழுப்புமாறு பாடப்பெற்றது எனக் கொண்டால் இவை பள்ளியெழுச்சிப் பாடல்கள் ஆகும். எனவே இன்று நம்மால் அறியப்படாத தொடக்க நிலையில் அமைந்திருந்த துயிலெடை நிலைப் பாடல்களும், அவற்றின் வழியாக எழுந்த ஆண்டாளின் மேற்குறித்த பாசுரங்களும் தொண்டரடிப்பொடியாழ்வாரின் "திருப்பள்ளியெழுச்சி"க்கு முன்னோடியாகலாம். ஆண்டாள்,

இவ்வாழ்வார்க்குக் காலத்தால் முற்பட்டவர் என்னும் கருத்தும் இதனை வலியுறுத்தும்.

தொண்டரடிப் பொடியாழ்வார், மாணிக்கவாசகர் பாடல்கள் ஒரேவகையான யாப்பு உடையவை. அவற்றுள் தத்துவம், சமயம், சன்மார்க்கம் போன்ற உட்பொருள் வேறு படினும் அமைப்பு முறையும் இசையும் மாறுபடவில்லை.

பள்ளியெழுச்சி என்னும் இலக்கியவகை பக்தி இலக்கியக் காலத்தில் மட்டும் தோன்றி மறைந்ததன்று. இருபதாம் நூற்றாண்டளவும் இவ்விலக்கிய வகையின் தொடர்ச்சியைக் காண முடிகிறது. இறைவனுக்குப் பள்ளி யெழுச்சிப் பாடுதல் என்ற முறையில் மட்டுமன்றி, குருவுக்கும், மொழிக்கும், நாட்டுக்கும் பள்ளியெழுச்சி பாடுதலாக அது மாற்றமும் வளர்ச்சியும் கண்டிருக்கிறது.

ஆழ்வார், மாணிக்கவாசகர் காலத்துக்குப் பின்னர் தத்துவராயர், சிதம்பரசுவாமிகள், சிவப்பிரகாசர், கந்தப்பையர், இராமலிங்கசுவாமிகள், முகவைக்கண்ண முருகனார் போன்றோர் இவ்விலக்கிய வகையை வளர்த்து வந்துள்ளனர். சிவானந்ததேசிக சுவாமியின் சற்குரு திருப்பள்ளியெழுச்சி இறைவனுக்குரிய இலக்கிய வகையைக் குருவுக்கும் ஆக்குகிறது. இந்த நூற்றாண்டில் பாரதியார் பாடிய "பாரதமாதா திருப்பள்ளியெழுச்சி" தேசிய உணர்ச்சியை உள்ளடக்கமாகப் பெற்ற புதுமையுடையது. இந்த நூற்றாண்டிலும் பழைய மரபுப்படி அமைந்த பள்ளியெழுச்சியும் உண்டு. கு.பாலசுந்தர முதலியாரின், "திருவேங்கடவன் திருப்பள்ளியெழுச்சி" அவ்வாறு அமைந்தது என்பர். அ.கி. பரந்தாமனார், அ.கி. நாயுடு போன்றோர் "தமிழ்த்தாய் திருப்பள்ளியெழுச்சி" பாடியுள்ளனர்.

ஆகவே மாணிக்கவாசகருக்கு முற்பட்ட காலம் தொடங்கிப் பல நூற்றாண்டுகளால் இன்றுவரை பலருடைய

உள்ளங்களைக் கவரும் கலை வடிவு வாய்ந்த இலக்கிய வகையாய்த் திருப்பள்ளியெழுச்சி விளங்கி வருதல் புலனாகிறது. இவ்வளவு பழமையுடையதாய், பல நூற்றாண்டுகளாக மாறாத ஒரே வகையான அமைப்பு உடையதாய் விளங்கும் இலக்கிய வடிவம் வேறொன்றனைக் காண்பது அரிது என்று பள்ளியெழுச்சியின் தனித் தன்மையைச் சுட்டிக் காட்டுகிறார் மு. வரதராசனார்.

எதிர்காலத்தும் இவ்விலக்கிய வகைக்கு வாழ்வு உண்டு எனலாம். ஊக்கமிழந்து ஒடுங்கிக் கிடக்கும் ஒரு சமுதாயத்தை விழித்தெழச் செய்யக் கவிஞன் ஒருவன் புதிய பள்ளியெழுச்சி பாடலாம். "எழுமின் விழிமின்" எனும் போக்கில் அமைவனவும் பள்ளியெழுச்சி சாயல் உடையனவே. எனவே பழைய யாப்பு முறையில் அன்றி, பழைய பள்ளியெழுச்சியின் மாற்று வடிவமாகக் கொள்ளவும் இடமிருக்கிறது.

அரங்கனுக்குத் திருப்பள்ளியெழுச்சி அருளிச் செய்தவர் தொண்டரடிப்பொடியாழ்வார் ஒருவரே. அனைவரும் பல்லாண்டுகளாகத் திருப்பள்ளியெழுச்சி என்று கூறுவது இதையே. எல்லா ஸன்னதிகளிலும் சேவிக்கப்படும் திருப்பள்ளியெழுச்சி இது ஒன்றே.

**தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிய**
**திருமாலைத் தனியன்கள்**
**திருவரங்கப்பெருமாளரையர் அருளிச்செய்தது**

"மற்றொன்றும் வேண்டா மனமே! மதிளரங்கன்,
கற்றினம் மேய்த்த கழலிணைக்கீழ், · உற்ற
திருமாலை பாடும் சீர்த் தொண்டரடிப்பொடியெம்
பெருமானை, எப்பொழுதும் பேசு".

### நாமம் கற்ற ஆவலிப்பு

"காவலில் புலனை வைத்துக் கலிதன்னைக் கடக்கப்பாய்ந்து
நாவலிட்டு (உ)ழி தருகின்றோம் நமன் தமர் தலைகள் மீதே
மூவுலகு உண்டு (உ) மிழ்ந்த முதல்வ! நின் நாமம் கற்ற
ஆவலிப் புடமை கண்டாய் அரங்கமா நகர் உளானே".

-திருமாலை, 1.

மூன்று உலகங்களையும் (பிரளய காலத்திலே) திருவயிற்றிலே வைத்துக் காத்து (பின்பு) வெளியில் கொண்டுவந்த முதற் காரணனே! உன்னுடைய திருநாமத்தை (ஆசாரியன் மூலம்) கற்ற செருக்கினாலே ஐந்து இந்திரியங்களையும் அடக்கி, பாபங்களை முற்றிலும் போக்கி, யமன் தலையிலும் அவன் தூதர்கள் தலையிலும் (வெற்றி தோன்ற) ஆரவாரம் செய்து திரிகிறோம் கண்டாய்.

### அச்சுவை பெறினும் வேண்டேன்

"பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா! அமரர் ஏறே! ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகர் உளானே".

திருமாலை, 2.

திருவரங்கம் என்னும் நகரில் கோயில் கொண்டு அருள்பவனே! பெரிய மரகத மலையையொத்த திருமேனியையும், பவளத்தையொத்த வாயையும், தாமரை மலரை ஒத்த சிவந்த திருக்கண்களையுடையவனாய், சரணம் அடைந்தவரை நழுவ விடாதவனே! நித்தியர்களுக்கு அதிபதியே! இடையவர்களுக்கு இனியவனே! என்று இப்படி அனுபவிக்கும் ஆனந்தத்தைவிட்டு நான் போய் இந்திர லோகத்தை ஆளுகிற அந்தச் சுகத்தைப் பெற்றாலும் விரும்ப மாட்டேன்.

### ஆதலால் பிறவி வேண்டேன்

"வேத நூல் பிராயம் நூறு மனிசர்தாம் புகுவரேனும்
பாதியும் உறங்கிப் போகும் நின்றதில் பதினை யாண்டு
பேதைபா லகன் அதாகும் பிணிபசி மூப்புத் துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமா நர் உளானே".

- திருமாலை, 3.

மனிதர்கள், வேதங்கள் சொல்லுகிறபடியே நூறு வயதளவும் இருப்பார்களேயானாலும், அதில் பாதி (ஐம்பது வருடங்கள்) தூக்கத்திலே கழிந்துவிடும். மிகுந்திருக்கும் ஐம்பது வருடங்களில் (தாயின் அறிவுரைப்படி நடக்கும்) குழந்தைப் பருவமும், பால்ய பருவமும், சிற்றின்பப் பிரியனாய்த் திரியும் யௌவனப் பருவமும், வியாதியும், பசியும், கிழத்தனமும், துன்பமாகக் கழிந்துவிடும். ஆகையாலே நான் மானிட ஜன்மத்தை ஒருபொழுதும் விரும்ப மாட்டேன் அரங்க நகரில் கோயில் கொண்டிருப்பவனே!

### உடல் எனக்கு உருகுமாலோ

"குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி
கடல்நிறக் கடவுள் எந்தை அரவணைத் துயிலுமா கண்டு
உடல் எனக்கு (உ)ருகும் மாலோ என் செய்கேன் உலகத்தீரே!"

- திருமாலை, 19.

மேற்கே திருமுடியை வைத்தருளி, கிழக்கே திருவடி நீட்டி, வடக்கே (உள்ளவர்களுக்குப் பின் அழகைக் காட்டியருளி), (ஸ்ரீவிபீஷணுக்காக) தெற்கே உள்ள இலங்கையைப் பார்த்துக் கொண்டு, கடல் நீரை ஒத்த (நீல) நிறத்தையுடைய ஈசனாகிய என் அரங்கன் திரு அனந்தாழ்வான் ஆகிற படுக்கையிலே நித்திரை செய்கிற அழகைக் கண்டு என் உடலானது (பக்திப் பரவசத்தால்) உருகுகின்றது.

உலகத்தில் உள்ளவர்களே! என்ன செய்யப் போகிறேன், நான்?

**என் உள்ளே சிரித்திட்டேனே...**

"உள்ளத்தே உறையும் மாலை உள்ளுவான்
உணர்வொன்றில்லா
கள்ளத்தேன் நானும் தொண்டாய்த் தொண்டுக்கே
கோலம் பூண்டு
உள்ளுவார் உள்ளிற்றெல்லாம் உடன் இருந்து
அறிதி என்று
வெள்கிப் போய் என்னுள்ளே நான் வில(வு) அறச்
சிரித்திட்டேனே".

- திருமாலை, 34.

நெஞ்சிலே எப்போதும் வாழ்கின்ற திருமாலை இவன் நம்முள்ளே இருக்கிறான் என்பதை அறியாத தன்மையை (பிறர் காணாதபடி) மறைத்து வைத்து உன் அடிமைப்போலாகி, அடியார்களைப்போல் வெளிவேடம் தரித்து, நினைப்பார் தம் மனத்தே நினைப்பவற்றை எல்லாம் கூட இருந்து அறிவாய் என்று, எனக்குள்ளே நான் வெட்கப்பட்டு, என் விலா ஒடியும்படிச் சிரித்தேன்.

ஒப்பிடுக:-

"கள்ளனேன் கள்ளத் தொண்டாய்க் காலத்தைக் கழித்துப்
போக்கித்
தெள்ளியேன் ஆகி நின்று தேடினேன் நாடிக் கண்டேன்
உள்குவார் உள்கிற்(று) எல்லாம் உடன் இருந்து அறிதி என்று
வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட்டேனே"

திருநாவுக்கரசர்

## வழிபட அருளினாய்

"பழுது இலா ஒழுகல் ஆற்றுப் பலசதுப் பேதிமார்கள்.
இழிகுலத் தவர்களேலும் எம்மடி யார்கள் ஆகில்
தொழுமின்நீர் கொடுமின் கொண்மின் என்றுநின் னோடும் ஒக்க
வழிபட அருளி னாய்போல் மதிள்திரு அரங்கத் தானே".
- திருமாலை, 42.

குற்றமற்ற வம்சப் பரம்பரையில் வந்தவர்களான நான்கு வேதங்களையும் ஓதினவர்களே! நம் அடியார்கள் ஆவார்களானால், அவர்கள் தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்களேயாகிலும் நீங்கள் அவர்களைத் தொழுங்கள். உங்களுக்குத் தெரிந்த உயர்ந்த ஞானத்தை அவர்களுக்கு உபதேசியுங்கள். அவர்களிடம் உள்ள ஞானத்தைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்று இப்படி அருளிச் செய்தும், நீயாகவே கருதி அவர்களை வணங்கும்படிச் செய்தருளினாய் மதில் சூழ்ந்த திருவரங்கத்தில் கோயில் கொண்டு அருள்பவனே.

லோகசாரங்க முனிவராகிய அந்தணரை நோக்கி அரங்கநாதன், "நீர் பஞ்சம குலத்தவரான திருப்பாணாழ் வாரை உமது தோளில் ஏற்றிக் கொண்டு இங்கு வாரும்" என்று கட்டளையிட்டது இப்பாட்டில் குறிக்கப்பட்டுள்ளது.

"சங்கநிதி ... கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே!" - அப்பர்

## திருவரங்கப் பெருமாளரையர் அருளியது இருவிகற்ப நேரிசை வெண்பா

"மண்டங் குடியென்பர் மாமறையோர், மன்னியசீர்த்
தொண்டரடிப்பொடி தொன்னகரம், - வண்டு
திணர்த்த வயல் தென்னரங்கத் தம்மானைப், பள்ளி
உணர்த்தும் பிரானுதித்த வூர்".

## தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச் செய்த திருப்பள்ளியெழுச்சி

அரங்கனுக்குத் திருப்பள்ளியெழுச்சி அருளிச் செய்தவர் தொண்டரடிப்பொடியாழ்வார் ஒருவரே. அனைவரும் பல்லாண்டுகளாகத் திருப்பள்ளியெழுச்சி என்று கூறுவது இதையே. எல்லா சன்னிதிகளிலும் சேவிக்கப்படும் திருப்பள்ளியெழுச்சி இது ஒன்றே.

### பள்ளி எழுந்தருளாயே...

"சுடர்ஒளி பரந்தன சூழ்திசை யெல்லாம்
துன்னிய தாரகை மின்ஒளி சுருங்கி
படர்ஒளி பசுத்தனன் பனிமதி இவனோ
பாய் இருள் அகன்றது பைம்பொழில் கமுகின்
மடலிடைக் கீறிவண் பாளைகள் நாற
வைகறை கூர்ந்தது மாருதம் இதுவோ
அடல்ஒளி திகழ்தரு திகிரியந் தடக்கை
அரங்கத்(து) அம்மா! பள்ளியெழுந்தருளாயே!"
- திருப்பள்ளியெழுச்சி, 3.

பார்த்த இடம் எங்கும் சூரியனுடைய கிரணங்கள் பரந்தன, ஆகாயத்தில் நெருங்கி இருந்த நட்சத்திரங்களின் மினுக்கும் ஒளியானது குறைவு பட்டதுமன்றி, படரும் ஒளியையும் உடைய சந்திரனும் ஒளி மங்கினான். பரந்த இருட்டானது நீங்கிற்று. விடியற்காலக் காற்றானது பசுமையான சோலைகளில் உள்ள பாக்கு மரங்களின் மடலைக் கீறி வளப்பமுள்ள பாலைகளின் மணத்தை முகந்து கொண்டு வீசிற்று. வலிமையுடைய பிரகாசம் விளங்குகிற சக்கரத்தைத் தரித்த அழகிய நீண்ட திருக்கைகளையுடைய அரங்கச் செல்வனே! பள்ளியெழுந்தருள வேண்டும்.

# திருப்பாணாழ்வார்

"ஊரெனப்படுவது உறையூர்" எனப் போற்றிப் புகழும் சோழர் குல வேந்தர்களின் தலைநகராகும் உறந்தையம்பதி சரித்திரத்தில் பெருமைபடப் பேசப் பட்டுள்ளது. செம்பியர்களின் ஆட்சியில் சிறப்புற்றுப் பெருமை பெற்றிலங்கிய திருவுறையூரில் செந்நெற் பயிரில் (கி. பி. 8-ஆம் நூற்றாண்டு) துன்மதி ஆண்டு கார்த்திகை மாதம் தேய்பிறையில் பொருந்திய துவிதியை திதியில் புதன்கிழமையன்று உரோகிணி நட்சத்திரத்தில் திருமாலின் ஸ்ரீவத்ஸத்தின் அமிசராய் திருப்பாணாழ்வார் அவதரித் தருளினார்.

பிறவாது பிறந்த அக்குழந்தையை அவ்வூரில் பஞ்சம ஜாதியில் பாணர் குலத்துப் பிறந்தானொருவன் நெற்பயிர் பக்கல் வந்தபொழுது கண்டான். கண்ட அளவில் பெற்றோர் யாவர் எனச் சுற்றுமுற்றும் பார்த்து, ஒருவரும் இன்மையால் தனது நல்வினைப் பயன் காரணமாக நாராயணன் தனக்கு அருளிச்செய்த செயலோ என மகிழ்ந்து எடுத்துச் சென்று மனைவியிடம் அளித்தான். மனைவியும் மலடு தீர்ந்த தன்மையால் பசுவின் பால் முதலிய தூய உணவினைக் கொடுத்துக் குழந்தையைக் காத்து வந்தாள். திருமாலருளால் பிறந்த இவர் தாம் புகுந்த குலத்துக்கு ஏற்ற யாழ்ப் பாடலில் தேர்ச்சி பெற்று, அதனால் பாணர் குலத்தில் சிறப்புற்று இலங்கினமையால், யாவரும் பாணர் குலத் தலைவர் என்பது தோன்ற திருப்பாணர் என இவரை அழைத்தனர்.

திருப்பாணர் பின் அரங்கநாதருக்குப் பாடல் திருத்தொண்டு செய்யும் எண்ணத்தினராய்ப் புறப்பட்டு, தாம் தாழ்ந்த குலத்தில் வளர்ந்தவராதலால் திருவரங்கத்தில் அடியிடத் துணியாமல், தென் திருக்காவிரியின்

தென்கரையில் திருமுகத்துறைக்கெதிரில் யாழுங்கையுமாக நின்று கொண்டு, திருவரங்கனைத் திசை நோக்கித் தொழுதார். பின்பு திருவரங்கநாதப் பெருமானைக் குறித்துப் பல பாடல்களைக் கண்டமும் கருவியுமொக்க, கேட்பவர் செவியும் மனமும் குளிர, எம்பெருமான் திருவுள்ளம் மகிழப் பாடினார். இங்ஙனம் நாள்தோறும் வைகறையில் திருப்பாணர் திருவரங்கனைக் குறித்துப் பல பாடல்களைத் தம்மை மறந்து பக்தியால் பரவசப்பட்டுப் பாடிக் கொண்டிருப்பார்.

ஒரு நாள் திருவரங்கநாதனை ஆராதிப்பவராகிய உலோகசாரங்க முனிவர் என்பவர் காவிரியில் நீராடித் திருமண் அணிந்து, துளசிமணி மாலையையும், தாமரை மணிமாலையையும் கழுத்தில் அணிந்துகொண்டு, திருவரங்க நாதன் திருமஞ்சனத்திற்கு நீர்கொண்டு செல்லப் பொற் குடத்தைக் கையிலேந்தி அங்கு வந்தார். அவர் திருப்பாணரைக் கண்டு கைத்தட்டிக் கூவி, அப்பாற் செல் என்று கூவினார். திருப்பாணர் இவ்வுலகத் தொடர்பை மறந்திருந்ததனால் அம்மொழியைச் செவியுறாமலேயே வாளா நின்றிட்டார். இதனால் கோபமுற்ற முனிவர் ஒரு கல்லை எடுத்து வீசினார். அது பாண் பெருமாளுடைய நெற்றியில் பட்டுக் குருதி பெருகச் செய்தது. திருப்பாணரும் தெளிவுற்று, முனிவர் எதிர்ப்புறம் சேய்மையில் நிற்பதைக் கண்டு, மனமும் உடலும் நடுங்கி அவ்விடத்தினின்று சென்று விட்டார்.

பிறகு உலோகசாரங்க முனிவர் பொற்குடத்தில் காவிரியின் நீரை முகந்துகொண்டு, திருவரங்கநாதன் முன் சென்றார். அப்பொழுது திருவரங்கநாதன் நெற்றியினின்றும் செந்நீர் பெருகி வந்து கொண்டிருந்தது. இதனை முனிவரும் அர்ச்சகரும் கோயில் அதிகாரிகளுக்கு அறிவிக்க, அவர்களும் இவ்வுற்பாதச் செய்தியை அரசனுக்குக் கூற, அமைச்சர்

களுடன் அரசன் ஆராய்ந்தும் காரணம் காணாது, சுவாமி திருவடியிலே பாரத்தை வைத்திட்டான்.

அதற்கு முன்பாக ஒரு நாள் பிராட்டி பெருமானை நோக்கி, பல காலமாக நம்மைப் பாடி வருகிற பாணன் புறம்பே நிற்கப் பார்த்திருக்கலாமோ? என்று விண்ணப்பம் செய்ய, எம்பெருமான் விரைவிலே அவரைத் தம் அருகில் அழைத்துக் கொள்வதாக வாக்களித்திருந்தனன். அங்ஙனம் வாக்களித்த வண்ணமே திருப்பாணருக்கு அருள்புரிந்து அவருடைய அன்பையும் செயலையும் பெருமையுடன் உலகத்தில் விளங்கச் செய்யவும், கடவுளுடைய திருவருளுக்கு அன்பே முதன்மையானதாகும் என்னும் அருமறையினுடைய உண்மையை இவ்வுலகத்தினர் பலரும் அறியவும் திருவரங்கேசனார் திருவுள்ளங் கொண்டார். அந்நாள் இரவில் உலோகசாரங்கருடைய கனவில் தோன்றி இறைவர், முனிவ! நீ சென்று எம்முடைய நல்லன்பராகிய திருப்பாணரை இழிகுலத்தவர் எனக் கருதாமல் உன்னுடைய தோள்மீது எழுந்தருளச் செய்து, எம் திருமுன்பு கொண்டு வருவாயாக என்று கட்டளையிட்டருளினார்.

உலோகசாரங்க முனிவர் வைகறையின் கண் விழித்து எழுந்து, கனவிற் கடவுளிட்ட கட்டளையை நினைந்து மிக்க வியப்பை அடைந்தார். அரங்கரது ஆணையை நிறைவேற்ற எண்ணி அமலநாதரிடம் அன்புடைப் பெரியார் பலரைத் தம்முடன் வரவழைத்துக் கொண்டு பாண்பெருமாள் வழக்கமாக நின்று திருப்பாடல் தொண்டு புரியும் இடத்தை நாடிக் களிப்புடன் நடந்தார்.

தொண்டரெல்லாம் தொழுதேத்தும் தன்மையரான பாண்பெருமாளையணுகிய உலோகசாரங்கர், தலைமேற் கைகளைக் கூப்பி, மும்முறை வலம் வந்து, மண்ணிற் கிடந்து பாணருடைய திருவடிகளை வணங்கியெழுந்தார்.

பின்பு திருப்பாணாழ்வாரை நோக்கி, தேவரீரைத் தம்மிடத்துக்கு எழுந்தருளப் பண்ணுவித்துக் கொண்டு வரவேண்டுமென்று நம் பெருமாள் அடியேனுக்குக் கட்டளையிட்டருளினார் என்று சொன்னார். பாணர் தலைவர் நீசனான அடியேன் திருவரங்கப்பெருநகரை மிதித்திடுவேனோ? என்று தம் சாதி இழிவைச் சொல்லி மறுத்திட்டார்.

அப்பால் முனிவர், "தேவரீர் மிதித்திட வேண்டா, பெருமாள் பெரிய திருவடியின் திருத்தோளில் எழுந்தருளுதல் போலத் தேவரீர் அடியேனது தோளில் ஏறியருளும்" என்று பிரார்த்தித்தார். தங்கள் பாதத்திலே தலையை வைத்து வணங்குவதற்குரிய யான் இக்கொடுந்தொழிலைச் செய்யேன் என்று பாணர் கூறினார். பின்னர் முனிவர் கடவுளின் கட்டளையைக் கூறி வற்புறுத்தத் திருப்பாணர் தம்முடைய உயிரையும், உடலையும் இறைவரது அடியிணைக்கே உரியனவாக்கி மெய்மறந்து நின்றார். உலோகசாரங்கர் முனிவர் பாணநாதரைத் தோளில் ஏற்றிக்கொண்டு சென்று அரங்கநாதனது திருமுன்பே இறக்கி விட்டார்.

உடனே திருப்பாணாழ்வார் இறைவனது திருவடி முதல் தலைவரையிலும் உள்ள அழகிய அவயங்களெல்லா வற்றையும் ஒன்றன் பின் ஒன்றாகக் கண் குளிரப் பார்த்து மனம் உருகினார். எல்லா அவயங்களிலும் ஈடுபட்டுச் சேவித்துக் களித்தார். மணவாளருடைய அழகிற் சிறந்த எல்லா அவயங்களிடமும், தாம் நுகர்ந்த அழகையும் இன்பத்தையும் உலகத்தார் எல்லாரும் நுகர்ந்து இன்புற்று உய்யத் திருவுள்ளம் கொண்டார். அரங்கரது திருமேனியழகைச் சிறந்த பத்துப் பாட்டுக்களால் பாடினார். இந்த அருளிச்செயலுக்கு அமலனாதிபிரான் என்று பெயர்.

பின்னர் மக்கள் பலரும் காணத் திருப்பாணாழ்வார் பெரிய பெருமாளுடைய திருமலரடிகளை அணுகிக் கீழே விழுந்து வணங்கி, அத்திருவடிகளினிடமே மறைந்து பேரின்ப வீட்டை அடைந்தார். திருப்பாணாழ்வாரைத் தோளில் தூக்கித் தம் திருமுன்பு கொணர்ந்தமையைக் கருதி அரங்கநாதர், அந்த உலோகசாரங்கரையும் ஆட்கொண்டு, என்றும் அழிதலில்லாத பேரின்ப வீட்டை அவருக்கும் அளித்தருளினார்.

திருப்பாணாழ்வாரால் பாடப்பெற்ற தலங்கள்: திருவரங்கம், திருவேங்கடம், பரமபதமம் முதலியனவாகும்.

## அமலனாதிபிரான் தனியன்கள்

### திருமலை நம்பிகள் அருளியது
### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

"காட்டவே கண்ட பாத
கமலம்நல் லாடை யுந்தி,
தேட்டரு முதர பந்தம்
திருமார்பு கண்டம் செவ்வாய்,
வாட்டமில் கண்கள் மேனி
முனியேறித் தனிபு குந்து,
பாட்டினால் கண்டு வாழும்
பாணர்தாள் பரவி னோமே".

## அமலனாதிபிரான்

திருப்பாணாழ்வார் பண்ணிசைப் பாடுவதில் வல்லவர். பாட்டும் அரங்கனைப் பற்றியதாகவே இருக்கும். இவர் அருளிய இப்பத்துப் பாடல்களும் பழமறையின் பொருள்கள்.

## அடியேனை ஆட்கொண்டதே

"பாரமாய பழவினை பற்றறுத்தென்னைத் தன்னுள்
வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி என்னுள் புகுந்தான்
கோரமாதவம் செய்தனன்கொல் அறியேன் அரங்கத்தம்மான் திரு
ஆர மார்பு அதன்றோ அடியேனை ஆட்கொண்டதே".

அமலனாதிபிரான், 5

தாங்குதற்கரிய நெடுங்காலம் செய்த பாவங்களை வேரறுத்து, (பாவங்களுக்கு உறைவிடமான) என்னைத் தன் விஷயத்தில் அன்பு உண்டாகும்படி வைத்தான். அதனுடன் நிற்காமல் என் மனத்துக்குள்ளும் புகுந்தான். இப்படி அவன் புகுவதற்குக் காரணமாகக் கடுமையான பெரிய தவங்களை நான் செய்தேனோ? எனக்குத் தெரியாது. திருவரங்கத்தில் வளர்ந்து அருளுகிற அழகிய மணவாளனுடைய இலக்குமி எழுந்தருளியுள்ள முத்து மாலை அமைந்த அந்தத் திருமார்பு அல்லவா அடியேனை ஆட்கொண்டது.

# மதுரகவியாழ்வார்

பைந்தமிழும் பல வளமும் அமைந்து விளங்கும் பாண்டிய நாட்டில் குறைவற அமைந்ததாகிய திருக்கோளூர் என்னும் ஊர் ஒன்று உளது. அவ்வூரில் வாழ்வோர் யாவரும் கல்வியறிவிலும் செல்வத்திலும் சிறந்து விளங்கி, நல்லொழுக்கத்தினின்றும் பிறழாதவர்களாக இருந்தார்கள்.

இத்தகைய சிறப்போடு வாழ்ந்த மக்களுள் முன் குடுமிச்சோழிய அந்தணர் மரபினரும் இருந்தனர். அம்மரபில் அதனை விளக்கும் மணிவிளக்காய் (கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில்) ஈசுவர ஆண்டு சித்திரைத் திங்கள் வளர்பிறையில் பொருந்திய சதுர்த்தசி திதியில் வெள்ளிக்கிழமையன்று சித்திரை நட்சத்திரத்தில் ஸ்ரீவைந்தேயாம்சராய் மதுரகவியாழ்வார் திருவவதரித் தருளினார்.

இவர் தமிழ் மொழியிலும் வடமொழியிலும் சிறந்த புலமை பெற்று, சிறந்த ஒழுக்கம், திருமாலிடம் அன்பு, அருள் முதலியன தம்மிடம் வாய்க்கப்பெற்றவராய் இருந்தார். தமிழ் மொழியில் மதுரமான கவிதைகளைப் பாடிய காரணம்பற்றி இவருக்கு மதுரகவிராயர் என்னும் பெயர் அமைந்துள்ளது.

மதுரகவியாழ்வார், புண்ணிய பதிகள் என வழங்கும் அயோத்தி, மதுரை, கயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்னும் ஏழையும் சென்று சேவித்து, மறுபடியும் அயோத்தியை அடைந்து, அங்கு அர்ச்சாவதார வடிவாய் எழுந்தருளியிருக்கின்ற இராமபிரானையும், பிராட்டியையும் சேவித்துத் திருவடி தொழுது கொண்டு அங்கு வசிக்கலானார்.

ஒரு நாள் இரவில் இவர் திருக்கோளூர் எம்பெருமானைத் திசைநோக்கித் தொழக் கருதித் தென்திசையில் கண் செலுத்தியபோது, அப்பாகத்திலே வானுற வளர்ந்து விளங்கிய ஒரு திவ்யமான பேரொளியைக் கண்ணுற்று அது இன்னதென்று அறியாமல், கிராம நகரங்கள் வேகின்றனவோ? காட்டுத் தீயோ? என ஐயுற்றுத் திகைத்து நின்றார். இங்ஙனமே அடுத்து இரண்டு மூன்று நாட்களிலும் கண்டு, அச்சுடர்த்திரள் முச்சுடரொளியிலும் மிக்கு விளங்கியதனால் பெருவியப்புற்ற அவர், அதனைக் காணும் அவாவினராய்ப் புறப்பட்டு அச்சோதியைக் குறியாகக் கொண்டு நெடுவழி கடந்து, நடந்து திருக்குருகூரை அடைந்தார். அவ்வொளி பொலிந்து நின்ற பிரான் திருக்கோயிலுக்குட்புக்கு மறைந்துவிட்டது. மதுரகவியார் அவ்வூரிலுள்ளாரைப் பார்த்து இங்கு ஏதேனும் சிறந்த செய்தி உண்டா? என வினவ, அவர்கள் ஆழ்வாரது வரலாற்றைக் கூறினார்கள். மதுரகவியார் அவ்வரலாற்றைக் கேட்டுக் கோயிலினுள்ளே சென்று, முன் நம்மாழ்வார் வரலாற்றிற் கூறியபடி, ஆழ்வார் அருளைப் பெற்று, அவர் அருளிச் செயல்களைப் பட்டோலையில் எழுதினார். மதுரகவியாழ்வாருக்கு நம்மாழ்வார் பாசுரங்களில் பற்று ஏற்பட்டது. மதுரகவியாழ்வார் நம்மாழ்வாரையே பதினாறு பாசுரங்களால் ஆனப் பாமாலை ஒன்றாற் பாடினார். அப்பாமாலையின் முதற்பா "கண்ணிநுண் சிறுத்தாம்பு" எனத் தொடங்குவதால் அதற்குக் "கண்ணிநுண் சிறுத்தாம்பு" எனப் பெயராயிற்று. நம்மாழ்வார் திருநாட்டை அலங்கரித்த பின்னர் அவர் அர்ச்சை வடிவினரான ஆழ்வாரின் உருவத்தைத் திருக்குருகூர் நகரில் எழுந்தருளச் செய்தார்.

மதுரகவியார் ஆழ்வாருக்கு நித்தியம் நைமித்திக விழாக்களையெல்லாம் சிறப்புற நடத்தி வந்தார். அத்திருவிழாக்களில் "வேதந்தமிழ் செய்த மாறர் வந்தார்", "திருமாலுக்குரிய தெய்வப் புலவர் வந்தார்", "அளவிலா

ஞானத்து ஆரியர் வந்தார்" என்பவை முதலாகப் பல விருதுகளைக் கூறித் திருச்சின்னம் முழங்கினார். இதனைக் கேள்வியேற்ற மதுரைச் சங்கத்தாரது மாணாக்கர்கள் எதிரிட்டு, உங்கள் ஆழ்வார் பக்தரேயன்றிப் பகவானல்லரே! இவர் சங்கமேறிய புலவரோ? இவர் பாடிய திருவாய்மொழி சங்கமேறிய செய்யுளன்று. இவரை வேதந்தமிழ் செய்தவரென்று புகழ்வது தகுதியோ? என்று பலவாறு பேசி விருதுகளைத் தடுத்திட்டனர். அதற்கு மதுரகவிகள் மனம் பொறாமல் வருந்தி, இவர்கட்கு கர்வபங்கமாகும்படி தேவரீர் செய்தருள வேண்டும் என்று துதித்தார். சடகோபர் ஒரு கிழப் பார்ப்பனர் வடிவத்தோடு வந்து திருவாய்மொழியில் "கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர்! எண்ணுந் திருநாமம் திண்ணம் நாரணமே" என்ற பாசுரத்தின் முதலடியை ஒரு சிற்றேட்டில் எழுதிக்கொண்டு சென்று, சங்கப் பலகையின்கண் வைத்தால் அவர்கள் செருக்கு அடங்கும் என்று கூறியருளினார். அங்ஙனமே மதுரகவியாழ்வார் கண்ணன் கழலிணையை எழுதிய ஏட்டை எடுத்துப்போய் வைத்த அளவில், சங்கப் புலவர்கள் ஏறியிருந்த சங்கப்பலகை பொற்றாமரைப் பொய்கையில் மூழ்கி, தன் மேலிருந்த புலவர்களையெல்லாம் நீரில் வீழ்த்தி, உடனே மேலெழுந்து தன்மீது வைத்த சிறு முறியை மாத்திரம் ஏந்திக்கொண்டு மிதந்தது.

அப்பொழுது நீரில் விழுந்து அமிழ்ந்து தடுமாறி எழுந்து மேலே மெல்ல நீந்திக் கரை சேர்ந்த சங்கப் புலவர்கள் வேதம், வேதத்தின் முடிவுப் பொருள்கள் முதலான யாவற்றையும் பிறரால் கற்பிக்கப்படாமல் தாமேயுணர்ந்த நம்மாழ்வாரது இறைமை எழில் பொருந்திய வித்தகத்திறனைத் தெரிந்து கொண்டு செருக்கொழிந்தனர். அங்ஙனம் செருக்கொழிந்த சங்கப் புலவர்கள் நம்மாழ்வாரது பெருமையைக் குறித்துத் தோத்திரமாகத் தனித் தனியாக ஒவ்வொரு பாடல் பாடி வெளியிட்டனர்.

அங்ஙனம் வெளியிட்டதில் அப்பாடல்கள் யாவும்,

"சேமங் குருகையோ செய்யதிருப் பாற்கடலோ
நாமம் பராங்குசமோ நாரணமோ - தாமந்
துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்கும்
உளவோ பெரும உமக்கு"

என்ற இப்பாடல் வடிவாகச் சிறிதும் வேற்றுமையின்றி ஒற்றுமைப்பட்டிருக்க, இதுபற்றி அவர்கள் அனைவரும், "இது என்ன விந்தை! இது என்ன விந்தை!" என வியப்புக்கடலில் ஆழ்ந்து, பின்னர் இத்தகைய ஒற்றுமைத் தன்மை நேர்தற்கு ஆழ்வாரது தெய்வத்திருவருளே காரணமாகும் என்று எண்ணினர்.

பிறகு சங்கத்துச் சான்றோர்களின் தலைவராக விளங்கும் புலவர், ஆழ்வாரைப் புன்மொழிகளால் இழித்துக் குற்றத்தைப் போக்கிக் கொள்ள வேண்டி,

"ஈயா டுவதோ கருடற் கெதிரே
இரவிக் கெதிர்மின் மினியா டுவதோ
நாயா டுவதோ உறுவெம் புலிமுன்
நரியா டுவதோ நரகே சரிமுன்
பேயா டுவதோ அழகூர் வசிமுன்
பெருமான் வகுளாபரணன் அருள் கூர்ந்து
ஓவா துரையா பிரமா மறையின்
ஒருசொற் பெறுமோ உலகிற் கவியே"

என்ற பாடலைப் பாடினார்.

இங்ஙனம் நம்மாழ்வாரது புலமையின் திறத்தை முற்றும் உணர்ந்த சங்கப் புலவர்கள் ஆழ்வாரது அருந்தமிழ்ப்

பாவாகிய மருந்தினால் தம்முடைய செருக்காகிய நோய் நீங்கப் பெற்று, மதுரகவியாழ்வாருடன் சேர்ந்து விருது கூறல் முதலியவற்றை முன்னிலும் சிறப்பாக நடத்தி வந்தனர்.

மதுரகவியாழ்வார் தமது ஆசிரியராகிய நம்மாழ்வாருக்குப் பலவகை விழாக்களையும் ஆராதனை களையும் நடத்தி வந்ததோடு, ஆழ்வாரது அருந்தமிழ் மறைகளின் பொருள்களைப் பலரும் உணரும்படி உரைத்துச் சிலகாலம் எழுந்தருளியிருந்து, பின்பு சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத்தான பேரின்பப் பெருவீட்டை அடைந்தார்.

### கண்ணி நுண்சிறுத்தாம்புத் தனியன்கள்

### ஸ்ரீமந் நாதமுனிகள் அருளிச் செய்தவை
### இருவிகற்ப நேரிசை வெண்பா

"வேறொன்றும் நானறியேன் வேதம் தமிழ் செய்த,
மாறன் சடகோபன் வண்குருகூர் • ஏறு, எங்கள்
வாழ்வாமென் றேத்தும் மதுரகவி யார் எம்மை
ஆழ்வார் அவரே யரண்".

### மதுரகவியாழ்வார் அருளிச்செய்த
### கண்ணி நுண்சிறுத்தாம்பு

மதுர கவிகள் நம்மாழ்வாரைத் தவிர வேறு எவரையும் அறியாதவர். அவரது பேரருள் பெற்ற உண்மைச் சீடர். உலகில் ஆசாரிய பக்தி எப்படி இருக்க வேண்டும் என்பதையும், ஆசாரியன் செய்யும் பேருபகாரத்தையும் எடுத்துக் கூறியவர். பகவானால் செய்ய முடியாததையும் ஆசாரியர் செய்து காட்டக் கூடியவர் என்பதை அறுதி இட்டவர். மதுரகவியின் பாடல்கள் மதுரமானவை.

நம்மாழ்வாரின் பெருமைகளை மதுரகவிகள் அருளிய கண்ணி நுண்சிறுத்தாம்பைக் கொண்டே அறிய முடியும். மதுரகவிகள் தம் பிரபந்தத்தில் நம்மாழ்வாரை ஒன்பது முறை நம்பி என்று கூறியுள்ளார். திருவாய்மொழி சேவிக்கும் முன்பு கண்ணி நுண்சிறுத்தாம்பு சேவிப்பது வழக்கம். நாதமுனிகளுக்கு நம்மாழ்வாரைப் பெற்றுக் கொடுத்ததும் கண்ணி நுண்சிறுத்தாம்பே.

## அமுது ஊறும் என் நாவுக்கே

"கண்ணிநுண்சிறுத் தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெரு மாயன் என் அப்பனில்
நண்ணித் தென் குருகூர் நம்பி என்றக்கால்
அண்ணிக்கும் அமுது ஊறும் என் நாவுக்கே".
--கண்ணி நுண்சிறுத்தாம்பு. 1

பல பிணையல்களையுடைய, நுட்பமான சிறிய கயிற்றினால் (யசோதை பிராட்டிக்குத் தான்) கட்டுப்படுவதற்கு இசைந்த பெரிய மாயனான, எனக்கு நாதனான ஸ்ரீ கிருஷ்ணன் பெயரைச் சொல்வதைக் காட்டிலும், மனப்பூர்வமாக, தென்திசையிலே உள்ள குருகூர் என்னும் திருப்பதியில் அவதரித்து ஞானம் பக்திகளில் பூர்ணரான நம்மாழ்வார் திருநாமத்தைச் சொன்னால் நினைத்த நெஞ்சம் தித்திக்கிறது நாக்கிலும், அமுதம் சுரக்கிறது.

நமது ஆசாரியராகிய நம்மாழ்வாரையே பகவானாகக் கருதி மதுரகவியாழ்வார் வழிபட்டு முக்தியடைந்தவ ராகையால் இவ்வாறு கூறினார். இவரது பாடல்கள் பத்தும் நம்மாழ்வார்மீதே பாடப்பட்டுள்ளன.

## முதலாயிரம் ஸம்பூர்ணம்

# திருமங்கையாழ்வார்

காவிரி நதி பாய்தலின் காரணமாகப் பயிர் வளம் சிறந்து விளங்கும் சோழ நாட்டின் பல உட்பிரிவுகளில் திருவாலி நாடு என்பதும் ஒன்று ஆகும். அந்நாடு தன்னகத்தே பல ஊர்களை உடையது. அவற்றுள் சிறப்புற்றிலங்குவது திருக்குறையலூர் என்னும் ஊராகும். இத்திருக்குறையலூரில் சதுர்த்த வருணத்தில் ஆலிநாடுடையாருக்கும் அவரது மனைவியாகிய வல்லித்திரு என்னும் அம்மைக்கும், (கி.பி. 8-ஆம் நூற்றாண்டு) நள ஆண்டு கார்த்திகைத் திங்கள் பௌர்ணமி திதியில் வியாழக்கிழமையன்று கிருத்திகை நட்சத்திரத்தில் சார்ங்கமென்னும் வில்லின் அம்சராய் அவதரித்தருளினார் திருமங்கையாழ்வார்.

இவர்க்குப் பிள்ளைப் பருவத்தில் நீலநிறத்தார் என்று பெற்றோர் திருப்பெயர் இட்டார்கள். இவர் சோழ அரசனிடம் படைத்தலைவனாக இருந்து, பல வெற்றிகளைத் தேடித் தந்து, சோழ நாட்டின் மேன்மையை எங்கும் விளங்கும்படிச் செய்தார். அதனால் சோழ அரசன் இவர்பால் அன்பு மிக்கவனாகி, இவருக்கு ஆலிநாட்டை அளித்து, அதற்குத் திருமங்கை என்னும் பதியைத் தலைநகராக அமைத்து, இவரைத் தன் சேனைத் தலைவர்களுள் முதன்மையான வராகச் செய்து, பரகாலன் என்னும் வீரப் பட்டத்தையும் அளித்தான். இவர்க்கு நீர்மேல்நடப்பான், நிழலில் ஒதுங்கு வான், சாயை பிடிப்பான், தாளூதுவான், தோலா வழக்கன், உயரத்தொங்குவான் முதலான அமைச்சர்களும் இருந்தார்கள். இவர் ஏறும் குதிரைக்கு ஆடல்மா என்று பெயர்.

இங்ஙனம் பரகாலர் இருக்கையில், சுமங்கலை என்னும் தேவமாது தோழியருடன் இமயமலையின் வளங்களைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு வருகையில், திருமாலின் அம்சராகிய கபில முனிவர் சீடர்களுக்குப் பாடம்

சொல்லிக் கொண்டிருந்தமையைக் கண்டார். சீடர்களுள் ஒருவர் விகார வடிவினராக இருக்க அவரைக் கண்ட சுமங்கலை ஏளனம் செய்தார். அதனால் சினமுற்ற கபில முனிவர் சுமங்கலையை நோக்கி, நீ பூமியிற் சென்று மானிடப் பெண்ணாகப் பிறந்து, ஒரு மனிதனுடைய மனைவியாய் வாழக் கடவாய் என்று சபித்தார். அப்பெண் அஞ்சி நடுங்கி மன்னிக்குமாறு வேண்டினாள். கபில முனிவர், அவளை நோக்கி, "பரகாலரது மனைவியாகி, அவரது போர்க்கள வேள்வியைப் போக்கித் திருமாலின் நல்லடியாராகத் திருத்தி, அவருடன் வாழ்ந்திருந்து, அதனால் உன் குறை தீர்ந்து, பொன்னாட்டை அடைவாயாக" என்று அருள் புரிந்தார். அவ்வண்ணமே சுமங்கலையும் திருவாலி நாட்டிலுள்ள திருநாங்கூர்ப் பொய்கையில் தோழியருடன் நீராடிக் குமுதமலர் கொய்து கொண்டிருந்தாள். தோழியர் இவளை விடுத்துப் போனார்கள். சுமங்கலை குமுத மலரையே தனக்குத் தாயாகக் கொண்டு அதனருகில் குழந்தையாய்த் தோன்றினாள்.

திருமாலிடம் நீங்காத அன்புடையவரும், திருநாங் கூரில் வாழ்பவருமாகிய ஒரு மருத்துவர் பொய்கைக்கு நீராடற் பொருட்டு வர, குழந்தையைக் கண்டு, யாருமின்மையால் இல்லம் எடுத்துச் சென்று மனைவியிடம் மகிழ்ச்சியுடன் அளிக்க இருவரும் அக்குழந்தைக்கு, குமுதவல்லி என்னும் பெயரிட்டுத் தம் குழந்தையே போன்று செல்வமுடன் வளர்ப்பாராயினர். குமுதவல்லியாரும் திருமணப் பருவத்தை அடைந்தார். இச்செய்தி கேட்ட பரகாலர் என்னும் பட்டப் பெயருடன் மங்கை நகரத்தை ஆட்சி புரிந்த திருமங்கை மன்னர், திருவாங்கூரிலுள்ள மருத்துவர் இல்லத்திற்கு எழுந் தருளி, அவரது வளர்ப்புப் பெண்ணாகிய குமுதவல்லியைத் தனக்குத் திருமணம் செய்து தரவேண்டும் என்று விண்ணப் பித்தார். அவ்வளவில் குமுதவல்லியார், "திருவிலச்சினையும், திருநாமமும் உள்ளவர்க்கு அன்றி மற்றவர்க்கு என்னைப் பேச விடேன்" என்றாள். அங்ஙனமே திருமங்கை மன்னரும்

திருநறையூரில் நம்பி திருமுன்பே சென்று திருவிலச்சினை தரித்து, பன்னிரண்டு திருநாமங்களையும் சார்த்திக்கொண்டு வந்தார். பின்பு குமுதவல்லியார் திருமங்கை மன்னராகிய ஆழ்வாரைப் பார்த்து, "ஓராண்டுக் காலம் நாள்தோறும் ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுது செய்வித்து, அவர் களுடைய சீபாத தீர்த்தமும் தளிகைப் பிரசாதமும் அங்கீகரித்து நிறைவேற்றினால் உம்மைப் பதியாக அடைவேன்" என்று பணித்தாள். ஆழ்வாரும் அதற்கு இசைந்து, உறுதி மொழி அளிக்க, குமுதவல்லியாரும் அவரை மணம் செய்து கொள்ள இசைந்தார். அதன்பின் குமுதவல்லியாரை அவள் பெற்றோர் நீலநிறத்தாராகிய ஆழ்வாருக்கு நாடும் ஊரும் அறிய நல்லதொரு நாளில் திருமணம் செய்தளித்தார்கள்.

குமுதவல்லியாரைத் தமது வாழக்கைத் துணைவி யாக்கிக் கொண்ட திருமங்கை மன்னராகிய ஆழ்வாரும், நாள் தோறும் ஆயிரத்தெட்டு வைஷ்ணவர்களுக்கு அன்னம் அளித்து ஆராதித்தார். இங்ஙனம் நாள்தோறும் நடைபெறும் நல்விருந்தினை நானிலத்தோர் நயம்படப் பலருக்கும் நவின்று வந்தனர். இச்செய்தி சோழ வேந்தனது செவிக்கும் எட்டியது. செம்பியன் செவிக்கு அமைச்சர்கள் ஆழ்வாரது இச் செய்தியுடன், மங்கை நகர மன்னரும் ஆழ்வாருமாகிய பரகாலரிடமிருந்து பகுதிப்பணம் வருவதில்லை என்ற செய்தியையும் அறிவித்தார்கள். உடனே சோழ வேந்தன் சினமுற்று தூதுவர் இருவரைப் பரகாலரிடம் பகுதிப் பணத்தை வாங்கி வர அரச முத்திரைத் தாங்கிய முடங்கலுடன் அனுப்பினார். தூதுவர்களை வரவேற்ற பரகாலர் பகுதிப்பணம் தருவதாக வாக்களித்து நாட்களைக் கடத்தினார். தூதுவர்கள் அப்பணத்தை விரைவில் தருமாறு வற்புறுத்தினார்கள். பரகாலராகிய ஆழ்வார் கோபம் கொண்டு தூதுவர்களை அடித்து விரட்டினார். அவர்களும் அஞ்சி அங்கிருந்து அகன்று, அரசனிடம் நடந்த நிகழ்ச்சியினை அறிவித்தார்கள். பரகாலர் தனது ஆணையை மீறினதற்காகக் கோபம் கொண்ட

சோழ வேந்தன் தனது சேனாதிபதியை அழைத்துப் படையுடன் சென்று பரகாலனைப் பிடித்து வருமாறு ஏவினான்.

சேனாதிபதியும் யானை, குதிரை, காலாட்களுடன் சென்று பரகாலரை வளைத்துப் பிடிக்கப் பார்க்க, மங்கை மன்னர் குதிரையின் மேலேறித் தன் படைகளுடன் வந்து ஆரவாரத்துடன் அவர்கள் மேல் விழுந்து, சேனைகளை எல்லாம் துண்டித்துத் துரத்தி ஓட்டிவிட்டார். சேனாதிபதியும் வெட்கப்பட்டு ஓடி அரசனிடம் தெரிவித்தான். சோழ வேந்தனும் அதனைக் கேட்டுக் கோபத்தினால் கண்கள் சிவந்து அப்பொழுதே, தனது சதுரங்கப் படை பலத்துடன் புறப்பட்டு வந்து, பரகாலரைப் பிடித்துக் கொள்ளும்படி தன் படை வீரர்களுக்கு உத்தரவிட்டான். படையினரும் அங்ஙனமே பரகாலரை வளைத்துக் கொள்ள பரகாலரும், முன்புபோல வாளும் கையுமாய் ஆடல்மா என்னும் தனது குதிரையின் மேல் புறப்பட்டு வந்து, ஆரவாரத்துடன் எதிர்த்து வந்த படையினரைப் பாழாக்கித் துரத்த, எல்லோரும் தோற்று ஓடிவந்து வேந்தன் மேல் விழுந்தார்கள். வேந்தனும் ஓடுகிறவர்களை மிக்க சினத்துடன் நிறுத்திப் பின்பு பரகாலரைப் படைகளின் நடுவே அகப்படும்படி வளைத்துக் கொண்டான்.

அவரும் வீரமுடையவராய்த் தமது கையில் இருந்த வாளின் பலத்தினால் படையை மதியாமல் போரிட்டு அழிக்கத் தொடங்கினார். அதனைக் கண்ணுற்ற அரசன் இவரைப் பார்த்து, நீர் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை. உமது வீரத்தினைக் கண்டு மிக்க மகிழ்ச்சியுற்றேன். நீர் செய்த தவறுகளையெல்லாம் மறந்தேன். அஞ்சாமல் என்னை நம்பி வருக என அழைக்க, பரகாலரும் அரசனிடம் பகைமை மறந்து சென்று நின்றார். அரசனும் பரகாலரது வீரத்தைப் பாராட்டினான். பின்பு அவரை நோக்கித் தரவேண்டிய பகுதிப்பணத்தை மட்டும் தரவேண்டும் எனவும், அதுவரையில் அமைச்சர்களின் பாதுகாவலில் அவரை இருக்க வேண்டும்

எனவும் பணித்தான். அமைச்சர்களும் பரகாலரைப் பிடித்துக் கொண்டு வந்து ஒரு தேவாலயத்தில் சிறை வைத்தனர்.

இப்படி, ஆழ்வார் அந்தக் கோயிலில் மூன்று நாட்கள் உணவின்றிச் சிறையிருந்தார். ஆழ்வாரது கனவில் பேரருளாளர் எழுந்தருளி, உமது பகுதிக்கு வேண்டிய பணம் நாம் தருகிறோம். காஞ்சிபுரத்திற்கு வாரும் என்று அருளினார். பரகாலரும் மறுநாள் அமைச்சர்களிடம் காஞ்சிபுரத்தில் பணம் புதைத்து வைக்கப்பட்டுள்ளது. அங்கு வந்தால் உங்கள் பகுதியைத் தருகிறேன் என்றார். அமைச்சர்கள் அதனை அரசிடம் விண்ணப்பிக்க, அரசரும் உடன்பட, தக்க காவலுடன் பரகாலரைக் காஞ்சிபுரத்திற்கு அனுப்பினார். காவலுடன் காஞ்சிபுரம் சென்ற பரகாலர், புதையல் பொருளைக் காணாமல் வருந்தினார். அவ்வளவில் கருணைத் தன்மை நிறைந்தவரான அருளாளப்பெருமாள், "அஞ்சாதே கொள்ளும்" என்று வேகவதி தீரத்தில் பணமிருக்கும் இடத்தைக் காட்டியருள, இவரும் அங்கே பணம் கண்டெடுத்து, கப்பப் பணத்தைக் கொடுத்து, மிகுதியை ஸ்ரீவைஷ்ணவருக்கு உணவளிப்பதற்காக வைத்துக் கொண்டார்.

அமைச்சர் நிகழ்ந்த செய்தியை அரசனுக்கு அறிவித்து அவர் முன்பாகக் கப்பப் பணத்தை வைத்தார். வேந்தன், காஞ்சிபுரம் வரதராஜபெருமாள் பணம் தந்த செய்தியைக் கேட்டு வியப்புற்று, இவர் மனிதர்களுள் மேம்பட்ட பெருமையுடையவர் என்று எண்ணி, அவர் அளித்த கப்பப் பணத்தைக் கருவூலத்தில் சேர்க்காமல் ஆழ்வாரை அழைத்து அவரிடமே அப்பணத்தையும், சிறப்பாக வெகுமதியையும் அளித்து அவற்றை உணவிடுதற்கு வைத்துக்கொள்ளுமாறு வேண்டி, ஆழ்வாரைப் பட்டினி போட்ட பாவத்தைப் போக்கிக் கொண்டான். ஆழ்வாரிடம் உள்ள பணம் யாவும் செலவழிந்ததும், வழிப்பறி செய்தேனும் பணம் சேர்த்து

ஸ்ரீவைணவர்களுக்கு உணவளிக்கும் எண்ணம்கொண்டு, வழிப்பறி செய்து பொருள் ஈட்டி வந்தார்.

இப்படி இருக்கையில், ஆழ்வார் வழிப்பறி செய்வதற்கு வேண்டும் பரிவாரத்தையும் கூட்டிக்கொண்டு, திருமணங்கொல்லையில் ஓர் அரச மரத்தில் பதுங்கியிருந்தார். ஸ்ரீவைணவர்களுக்காகவே வழிப்பறி செய்யும் பரகாலரது எண்ணத்தை உணர்ந்த பெருமாள் அவ்வழியில் மணவாளக் கோலம் கொண்டு மனைவியுடன், எல்லா அணிகலன் களையும் அணிந்து கொண்டு, பலவகைத் திரவியங்களுடன் பெருந்திரளோடு வந்துற்றார். இக் கூட்டத்தைக் கண்ட ஆழ்வார், மிக்க மகிழ்ச்சியுடன் வாளும் கையுமாய்ப் பரிவாரங்களுடன் இவரை வளைத்துக்கொண்டு, ஆடை அணிகலன்களையெல்லாம் கவர்ந்துகொண்டு, அறுகாழி மோதிரத்தைக் கடித்து வாங்க, எம்பெருமானும் இதைக் கண்டு நம் கலியனோ என்றருளிச்செய்தார். பின்பு இவை எல்லாவற்றையும் சுமை சுமையாகக் கட்டி எடுக்கப் பார்க்க அவை பெயர்க்கவும் பெயராதபடியால் மணவாளனான அந்தணனைப் பார்த்து நீ மந்திரவாதம் பண்ணினாய் என்று ஆழ்வார் வருந்தினார். அம்மந்திரத்தை உமக்குச் சொல் கிறோம் வாரும் என்று கழுத்தை அணைத்து எம்பெருமானும் எட்டு எழுத்தாய் மூன்று பதமான பெரிய திருமந்திரத்தை வலத்திருச் செவியில் செவிக்கின்பமாக உபதேசித்துக் காட்சி கொடுத்தார். இவ்வாழ்வார் தாம் அறிந்த திருமந்திரத்தையும், அதற்கு உள்ளீடான ஸ்ரீமந் நாராயணனுடைய வடிவமாகிய உருவத்தையும் அருள்மாரி என்னும்படி பெரிய பிராட்டி அருளாலே கண்டுகளித்தார்.

இதனால் உண்டான அன்பினாலும், வியப்பினாலும் அவர் பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்கிற ஆறு பிரபந்தங்களையும்

அருளிச் செய்தார். நம்மாழ்வார் அருளிச் செய்த நான்கு வேதங்களின் சாரமாகிய நான்கு பிரபந்தங்களுக்கும் ஆறு அங்கமாக ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்கிற நான்கு விதமான கவிகளால் அருளிச் செய்து சிறப்புற்றார். இதனால் பரகாலருக்கு "நாலுகவிப்பெருமாள்" என்னும் பட்டப்பெயர் வழங்கலாயிற்று.

முன்பு அவர் திருமொழி அருளிச்செய்த தலங்கள்தோறும் சென்று ஆங்காங்கு எழுந்தருளியுள்ள திருமாலை வணங்கிப் பின் சோழ மண்டலத்திற்கு எழுந்தருளினார். அவ்வமயம் ஆழ்வாரின் சீடர்கள், "நாலுகவிப் பெருமாள் வந்தார்! நம் கலியன் வந்தார்! ஆலிநாடர் வந்தார்! அருள்மாரி வந்தார்! கொங்குமலர்க் குழலியர் வேள் வந்தார்! மங்கை வேந்தர் வந்தார்! பரகாலர் வந்தார்!" என்று விருது கூறிச் சென்றனர். அங்கேயிருந்த சைவ சமயக் குரவர் நால்வருள் ஒருவரும், சீகாழிச் செல்வரும், ஞானப்பால் உண்டவரும் ஆகிய திருஞானசம்பந்தரின் சீடர்கள், திருமங்கை மன்னர் நாலுகவிப்பெருமாள் என்று விருது பெற்றவராய் விருதூதல் கூடாது என்று மறுக்க, பின்னர் ஆழ்வார் வெண்ணெயுண்ட கண்ணனை எழுந்தருளுவித்துக் கொண்டு ஞான சம்பந்தருடன் தர்க்கித்து, "ஒரு குறளாயிருநிலம்" என்ற திருமொழியை அருளிச்செய்து தம் பெருமையெல்லாம் புலப்படும்வண்ணம் பாடல் பாடினார்.

ஞானசம்பந்தர் உடனே ஆழ்வாரை நோக்கி, "உமக்கு நாலுகவிப்பெருமாள் என்னும் விருது பொருந்து மாதலின் விருதூதிக்கொண்டு செல்வீர்" என்று கூறினார்.

பின்பு திருமங்கை மன்னர் பல தலங்கள்தோறும் சென்று சேவித்துத் திருவரங்கம் வந்து, அங்குள்ள பெரிய பெருமாளுக்கும் அழகிய மணவாளருக்கும் விமானம்,

மண்டபம், திருத்தளிகை, திருமதில், கோபுரம் முதலிய தொண்டுகள் செய்ய விரும்பினார். அதற்காக நாகப்பட்டினம் சென்று பெரும் பொன்னை எடுத்து வந்தார். அதனை விற்றுப் பெற்ற பொருளைக் கொண்டு விமானம், மண்டபம் முதலியன கட்டுவித்து வருகையில், தொண்டரடிப் பொடியாழ்வார் பெரிய பெருமாளுக்குத் திருமாலை சேர்க்கின்ற இடம் நேர்ப்பட அதனைத் தவிர்த்து, ஒதுங்கியிருக்க திருமதிலைக் கட்டுவித்தார். இதனை அறிந்த தொண்டரடிப்பொடியாழ்வார் மலர் பறிக்கும் தமது ஆயுதத்திற்குத் திருமங்கை மன்னருடைய பெயர்களுள் ஒன்றான "அருள்மாரி" என்னும் பெயரிட்டு மகிழ்ந்தார்.

பின்னர் திருமங்கையாழ்வார் விமானம், மண்டபம், கோபுரம் முதலிய திருத்தொண்டுகளைச் செய்து உலகை வாழ்வித்தருளினார். இவரால் பாடப்பெற்ற தலங்கள்: திரு அட்டபுயகரம், திரு அரிமேய விண்ணகரம், திரு அன்பில், திரு ஆதனூர், திரு இந்தளூர், திரு உறையூர், திருவூரகம், திருக்கண்டியூர், திருக்கரம்பனூர், திருக்காரகம், திருக் கார்வனம், திருக்காவளம்பாடி, திருக்காழிச் சீராம விண்ணகரம், திருக்கூடலூர், திருச்சாளகிராமம், திருச்சிங்க வேள்குன்றம், திருச்சித்திரகூடம், திருச்சிறுபுலியூர், திருச்செம் பொன் செய்கோயில், திருத்தஞ்சை மாமணிக்கோயில், திருத் தலைச் சங்க நாண்மதியம், திருக்கடன்மல்லை, திருக்கடிகை, திருக்கண்ணங்குடி, திருக்கண்ணபுரம், திருக்கண்ணமங்கை, திருக்கள்வனூர், திருக்குடந்தை, திருக்குறுங்குடி, திருக் கூடல், திருக்கோட்டியூர், திருக்கோவலூர், திருநீர்மலை, திருவரங்கம், திருவல்லிக்கேணி, திருவிடவெந்தை, திருவிண்ணகர், திருவெக்கா, திருவேங்கடம், திருநீரகம் முதலியனவாம்.

பெரிய திருமொழித் தனியன்கள்
எம்பெருமானார் அருளிச் செய்தது
நேரிசை வெண்பா

"வாழி பரகாலன் வாழி கலிகன்றி,
வாழி குறையலூர் வாழ்வேந்தன்--வாழியரோ,
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள், மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்".

ஆழ்வான் அருளிச்செய்தது
கட்டளைக் கலித்துறை

"நெஞ்சுக் கிருள்கடி தீப மடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்ல வமுதம் தமிழநன் னூல்துறைகள்
அஞ்சுக் கிலக்கியம் ஆரண சாரம், பரமசமயப்
பஞ்சுக் கனலின் பொறிபர காலன் பனுவல்களே".

திருமங்கையாழ்வார் -- அருளிச்செய்த
வேதாந்தங்களின் சாரமாகிய
பெரிய திருமொழி
முதற்பத்து

**கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம்!**

"வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி இளையவர் தம்மோடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம". 1. 1. 1.

(கொள் கொம்பு இல்லாத கொடிபோல) வாடினேன், வாடி மனத்தில் வருந்தினேன். மிக்க துன்பத்திற்கு இருப்பிடமான உடலில் பிறந்து உடலோடு ஒன்றாயினேன், அவ்வாறு உடல்வழியே நின்று இளம் பெண்களோடு பெறக்கூடிய சிற்றின்பத்தையே கருதி அவர்களின் பின் ஓடினேன். இவ்வாறு ஓடிக் கடைந்தேறுவதற்குக் காரணமாகும் பொருளான பகவானது கிருபையாலே, ஞானம் என்கிற பெரிய பதவி அறிந்து நன்மை இது தீமை இது என ஆராய்ந்தேன். ஆராய்ந்து நான் நாராயணா என்கிற திருநாமத்தைக் கண்டுகொண்டேன்.

உலக வாழ்கையில் ஈடுபட்டிருந்த திருமங்கை யாழ்வார் தமக்கு அருள் புரியுமாறு வழிபோக்கனது வடிவம் கொண்டுவந்த பகவானை இன்னார் என்று அறியாது வழிப்பறி செய்யத் தொடங்க, அப்போது பகவான் தனது மெய்யுருவத்தைக் காட்டி நாராயண மந்திரத்தை உபதேசம் செய்தருளினார். இவ்வாறு ஞானம் பெற்றவுடன் ஆழ்வார் முதலிற் பாடிய பாசுரம் இது.

**உந்தன் சரணமே சரணம்!**

"ஊனிடைச் சுவர்வைத்(து) என்புதூண் நாட்டி
உரோமம் வேய்த்(து) ஒன்பது வாசல்
தானுடைக் குரம்பை பிரியும்போது (உ)ன்தன்
சரணமே சரணம் என்றிருந்தேன்
தேனுடைக் கமலத் திருவினுக்(கு) அரசே!
திரைகொள்மா நெடுங்கடல் கிடந்தாய்
நானுடைத் தவத்தால் திருவடி அடைந்தேன்
நைமிசா ரணியத்துள் எந்தாய்!" 1. 6. 9.

மாமிசத்தை இடைஇடையே சுவராக வைத்து, எலும்பைத் தூணாக நட்டு, மயிராலே மூடப்பட்டதாய், ஒன்பது துவாரங்களுடைய குடிசையாகிய இந்தச்

சரீரத்தைவிட்டு உயிர்பிரியும் காலத்தில், உன்னுடைய திருவடிகளே புகலாக வேண்டும் என்று நினைத் திருக்கிறேன். தேனையுடைய தாமரைப்பூவில் இருக்கிற இலக்குமி தேவிக்கு நாயகனே! அலைகளையுடைய பெரிய ஆழ்ந்த (திருப்பாற்) கடலில் பள்ளி கொண்டவனே! என்னுடைய தவத்தினால் தேவரீர் திருவடிகளை அடையப் பெற்றேன். நைமிசாரண்யம் என்னும் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் எமது தந்தையே!

**என்னை ஆளுடை அப்பனை...**

"வேதத்தை வேதத்தின் சுவைப்பயனை
விழுமிய முனிவர் விழுங்கும்
கேதுஇல்இன் கனியை நந்தனார் களிற்றைக்
குவலயத் தோர்தொழு தேத்தும்
ஆதியை அமுதை என்னை யாளுடை
அப்பனை ஒப்பவர் இல்லா
மாதர்கள் வாழும் மாடமா மயிலைத்
திருவல்லிக்கேணிக் கண்டேனே".

**2. 3. 2.**

வேத சொரூபியானவனும் வேதத்தின் சாரமும் பயனும் ஆனவனும், சிறந்த (சனகாதி) முனிவர்கள் அனுபவிக்கும் குற்றம் இல்லாத இனிய பழம்போல இருப்பவனும், ஸ்ரீ நந்தகோபர்க்கு யானைக் கன்றுபோல இனியனாக இருப்பவனும், பூமியில் உள்ளவர் தொழுது துதிக்கும் ஆதிகாரணனும், அமுதம் போன்ற இனிமை யுடையவனும், என்னை அடிமை கொண்ட அப்பனும் ஆனவனை, தமக்கு நிகரில்லாத பெண்கள் வாழும் மாடங்களையுடைய செல்வம் நிரம்பிய மயிலாப்பூரை அடுத்த திருவல்லிக்கேணியில் காணப்பெற்றேன்.

**வேண்டேன் மனை வாழ்க்கை!**

"வண்டு(உ)ணும் நறுமலர் இண்டைகொண்டு
பண்டைநம் வினைகெட என்(று) அடிமேல்
தொண்டரும் அமரரும் பணியநின்(று) அங்கு
அண்டமொ(டு) அகல் இடம் அளந்தவனே!
ஆண்டாய் ! உன்னைக் காண்பதோர் அருள்எனக்(கு)
அருளுதியேல்
வேண்டேன் மனை வாழ்க்கையை விண்ணகர்
மேயவனே!" 6. 1. 1.

வண்டுகள் குடிக்கும் (தேன் பொருந்திய) வாசனையுள்ள பூமாலையைக் கைக்கொண்டு, பழமையான எமது பாவங்களைப் போக்கி அருள வேண்டும் என்று அடியார்களும் தேவர்களும் வேண்டித் திருவடிகளில் பணிய (அவர்களுக்காக மகாபலியிடம் தானம் வாங்குபவனாக) நின்று, அந்த இடத்திலேயே மேல் உலகங்களையும் பரந்த பூமியையும் திருவடிகளால் அளந்தவனே! என்னை அடிமைகொண்டவனே! திருவிண்ணகர் என்னும் திருப்பதியில் பொருந்தி இருப்பவனே! உன்னைக் காணும்படி எனக்கு அருள்புரிவாயானால் இனி உலக வாழ்க்கையை நான் விரும்ப மாட்டேன்.

**எண்ணாத போதெல்லாம் இனியவாறே...**

"மண் நாடும் விண் நாடும்
வானவரும் தானவரும் மற்றும் எல்லாம்
உண்ணாத பெரு வெள்ளம்
உண்ணாமல் தான் விழுங்கி உய்யக் கொண்ட
கண்ணாளன் கண்ணமங்கை நகராளன்
கழல் சூடி அவனை உள்ளத்து
என்னாத மானிடத்தை
எண்ணாத போதெல்லாம் இனியவாறே".
11. 6. 7.

பூலோகமும் சுவர்க்க லோகமும் தேவர்களும் அசுரர்களும் மற்றும் உண்டான (பொருள்கள்) எல்லாம் (கூடி முயன்றாலும்) உண்ண (அடக்க) முடியாத பெருவெள்ளமானது (உலகத்தை) விழுங்காதபடி தன் திருவயிற்றிலே வைத்துக் காப்பாற்றியவனாய், மகா கிருபையுள்ளவனாய், திருக்கண்ண மங்கைக்கு அதிபதியான பகவானுடைய திருவடிகளை (தம் தலையிலே) அணிந்து, அந்த எம்பெருமானை நெஞ்சாலே எண்ணாத மனிதர்களை நினைக்காத காலமெல்லாம் (எனக்கு) இனிதாகச் செல்லும் காலமாம்.

## உன் சேவடி அன்றி நயவேன்...

"வேம்பின் புழு வேம்பன்றி உண்ணா(து) அடியேன்
நான் பின்னும் உன் சேவடி அன்றி நயவேன்
தேம்பல்இளந் திங்கள் சிறைவிடுத்(து) ஐவாய்ப்
பாம்பின் அணைப் பள்ளி கொண்டாய் பரஞ்சோதி" 11. 8. 7.

வேம்பில் பிறந்த புழுவானது வேம்பை யொழிய மற்றொன்றைத் தின்னாது, (அதுபோல) உன் அடியேன் ஆன நான் (நீ அருள் செய்யாவிட்டாலும்) உன்னுடைய திருவடிகளை ஒழிய (மற்றொன்றை) விரும்ப மாட்டேன். தேய்ந்து பருவம் நிரம்பாத சந்திரனுடைய (க்ஷயரோகமாகிய) சிறையை நீக்கி, ஐந்து தலை நாக அணையிலே பள்ளி கொண்டிருக்கும் பரஞ்சோதி ரூபனான சர்வேச்வரனே!

## திருமங்கையாழ்வார் அருளிச்செய்த திருக்குறுந்தாண்டகம்

தாண்டகம் என்பது (தமிழில்) ஒரு பிரபந்த வகை. இதில் குறுந்தாண்டகம் அறுசீர் கொண்ட அளவொத்த நான்கு அடிகளால் ஆகியது. இதில் ஒவ்வோர் அடிதோறும் மெய்யெழுத்துகள் உட்படப் பதினைந்து எழுத்துகளுக்குக் குறையாமலும், இருபத்தாறு எழுத்துகளுக்கு மேற்படாமலும் இருக்கும்.

நாலுகவிப் பெருமாள் எனப்படும் இவ்வாழ்வாரின் கவித் திறனையே இப்பிரபந்தம் வெளிப்படுத்துகிறது.

இவ்வாழ்வார் எனக்கு உய்யும் வகை பணியாய் என்றார், கதறினார். இவரது பக்தி பரமபக்தியாக முதிர்ந்திட வேண்டும் என்று பகவான் முகம் காட்டாமல் இருந்தான். ஆழ்வார் வேட்கை மீதூர்ந்து அவனை நெஞ்சால் நினைத்தும், வாயினால் பேசியும், தலையால் வணங்கியும் அவனருள் பெற முயல்கின்றார்.

கரும்பின் இன் சாறுபோல... ...இனிய வாறே

"இரும்(பு) அனன்று (உ)ண்ட நீர் போல்
எம்பெருமானுக்கு என்தன்
அரும் பெறல் அன்பு புக்கிட்(டு)
அடிமைபூண்டு (உ)ய்ந்து போனேன்
வரும் புயல் வண்ணனாரை மருவி
என் மனத்து வைத்து
கரும்பின் இன்சாறு போலப்
பருகினேற்கு இனியவாறே" திருக்குறுந்தாண்டகம், 7

இரும்பானது காய்ந்து (அக்காய்ச்சல் அடங்கும்படி) குடித்த தண்ணீர்போல பகவானிடம் என்னால் பெற அரிய அன்பைச் செலுத்தி அடிமையாக்கிக் கடைத்தேறி விட்டேன். (அன்றியும்) (அடியவர்கள் இருக்குமிடம் தேடி வருகிற) (மழைக்காலத்து) மேகம்போன்ற திரு நிறத்தை உடையவனைச் சேர்ந்த, என் மனத்தில் பொருந்த வைத்து, கரும்பினுடைய இனிய ரசம்போல் அனுபவிக்கப்பெற்ற எனக்கு இனிமையாக இருந்தபடி தான் என்ன!

**திருமங்கையாழ்வார் அருளிச் செய்த திருநெடுந்தாண்டகம்**

இது நெடுந்தாண்டகம். எண்சீர் கொண்டது. இப்பிரபந்தத்தில் முப்பது பாசுரங்கள் உள்ளன. முதல் பத்துப்

பாட்டுகள் எம்பெருமான் எல்லாம் தாமேயான தன்மையில் அமைந்தவை. இரண்டாம் பத்துப் பாட்டுகள் திருத்தாயார் வார்த்தையாக அமைந்தவை. மூன்றாம் பத்துப் பாட்டுகள் தோழியோடு பேசும் தலைமகள் வார்த்தையாக அமைந்தவை.

வாழலாம் மட நெஞ்சமே

"இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன் தன்னை
இரு நிலம் கால் தீ நீா விண் பூதம் ஐந்தாய்
செந்திறத்த தமிழ் ஓசை வட சொல் ஆகித்
திசை நான்குமாய்த் திங்கள் ஞாயிறு ஆகி
அந்தரத்தில் தேவர்க்கும் அறியலாகா
அந்தணனை அந்தணர் மாட்டு அந்தி வைத்த
மந்திரத்தை மந்திரத்தால் மறவாது என்றும்
வாழுதியேல் வாழலாம் மட நெஞ்சமே!"

--திருநெடுந்தாண்டகம், 4.

இந்திரனுக்கும் பிரம்மதேவனுக்கும் காரணனாய்ப் பெரிதான பூமி, காற்று, நெருப்பு, நீா, ஆகாசம் ஆகிய பஞ்ச பூதங்களுக்குள்ளும் இருப்பவனாய், (தன்னை உள்ளபடியே காட்டும்) செம்மையையுடைய தமிழ் வேதமான பிரபந்தங் களுமாய், வடமொழி வேதங்களுமாய் நான்கு திக்குகளிலும் உள்ள பொருள்களுக்குள்ளும் இருப்பவனாய், சந்திர சூரியர் களுக்கும் அந்தராத்மாவாய், (இப்படி) உள்ளே பரவி நிற்கு மிடத்தில், தேவர்களுக்கும் அறியக் கூடாத அழகிய அருளுடைய வனாய், பிராமணர்களுக்கு அந்தி வேளையில் ஓதுவதற்குரிய வேதமந்திரமாய் இருப்பவனைத் திருமந்திரத்தால் இடை விடாமல் அநுபவிப்பாயேயாகில் (எனக்குக்) கீழ்ப்படிந்து நடக்கும் மனமே! (நித்தியமாக) ஆனந்தத்தை அநுபவிக்கப் பெறுவாய்.

இரண்டாமாயிரம் (பெரிய திருமொழி) ஸம்பூர்ணம்.

# திவ்வியப் பிரபந்தம்: இயற்பா

## 1. பொய்கையாழ்வார்

தொண்டை நாட்டின் தலைநகரம் காஞ்சிபுரம். நகரங்களுள் சிறந்தது என்று அதனைப் பெரியோர்கள் போற்றிச் சிறப்பிப்பர். ஒரு தமிழ்ப் புலவர், இந்நிலவுலகத்தில் பொருந்தியுள்ள நாடுகள் எல்லாவற்றையும் வயல்கள் எனவும், தொண்டைநாடு வயல்களில் விளைந்த கரும்பு எனவும், தொண்டைநாட்டின் நகரங்கள் யாவும் கரும்பினது சாறு எனவும், அச்சாற்றைக் காய்ச்சிக் கொண்ட கற்கண்டே காஞ்சிமாநகரம் எனவும் சிறப்பித்தார். இத்தகைய பெருமை அமைந்த காஞ்சிபுரத்தில் திருவெக்கா என்னும் பதியில் உள்ள ஒரு பொய்கையில் பொற்றாமரை மலரில் (கி. பி. 7-ஆம் நூற்றாண்டில்) சித்தாத்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள் வளர்பிறையில் பொருந்திய அட்டமி திதியில் செவ்வாய்க் கிழமை திருவோண நட்சத்திரத்தில் திருமகள் நாதனாகிய திருமாலின் ஐந்து படைகளில் ஒன்றாகிய பாஞ்ச சன்னியம் என்று கூறப்படும் திருச்சங்கின் அமிசம் உடையவராய்ப் பொய்கை ஆழ்வார் அவதரித்து அருளினார்.

டாக்டர் மா. இராசமாணிக்கனார் அவர்களுடைய "ஆழ்வார்கள் கால ஆராய்ச்சி" முடிவையொட்டி ஆழ்வார்களின் தோற்றம் குறிப்பிடப் பெற்றுள்ளது.

இவர் திருமாலினிடத்து என்றும் ஆறாத அன்புடையவராய் விளங்கினார். அவர், "என் அன்பு திருமாலை அணுகு என்று சொல்கின்றது எனது நா அப்பெருமானுடைய ஆழியேந்திய தோளை ஏத்தச் சொல்கின்றது, என் செவிகள் அவ்விறைவனது புகழைக் கேள் என்கின்றன, என் கண்கள் பிறப்பு, இறப்பு இல்லாத இறைவனைக் காண் என்று சொல்கின்றன" என்பார்.

திருமாலினது குணங்களையும், செயற்கருஞ் செயல்களையும் சொல்லி வாழ்த்துவார், திருமாலின் திருவடிகளைப் போற்றா தார்க்கு வீட்டின்பம் இல்லை என்பார். இங்ஙனம் கண்டோர் அனைவரும் பாராட்டி வணங்கிப் போற்றும் உண்மை அறிவுச் செல்வராய்ப் பொய்கையார் விளங்கினார்.

இவரால் பாடப்பட்ட பெருமை பொருந்திய நகரங்கள் திருவரங்கம், திருவிண்ணகர், திருக்கோவலூர், திருவெக்கா, திருவேங்கடம், திருபாற்கடல், பரமபதம் முதலியனவாகும்.

திவ்வியப் பிரபந்தம்: இயற்பா

சூடினேன் சொல் மாலை

"வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காகச்--செய்ய
சுடர் ஆழியான் அடிக்கே சூட்டினேன் சொல்மாலை
இடர்ஆழி நீங்குகவே என்று". --முதல் திரு அந்தாதி, 1.

பூமியானது அகலாகவும், பெருகுகிற சமுத்திர மானது நெய்யாகவும், உஷ்ணமான கிரணங்களையுடைய சூரியன் தீபமாகவும் கொண்டு (இப்படிப் பகவானை அறிந்து) சிவந்த ஒளியையுடைய சக்கராயுதத்தை உடையவ னான (பகவானுடைய) திருவடிகளிலே துன்பமாகிற கடல் விலக வேண்டும் என்று (உத்தேசித்து) சொற்களால் ஆன (இந்த) மாலையைச் சூட்டினேன்.

உருவம் எரி கார் மேனி ஒன்று

"அரன் நாரணன் நாமம் ஆன்விடை புள்ஊர்தி
உரைநூல் மறைஉறையும் கோயில்--வரைநீர்
கருமம் அழிப்(பு) அளிப்புக் கையதுவேல் நேமி
உருவம்எரி கார்மேனி ஒன்று".
--முதல் திரு அந்தாதி, 5.

பெயர் (ஒருவனுக்கு) அரன் என்பது, (மற்றொருவனுக்கு) நாராயணன். வாகனம் (ஒருவனுக்கு) காளை, (மற்றொருவனுக்கு) கருடன் என்கிற பக்ஷி. பிரமாணம் (ஒருவன் விஷயத்தில்) ஆகமம், (மற்றொருவன் விஷயத்தில்) வேதம். வசிக்குமிடம் (ஒருவனுக்குக் கைலாச) மலை, (மற்றொருவனுக்குக்) கடல். தொழில் (ஒருவனுக்கு) அழிப்பு, (மற்றவனுக்குப்) பாதுகாப்பு. கையில் இருக்கும் ஆயுதம் (ஒருவனுக்கு) வேல், (மற்றவனுக்கு) சக்கரம். உருவம் (ஒருவனுக்குத்) தீ போன்றது, (மற்றவனுக்கு) மேகம் போன்றது. (இருவருக்கும்) சரீரம் ஒன்றே. ஒருவனான ஈசன் விஷ்ணு வடிவத்தோடும் சிவன் வடிவத்தோடும் விளங்குகிறான்.

## சென்றால் குடையாம்

"சென்றால் குடையாம் இருந்தால்சிங் காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள்கடலுள்--என்றும்
புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்(கு) அரவு". -- முதல் திரு அந்தாதி, 53.

திருவனந்தாழ்வான், திருமாலான ஈசுவரனுக்கு உலாவினால் குடையாகவும், எழுந்தருளியிருந்தால் சிங்காதன மாகவும், நின்றால் பாதுகையாகவும், விசாலமான சமுத்திரத்தில் (பள்ளிகொண்டால்) எப்போதும் தெப்பமாகவும், இரத்தினத்தால் செய்யப்பட்ட தீபமாகவும், அழகிய பட்டுடையாகவும், தழுவிக் கொள்ளும் மெத்தையாகவும் இருப்பார்.

ஈசுவரனுக்குத் திரு அனந்தாழ்வான் எல்லாவிதத் தொண்டுகளும் செய்வதுபோல அடியார்களும் எல்லாவிதமான தொண்டுகளையும் பகவானுக்குச் செய்தல் வேண்டும் என்பது கருத்து, "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" யான் எல்லாத் தொண்டுகளையும் செய்வேன் என்று (இராமாயணத்தில்) ஸ்ரீ இராமனை நோக்கி இலக்குமணன் கூறினான்.

# பூதத்தாழ்வார்

தெண்ணீர் வயற் தொண்டை நன்னாடு சான்றோர் உடைத்து என்று ஔவையாரால் புகழ்ந்துரைக்கப்பட்ட தொண்டை நாட்டில், பல்லவ மன்னர்களால் சிறந்த ஒரு நகரம் அமைக்கப்பட்டது. அந்நகரம் சென்னைக்குத் தெற்கில் கடற் கரையில் உள்ளதால் அதற்குக் (கடல்மல்லை) என்று பெயரிடப்பட்டது. மாமல்லன் என வழங்கப்பெற்ற பல்லவ மன்னனால் தோற்றுவிக்கப்பட்ட நகரமாதலின் அதற்கு மாமல்லபுரம் என்றும், மகாபலிபுரம் என்றும் மக்கள் பெயரிட்டு வழங்கினர். மாமல்லனின் கலைவளத்தைச் சிற்பங்களின் வாயிலாகச் சித்தரித்து, மக்கள் யாவரும் கண்டு களிக்கும்வண்ணம் எழில் அமைந்த கலைக்கூடமாகக் காட்சி யளிக்கும் இம்மாமல்லபுரத்தில் திருமால் சயனத் திருக் கோலத்தில் எழுந்தருளியுள்ளார். ஏனைய திருப்பதிகளில் பாம்பணையிற் பள்ளி கொண்டிருப்பான். ஆனால் இப்பதியில் தலத்தில் பள்ளிகொண்டிருக்கிறான். ஆகையால், இப்பதி யினைக் "கடல் மல்லைத் தலசயனம்" என்றும் சொல்லுவர்.

நரசிம்மவர்மர் பல்லவனின் கலைமாண்பினை விளக்கும் கலைக் கோயிலாக உள்ள இம்மகாபலிபுரத்தில் மல்லிகைப்புதரின் நடுவில் நீலோற்பல மலரில் (கி. பி. 7-ஆம் நூற்றாண்டு) சித்தார்த்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள் வளர் பிறையில் அமைந்த நவமி திதியில் புதன்கிழமையன்று அவிட்ட நட்சத்திரத்தில், திருமாலின் ஐம்படைகளில் ஒன்றாகிய கௌமோதகி என்னும் கதாயுதத்தின் அம்சமாய்ப் பூதத்தாழ்வார் அவதரித்தருளினார்.

பூதத்தாழ்வாரின் மனம் திருமாலின் திருவடிகளையே நாடியது. எனவே, அவர் இவ்வுலக வாழ்க்கையைச் சிறிதும் விரும்பவில்லை. அவர் மனக்கோயிலில் திருமாலை அமைத்து அவ்விறைவனை ஞானநீர் கொண்டு ஆட்டி, அப்பெருமான்

திருவடிகளில் அன்பாகிய மலரை இட்டு என்றும் அவனை ஆராதிப்பார். அவர் திருமாலின் திருவடிகளுக்குச் செந்தமிழ்ப் பாக்களால் ஆயினவும், என்றும் வாடாத வளம் பெற்ற நிலையில் அமைந்தனவும் ஆகிய செந்சொற்களால் ஆன பாமாலையைச் சாத்தியதால், "யானே ஏழ்பிறப்பும் தவம் உடையேன்" என்று கூறுவார். "திருமாலைச் செங்கண் நெடியானை எங்கள் பெருமானைக் கைக்கூப்பி வணங்கப் பெற்றேன் ஆதலின் யான் இனி ஒரு குடைக்கீழ் மண்ணுலகை ஆள்வதையும் வேண்டேன். தேவர்கட்கும் தேவனாய்த் தேவர் உலகை ஆள்வதையும் வேண்டேன்" என்று சொல்லுவார். அவரைக் கண்டவர்கள் இவர் நம்மைப் போன்ற மக்கட் பிறப்பினர் அல்லர். தெய்வப்பிறப்பினர் என்று வணங்கித் துதிப்பார்கள். இங்ஙனம் கண்டோர் அனைவரும் பாராட்டி வணங்கிப் போற்றும் உண்மையறிவுச் செல்வராய்ப் பூதத்தாழ்வார் விளங்கினார்.

பூதத்தாழ்வார் பாடி அருளிய இரண்டாம் திருவந்தாதியில்,

"யானே தவம் செய்தேன் ஏழ்பிறப்பும் எப்பொழுதும்
யானே தவம் உடையேன் எம்பெருமான்--யானே
இருந்தமிழ்நன் மாலை இணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழன் நல்லேன் பெரிது"

என்னும் செய்யுள் ஒன்றாகும். இச்செய்யுளின் கண் அவர், தாம் நல்லவராக ஆயினமைக்கு உரிய காரணத்தைக் கூறியுள்ளார்.

இவரால் பாடப்பெற்ற பெருமை பொருந்திய நகரங்கள்: திருவரங்கம், தஞ்சை, திருக்குடந்தை, திருமாலிருஞ் சோலைமலை, திருக்கோட்டியூர், திருத்தண்கால், திருக் கோவலூர், திருக்கச்சி, திருப்பாடகம், திருநீர்மலை, திருக் கடன்மல்லை, திருவேங்கடம், திருப்பாற்கடல் முதலியன.

## பூதத்தாழ்வார் அருளிச் செய்த இரண்டாந்திருவந்தாதி

### ஞானச் சுடர் விளக்கு ஏற்றினேன்!

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்பு(உ)ருகு சிந்தை இடுதிரியா--நன்பு(உ)ருகி
ஞானச் சுடர்விளக்(கு) ஏற்றினேன், நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான".

-இரண்டாம் திருவந்தாதி, 1.

பக்தியே அகலாகவும், ஆசையே நெய்யாகவும், ஆனந்தத்தினாலே கரைகிற மனமானது போடத்தக்க திரியாக வும் செய்து ஞானத்தைத் தருவதான தமிழ்ப் பிரபந்தத்தைச் செய்த நான் ஞான ஒளி விளக்கை ஏற்றினேன். ஞானத்தால் உண்டாகும் பக்தியினால் இறைவனை அடையலாகும். பொய்கையாழ்வாருக்கு வையகம் தகளி ஆயிற்று. இவருக்கு அன்பு தகளி ஆயிற்று.

### ஓதுவதே நாவினால் உள்ளு

"சிறந்தார்க்கு எழுதுணையாம் செங்கண்மால் நாமம்
மறந்தாரை மானிடமா வையேன்--அறந்தாங்கும்
மாதவனே! என்னும் மனம்படைத்து மற்றவன்பேர்
ஓதுவதே நாவினால் உள்ளு".

--இரண்டாம் திருவந்தாதி, 44.

சான்றோர்க்கு உயர்ந்த துணையாகிய சிவந்த கண்களை உடைய திருமாலின் திருநாமத்தை மறந்து இருப்பவர்களை நான் மனிதனாகக் கருத மாட்டேன். தருமத்தைத் தாங்கும் மாதவனே! என்று சொல்லும்படி மனதைப் படைத்து (பழக்கி) அதன்மேல் அவனுடைய திருநாமங்களை நாக்கினால் உச்சரிப்பதையே நினை (கடைப்பிடி).

# பேயாழ்வார்

தொண்டை நாட்டில், சென்னையைச் சார்ந்து சிறந்து விளங்கும் செல்வர்கட்கும், கலையறிவிற் சிறந்த அறிஞர் கட்கும் இருப்பிடமாகவும், சைவ வைணவர்களின் கோயில் களைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் தலமாகவும், தமிழகத்தின் பொதுமறை என யாவராலும் போற்றிப் புகழப் படும் தெய்வமறையாம் திருக்குறளை உலகிற்கு உதவிய திருவள்ளுவரின் திருக்கோயில் கொண்டு திகழும் தலமாக வும், செல்வர்கள் பலர் பூம்பொழில்களோடு கூடிய பெரிய பெரிய மாளிகைகளை அமைத்துக்கொண்டு வாழ்வதற்கு வகையுள்ள உறைவிடமாகவும் விளங்குவது திருமயிலை என்னும் நகரமாகும்.

இத்தகைய சீரும் சிறப்பும் ஒருங்கமைந்த திருமயிலை என்னும் இந்நகரத்தில், வைணவர்களின் திருக்கோயிலாகத் திகழும் ஆதிகேசவப் பெருமாள் கோயிலின் திருக்கிணற்றில், செவ்வல்லி மலரின்கண் (கி. பி. 7-ஆம் நூற்றாண்டில்) சித்தார்த்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள், வளர்பிறையில் (சுக்கில பட்சம்) பொருந்திய தசமி திதியில் வியாழக்கிழமையன்று சதய நாளில் எம்பெருமானின் ஐம்படைகளுள் ஒன்றாகிய நாந்தகம் என்னும் வாளின் அமிசம் உடையவராய்ப் பேயாழ்வார் அவதரித்தருளினார்.

பேயாழ்வார் மனம் இளமையிலேயே கல்வியில் சென்று பதிந்தது. எல்லா நூற்பொருள்களும் அவருக்கு இனிது விளங்குவனவாயின. அவரது மனம் காந்தத்தில் ஊசி சென்று பொருந்துவதுபோலத் திருமாலின் திருவடித் தாமரைகளில் சென்று பொருந்தி அவற்றிலேயே நிலைத்து விட்டது. அதனால் அவர் எப்பொழுதும் அருந்தமிழ்ப் பாக்களால் பரமன் புகழினைப் பாடிப் பாடி, அதனால் களிப்பு மிக்கவராய் ஆடி ஆடித் திரிவார். அவரைக் கண்டவர்கள், இவர் கருவிலேயே

ஞானமாகிய திருவுடையராய் அவதரித்தவர். மெய்ஞ்ஞானச் செல்வர் என்று போற்றுவார்கள். அவரை வணங்கினால் நாம் மக்கட் பிறப்பை எய்தியதனால் அடைதற்குரிய பயனை அடைவோம் என அவருடைய திருவடிகளை வணங்கு வார்கள். இவ்விதம் கண்டோர் அனைவரும் வணங்கும் சிறப்புடையவராய விளங்கினார் பேயாழ்வார். அவர் பாடி அருளிய மூன்றாம் திருவந்தாதியில்,

"தொட்ட படைஎட்டும் தோலாத வென்றியான்
அட்ட புயகரத்தான் அஞ்ஞான்று.......குட்டத்துக்
கோள்முதலை துஞ்சக் குறித்தெழுந்த சக்கரத்தான்
தாள்முதலை நங்கட்குச் சார்வு"

என்னும் பாடல் ஒன்று. திருமாலின் திருவடிகளே மக்கட்குப் பற்றுக்கோடாகும் என்னும் கருத்தினை அப்பாடல் பகர்கின்றது.

இவரால் பாடப்பெற்ற தலங்கள்: திருவரங்கம், திருக்குடந்தை, திருவிண்ணகர், திருமாலிருஞ்சோலைமலை, திருக்கோட்டியூர், அட்டபுயகரம், திருவேளுக்கை, திருப் பாடகம், திருவெக்கா, திருவல்லிக்கேணி, திருக்கடிகை, திருவேங்கடம், திருப்பாற்கடல், பரமபதம் முதலியன.

## பேயாழ்வார் அருளிச்செய்த மூன்றாந் திருவந்தாதி
## திருக் கண்டேன்

"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்--செருக்கிளரும்
பொன்ஆழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்ஆழி வண்ணன்பால் இன்று".

--மூன்றாம் திரு அந்தாதி, 1.

(இறைவனுடைய அருளைப் பெற்று) இன்று நான் எனது கடல் நிறமுடைய நாதனிடம் திருமகளைக் கண்டேன், அவனுடைய அழகிய திருமேனியைக் கண்டேன். விளங்குகின்ற சூரியன்போல் பிரகாசமான வடிவையும் கண்டேன். யுத்தத்தில் விருத்தி அடையும் பொன்னாலான சக்ராயுதத்தைக் கண்டேன். (கண்டவர்) விரும்பும் (ஸ்ரீ பாஞ்சஜன்யம் என்ற) சங்கையும் கையில் கண்டேன்.

திருக்கோவலூரிலே எம்பெருமானால் நெருக்குண்ட போது பொய்கையாழ்வார் ஏற்றிய ஞான தீபத்தில் பேயாழ்வாரான இவருக்கு ஈச்வர தரிசனம் கிடைத்தது. அப்போது அவர் அருளிய பாசுரம் இது.

### இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து...

"தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன்நாணும் தோன்றுமால்--சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டு(உ)ருவும் ஒன்றாய் இசைந்து".

--மூன்றாம் திரு அந்தாதி, 63.

நாற்புறமும் சூழ்ந்திருக்கிற திரண்ட அருவிகள் பாயும் திருமலையில் எழுந்தருளியிருக்கும் எனது பெருமானுக்குத் தொங்குகின்ற சடையும், நீண்ட கிரீடமும், (கையில்) அழகிய மழு (என்கின்ற) ஆயுதமும், சக்கரமும், (இடுப்பில்) சுற்றியிருக்கும் பாம்பும், பொன்னாலான அரைஞாணும் ஆகிய இவ்விரண்டு (ஹரிஹர) ரூபமும் அமைந்து ஓர் உருவமாகத் தோன்றுவது ஆச்சரியம் !

திருவேங்கடமுடையான் (திருப்பதியிலுள்ள எம்பெருமான்) ஹரிஹர ரூபமாக இருக்கிறான்.

## நாடி மலைப் படுத்தேன்

"உய்த்(து) உணர்(வு) என்னும் ஒளிகொள் விளக்கேற்றி
வைத்தவனை நாடி வலைப்படுத்தேன்--மெத்தெனவே
நின்றான் இருந்தான் கிடந்தான்என் நெஞ்சத்துப்
பொன்றாமை மாயன் புகுந்து".
--மூன்றாம் திரு அந்தாதி, 94.

ஞானம் என்னும் பிரகாசமான விளக்கை (மனத்தில்) ஏற்றி வைத்து, (அந்த) பகவானை ஆராய்ந்து பெற்று வலையில் அகப்படுத்தினேன். (எனக்கு வசமாக்கிக் கொண்டே ன்.) அம்மாயனும் (ஆச்சரிய காரியங்களைச் செய்யும் அவனும்) என் நெஞ்சிலே விட்டுப் பிரியாமல் புகுந்து மெல்ல எழுந்தருளி நின்றான், வீற்றிருந்தான், பள்ளிகொண்டான்.

## முதலாழ்வார்கள் கூடுதலும், அந்தாதி பாடுதலும்...

முதலாழ்வார்கள் என மக்களால் போற்றிப் புகழப் படும் பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகிய மூவரும் சமக் காலத்தவர்கள். அவர்கள் மாந்தருடன் கூடியிருத்தற்கு மனம் இயையாதவர்களாய், ஒருவரை ஒருவர் அறியாமல், ஒரு நாள் இருந்த ஊரில் மறு நாள் இராமல், ஊர் ஊராய்ச் சென்று இறைவனைச் சேவித்துக் கொண்டிருந்தார்கள். இவர்கள் இங்ஙனம் இருக்கையில் இறைவன் இம்மூவரையும் சேர்ப்பித் தல் வேண்டும் எனத் திருவுளங் கொண்டு, திருக்கோவ லூருக்குச் செல்லவேண்டும் என்னும் எண்ணத்தை இம் மூவருக்கும் உண்டாக்கியருளினான். அதனால் இம்மூவரும் தனித் தனியாகத் திருக்கோவலூருக்குச் சென்று, அத்தலத்தில் உள்ள திருமகள்நாதனைச் சேவித்தார்கள்.

உலகத்து உயிர்களை உறங்கச் செய்யும் ஆற்றல் வாய்ந்த மாலைப் பொழுதும் வந்தது. எங்கும் இருள் கவிந்தது. இம்மூவருள் பொய்கையார் முதற்கண் ஒரு வைணவருடைய அழகிய இல்லத்தை அடைந்து, அவ்வில்லத்தின் இடைகழியில் அந்த இல்லத்தாரின் இசைவு பெற்றுப் படுத்துக் கொண்டார். பின்பு பூதத்தாரும் பொய்கையார் பள்ளி கொண்டிருக்கும் வீட்டை அடைந்து, படுக்க இடம் கிடைக்குமோ என வினவ, அதனைச் செவிமடுத்த பொய்கையார் பூதத்தாரிடம் தாம் தங்கி யுள்ள இடத்தில், ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம் என்று கூறி அவரையும் அவ்விடத்திற்கு எழுந்தருளும்படி அழைக்க, பூதத்தாரும் அவ்வாறே செல்ல அவ்விருவரும் அங்கு அமர்ந்தனர். அப்பொழுது ஆண்டவனின் அடியவராகிய பேயாரும் அங்கு சென்று படுத்துக்கொள்ள இடம் கேட்க, பொய்கையார் பேயாரை நோக்கி, இங்கு உள்ள இடத்தில் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம் எனக் கூறி அவரையும் அழைப்பித்துக் கொண்டார். எனவே, முதலாழ்வார்களாகிய அம்மூவரும் அங்கு நிற்கலாயினர்.

பின்னர் அவர்கள் ஒருவரை ஒருவர் உசாவி உணர்ந்து கொண்டு, மிக்க மகிழ்ச்சியுடையவர்களாய் உரையாடிக் கொண்டிருக்கும் காலத்தே, திருமாலும் அவர்கள் நிற்கும் இடத்தின் இடையில் அவர்களோடு தாமும் ஒருவராய்ச் சென்று நின்று கொண்டு, அவர்கட்கு நெருக்கத்தை உண்டாக்கினார். வெளியிலும் செல்லமுடியாத பெருமழையையும் உண்டாக்கி அருளினார்.

இறைவரால் ஏற்படுத்தப்பட்ட நெருக்கத்தினை ஞானச் சுடர் விளக்கின்மூலம் அறிந்த ஆழ்வார்கள், அவரது அழகிய மேனியை அகக்கண்களால் கண்டு, தம் தூய்மை பொருந்திய எண்ணத்தினால் திருமாலின் தெள்ளிய இயல்பினைத் தெவிட்டாத தீந்தமிழில் அவனியில் உள்ளோர் உய்யும் பொருட்டு அந்தாதிப் பாடலாக அறிவிக்கத் தொடங்கினர். முதற்கண் பொய்கையார்,

"வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக--செய்ய
சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே என்று"

எனத் தொடங்கி,

"ஓரடியும் சாடுதைத்த ஒண்மலர்ச் சேவடியும்
ஈரடியும் காணலா மென்னெஞ்சே--ஓரடியில்
தாயவனைக் கேசவனைத் தண்துழாய் மாலைசேர்
மாயவனை யேமனத்து வை"

என முடியும் நூறு பாட்டுக்களைக் கொண்ட ஓர் அந்தாதியைப் பாடியருளினார். பொய்கையாழ்வார் முதற்கண் ஆரம்பித்து அந்தாதி பாடியதால் இவரது அந்தாதி முதல் திரு அந்தாதி என வழங்கப்பட்டது.

பின்பு, பூதத்தார் இரண்டாவதாக இறைவன்மீது இரண்டாம் திரு அந்தாதி என வழங்கும் நூறு பாடல்களை,

"அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா–நன்புருகி
ஞானச் சுடர்விளக்கு ஏற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்"

என்ற பாடல் ஆதியாகவும்,

"மாலே நெடியோனே கண்ணனே–விண்ணவர்க்கு
மேலா வியன்துழாய்க் கண்ணியனே–மேலால்
விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே–என்றன்
அளவன்றால் யானுடைய அன்பு"

என்ற பாடல் அந்தமாகவும் அமையப் பாடினார்.

மூன்றாவதாகப் பேயாழ்வார் பரமனின் பான்மையைப் பறை சாற்றும் பரந்த உள்ளத்துடன், தாம் கண்ட காட்சியை முதலிருவர் போன்றே அந்தாதியாகப் பாட அவா உள்ளவராய், திருமாலின் கோலத்தைத் தெரிவிக்கும் எண்ணத்தவராய்,

"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்–செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பால் இன்று"

என்ற பாடலைப் பாடி, அந்தாதியின் நூறாவது செய்யுளாக,

"சார்வு நமக்கென்றும் சக்கரத்தான் தண்துழாய்த்
தார்வாழ் வரைமார்பன் தான்முயங்கும்--காரார்ந்த
வான்அமரும் மின்னிமைக்கும் வண்தா மரைநெடுங்கண்
தேன்அமரும் பூமேல் திரு"

என்ற பாடலையும் பாடிப் பரந்தாமனின் பண்பினை மூன்றாந்திரு அந்தாதியாக மொழிந்தார்.

இங்ஙனம் முதலாழ்வார்கள் மூவரும் திருக் கோவலூரில் கூடிப் பரமனைச் சேவித்து அந்தாதி பாடினார்கள்.

## திருமழிசையாழ்வார் அருளிச் செய்த நான்முகன் திருவந்தாதி

ஸ்ரீமந் நாராயணனின் பரத்துவத்தை அனைவருக்கும் அறிவிப்பவர் நான்முகன் என்று இந்த அந்தாதி தொடங்குவதால் இதற்கு நான்முகன் திருவந்தாதி என்று பெயர் ஏற்பட்டது.

### நீ என்னை அன்றி இலை...

"இன்றாக நாளையே ஆக இனிச்சிறிதும்
நின்றாக நின் அருளும்என் பாலதே--நன்றாக
நான்உன்னை அன்றியிலேன் கண்டாய் நாரணனே
நீஎன்னை அன்றி இலை".

-நான்முகன் திரு அந்தாதி, 7.

நாராயணனே! இன்றைக்கே ஆனாலும் சரி, (அல்லது) நாளைக்கு ஆனாலும் சரி, (அன்று) சிறிது காலம் கழித்தாலும் சரி, உன் அருள் எனக்கு உரியதே. நான் உன்னை விட்டு வேறு ஒருவரைத் தஞ்சமாக அடைய மாட்டேன். நீயும் என்னைப் பிரிந்து இருக்கமாட்டாய். இது உண்மை. இறைவனது அருள் எப்போதாவது ஒருநாள் கிடைப்பது நிச்சயம்.

### கூற்றமும் .. சாரா வகையறிந்தேன்...

"கூற்றமும் சாரா கொடுவினையும் சாரா நீ
மாற்றமும் சாரா வகையறிந்தேன்--ஆற்றங்
கரைக்கிடக்கும் கண்ணன் கடல்கிடக்கும் மாயன்
உரைக்கிடக்கும் உள்ளத்(து) எனக்கு".

--நான்முகன் திரு அந்தாதி, 50.

எமன் என் அருகில் வராமல் இருப்பதற்கும், பாவங்கள் என்னை அணுகாமல் இருப்பதற்கும், பழிச் சொற்கள் என்னை அடையாமல் இருப்பதற்கும் உபாயத்தை அறிந்து கொண்டேன். எவ்வாறெனில், திருப்பாற்கடலில் பள்ளி கொண்ட மாயனாய், (காவேரி) ஆற்றங்கரையில் (கபிஸ்தலம் என்னும் திருப்பதியில்) பள்ளி கொண்டவனான கண்ணனுடைய திருவார்த்தை (சரம ஸ்லோகம்) என் நெஞ்சில் இருக்கிறது.

## சேயன் அணியன்

"சேயன் அணியன் சிறியன் மிகப்பெரியன்
ஆயன் துவரைக்கோன் ஆய் நின்ற--மாயன் அன்று
ஓதிய வாக்(கு) அதனைக் கல்லார் உலகத்தில்
ஏதிலராய் மெய்ஞ்ஞான மில்".

--நான்முகன் திரு அந்தாதி, 71.

தூரத்தில் இருப்பவனும், சமீபத்தில் இருப்பவனும், சிறியவனாக இருப்பவனும், மிகப் பெரியவனாக இருப்டவனும், இடையர் குலத்துப் பிறந்தவனும், துவாரகாநாதனாக இருப்பவனும், மாயனுமான கிருஷ்ணன் (பாரத யுத்தத்தில்) அன்று அருளிய சரம சுலோகத்தைக் கற்காதவர்கள் உலகத்தில் உண்மையான ஞானமில்லாத அன்னியர்கள் ஆவார்கள்.

## நம்மாழ்வார்

இந்நிலவுலகம் சீரும் சிறப்பும் பெற்றுச் சிறந்த முறையில் விளங்குவதற்கு ஏற்றவாறு, இவ்வுலகத்தை நிலைப்படுத்தலும், நீக்கலும், நீங்கலா அலகிலா விளையாட்டுடையவனும், வேண்டுதல் வேண்டாமை இலா தானும், மலர்மிசையேகினானும், தனக்குவமை இல்லா தானும், அறவாழி அந்தணனும் ஆகிய இறைவனுடைய நிலையினை ஆன்மாக்கள் அடைதற்கு ஏற்ற மெய்ப் பொருளை உலகத்திற்கு உணர்த்துவான் வேண்டி, அவற்றினை இனிது விளக்கிக் கூறும் உண்மைப் பொருள் உரைக்கும் நூல்களுள் நம்மாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய தமிழ் வேதமே முதன்மையானதாகும்.

நம்மாழ்வார் அவதரித்த நாடு பாண்டிய நாடு ஆகும். ஔவையாரால் "பாண்டியா, நின்னாடுடைத்து நல்ல தமிழ்" என்று போற்றிப் புகழப்பட்ட பாண்டிய நாட்டில் திருக் குருகூரில் சதுர்த்தி வருணத்தில் (கி. பி. 9-ஆம் நூற்றாண் டின் முற்பகுதியில்) பிரமாதி ஆண்டு வைகாசித் திங்கள் பன்னிரண்டாம் நாள் வளர்பிறையில், பௌர்ணமி திதியில், வெள்ளிக்கிழமை அன்று விசாக நட்சத்திரத்தில் கடக லக்னத்தில் சேனை முதலிகள் அமிசராய் நம்மாழ்வார் அவதரித்து அருளினார்.

இவ்வாழ்வாருடைய ஏனைய திருநாமங்கள் காரிமாறன், மாறன், சடகோபன், பராங்குசன், குருகைப்பிரான், திருக்குருகூர் நம்பி, வகுளாபரணன், அருள்மாறன், தென்னரங்கன் பொன்னடி. திருநாவீறுடைய பிரான் என்பனவாகும். இவரது தகப்பனார் பெயர் காரியார் ஆகும். காரியாரது தகப்பனாராகிய பொற்காரியார் திருவண்பரிசாரத்தில் வாழ்ந்தவரும், குடி, குணம், ஒழுக்கம், அன்பு முதலியவற்றால் தம்மோடு ஒத்தவரும், வேளாளர்

குலச்செல்வரும் ஆகிய திருவாழ்மார்பரது அருந்தவச் செல்வியாகிய உடைய நங்கையாரைக் காரியாருக்கு இல்வாழ்க்கைத் துணைவியாக்கினார்.

பொற்புறுமங்கையும், அருங்குணச் செல்வியும், கற்புடை நல்லாளும், கணவனைத் தொழுதேத்தும் பெண்பாலும் ஆகிய இவ்வுடைய நங்கையார், தம் கணவராகிய காரியாருடன் திருக்குறுங்குடியை அடைந்து, அப்பதியில் எழுந்தருளியிருக்கும் நம்பியைச் சேவித்து வணங்கி, பலவகையாகப் போற்றி, மக்கட் பேறு உண்டாகும் படி எம்பெருமான் அருள் புரிய வேண்டும் என வேண்டினார். அதனால் உதித்த புதல்வரே உண்மைப் பொருள் உணர்த்திய செம்மலாம் நம்மாழ்வார் ஆவார்.

அருங்குணச் செல்வராக அவதரித்த நம்மாழ்வாராகும் மைந்தன், பால் உண்டிலன், அழுதிலன், மலர்க் கண் திறந்திலன், ஆயினும் திருமேனி மெலிந்திலன்.

பிற்காலத்தில் நம்மாழ்வார் திருவாக்கினின்றும் ஒழுகிய தமிழ் அமிழ்தும், அதன் கருத்துச் சுவையுமே அவருக்கு அப்பெயரைத் தந்தன. அன்பில் ஆர்வமுடையார் அனைவரும் அவரை நம் அறிஞர், நம் அன்பர் என்று துதிப்பார்கள். அத்தகைய சான்றாண்மைக் குணம் படைத்தவரது திருவாக்கை ஓதும் வாய்ப்பைப் பெறுங் கிறிஸ்துவர், இஸ்லாமியர், பௌத்தர், சமணர், சைவர், வைணவர் முதலிய எல்லாச் சமயத்தவரும் அவரை நம் சமயத்தவர், நம் சமயத்தவர் எனப் போற்றுவர். பாவன்மையுடையவர் அவரைப் பாவலர் எனவும், தத்துவ ஆராய்ச்சியினர் அவரை நம் தத்துவ மூர்த்தி எனவும் தழுவுவர். ஒரு நாட்டவர்க்கோ, ஒரு சமயத்தவர்க்கோ, ஓரினத்தார்க்கோ மட்டும் உரியவராகாமல், எல்லா நாட்டவர்க்கும், எல்லாச் சமயத்தவர்க்கும், எல்லா இனத்தவர்க்கும் உரியவர் ஆகும்

பேற்றினை அடையும் ஆற்றல் அமையப்பெற்றவராக விளங்கப்போகும் அவர், பிள்ளைத் தன்மையில் பால் உண்ணாமலும், அழாமலும், அசையாமலும், மலர்க் கண்கள் திறவாமலும் இருந்தமை வியத்தகு செயலாகவும், பெற்றோர்க்கு எல்லை கடந்த வருத்தத்தைத் தரும் செயலாகவுமே இருந்தன.

ஆழ்வார் அவதரித்ததற்கு முன்னதாக ஆதிசேடன் அப்பதியின் திருக்கோயிலின்கண் ஒரு புளிய மரமாய்த் தோன்றி விளங்கலானான். உலகம் உய்ய அவதரித்த ஆழ்வாருக்குத் திருமகள் நாதன் ஞானமாகிய அமுதத்தை ஊட்டியருளிச் சென்றனன். அதனால் ஆழ்வார் உலகத்தில் பிறக்கும் குழந்தைகளின் செயலினின்றும் வேறுபட்ட நிலையில் வைகுந்தவாசனின் திருவடிகளையே தமது திருவுள்ளத்தில் கொண்டிருப்பாராயினார். இதனை அறியாத பெற்றோர்களின் வருத்தம் எல்லை கடந்ததாயிற்று.

ஆழகிய நம்பி என்பவர், தாம் இயற்றியருளிய குரு பரம்பரை என்னும் நூலில், நம்மாழ்வாரின் பெற்றோருக்கு ஏற்பட்ட வருத்தத்தைப்பற்றிக் கூறும் செய்யுட்கள் கல்லையும் நெகிழ்வித்துக் கரையச் செய்வன, படிப்போர் மனத்தைப் பாகாய் உருக்குவன.

உடைய நங்கையார் வருந்துதலைக் கண்ட காரியார் மிக்க வருத்தம் அடைந்து, அவ்வூர் திருக்கோயிலுக்கு எடுத்துச் சென்று இறைவன்முன் குழந்தையைக் கிடத்தி, அதற்கு மாறன் என்னும் திருநாமத்தைச் சூட்டி, அப்பெருமானைச் சேவித்து வணங்கிப் போற்றிக் குழந்தைக்கு அருள் புரிய வேண்டினார்கள்.

வைகுந்தத்தில் பாம்பணையில் பள்ளி கொண்டு, அறிதுயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் இறைவன்

அப்பொழுது சேனை முதலியாரை நோக்கி, நீவிர் மாறனாகிய நம்மாழ்வாருக்கு உண்மைப் பொருள்களை யெல்லாம் உபதேசித்து வருவீராக எனப் பணிக்க, அங்ஙனமே அவர் திருக்குருகூருக்குச் சென்று பிறர் அறியாத படி ஆழ்வாருக்குத் தத்துவப் பொருள்களை உபதேசிக்கவும், அதனை உணர்ந்துகொண்டு ஆழ்வார் அக்கோயிலின்கண் உள்ள புளிய மரத்தின் அடியிலே பதினாறு ஆண்டுகள் வரையிலும் யோகத்தில் எழுந்தருளியிருந்தார்.

அங்ஙனம் நம்மாழ்வாராகிய சடகோபர் யோகத்தே இருந்த காலையில், பாண்டிய நாட்டில் அமைந்த திருக் கோளூர் என்னும் பதியில் அந்தணர் குலத்து அருந்தவச் செல்வராய்த் தோன்றிய மதுரகவியார் அயோத்தி, மதுரை, கயை, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை என்று கூறப்படும் புண்ணிய நகரங்கள் ஏழினையும் சேவிக்கும் உள்ளத்தராய்ச் சென்று சேவித்து வருவாராயினார். அவர் அயோத்தியில் இருந்தகாலத்துத் தென்திசைக்கண் சிறந்ததொரு பேரொளி தோன்ற, அவ்வொளியைத் தரிசிக்கும் நோக்கத்தவராய்த் தென்திசை நோக்கி, ஒளியின்வழி வருவாராயினார். இரவில் மட்டும் தோன்றிப் பகலில் மறைந்த அப்பேரொளியின் வழி நடந்த மதுரகவியார் கோதாவரியாற்றையும், திருவேங்கடத் தையும், தொண்டை நாட்டையும், திருவரங்கத்தையும், கடந்து திருக்குருகூரையும் அடைந்தார். அவ்வொளி அவ்வூர்க் கோயிலினுட்புக்கு மறைந்துவிட்டது. பின்னர் அப்பதியில் உள்ளார் சிலரை நோக்கி, இங்கு விசேடம் யாதேனும் உண்டோ? என்று அவர் வினவினார். அவர்கள் நம்மாழ்வாருடைய அவதாரச் சிறப்பை மதுரகவியாருக்குக் கூறினார்கள். மதுரகவியாரும் கோயிலினுட் சென்று, பதினாறு கலைகளும் நிரம்பிய மதியெனப் பொலியும் திருமுகத்தினராய், யோகத்தில் எழுந்தருளியிருந்த ஆழ்வாரை அணுகி, தம் இரண்டு கைகளையும் நன்றாய்

ஓசையெழுமாறு தட்டினார். உடனே ஆழ்வார் கண்திறந்து மதுரகவியாரை நோக்கினார்.

மதுரகவியார் ஆழ்வாரை நோக்கி, உயிரற்றதாகிய பிரகிருதியினால் ஆகிய உடம்பில் அணு வடிவாயுள்ள ஆன்மா வந்து புகுந்தால் எதனை அனுபவித்துக் கொண்டு எவ்விடத்தில் இன்பம் உண்டென்று எண்ணியிருக்கும்? என்ற பொருள் அடங்கிய "செத்தத்தின் வயிற்றிற் சிறியது பிறந்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?" என்று கேட்டார். அதற்கு ஆழ்வார், "அந்த உடலின் தொடர்பினால் ஆகும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் இவ்வைந்தினால் வரும் இன்ப துன்பங்களை அநுபவித்துக் கொண்டு அவ்விடத்திலேயே இன்புற்றேன், இளைத்தேன் என்று சொல்லிக்கொண்டே கிடக்கும்" என்ற பொருள் அடங்கும்படி, "அத்தைதின்று அங்கே கிடக்கும்" என்று திருவாய் மலர்ந்தருளினார். உடனே மதுரகவியார் அவருடைய திருவடிகளிலே தம்முடைய முடியுற வணங்கிக் கைகூப்பி, நின்று, "அன்புடையீர், அடியேனை ஆட்கொண்டருள்வீர்" என்று வேண்டினார்.

உடனே நம்மாழ்வார் மதுரகவியாரைப் பார்த்து, "நாம் பகவானை அனுபவித்தற்குப் போக்குவீடாகச் சொல்லும் பாசுரங்களால் நீர் பட்டோலையை அலங்கரிப் பீராக" எனத் திருவாய் மலர்ந்தருள, மதுரகவியாரும் பட்டோலையை அலங்கரிக்க, நம்மாழ்வாரும் திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி எனும் நான்கு தமிழ் மறைகளை அருளினார். நான்கனுள் திருவிருத்தத்தை இருக்கு வேதசாரம் என்றும், திருவாசிரியத்தை யசுர் வேதசாரம் என்றும், பெரிய திருவந்தாதியை அதர்வண வேதசாரம் என்றும், திருவாய்மொழியைச் சாம வேதசாரம் என்றும் கூறுவர். உலகு உய்யச் சொல்மலர்களாகிய பாமாலைகளால் பரந்தாமனைப் பாடிய

நம்மாழ்வார் திருப்புளியடியில் முப்பத்தோராண்டு எழுந்தருளியிருந்தார்.

இவரிடம் பட்டோலையை அலங்கரித்த மதுரகவி ஆழ்வார் வைகுந்தநாதனைப் பாடாமல் மதுரமானதும், அன்பு நிறையப் பெற்றதுமான பதினொரு பாசுரங்களால் நம்மாழ்வாரைப் பாடியுள்ளார். நூல் இயற்றப் புகுவோர் முதலில் விநாயகருக்கு வணக்கம் கூறுதலைப் போன்று, இவ்வாழ்வாருக்கும் வணக்கம் கூறுதல் மரபாயிற்று.

வைணவப் பெரியார்கள் வைணவக் குரவர்களை ஆழ்வார்கள் எனவும், ஆசாரியர்கள் எனவும் இரு திறத்தினராக வகுத்துள்ளார்கள். இவ்வாழ்வார் அவ்விரு திறத்தினரினும் சேர்ந்தவராவர். ஆழ்வார்களுள் இவரை அவயவி (உறுப்பி) எனவும், ஏனைய ஆழ்வார்களை இவருக்கு அவயவங்கள் (உறுப்புக்கள்) என்றும் கூறுவார்.

இனி ஆசாரியர்கள் வரிசையைப் பார்ப்போமாயின், முதல் மூவரும் பரமபதத்தைச் சார்ந்தவர்களாகவும், புவியைச் சார்ந்த ஆசாரியர்களின் பட்டியலில் நம்மாழ்வாரே முதல் ஆசாரியராகவும் அமைந்துள்ளார்.

ஆசாரியர்களின் வரிசை பின்வருமாறு:

1. திருமால். 2. திருமகள். 3. சேனை முதலியார். 4. நம்மாழ்வார். 5. நாதமுனிகள். 6. உய்யக்கொண்டார். 7. மணக்கால் நம்பி. 8. ஆளவந்தார். 9. பெரிய நம்பி, திருக்கச்சி நம்பி. 10. இராமானுசர்.

இவருக்கு விழுமிய பெருமையை அளித்தற்குக் காரணமாயிருந்த இவருடைய அருளிச்செயல்கள் நான்கு எனவும், அவை வேதத்தின் சாரமாகக் கருதப்படுகின்றன

எனவும் முதற்கண் கூறியுள்ளோம். அவற்றுள் காணும் பாசுரங்களின் எண்ணிக்கையை ஈண்டு காண்போம்:

1. திருவிருத்தம் நூறு பாசுரங்களைக் கொண்டது.
2. திருவாசிரியம் ஏழு பாசுரங்களைக் கொண்டது.
3. பெரிய திருவந்தாதி எண்பத்தேழு பாசுரங்களைக் கொண்டது.
4. திருவாய்மொழி ஆயிரத்து நூற்றிரண்டு பாசுரங்களைக் கொண்டது.

வைணவர்களின் தமிழ் வேதமாகிய நாலாயிரத்துள் முதல் மூன்றும் மூன்றாம் ஆயிரத்துள் சேர்க்கப்பட்டிருக் கின்றன. திருவாய்மொழி நான்காம் ஆயிரமாக அமைக்கப் பட்டிருக்கின்றது. நம்மாழ்வாருடைய பாடல்களில் இறையுணர்வு, அன்பு, இன்பம், பொதுமையின் சிறப்பு, கவிதையின் எழில் முதலிய காணப்படும்.

நம்மாழ்வாரால் பாடப்பெற்ற பாடல் தலங்கள்: திருவரங்கம், திருப்பேர்நகர், கும்பகோணம், திருவிண்ணகர் திருக்கண்ணபுரம், திருமாலிருஞ்சோலைமலை, திரு மோகூர், திருக்குருகூர், ஆழ்வார் திருநகரி, ஸ்ரீவரமங்கை, திருப்புளிங்குடி, திருப்பேரை, ஸ்ரீவைகுந்தம், வரகுண மங்கை, பெருங்குளம், திருக்குறுங்குடி, திருக்கோவலூர், திருவநந்தபுரம், திருவண்பரிசாரம், திருக்காட்கரை, திரு மூழிக்களம், திருப்புலியூர், திருச்செங்குன்றூர், திரு நாவாய், திருவல்லவாழ், திருவண்வண்டூர், திருவட்டாறு, திருக்கடித்தானம், திருவாறன்விளை, திருவேங்கடம், திருவயோத்தி, துவாரகை, வடமதுரை, திருப்பாற்கடல் பரமபதம் முதலிய 35 தலங்களாகும்.

## நம்மாழ்வார் அருளிச்செய்த ருக்வேத ஸாரமான திருவிருத்தம்

நம்மாழ்வார் தமது அன்பு மிகுதியை எம்பெருமான் முன்னிலையில் விண்ணப்பம் செய்வதாக இப்பிரபந்தம் அமைந்துள்ளது. இப்பிரபந்தத்தில் முதற் பாசுரம் கடைசிப் பாசுரம் நீங்கலாக மற்றப் பாசுரங்கள் எல்லாம் அகப்பொருள் இலக்கணத் துறைகளாக அமையப் பெற்றவை. ஆழ்வார் பெண் தன்மையை ஏறிட்டுக் கொண்டு பேசும் பிரபந்தம் இது.

நம்மாழ்வார் தலைவி. எம்பெருமான் தலைவர். திருவிருத்தம் முழுவதும் நாயக நாயகி பாவத்தில்தான் பாடப்பட்டுள்ளது. அகப்பொருள் இலக்கணத்தை நினைவில் வைத்துக்கொண்டு ஈண்டுள்ள பாசுரங்களைப் படிக்க வேண்டும். ஒவ்வொரு பாடலிலும் அமைந்துள்ள அகப்பொருள் துறை அவ்வப் பாடலின் தலைப்பில் தரப்பெற்றுள்ளது.

### கருக்காய் கடிப்பவர் போல்

"இருக்கார் மொழியால் நெறி இழுக்காமை உலகளந்த
திருத்தாளிணை நிலத்தேவர் வணங்குவர் யாமும் அவர்
ஒருக்காவினை யொடும் எம்மொடும் நொந்துகனி யின்மையின்
கருக்காய் கடிப்பவர் போல் திருநாமச்சொல் கற்றனமே".

--திருவிருத்தம், 64.

(இருக்கு முதலிய) வேதங்களில் பொருந்தின மந்திரங்களைக்கொண்டு முறை தவறாமல் உலகங்களை அளந்த (எம்பெருமானது) திருவடிகளை வணங்கிப் பூமியில் வாழும் தேவர்களான அந்தணர்கள் அநுபவிப்பார்கள். நாமும் எமது ஆசையை அடக்க மாட்டாமல் (அப்படி அனுபவிப்பதற்கு விரோதியான எமது) பாவத்தையும் (அப்பாவத்திற்கு இடமான) எம்மையும் வெறுத்துக்கொண்டு, பழம்

கிடைக்காமையால் அதுவரையில் தரித்திருப்பதற்காக அவனது) திருநாமங்களாகிய சொற்களைச் சொல்கிறோம்.

நாயகி பிரிவாற்றாத நிலையில் நாயகனது பேர் சொல்லித் தரித்திருத்தலைத் தோழிக்குக் கூறியது.

**வணங்கும் துறைகள் பல பல ஆக்கி**

"வணங்கும் துறைகள் பல பல ஆக்கி மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பல பல ஆக்கி அவை அவை தோ(று)
அணங்கும் பலபல ஆக்கிநின் மூர்த்தி பரப்பிவைத்தாய்
இணங்கு நின்னோரை இல்லாய்! நின்கண் வேட்கை எழுவிப்பனே".
--திருவிருத்தம், 86.

(தெய்வத்தை) வணங்குகிற மார்க்கங்கள் பற்பல வற்றை உண்டாக்கி, அறிவின் வேறுபட்டால் (ஒன்றோடு) ஒன்று மாறுபடுகிற மதங்கள் பலவற்றையும் உண்டாக்கி, அந்தந்த மதங்கள்தோறும் தெய்வங்கள் பலவற்றையும் உண்டாக்கி (இப்படி) உனது வடிவத்தைப் பரவச்செய்து வைத்துள்ளாய். உன்னோடு ஒப்பாகச் சொல்லத்தக்க உன் போன்று எவரையும் இல்லாதவனே! உன்னிடத்திலேயே பக்தியை வளரச் செய்வேன்.

**நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாசிரியம்**

இப்பிரபந்தம் ஆசிரியப்பாக்களினால் அமைந்தது. ஆழ்வார் இவ்வுலகை விட்டு நீங்கிப் பரமபதம் செல்ல வேண்டும் என்று விரும்பினார். அங்கே சென்று பகவானின் குணங்களை அனுபவிக்க வேண்டுமென்று ஆசைப்பட்டார். ஆனால் பரமபதத்தில் அனுபவிக்க விரும்பும் குணங்களை இங்கேயே பகவான் காட்டிக் கொடுத்து அனுபவிக்கச் செய்து பிரபந்தகளாக வெளிவரச் செய்தார். இவ்வேழு

பாடல்களிலும் பகவானின் மேன்மை, நீர்மை, வடிவழகு முதலியன கூறப்படுகின்றன.

## கொள்வது எண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே!

"உலகுபடைத் துண்ட எந்தை, அறைகழல்
சுடர்ப்பூந் தாமரை சூடுதற்கு, அவாவா
ருயிருகி யுக்க, நேரிய காதல்
அன்பில் இன்(பு)ஈன் தேறல், அமுத
வெள்ளத் தானாம் சிறப்புவிட்டு, ஒருபொருட்கு
அசைவோர் அசைக, திருவொடு மருவிய
இயற்கை, மாயாப் பெருவிற லுலகம்
மூன்றி னொடுநல் வீடு பெறினும்,
கொள்வ தெண்ணுமோ தெள்ளியோர் குறிப்பே?"

-- திருவாசிரியம் 2

உலகங்களை உண்டாக்கி அவைகளைப் பிரளய காலத்தில் விழுங்கி அருளிய எனக்குத் தந்தையாகிய ஈசுவரனுடைய ஒலிக்கின்ற வீரக் கழல்களையுடைய ஒளி விடுகின்ற அழகிய தாமரைப் பூவைச் சூடுவதற்கு (உண்டான) ஆசையினால் நிறைந்த உயிரானது உருகிக் கரையும்படி நேர்ந்த பக்தியாகிய ஆசைப் பெருக்கத்தில் தோன்றி இன்பத்தைக் கொடுக்கிற தேனாகிய அமுத வெள்ளத்தில் மூழ்கி இருத்தலாகிய பெருமையை விட்டு அற்பமான ஏதேனும் ஒரு பலனுக்கே அலைகின்றவர்கள் அலையட்டும். (அவர்களைப்பற்றி நமக்கென்ன கவலை) செல்வத்தோடு சேர்ந்து இருக்கும் நிலைமையும், அழியாத பெரு வலிமையும், மூன்று உலகங்களுக்கும் நாயகனாக இருத்தலும், உத்தமமான மோட்ச பதவியும் (ஆகிய இவற்றை) பெறுவதாயிருந்தாலும் ஞானிகள் (அமுத வெள்ளத்தில் மூழ்கியிருப்பதை விட்டு) இவைகளைப் பெற்றுக் கொள்ளும் நோக்கம் உடையார் ஆவாரோ?

## நம்மாழ்வார் அருளிச்செய்த அதர்வண வேத சாரமான பெரிய திருவந்தாதி

நம்மாழ்வார் தம் பெருமைகளைக் கூறிக்கொள்ளும் பிரபந்தம் இது. எல்லா உலகங்களையும் தம்மிடத்தே கொண்ட ஸ்ரீமந் நாராயண மூர்த்தி பெரியவர். அவரையும் தம்மிடம் கொண்டவர் ஆழ்வார். அதனால் பகவானைவிடத் தாமே பெரியவர் என்ற பாசுரத்தை இப்பிரபந்தத்தில் அருளிச் செய்துள்ளபடியால் இது பெரிய திருவந்தாதி ஆயிற்று.

### உட் கண்ணால் காணும் உணர்ந்து

"அன்றேநம் கண்காணும் ஆழியான் கார்உருவம்
இன்றேநாம் காணா(து) இருப்பதுவும்--என்றேனும்
கட்கண்ணால் காணாத அவ்வுருவை நெஞ்சென்னும்
உட்கண்ணால் காணும் உணர்ந்து".

--பெரிய திரு அந்தாதி, 28.

புறக்கண்ணாலே காணவொண்ணாத அத்திருமேனியை நெஞ்சாகிற உட்கண்ணாலேயே ஆராய்ந்து காணக் கூடும். அப்போதே திருவாழியை உடையவனுடைய திருமேனியை நாம் காணக்கூடும். நாம் நேரில் அதை இப்போது அநுபவியாது இருப்பதும் அக்காரணத்தினாலே.

### என்செய்வேன் என்றே இருத்தி நீ

"ஒன்று(உ)ண்டு செங்கண்மால்! யான்(உ)ரைப்பது(உ)ன் அடியார்க்(கு)
என்செய்வேன் என்றே இருத்தி நீ--நின்புகழில்
வைகுந்தம் சிந்தையிலும் மற்(று) இனிதோ நீ அவர்க்கு
வைகுந்தம் என்(று) அருளும் வான்".

--பெரிய திரு அந்தாதி, 53.

சிவந்த திருக்கண் உடைய பெருமானே! நான் உனக்குச் சொல்வது ஒரு வார்த்தை உண்டு, நீ என்னுடைய அடியவர்களுக்கு என்ன உபகாரத்தைச் செய்வேன் என்று எண்ணிக்கொண்டு இருக்கிறாய். (அப்படி இருக்க) உன்னுடைய புகழில் ஈடுபட்டு வாழுகின்ற மனப்பாங்கைக் காட்டிலும், நீ அருளும் ஸ்ரீ வைகுண்டம் என்பது மிகவும் இனியது ஆகுமோ?

## மறுப்பு எல்லாம் ஏதமே

"பிறப்(பு) இறப்பு மூப்புப்பிணி துறந்து பின்னும்
இறக்கவும் இன்புடைத்தா மேலும்--மறப்(பு) எல்லாம்
ஏதமே என்(று) அல்லால் எண்ணுவனே? மண் அளந்தான்
பாதமே ஏத்தாப் பகல்".

-பெரிய திரு அந்தாதி, 80.

பிறப்பு, மரணம், கிழத்தனம், நோய் இவற்றை ஒழித்து அதற்குமேல், மிக்க சுகமான அனுபவத்தை அடைந்தானாகிலும் உலகளந்த பகவானுடைய திருவடி களைத் துதிக்காத காலத்தில் உள்ள பிறப்பெல்லாம் துக்கமே என்று அல்லது வேறொரு வகையில் நினைப்பேனோ?

## திருமங்கையாழ்வார் அருளிச்செய்த திருவெழுக்கூற்றிருக்கை

திருமங்கையாழ்வாருக்கு நாலுகவிப் பெருமாள் என்று விருது உண்டு. கவியாடுவதில் தன்னேரில்லாத் தலைவர். நாலுகவிகளில் சித்திரக் கவியும் ஒன்று. அந்தச் சித்திரக் கவிகளில், "எழுகூற்றிருக்கை"யும் அடங்கும். இப்பிரபந்தம் தேர் வடிவத்தில் அமைக்கப்பட்டது. இதன் இலக்கணம் வீரசோழியத்தில் கூறப்பட்டுள்ளது. இப் பிரபந்தம் நாற்பத்தாறு அடிகளைக் கொண்ட ஆசிரியப்பா. ஒவ்வொரு அடியும் நான்கு சீர்களைப் பெற்று வருவதோடு, ஈற்றடி நாற்சீர்களைக் கொண்டு முடிவதால் இது நிலை மண்டிலாவாசிரியப்பாவாகும். இவ்வகை பிரபந்தத்தை இயற்றியவர் ஆழ்வார்களுள் இவர் ஒருவரேயாவார்.

"ஒருபே ருந்தி யிருந்தி யிருமலர்த் தவிசில்,
ஒருமுறை அயனை யீனறனை, ஒருமுறை
இருசுடர் மீதினி லியங்கா, மும்மதிள்
இலங்கை யிருகால் வளைய, ஒருசிலை
ஒன்றிய ஈரெயிற் றழல்வாய் வாளியில்
அட்டனை, மூவடி நானிலம் வேண்டி,
முப்புரி நூலொடு மானுரி யிலங்கும்
மார்வினில், இருபிறப் பொருமா ணாகி
ஒருமுறை யீரடி, மூலவு களந்தனை".

--திருவெழுகூற்றிருக்கை முதல் 9 அடி

பெருமானே! உன் திருநாபித் தாமரை மலரில் ஒரு முறை அயனைப் படைத்தாய். இரண்டு சுடர்கள் இலங்கையின்மீது உலவவும் அஞ்சுகிற, ஒரு காலத்தில் மூவகை அரண் வாய்ந்த இலங்கை அழிய உன் வில்லின் இரண்டு முனைகளை இணைத்து நாண் பூட்டி, இரண்டு எயிறுகள் வாய்ந்த அழலை உமிழும் அம்புகளால்

அழித்தனை. உன் திருவடியால் மூன்று அடிக்கு நால்வகை யான நிலத்தை யாசித்தாய். மூன்று புரி வாய்ந்த பூணூல், மான் தோல் முடியுடன் திருமார்பில் விளங்க, அந்தண மாணி வடிவுடன் கொடைநீர் கையில் கொண்டவுடன் ஒரு தரம் பேருருக் கொண்டு இரண்டே அடியால் மூன்று உலகங்களையும் அளந்தாய்.

## திருமங்கையாழ்வார் அருளிச்செய்த
## சிறிய திருமடல்

எம்பெருமான் கண்ணனாக அவதரித்த காலத்தில் அவனுடைய குடக்கூத்தில் அகப்பட்டுக் கொண்டாள் ஆய்ச்சி ஒருத்தி. அவள் அவனை அனுபவிக்க முடியாமல் வருந்தி மடலேறத் துணிந்தாள். திருமங்கையாழ்வாரும் அப்படிப்பட்ட பெண் நிலைமையை ஏறிட்டுக்கொண்டு (பரகால நாயகி) தன் ஆசையை வெளியிடும் பிரபந்தங்கள் சிறிய திருமடலும், பெரிய திருமடலும். நாயகனின் பிரிவைத் தாங்க முடியாத நாயகி, அவனோடு கூடுவதற்காகச் செய்யும் துணிச்சலான செயலே மடலூர்தல் எனப்படும்.

தன்னை விட்டுப் பிரிந்த தலைவனை ஒரு படத்தில் எழுதி, அதையே பார்த்துக் கொண்டு அலங்காரம், ஊண் உறக்கம் இன்றி, பனை மடலையும் கையில் எடுத்துக் கொண்டு, தலைமயிரையும் விரித்துக்கொண்டு, இவன் தான் என்னைக் கைவிட்டான். இரக்கமற்றவன் என்று அவனது செயல்களைக் கூறிக் கதறிக்கொண்டு, பலரும் நடுங்கி இரக்கங் கொள்ளும்படி தெருவழியே திரிந்து உழல்வதே மடலூர்தல் எனப்படும். இலக்கண முறைப்படி திருமடல் ஒரே பாட்டாகக் கருதப்படுகிறது. மடலூர்வேன் என்று அச்சுறுத்திக் கூறும் திருமங்கையாழ்வார் மடலூர்ந்ததாகக் கூறப்படவில்லை. மடலேறவும் இல்லை. அகப்பொருள்

இலக்கணப்படி, பெண்கள் மடலேறவும் கூடாது. "கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப் பெண்ணிற் பெருந்தக்க தில்" என்னும் குறட்பா இக்கருத்தையே வலியுறுத்தும்.

"ஊரார் உகப்பதே ஆயினேன்-மற்று எனக்கு இங்கு
ஆராய்வார் இல்லை அழல்வாய் மெழுகு போல்,
நீராய் உருகும் என் ஆவி-நெடுங் கண்கள்,
ஊரார் உறங்கிலும், தான் உறங்கா உத்தமன்-தன்
பேர் ஆயினவே பிதற்றுவன்-பின்னையும்
கார் ஆர் கடல் போலும் காமத்தர் ஆயினார்"

கொடிய தீவினை செய்த நான் ஊரிலுள்ளார் பரிகசிக்கும்படி ஆயினேன். என்னைப்பற்றிக் கேட்பார் இலர். நெருப்பின் அருகிலுள்ள மெழுகுபோல் என்னுடைய ஆவி நீராயுருகும். ஊரிலுள்ளார் உறங்கினாலும் என் கண்கள் உறங்கமாட்டா. மேன்மையுடையவனின் திருப் பெயர்களையே நான் அலற்றுவேன். நீர் நிறைந்த கடல் போலே காமமுடையவர்கள் எவர் தாம் உலகத்தார் கூறும் பழிப்பினைக் கேட்பர்?

## திருமங்கையாழ்வார் அருளிச்செய்த
## பெரிய திருமடல்

தர்மார்த்த காம மோட்ச புருஷார்த்தங்களில், மோட்சம் என்பது காணாத பொருளுக்கு உரிய வார்த்தையாகவே இருக்கிறது. "நான் சென்று வந்தேன்" என்று எவரும் வந்து, மோட்சம் இப்படிப்பட்டது எனச் சொல்லவில்லை. அறம், பொருளால் பெறப்படுவது காமமேயாதலால் காமம் புருஷார்த்தமே சிறந்தது. "நான் பகவத் காமத்தைப் பற்றினேன். அதனால் பகவானை அடைய மடலூரத் துணிந்தேன். காம புருஷார்த்தத்தை விரும்பாதவர்கள் ரசிகர்கள் அல்லர். மடலூரக் கூடாது

என்பதை நான் ஏற்கவில்லை! நாயகனை விட்டுப் பிரிய மனமில்லாமல் பெண்கள் இருந்ததில்லையா? சீதை, வேகவதி, உலூபிகை, உஷை முதலிய பெண்களின் வரலாற்றைச் சிந்தியுங்கள்" என்றும்,

"திருநறையூர் எம்பெருமானை வணங்கியது முதல் எனக்குப் பகவத் காமம் ஆகிற மன நோய் ஏற்பட்டுவிட்டது. அனைவருக்கும் இன்பமளிக்கும் பொருள்களெல்லாம் எனக்கு வருத்தத்தை அளிக்கின்றன. இவையெல்லாம் எனக்கு வேண்டாதவாறு செய்தவன் ஸ்ரீமந் நாராயணன். இவன் இருக்கும் திருவிண்ணகர் முதலிய இடங்களுக்குச் சென்று, அவனிடம் என் உடலைக் காட்டி என் நிலையைக் கூறுவேன். அப்படியும் என்னை ஏற்காவிட்டால், அவன் செயல்களை ஊரறியச் சொல்லி அம்பலப்படுத்துவேன்: மடலூர்வேன்" என்றும் திருமங்கையாழ்வார் தம்மைத் தலைவி நிலையில் அமைத்துக்கொண்டு பாடுகிறார்.

### தன் நிலைமை எல்லாம் அறிவிப்பன்!

"கல்நவில் தோள்காளையைக் கண்(டு) ஆங்குக் கைதொழுது
என்நிலைமை எல்லாம் அறிவித்தால் எம்பெருமான்
தன் அருளும் ஆகமும் தாரானேல்--தன்னைநான்
மின் இடையார் சேரியிலும் வேதியர்கள் வாழ் இடத்தும்
தம் அடியார் முன்பும் தரணி முழு(து) ஆளும்
கொல்நவிலும் வேல்வேந்தர் கூட்டத்தும் நாட்டகத்தும்
தன்நிலைமை எல்லாம் அறிவிப்பன்".

--பெரிய திருமடல், 134-137.

மலை நிகர் தோள்களையுடைய காளைப்பருவம் உள்ள என் காதலனைக் கண்டு அவ்வவ்விடங்களில் கை கூப்பி, என்னுடைய நிலைமை எல்லாம் தெரிவிக்கும் போது, எம்பெருமானாகிய அவன் தன் அருளையும் திரு

மேனியையும் தாரானாகில், நான் நுண்ணிய இடையை உடைய பெண்கள் இருக்கும் தெருக்களிலும், வேதம் வல்லவர்கள் வாழும் இடத்திலும் அவனுடைய பக்தர்கள் முன்பும், பூமியை முழுதும் ஆள்கிற, கொலைத்தொழில் புரியும் வேலையை உடைய அரசர்களுடைய கூட்டத்திலும், நாடுகளிலும் அவனுடைய செயல்களையெல்லாம் அறிவிக்கிறேன்.

திருமடல் என்னும் இப்பிரபந்தம், எம்பெருமானோடு கலந்து பிரிந்த பிராட்டி நிலையில் உள்ள ஆழ்வார் தம் ஆற்றாமையாலேயே மடலூர்ந்தாகிலும் அவனைக் காண வேண்டும் என்னும் உறுதி பூண்டு பாடியதாகும். இயற்கையாகவே தலைவியைக் கண்டு அவளது நட்பைப் பெற்றுப் பிரிந்த தலைவன் பின் அவளைப் பெற முடியாதபோது, பிரிவாற்றமையாலேயே அவளைப் பெறுதற் பொருட்டுச் செய்யும் ஒரு முரட்டுச்செயல் மடலூர்தல் எனப்படும். அச்செயலாவது தலைவியின் உருவத்தையும், தன் உருவத்தையும் இருவர் பெயரையும் ஒரு படத்தில் எழுதுவித்துப் பனைமடலாற் செய்த ஒரு குதிரையின் மேல் ஏறி, வீதியில் ஊர்ந்து வருதலாம்: இதனைக் கண்ணுறும் உறவினரோ, பெரியாரோ அரசர்களோ இருவருக்கும் உள்ள மெய்யன்பை உணர்ந்து, அவ்விருவரையும் திருமணத்தால் ஒன்று சேர்த்து வைப்பர் என்பர். தலைவியைப் பெறத் தலைவன் மடலூர்தலே தமிழரது மரபாயினும், வடமொழி மரபைப் பின்பற்றி, நாயகி நிலை அடைந்த ஆழ்வார் இறைவனாகிய நாயகனைப் பெற மடலூர்ந்தார்.

இயற்பா சம்பூர்ணம்

திருவாய்மொழித் தனியன்கள்
நேரிசை வெண்பா
ஈசுவர முனிகள் அருளிச் செய்தது

நம்மாழ்வாரையே சிந்தித்திரு
"திருவழுதி நாடென்றும் தென்குருகூ ரென்றும்,
மருவினிய வண்பொருநல் என்றும்,-அருமறைகள்
அந்தாதி செய்தான் அடியிணையே எப்பொழுதும்,
சிந்தியாய் நெஞ்சே! தெளிந்து".

சொட்டை முனிகள் அருளிச்செய்தது
ஆழ்வார் திருவடிகளே நமக்குத் தஞ்சம்

"மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும்
இனத்தாரை யல்லா திறைஞ்சேன்,-தனத்தாலும்
ஏதுங் குறைவிலேன் எந்தை சடகோபன்,
பாதங்கள் யாமுடைய பற்று".

மணவாள மாமுனிகள் அருளிச்செய்தவை
சொல்லும் பொருளும் தொகுத்துரைத்தார் மணவாள
மாமுனிகள்

"அல்லும் பகலும் அனுபவிப்பார் தங்கட்குச்,
சொல்லும் பொருளும் தொகுத்துரைத்தான்,-நல்ல
மணவாள மாமுனிவன் மாறன் மறைக்குத்
தனவாநூற் றந்தாதி தான்".

திருவாய்மொழி நூற்றந்தாதி தேனேதான்
"மன்னு புகழ்சேர் மணவாள மாமுனிவன்,
தன்னருளா லூட்பொருள்கள் தம்முடனே-சொன்ன,
திருவாய் மொழிநூற்றந் தாதியாந் தேனை,
ஒருவா தருந்துநெஞ்சே! உற்று".

## நம்மாழ்வார் திருவாய் மலர்ந்தருளிய திருவாய்மொழி

இவர் அருளிய பிரபந்தங்களுள் இது சரமப் பிரபந்தமாகும். திருவாய்மொழி திவ்ய மந்திரத்தின் பொருளைத் தெளிவாக உணர்த்துகிறது என்றும், அர்த்த பஞ்சகத்தை விளக்கிச் சொல்கிறது என்றும் கூறுவார்கள். நம்மாழ்வாரைப் பிரபன்னஜன கூடஸ்தரென்றும், அவயவி என்றும் சொல்கிறார்கள். மற்ற திவ்யப் பிரபந்தங்களைப்போல் திருவாய்மொழியை வீதிகளில் சொல்லுவதில்லை. ஓரிடத்தில் அமர்ந்தே ஸேவிப்பது வழக்கம்.

### உயர்வு அற உயர் நலம் உடையவன்

"உயர்(வு)அற உயர்நலம் உடையவன் யவன்அவன்
மயர்(வு)அற மதிநலம் அருளினன் யவன்அவன்
அயர்(வு)அறும் அமரர்கள் அதிபதி யவன்அவன்
துயர்அறு சுடர்அடி தொழு(து)எ(ழு) என்மனனே". 1. 1. 1.

(மற்ற) உயர்வு (ஒப்பிடும்போது) இல்லை என்னலாம் படி (மனம் வாக்குக்கு எட்டாதவாறு, எல்லையற்று) உயர்ந்த ஆனந்தம் முதலிய (எண்ணிறந்த) நற்குணங்களை (இயல்பாக) உடையவன் எவனோ: (எல்லாவித) அஞ்ஞானமும் (வாசனையுற) ஒழியும்படி (எனக்கு) பக்தி ரூபமான ஞானத்தை அருளாலேயே தந்தவன் எவனோ, மறதியில்லாத (சதா இறைவனையே அநுபவித்துக் கொண்டிருக்கிற) நித்தியர்களுக்கு அதிபதியாய் இருப்பவன் எவனோ, (ஆன்மாக்களின்) துயரத்தை ஒழிக்கும் அவனுடைய ஒளி மயமான திருவடிகளை வணங்கி (அன்பால் அவனுக்கு உவந்த தொண்டுகளை எல்லாம் செய்து) உய்வு அடையப் பார், என் நெஞ்சே! இறைவன் திவ்விய குணமும் உருவமும் உடையவன். நித்தியர்

களோடு அழியா உலகில் வாழ்பவன். நமக்கு விரோதி அஞ்ஞானம், இறைவனது அருளே நமக்கு உபாயம், இறைவனது மிக உயர்ந்த குணங்களில் ஈடுபட்டு, அதனால் அவனுக்குத் தொண்டு செய்தலே வாழ்க்கையின் பயனாம்.

புகழு நல் ஒருவன் என்கோ

"புகழு(ம்)நல் ஒருவனென்கோ?
பொருவில் சீர்ப்பூமி யென்கோ?
திகழுந் தண்பரவை யென்கோ?
தீயென்கோ? வாயுவென்கோ?
நிகழும் ஆகாசம் என்கோ?
நீள்சுடர் இரண்டும் என்கோ?
இகழ்வில் இவ்வனைத்தும் என்கோ?
கண்ணனைக் கூவு மாறே". 3. 4. 1.

(சுருதி ஸ்மிருதி முதலியவைகளாலே) புகழப்பட்ட நன்மை மிக்க ஒப்பற்றவன் என்பேனோ? ஒப்பில்லாத (பொறுமை முதலிய) குணங்களையுடைய பூமி என்பேனோ? பிரகாசிக்கின்ற குளிர்ச்சியுடைய கடல் என்பேனோ? தீ என்னும் தத்துவம் என்பேனோ? வாயு தத்துவம் என்பேனோ? நிற்கும் ஆகாச தத்துவம் என்பேனோ? சந்திர சூரியர்கள் என்பேனோ? ஒன்றொழியாமல் இவையெல்லாம் என்பேனோ? நான் கண்ணபிரானை எவ்வாறு சொல்வேன்?

உனக்கு மிகை அல்லேன் அங்கே

"நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்
ஆகிலும் இனி உன்னை விட்டொன்றும்
ஆற்ற கிற்கின்றிலேன் அரவினணை யம்மானே!
சேற்றுத் தாமரை செந்நெல் ஊடுமலர் சிரீவர மங்கலநகர்
வீற்றிருந்த எந்தாய் ! உனக்கு மிகை யல்லே னங்கே".
5. 7. 1.

இயற்றிய தவம் உடையேன் அல்லேன். நுட்ப ஞானம் உடையேன் அல்லேன். ஆகிலும் உன்னைவிட்டுப் (பிரிந்து) ஒரு சிறிதும் (ஒரு கணமும்) ஆறியிருக்கும் சக்தியில்லேன். அரவை (ஆதிசேஷனை) அணையாகக் கொண்ட ஈசனே! சேற்றிலே செந்நெற்கட்கு ஊடே பெருமை தோன்ற எழுந்தருளியிருக்கும் எனக்குத் தந்தை ஆனவனே! உனக்கு நான் மிகை (பாரம்) ஆக மாட்டேன்.

## உன்னை எங்கே காண்கேனே?

"பிறந்த மாயா! பாரதம் பொருத மாயா! நீ இன்னே
சிறந்தகால் தீ நீர்வான் மண்பிறவு மாய பெருமானே!
கறந்தபாலுள் நெய்யேபோல் இவற்றுள் எங்கும் கண்டுகொள்
இறந்துநின்ற பெருமாயா! உன்னை எங்கே காண்கேனே?" 8. 5. 10.

(கர்ம வசப்படாமலே) அவதரித்த ஆச்சரிய மானவனே! (ஆச்சரியச் செயல்களைச் செய்து) பாரதப்போர் நடத்திய ஆச்சரியமானவனே! நீ இவ்வாறு (எளியனாய்) (படைப்புக்குக் காரணமான) சிறப்பையுடைய வாயு, தீ, நீர், ஆகாசம், பூமி என்னும் ஐந்து பூதங்களுக்கும் (அவைகளின் காரியமான) மற்ற (தேவன் மனிதன் முதலிய) எல்லாப் பொருள்களுக்கும் ஆத்மா வான ஈசனே! (கண்ணாலே காண்கின்ற) கறந்த பாலுக்குள் (காண அரிதானபடி) நின்ற அதி ஆச்சரியமானவனே! உன்னை எவ்விதத்திலே காணக் கடவேன்?

## ஒன்றும் மாயம் செய்யேல் என்னையே

"முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா! என் பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கண் கருமாணிக்கமே! என் கள்வா!
தனியே னாருயிரே! என் தலைமிசையாய் வந்திட்டு
இனிநான் போகலொட்டேன் ஒன்றும் மாயம் செய்யேல்
என்னையே". 10. 10. 1.

(அண்டத்தைப் படைக்கும் சங்கற்பமான) மனத்தை உடையவனே! (பின் அண்டத்தில் உள்ள பலவற்றையும் படைத்ததற்காக) பிரம்மாவாய் (பிரம்மாவுக்கு அந்தர்யாமியாய்) நின்றவனே! (உலகத்தை அழிக்கும்) உருத்திரனாய் (உருத்திரனுக்கு அந்தர்யாமியாய் இருப்பவனே) எனக்குரிய (எனக்கு ருசியைப் பிறப்பித்த) கனி போன்ற (இன்பமயமான) வாயையும், தாமரை மலர் போன்ற (அழகிய) கண்ணையும் உடைய, ஒரு துளையாத கருமாணிக்க வடிவுடையாய்! என்னையும் (உன் அழகாலே யான் உணராதபடி) வஞ்சித்துப் பறித்துக்கொண்டவனே! (பெறற்கரும் பேறுபெற்ற) தனியேனுடைய அருமையான உயிர் போன்றவனே (உன் குணாநுபவமே உயிராக வாழ்வித்தவனே), என் தலைமேல் திருவடிகளை அமரும்படி நீட்டி வைத்து இனி யான் (முன்பு போல) என்னை விட்டுப்போக இசையேன். என்னை ஒரு சிறிதும் மயக்கத்துக்கு உள்ளாக்காதே.

## ஆழ்வார்கள் அருளிச்செய்த
## நாலாயிர திவ்வியப் பிரபந்தம் ஸம்பூர்ணம்

### சாற்றுமுறை

"பல்லாண்டு பல்லாண்டு பல்லா யிரத்தாண்டு,
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண் ணா,உன்
சேவடி செவ்விதிருக் காப்பு!"

"அடியோ மோடும்நின் னோடும் பிரிவின்றி யாயிரம் பல்லாண்டு,
வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு,
வடிவார் சோதி வலத்துறை யும்சுட ராழியும் பல்லாண்டு,
படைபோர் புக்கு முழங்குமப் பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே".

## ஆண்டாள் வாழித்திருநாமம்

"கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர்
சோதி மணிமாடம் தோன்றுமூர்,--நீதியால்
நல்லபத்தர் வாழுமூர், நான்மறைக ளோதுமூர்,
வில்லிபுத்தூர் வேதக்கோ னூர்".

"பாதகங்கள் தீர்க்கும் பரம னடிகாட்டும்,
வேத மனைத்துக்கும் வித்தாகும்,--கோதைதமிழ்
ஐயைந்து மைந்தும் அறியாத மானிடரை,
வையம் சுமப்பதூஉம் வம்பு".

"திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே!
திருப்பாவை முப்பதூஉம் செப்பினாள் வாழியே!
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே!
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே!
ஒருநூற்று நாற்பத்து மூன்றுரைத்தாள் வாழியே!
உயரரங்கர்க் கேகண்ணி யுகந்தளித்தாள் வாழியே!
மருவாரும் திருமல்லி வளநாடு வாழியே!
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே!"

# ஸ்ரீ இராமானுஜர்

நூற்றியிருபது ஆண்டுகள் வாழ்ந்த (1017-1137) ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குச் சமுதாயத்தை வழி நடத்திச் செல்லத்தக்க மிக உயர்ந்த கருத்துகளைப் பரப்பியவர் மகான் ஸ்ரீ இராமானுஜர் ஆவார். சென்ற நூற்றாண்டிலும், இந்த நூற்றாண்டிலும் சாதிபேதமற்ற சமுதாயத்தைப் படைக்க, சான்றோர்கள் பாடுபட்டுள்ள வரலாற்றை நாம் அறிவோம். அவர்களுக்கெல்லாம் வழிகாட்டும் வகையில் வாழ்ந்து காட்டியவர் ஸ்ரீ இராமானுஜர் அவர்கள். தாழ்த்தப்பட்ட பிரிவிலே தோன்றிய திருக்கச்சி நம்பிகளை மதித்து வணங்கித் தம்முடைய குருவாக ஏற்றுக் கொண்டவர் ஸ்ரீ இராமானுஜர். அவ்வாறே உறங்கா வில்லிதாசன் போன்ற தாழ்த்தப்பட்ட பிரிவினரையும் தம்முடைய சீடர்களில் ஒருவனாக ஏற்றுக் கொண்டவர்.

குணத்தில் குறைந்தவளான தம்முடைய துணைவியார் தஞ்சம்மாளின் குற்றங்களையும் கருணையால் பொறுத்துக் கொண்ட ஸ்ரீ இராமானுஜர், சாதுரியமான ஓர் ஏற்பாட்டின் மூலம் தம் துணைவியாரைப் பிரிந்து சந்நியாசம் வாங்கிக் கொண்டார். மதமாற்றம் என்பது தூய்மையான மனமாற்றத் தினால் அமையவேண்டும். பணத்தைக் கொடுத்தோ, பள்ளிக் கூடங்கள் கட்டியோ, மருத்துவ வசதிகளைச் செய்தோ, தம் மதத்துப் பெண்ணை வேற்று மதத்தானுக்குக் கொடுத்தோ ஸ்ரீ இராமானுஜர் மதமாற்றம் செய்யவில்லை. பெரிய பெரிய அரசியல் கட்சிகளாலும், அதிகாரம் பெற்ற அரசுகளாலும் ஒழுங்காகச் செய்ய முடியாத பெரும் மத, சமுதாயப் புரட்சி களையெல்லாம் தனி மனிதனாக நின்று ஸ்ரீ இராமானுஜர் நிறைவேற்றினார்.

பெருமாளுக்கு ஒரு துலுக்கநாச்சியாரைத் திருமணம் முடிக்க, அதைப் பன்னிரண்டு ஆழ்வார்களும் பாடிய ஸ்ரீரங்கத்திலேயே அமலுக்குக் கொண்டு வந்தார். அதுவும் வைதீகம் உச்சமாக இருந்த காலத்தில் நடந்தது. அதே மாதிரியே திருநாராயணபுரத்திலும் டில்லி நவாபு பெண்ணை, பெருமாளுக்குத் திருமணம் புரிவித்து பீபீநாச்சியார் ஆக்கி, உற்சவங்களை அமர்க்களமாக நடத்திக் காட்டினார். திருநாராயணபுரத்தில் ஹரிஜனங்களுக்குத் திருக்குலத்தார் என்று ஸ்ரீ இராமானுஜர் பெயரிட்டு அவர்களைக் கோயிலுக்குள் அநுமதித்தார். இந்த ஆலயப் பிரவேசம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நடந்தது.

இதை அந்தணர் குலம் பொறுக்கவில்லை. ஆனால் இராமானுஜர் அதுபற்றிக் கவலைப்படவில்லை. இராமானுஜரின் இதயம் மிகவும் விசாலமானது. அவருடைய பரந்த நோக்கம் அற்புதமானது. அவருடைய சமதிருஷ்டி உலகமே வியந்து போற்றக் கூடியது. இராமானுஜர் காலத்திலும், அவரைப்போல் இன்னொரு வியக்தி கிடையாது. அவருக்கு முன்னும் கிடையாது. பின்னும் கிடையாது. இந்தத் தமிழ்நாடு செய்த புண்ணியம் அவரைப் பெற்றது. கருணையே அஸ்திவாரமாகக் கொண்ட அவரது மனம் இன்னும் ஈடிணையில்லாமல் உயர்ந்து நிற்கிறது. அவருடைய கருணையுள்ளம் அவருடைய சீடர்களையும் கவர்ந்தது. அவரைப்போலவே அவர்களும் தம் புத்தியையே ஆயுதமாகக் கொண்டிருந்தார்கள்.

சென்னைக்கு மிக அருகில் உள்ள ஸ்ரீபெரும்புதூர் என்ற திவ்ய க்ஷேத்திரத்தில் சாலிவாஹன சகாப்தம் 940-வது பிங்கல வருடம் சித்திரைத் திங்கள் வளர்பிறை பஞ்சமி திருவாதிரை நட்சத்திரத்தில் வியாழக்கிழமையன்று நடுப்பகலில் கடக லக்கினத்தில் ஆசூரி கேசவப் பெருமாள், பூப்பிராட்டியார் என்னும் உத்தமத் தம்பதியருக்குத்

திருமகனாய், அனந்தனுடைய அம்சமாக ஸ்ரீ இராமானுஜர் அவதாரம் செய்தார். ஆருத்ரா நட்சத்திரத்திற்கே ஏற்றம் அளிக்க வந்த மகாபுருஷனாகவும், "பொலிக! பொலிக!" என்ற நம்மாழ்வாரின் பாட்டில் காணப்படும் "கலியும் கெடும் கண்டு கொண்மின்" என்ற வாக்கியத்தை மெய்ப்பிக்க கலியின் இருளைக் கிழித்து ஆண்டவன் அருள் காக்க ஆவிர்ப்பவித்த சூர்ய ரச்மிபோல அமைந்தார்.

திவ்ய மங்கள விக்ரகமாய், விலக்ஷணத்துக்கு ஓர் இலக்கணமாய், பூப்பிராட்டியாரின் வயிற்றில் பிறந்து தேஜோ மயமாய்க் காட்சியளித்த தமது புத்திரனைக் கண்ட கேசவ பெருமாள் மகிழ்ச்சியின் எல்லையை அடைந்தார். இப்படித் தமக்கு ஏற்பட்ட புத்திரபாக்கியத்தைப்பற்றித் தமது மைத்துனரான ஸ்ரீசைல பூர்ணர் எனும் பெரிய திருமலை நம்பிக்குத் தெரியப்படுத்தினார். அவர் ஸ்ரீ ஆளவந்தாரின் மனத்துக்கினிய சீடர்களில் ஒருவர். திருவேங்கட முடையானுக்குச் சேவை செய்வதே தமக்குக் கடமையென அந்தப் பணியிலேயே காலங்கழித்து வந்தார். இச்செய்தியைக் கேட்டு அவர் பூரித்துப் போனார். உடனே குழந்தையைக் காண ஸ்ரீபெரும்புதூருக்குத் திருமலையிலிருந்து ஓடோடியும் வந்தார்.

தம் சகோதரிக்குப் பிறந்திருக்கும் தெய்வீகக் குழந்தையை உற்றுப் பார்த்துக் கொண்டே பரவசப்பட்டுப் போனார். அப்பரவசத்தில் இருந்து கொண்டே "இந்தக் குழந்தை சாமான்யமான குழந்தையல்ல. ஒரு மகான் பிறந்திருக்கிறான். இளைய பெருமாளைப்போல கைங்கர்ய லக்ஷ்மி இவன் திருமுகத்தில் பிரகாசிக்கிறது" என்று மொழிந்தார். அதன் விளைவாக, குழந்தைக்கு லக்ஷ்மணன் என்ற பெயரும் இட்டார். "இவன் சர்வலக்ஷண சம்பன்னன். சகல சாஸ்திரங்களையும் அதிகரிப்பான்" என்று ஆசீர்வதித்தார். உற்ற வயதில் அன்னப் பிராசனம் நடந்தேறியது. பிறகு

முறைப்படி உபநயனமும் நடந்தேறியது. ஸ்ரீ இராமானுஜர் ஸ்ரீபெரும்புதூரில் தமது இல்லத்திலேயே தமது தகப்பனாரிடமே வேத வேதாந்தங்களை எல்லாம் வாசித்து வந்தார்.

தம் பதினாறு வயதில் கிருகஸ்தாஸ்ரமத்தில் புகுந்த இராமானுஜர், அவரது தந்தையும் குருவுமான கேசவ சோமயாஜியை இழந்தார். பிறகு காஞ்சி மாநகருக்கு அடுத்த திருப்புட்குழியில் யாதவப்பிரகாசர் என்ற ஏகதண்டி சந்நியாசி ஒருவர் வேதாந்தங்களைச் சொல்லிக் கொடுப்பதாக அறிந்து, அவரிடம் பாடம் கேட்கச் சென்றார். அங்கு அவருக்கு இன்னொரு துணையும் ஏற்பட்டது. பந்துவாய், பின்னொரு நாள் ஆபத்துக்கு உதவும் அருமை உறவினனாய், நண்பனாய் அவருடைய சிற்றன்னையின் புதல்வனான கோவிந்தனும் அங்கு பாடம் கேட்க வந்து சேர்ந்தார். ஆனால் அந்தக் குருவான யாதவப்பிரகாசர்பால் ஸ்ரீ இராமானுஜருக்கு மரியாதை ஏற்படவில்லை. இவரோ கருவிலேயே திருக்கொண்டவர். அவரது வியாக்யானம் எப்படிப் பொருந்தும்?

ஒரு நாள் இராமானுஜர் குருவுக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தார். குருகுலவாசத்தில் இக்குற்றேவல் களை எல்லாம் செய்தாக வேண்டும். அப்பொழுது குரு சாந்தோக்ய உபநிஷத்தில் வரும் "தஸ்ய யதா கப்யாசம் புண்டரீகம் ஏவம் அக்ஷிணீ" என்ற வாக்கியத்துக்குப் பொருள் சொல்லலானார். "கப்யாஸம்" என்ற சொல்லை கபி, ஆஸம் என்று இரண்டாகப் பிரித்தார். கபி என்றால் குரங்கு. ஆஸம் என்றால் அதன் பின்பகுதி. ஆகவே பகவானுடைய கமலக் கண்கள் குரங்கின் பின்பகுதியைப் போல் சிவந்து இருந்தன என்று விபரீதமாக அர்த்தம் சொன்னார். அது கேட்ட இராமானுஜருக்கு அழுகையே வந்துவிட்டது. குருவின் தொடையில் அவரது கண்ணீர் விழுந்து தெரிக்கவே,

"இராமானுஜா! என்ன நேர்ந்தது?" என்று வினவினார் யாதவப்பிரகாசர்.

"தாங்கள் கூறிய பொருளைக் கேட்க என்னால் தாங்க முடியவில்லை. அதனால் என்னையறியாமல் என் கண்கள் கலங்கி விட்டன" என்றார் இராமானுஜர். "உனது பொருள் என்ன?" என்று கேட்டார் குரு. அதற்கு இராமானுஜர் இறைவன், சூரியனைக் கண்ட தாமரையைப்போலச் சிவந்த கண்களுடையவன் என்று பொருள் கூறினார். அது கேட்ட குருவுக்குக் கோபமே வந்து விட்டது. "என்னை விட உனக்கு சாஸ்த்திரார்த்தம் அதிகமாகத் தெரிந்திருப்பதால், நீ இனி இங்கு வரவேண்டாம்" என்று விரட்டிவிட்டார். இந்த விஷயம் எளிதில் எங்கும் பரவிவிட்டது. இராமானுஜர் அமைதியாகத் தான் இருந்தார். ஆனால் குரு யாதவப்ரகாசரோ மிகவும் மனம் புழுங்கிப் போனார். எப்படியும் இராமானுஜரைத் தீர்த்துக் கட்டிவிட வேண்டும் என்று தீர்மானித்தார்.

அதன் பிறகு குரு சிஷ்யர்களுடன் காசி யாத்திரை புறப்பட்டார். அப்பொழுது அன்புடன் பேசி இராமானுஜரை யும் உடன் அழைத்துச் சென்றார். ஆனால் உண்மையில் இராமானுஜரைக் கங்கை நதியில் அமுக்கி விட்டு வந்து விடுவோம் என்று திட்டமிட்டிருந்தார். அக்கோஷ்டியுடன் இராமானுஜரின் சிறிய தாயார் மகன் கோவிந்தனும் சேர்ந்து கொண்டான். யாத்திரை கோஷ்டி விந்திய மலைச்சாரலுக்கு வந்து சேர்ந்தபொழுது, இந்த ரகசியத்தை எப்படியோ தெரிந்து கொண்டார் கோவிந்தன். அவர் ஒருநாள் இரவு இராமானுஜ ருக்கு இதை ரகசியமாகத் தெரிவித்து, "மெதுவாக இங்கிருந்து நழுவி ஊர் போய்ச் சேர்ந்து விடு" என்று யோசனை கூறினார். அவ்வண்ணமே அவர் அந்த நள்ளிரவு வேளையில் காஞ்சியை நோக்கிப் புறப்பட்டுவிட்டார்.

விடிந்ததும் இராமானுஜரைத் தேடினார்கள். "இருட்டு வேளையில் இந்தப் பக்கம் வெளிவாசலுக்குப் போய் வருகிறேன் என்று சொல்லிப் போனார். அதன் பிறகு திரும்பவேயில்லை" என்றார் கோவிந்தன். தேடிப் பார்த்து விட்டு துஷ்ட மிருகம் கொன்று தின்றுவிட்டிருக்கும் என்று தீர்மானித்தார்கள். அந்த இருட்டில் இராமானுஜருக்கோ வழி தெரியவில்லை. அங்கிருந்த ஒரு வேடன் தம்பதி, "நாங்களும் தெற்கேதான் போகிறோம். வாருங்கள்" என்று வழிகாட்டிச் சென்றார்கள். ஆனால் விடிந்ததும் அவர்கள் மறைந்தே விட்டனர். மற்றும், அவர் அப்பொழுது காஞ்சி நகர் எல்லை யில் இருந்தார். அப்பொழுதுதான் "இராமானுஜருக்குப் பெருமானே வந்து உதவியிருக்கிறார்" என்று தெரிந்தது.

"இராமானுஜன் கதி இப்படியாகிவிட்ட பிறகு, நாம் கங்கையாத்திரைக்குப் போக வேண்டாம்" என்ற அவர்களும் ஊர் திரும்பத் தொடங்கினார்கள். தனியாய்த் திரும்பி வந்த மகனைக் கண்டதும், "என்ன இராமானுஜா! அதற்குள் காசி யாத்திரை முடிந்து விட்டதா? அல்லது பாதியில் திரும்பி விட்டாயா?" என்ற வினவினாள் தாயார். மெல்ல மெல்ல நடந்ததைத் விவரித்ததைக் கேட்ட அந்தப் புண்ணியவதி வரதனை மனமார, வாயார வாழ்த்தினாள். "இனி நீ எதைச் செய்தாலும் திருக்கச்சி நம்பியைக் கேட்டுச் செய். அவர் சபரி யின் அம்சம். வரதராஜப் பெருமானோடு நேரிலேயே பேசு பவர்" என்று மகனுக்குச் சொன்னாள். அவ்வண்ணமே இராமானுஜர், அன்றே திருக்கச்சி நம்பியைச் சந்தித்து நடந்ததைச் சொன்னார். வரதன் திருவருளை நினைத்து மெய் யெல்லாம் புல்லரிக்க, "நீ திருமஞ்சன கைங்கரியத்தில் ஈடுபடு. அதுவே அவன் திருவுள்ளம்" என்றார் திருக்கச்சி நம்பி.

காஞ்சி நகருக்குத் திரும்பிய யாதவப்ரகாசர், அங்கிருந்த இராமானுஜரைக் கண்டு பிரமித்துப் போனார். அப்படியே கட்டித் தழுவிக் கொண்டார். அப்பொழுது இராமானுஜர்பால்

அவருக்கு மதிப்பு உயர்ந்தது. இந்த நிலையில் ஸ்ரீ இராமானுஜர் பேரும் புகழும் காஞ்சியின் எல்லைகளையும் தாண்டி வெளியிடங்களுக்கும் பரவின. ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்த யமுனைத் துறைவர் காதிலும் இராமானுஜர் மகிமை விழுந்தது. யமுனைத் துறைவருக்கு ஆளவந்தார் என்ற பட்டமும் உண்டு. அவர் உடனே காஞ்சி நகருக்குப் புறப்பட்டுவிட்டார். அங்கு வரதராஜர் சந்நிதியில் திருக்கைங்கரியம் செய்து கொண்டிருந்த இராமானுஜரைக் கண்ட, ஆளவந்தாரின் கண்கள், அவர்மீது சில விநாடிகள் நிலைத்தன. இராமானுஜர் கண்களும் ஆளவந்தாரின் திருக்கண்களுடன் ஒரு விநாடி கலந்து தாழ்ந்தன. ஆளவந்தாரின் கம்பீரமான கண்களால் ஊடுருவப் பட்ட இளையாழ்வாரின் இதயத்தில் பெரும் பிரகாசம் ஒன்று ஒளிவிட்டதென்றால் ஆளவந்தாரின் இதயத்தில் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தை வளர்க்கவும், போஷிக்கவும் ஒரு மகான் கிடைத்துவிட்டான் என்ற பரம திருப்தி நிலவியது.

அந்த நகரத்து அரசன் மகளை பிரம்மராக்ஷஸ் ஒன்று பிடித்திருந்தது. யார் யாரையோ அழைத்து வந்து மந்திரங்கள் ஓதியும், அது அவளை விட்டுப் பிரிந்தபாடில்லை. கடைசியில் ஸ்ரீ இராமானுஜரைப்பற்றிக் கேள்விப்பட்டு, அவரைத் தன் அரண்மனைக்கு அழைத்து வந்து விஷயத்தை விளக்கினார். உடனே இராஜகுமாரியை அழைத்து வந்தார்கள். இராமானுஜர் எழுந்திருந்து அரசகுமாரியின் சென்னியில் தனது திருப் பாதங்களை வைக்க, பிரம்மராக்ஷஸ் "இதோ போகிறேன்" என்று கூறிப் பிரிந்து சென்றது. அரசன் பெருமகிழ்ச்சியடைந்து அவருக்குப் பொன்னும் பொருளும் கொடுக்க வந்தான். அவர் பெற்றுக் கொள்ளவில்லை. "பெருமாளுக்குக் கைங்கரியம் செய்" என்று சொல்லிவிட்டார்.

நமக்குப் பிறகு இராமானுஜரே ஸ்ரீரங்கத்தில் இருக்க வேண்டியவர் என்று தீர்மானித்து எப்படியாவது இராமானுஜரை ஸ்ரீரங்கத்துக்கு அனுப்பி வைக்கும்படி வரதராஜப் பெருமாளைப்

பிரார்த்தித்துக் கொண்டு ஸ்ரீரங்கம் திரும்பிவிட்டார் ஆளவந்தார். திருக்கச்சி நம்பியைத் தமது குருவாக வரிக்க முயன்ற போது திருக்கச்சி நம்பி தமது கீழ்க்குலப் பிறப்பை நினைத்து இசையவில்லை. திருக்கச்சிநம்பி பிராமண ரல்லாதார். ஆயினும் பரமபக்தர். இரவில் பெருமாளே அவரிடம் வாய் திறந்து பேசுவார். அது இராமானுஜருக்கும் தெரியும். பிறகு திருக்கச்சிநம்பி அமுது செய்த மீதத்தைச் சாப்பிட்டு அதன் மூலம் ஆத்மீக முறையில் குருசிஷ்ய பாவத் தை ஏற்படுத்திக் கொள்ள முயன்றார் இராமானுஜர். ஆனால் திருக்கச்சி நம்பியின் சாமர்த்தியத்தாலும் தமது தர்மபத்தினியின் ஆசார மமதையாலும் அதிலும் தோல்வியடைந்தார்.

அதன்பிறகு சகல சராசரங்களுக்கும் மூலப் பொருளான பகவானிடமே தமது அபிலாஷைகளுக்கு முடிவு காணவேண்டி நம்பியை அணுகி, தமது மனத்தில் உள்ளவைபற்றி பெரு மாளைக் கேட்கும்படி வேண்டிக் கொண்டார். அதற்கிணங்க திருக்கச்சிநம்பி அன்றிரவு பெருமாளைக் கேட்க, அவரும் விவரித்தார். "நாமே சகலத்துக்கும் உயர்ந்த சக்தியான மூலப் பொருள். ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் அவசியமான பேதம் உண்டு என்பதே உண்மையான தத்துவம். என்னை அடைய ஒரே நேரான வழி நம்மிடம் அடைக்கலம் புகுவதுதான். இப்படி வாழ்பவன் உடல் உயிரை விட்டுப் பிரியும் நேரத்தில் நம்மைத் துதி செய்ய அவசியமில்லை. உயிர் உடலிலிருந்து பிரிந்ததும் இவன் நம்மிடம் வந்து நிரந்தரமான ஆனந்தத்தை அடைவான். பெரியநம்பியின் திருவடிகளை இவன் ஆசிரயிக்கட்டும்" என்று சொன்னார் பெருமாள். மறுநாள் காலை இதை இராமானுஜருக்குத் தெரிவித்தார் திருக்கச்சிநம்பி. "இப்படி பெருமாள் அருளைப் பெற நான் என்ன புண்ணியம் செய்தேன்" என்று கூறி மெய்சிலிர்த்து நம்பியின் திருவடிகளில் அவர் தடுக்கு முன்பே விழுந்துவிட்டார் இராமானுஜர். இம்முறை நம்பி அவரைத் தடுக்கவில்லை. நம்பி மகிழ்ந்து நா தழுதழுக்க "இராமானுஜா! வேறு யாருக்கும் கிட்டாத

அளவுக்குப் பெருமாளின் அருள் உமக்குக் கிடைத்திருக்கிறது. இதுவரை நிறைவேறாத அளவுக்கு உன்மூலம் ஸ்ரீவைஷ்ணவம் பரவி உலகத்தையே காப்பாற்றப் போகிறது!" என்றார்.

ஸ்ரீரங்கத்தில், நித்தம் நித்தம் ஸ்ரீவைஷ்ணவத் தத்துவங் களையும், பிரபன்னர்களின் குண விசேஷங்களையும் போதித்து வந்த ஸ்ரீ ஆளவந்தாரின் தேகநிலை வரவர மோசமாகி வந்தது. அவரது உள்ளக்கிடக்கையை அறிந்த அவரது பிரதம சீடர் பெரியநம்பி இராமானுஜரை அழைத்து வர, காஞ்சிக்குப் புறப்பட்டார். ஆனால் அவர் இராமானுஜருடன் ஸ்ரீரங்கத் துக்குத் திரும்பி வந்த அன்றே ஆளவந்தார் பரமபதம் அடைந்து விட்டார். அப்பதவியை ஏற்றுக் கொள்ளும்படி இராமானுஜரை வேண்டிக் கொண்டனர். ஆனால் அவரது மனம் அந்தப் பெரும் பதவியை ஒப்பும் நிலையில் இல்லை. அதனால் விடைபெற்று, காஞ்சி நகருக்குத் திரும்பினார். அதன்பிறகு தற்காலிகமாகத் திருவரங்கப் பெருமான் அரையரே அதை ஏற்றுக் கொண்டார்.

இருப்பினும் ஸ்ரீ இராமானுஜரின் இதயத்தில் அமைதி யில்லை. சரியான ஆசார்யனை ஆசிரயிக்காமல் பெருமாளை ஆசிரயித்துப் பயனென்ன என்று நினைத்தார். இடையில் தம் மனைவியிடம் வெகுண்டார். "எத்தனை பாகவத அபராதங் களை என்மேல் சுமத்திவிட்டாய்! முதலில் திருக்கச்சிநம்பியின் மீதத்தை நான் புசிக்காதபடி செய்தாய். இரண்டாவது பசித்த ஏழை வைஷ்ணவனுக்கு உணவு மறுத்தாய். இன்னும் என்னென்ன பாவங்களை என் தலைமீது சுமத்தப் போகிறாய்?" என்று சீறினார். பிறகு அவளைத் தாயகத்துக்கு அனுப்பி வைத்துவிட்டு நேரே கோயிலுக்குச் சென்று பேரருளாளர் முன்பு நின்றார். "அடியேனுக்கு சந்நியாச ஆசிரமம் அருள வேணும்" என்று பிரார்த்தித்தார். அன்று சந்நிதியில் திருக்கச்சி நம்பியும், காஞ்சியில் ஸ்ரீவைஷ்ணவர்களும் நிரம்பியிருந்தனர். "இராமானுஜரே! நீர் உள்ளளவும் திரிதண்ட காஷாயதிகளைத்

தரிசிக்கக் கடவீர்" என்று பெருமாள் ஆணையிட்டார். "இன்று முதல் இராமானுஜமுனி என்ற திருநாமத்தையும் பெறுகிறீர்" என்றும் அனுக்கிரகித்தார். பிறகு, "திருக்கச்சிநம்பி! நம் இராமானுஜனை நல்லதொரு மடத்திலே வைத்து வாரும்" என்று எம்பெருமான் கட்டளையிட்டார். ஸ்ரீவைஷ்ணவ தர்சன நிர்வாகத்துக்காகப் பிறந்த ஸ்ரீ இராமானுஜர் அன்றே திரிதண்டகாஷாயாதிகளை அணிந்து தமக்கு ஏற்பட்ட மடத்தில் எழுந்தருளினார்.

ஸ்ரீ இராமானுஜர் மடம் துரிதமாக விரிவடையலா யிற்று. மகத்தான மாணிக்கங்கள் இரண்டு அவருடைய மடத்தில் சேர்ந்து தங்கள் ஆத்மாக்களையும் மடத்தின் சிறப்பையும் உயர்த்தின. அந்த மாணிக்கங்களில் ஒன்று தாசரதி என்னும் முதலியாண்டான். இன்னொன்று திருமறுமார்பன் என்கிற திருநாமத்தையுடைய கூரத்து ஆழ்வான். இன்னொரு விசித்திரமும் காஞ்சியில் நிகழ்ந்தது. நேராகத் தமது பழைய மாணவரிடம் சென்று அவர் காலில் விழுந்தார் யாதவப்ரகாசர். இராமானுஜரைப் பிரதக்ஷிணம் செய்து தொழுதார். இராமானுஜரும் அவருக்கு திரிதண்டகாஷாயம் அளித்து அவருக்கு கோவிந்த ஜீயர் என்ற பட்டமும் கொடுத்தார். பிறகு சீடனான யாதவப்ரகாசர் ஸ்ரீ இராமானுஜர் உத்தரவுப்படி "யதிதாம ஸமுக்சயம்" என்ற நூலைப் பதினோரு அத்தியாயங்களில் இயற்றினார்.

இப்படி எதிரிகளையும் ஈர்க்கவல்ல சக்தியுடைய இராமானுஜர், கூரத்தாழ்வானுக்கும் முதலியாண்டானுக்கும் மீமாம்ஸா சாஸ்திரத்தைப் போதித்துக் கொண்டு காஞ்சியில் இருந்தார். அந்தச் சமயத்தில் ஸ்ரீரங்கத்திலிருந்து திருவரங்கப் பெருமான் அரையர் காஞ்சிக்கு வந்து சேர்ந்தார். அவருக்கு நல்ல வரவேற்பு அளிக்கப்பட்டது. மறுநாள் விடியற்காலையில் வரதராஜப் பெருமாளைச் சேவிக்க காஞ்சி அரையருடன்

சென்ற ஸ்ரீரங்க அரையர் பேரருளாளனின் சேவையைக் கண்டு அதில் மூழ்கினார.

கச்சிக்கு வாய்த்தான் என்கிற திருமண்டபத்திலே வரதராஜப் பெருமாள் முன்பு கோயில் ஊழியர்களும் இதர சேவார்த்திகளும் கூட்டமாய் நிற்க, திருக்கச்சிநம்பி பெருமாளுக்குக் கவரி வீச, ஸ்ரீ இராமானுஜர் வரதாஷ்டகத்தை முழங்க, திரிலோக சக்ரவர்த்தியாய்க் காட்சியளித்த வரதராஜனுடைய புண்ய சதஸின் ஓரமாய் நின்றார் ஸ்ரீரங்கம் அரையர். ஆனால் அவரைக் கண்டுவிட்ட திருக்கச்சிநம்பிகள் ஓடோடி வந்து பெருமாளின் அருகிலேயே அவரை அழைத்துச் செல்ல, அங்கு அரையருக்குத் தீர்த்தம் பிரசாதங்கள் அளிக்கப்பட்டு சடகோபமும் சாதிக்கப்பட்டது. அப்போது திருவரங்கப் பெருமாளரையர் "உம் அருள் என்னே!" என்று மெய்மறந்து நின்றார். பிறகு பெருமாளுடைய முகத்திலிருந்து பாட உத்தரவு வர, திருவரங்கப் பெருமாள் அரையர் மெல்ல முத்தமிழ்க் கலைகளை அருட்கணைகளாகத் தொடுக்கலானார்.

பாடி முடித்ததும் பத்துடை அடியவருக்கு எளியவனான பகவான் "உமக்கு வேண்டியதைக் கேளும், தருகிறோம்" என்று வாக்குக் கொடுத்தார். அது கேட்டு மெய்சிலிர்த்தார் அரையர். இராமானுஜரைச் சுட்டிக்காட்டி "இவரை அடியேனுக்குத் தர வேணும்" என்றார். "அப்படியா? இவரைத் தவிர வேறு எதை வேண்டுமானாலும் கேளும்" என்றார் பெருமாள். "தேவரீர் இப்படி இரண்டு வார்த்தை பேசலாமா?" எனக் கேட்டார் அரையர். பிறகு, பிரிய மனமில்லாமல், "உம் இஷ்டப்படி அழைத்துப்போம்" என்றருளினார் பெருமாள்.

பரமபக்தனான ஸ்ரீ இராமானுஜரின் கரத்தைப் பற்றிக் கொண்டு, "உத்தரவாகிவிட்டது வாரும்" என்று அழைத்தார். வரதராஜப் பெருமாளைப் பிரிய மனமில்லை அவருக்கு. மனம்

சிறிது சங்கடப்பட்டது. இருந்தும் வேறு வழியில்லாமல், முதலியாண்டானையும் கூரத்தாழ்வானையும் அருகில் அழைத்து, "நமது மடத்துக்குச் சென்று நமது திருவாராதன மூர்த்தியான பெருமாளையும், வட்டில்கள் முதலியவற்றையும் கொண்டு வாருங்கள்" என்றார். அவ்வண்ணமே, அவர்கள் சிறிது நேரத்தில் கொண்டு வர, அவர்களையும் அழைத்துக் கொண்டு அரையருடன் ஸ்ரீரங்கத்துக்குப் புறப்பட்டுவிட்டார்.

திருவரங்கத்திலே ஸ்ரீஇராமானுஜருக்கு வரவேற்பளிக்க ஊரே திரண்டிருந்தது. வீதிகளை வலம் வந்து கோயிலுக்குள் புகுந்தனர். "இனி அனைவரும் உம்மை "உடையவர்" என்று கொண்டாடுவர்" என்றருளினார் பெருமாள். உடனே கோயில் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டார் உடையவர். கோயில் நிர்வாகத்தைச் சிறப்பாக நடத்திக் கொண்டு போன உடைய வரின் உள்ளத்தில் ஆனந்தம் பொங்கியிருந்தது. கோயிலில் பல துறைகளையும் சீர்திருத்தியதுடன் தம் தமிழ்ப் பற்றையும் காட்டினார். நிர்வாகக் கிரமத்திலிருந்தவர்களுக்குப் பாகவத நம்பிமார், கோயில் கணக்கன், சடகோபதாசன் என்ற தமிழ்ப் பெயர்களைச் சூட்டினார்.

இதற்கிடையில், ஸ்ரீகாளத்தியில் கைங்கர்யம் செய்து கொண்டிருந்த கோவிந்தனை, பெரிய திருமலை நம்பி மூலம் மனம் மாறச் செய்து தன்னிடம் அழைத்துக் கொண்டார். ஸ்ரீ வைஷ்ணவத்தின் ரகஸ்யார்த்தங்களை அறிந்து கொள்ளத் திருக்கோட்டியூர் நம்பியிடம் செல்ல வேண்டும் என்பதைப் பெரிய நம்பி மூலம் அறிந்து கொண்டு அவ்வண்ணமே சென்றார் இராமானுஜர். திருக்கோட்டியூர் நம்பி முதலில் பிடி கொடுக்கவேயில்லை. "இன்னொரு சமயம் பார்ப்போம்" என்று அனுப்பிவிட்டார். இவ்வண்ணமே இராமானுஜர் அவரிடம் பதினெட்டு முறை சென்றும், "பிறகு பார்ப்போமே!" என்ற பதிலே கிடைத்தது நம்பியிடமிருந்து.

அதன் பிறகு பெருமாளே திருக்கச்சி நம்பியிடம் சிபாரிசு செய்ய, "சரி அவரைத் தண்டும் பவித்ரமும் மட்டும் தாங்கி வரச் சொல்லும்" என்று ஆள் அனுப்பினார் திருக்கோட்டியூர்நம்பி. உள்ளம் பூரித்து முதலியாண்டானையும் கூரத்தாழ்வானையும் அழைத்துக் கொண்டு நம்பியிடம் சென்றார் இராமானுஜர். "உன்னைத் தனியாகத்தானே வரச் சொன்னேன்" என்றார் நம்பி. "தாங்கள் கூறியபடி தண்டும் பவித்ரமுமாக இவர்களை அழைத்து வந்தேன்" என்றார் இராமானுஜர். "அப்படியானால் இது இவர்களைத் தவிர வேறொருவருக்கும் தெரியவேண்டாம்" என்று எச்சரித்துவிட்டு, ஸ்ரீ வைஷ்ணவர்கள் எப்பொழுதும் ஜபிக்க வேண்டியதும், மகாசக்தி வாய்ந்ததும், நலம் தரும் சொல்லுமான அஷ்டாக்ஷர மகாமந்திரத்தை உபதேசித்தருளினார்.

உபதேசம் பெற்ற இராமானுஜர் ஊர் திரும்பவில்லை. அவ்வூரிலிருந்த ஸ்ரீசௌம்ய நாராயணப் பெருமாள் கோயிலுக்குச் சென்றார். கோபுரத்தின்மீது ஏறி, தான் பெற்ற அஷ்டாக்ஷர மந்திரத்தை உரக்கச் சொல்லி, அங்கிருந்த எல்லோரையும் சொல்லச் செய்தார். "ஓம் நமோ நாராயணாய!" என்று அனைவரும் ஒரே குரலில் கூறினர். அதுகேட்டு இராமானுஜர் மிக்க மனநிறைவு அடைந்தார். இது அறிந்த நம்பி உடனே இராமானுஜருக்கு ஆளனுப்பி அழைத்து வரச் செய்தார். "என்ன இப்படி நடந்து கொண்டீர்களே!" என்று வெகுண்டார்.

ஸ்ரீ இராமானுஜர் பரம பக்தியுடன் தலை தாழ்த்தி "ஸ்வாமி! இதனால் நான் ஒருவன்தானே நரகத்துக்குப் போவேன்? மற்ற அத்தனை பேரும் தேவரீருடைய திருவடித் தியானத்தோடு மந்திரத்தைச் சொல்வதால் ஜீவிப்பார்களே!" என்றார். இதுகேட்ட திருக்கோட்டியூர் நம்பி பேசும் திறனையே இழந்தார். ஸ்ரீ இராமானுஜரைக் கண்குளிரப்

பார்த்தார். "அடடா! இத்தனை நாள்களாக இந்தப் பரந்த நோக்கம் நமக்கு வரவில்லையே!" என்று மனம் நொந்தார். உடனே உடையவரை மார்புறத் தழுவிக் கொண்டு, "நீரே எம் பெருமாள். அவன் கருணா விலாசம் உம்மிடம் தானிருக்கிறது" என்று கூறி மகிழ்ந்தார். அப்பொழுது அங்கிருந்த திருமலையாண்டானை அறிமுகம் செய்து வைத்தார் நம்பி.

பிறகு திருமலையாண்டான் ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தார். அன்று முதல் திருவாய் மொழியை உபதேசிக்கத் தொடங்கிய திருமலையாண்டான், வெகு சீக்கிரத்தில் தம்மையும் மீறிய ஓர் அமானுஷ்ய புருஷனிடம் தாம் சிக்கிக் கொண்டதைப் புரிந்து கொண்டார். அவர் கொடுத்த விளக்கத்துக்கு, மேல்விளக்கம் கொடுத்தார் இராமானுஜர். "இந்த விசேஷ வியாக்யானங்கள் எல்லாம் தங்களுக்கு எப்படித் தெரிகிறது?" என்று வியந்தார் திருமலை யாண்டான். "துரோணருக்கு ஏகலைவன் எப்படியோ அப்படி ஆளவந்தாருக்கு அடியவன்" என்று எம்பெருமானார் சுட்டிக்காட்டியதும் திருமலையாண்டான் வியப்பின் எல்லையை எய்தினார்.

இப்படிப் பரமஜோதியாய்ச் சுடர்விட்ட ஸ்ரீ இராமானுஜர் பிரபாவம் எங்கும் பரவலாயிற்று. அதனால் மகிழ்ந்தவர் பலர். பொறாமை கொண்டவர் சிலர். உடையவர் ஏற்கனவே செய்த கோயில் நிர்வாக முறைகளை உறுதிப் படுத்தினார். முறையாக கோயில் திட்டங்களை நடத்தி வைப்பதில் அதுவரை கோயில் துறை நிர்வாகிகள் அனுபவிக்காத கண்டிப்பைக் கடைப்பிடித்தார். அதனால் கோயில் சிப்பந்திகள் உடையவரிடம் சீற்றம் கொள்ளத் தொடங்கினர். உடையவரைத் தீர்த்துக்கட்ட, பிரசாதத்தில் விஷத்தைக் கலந்து கொடுத்தனர். அவன் பிரசாதத்தை அளித்த முறை, தண்டனிட்டுச் சென்ற வேகம், அவன் முகத்தில் தெரிந்த சோகம் அனைத்தையும் உடையவர் கண்டு சந்தேகம் கொண்டார். மற்றும் தமது ஞான திருஷ்டியாலும் அறிந்து

கொண்டு, பிரசாதத்தை எடுத்துச் சென்று காவிரி நீரிலே கரைத்தார்.

உடனே ஸ்ரீ இராமானுஜர் உண்ணாவிரதம் இருக்கத் தொடங்கிவிட்டார். உடையவரின் உண்ணாவிரதம் திருவரங்கத்தையே ஓர் உலுக்கு உலுக்கிவிட்டது. இது, திருக்கோட்டியூர்நம்பி காதிலும் விழவே, அவர் தம் கோஷ்டியுடன் திருவரங்கத்துக்குக் கிளம்பி வந்தார். செய்தியறிந்து அவரை எதிர்கொள்ளத் தம் பலவீனத்தையும் அசட்டை செய்து ஸ்ரீ இராமானுஜர் புறப்பட்டார். நண்பகல் வெயில் காவிரி மணலைத் தணலாகச் செய்திருந்தது. எதையும் பொருட்படுத்தாமல் அக்கொதிக்கும் மணலில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து குருவுக்குத் தண்டன் சமர்ப்பித்தார். உடையவருடைய திருமேனியை இரு கைகளாலும் தூக்கி நிறுத்தினார் நம்பி. அப்பொழுது நம்பியுடன் வந்திருந்த கிடாம்பியாச்சானை அழைத்து, "இனி நீர் இவருக்கு தளிகை செய்து பிக்ஷையாகத் தினம் சமர்ப்பித்து வாரும்" என்று கட்டளையிட்டார் நம்பி. அதன்பிறகு உடையவரின் உடல் ஆரோக்கியம் தேறி வந்தது.

இந்தக் காலத்தில்தான் ஸ்ரீ இராமானுஜர் சத்யத்ரய கிரந்தங்களை இயற்றினார். ஸ்ரீமன் நாராயணனே பரப்ரம்மம். அவனுக்கு மேல் யாதொரு தெய்வமும் கிடையாது என்ற நல்லறிவை வலியுறுத்தும் சரணாகதி சத்யம், ஸ்ரீரங்க சத்யம், வைகுண்ட சத்யம் ஆகிய மூன்று நூல்களை ஸ்ரீ இராமானுஜர் இயற்றியருளினார். உடையவருடைய பிரபாவம், காசியி லிருந்த மகா வித்வானான யக்ஞமூர்த்திக்கு எட்டியது. வாதாடி வெற்றி கொள்ள வேண்டுமென்று அவர் ஸ்ரீ இராமானுஜரை நாடி வந்தார். அறிவுப் பிழம்பாக, அறமார்க்கத்தின் அத்தாட்சி யாக அகப் பொலிவும், முகப் பொலிவும் கொண்டிருந்தார் ஸ்ரீஇராமானுஜர்.

ஸ்ரீரங்கம் வந்ததும், காலம் கடத்தாது யக்ஞமூர்த்தி உடையவரை அணுகி, "என்னுடன் தர்க்கிக்க வேணும்" என்றார். "அப்படியே செய்வோம்!" என்று உடையவரும் உடனே இணங்கினார். இப்படி இவர்கள் தொடங்கிய தர்க்கம் பதினாறு நாட்கள் தொடர்ந்து நடந்தது. நாளுக்கு நாள் யக்ஞமூர்த்தியின் கையே வலுத்து வந்தது. இப்படியும் ஒரு சோதனையா? என்று பெருமூச்சுவிட்டுப் படுத்த ஸ்ரீ இராமானுஜர் கனவில், அன்று பெருமாளே வந்தார். "இதனால் மிக்க ஞானம் உள்ள ஒருவனை உமக்குச் சிஷ்யனாகத் தந்தோம்" என்று கூறி மறைந்தார். மறுநாள் காலை யக்ஞமூர்த்தி உடையவருடைய கம்பீரத்தையும் முகத்தில் பரவிய மகிழ்ச்சியையும் கண்டு திகைத்துப் போனார். "இவர் நேற்று சோர்வடைந்து களைத்துச் சென்றார். இன்று மத்தகஜம் போல் வருகிறார். ஆகையால் இவர் மானிடரல்லர். மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியைப் பெற்றவர்" என்று தீர்மானித்து அவருடைய திருவடியிலே விழுந்தார் யக்ஞமூர்த்தி.

"நான் தோற்றேன்" என்று கூறி, உடையவரது பாதுகைகளைச் சிரமேல் ஏற்றி, "என்னை ரக்ஷிக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். உடனே உடையவர் யக்ஞமூர்த்தியை பரமகிருபையுடன் பார்த்து மாயாவாதத்திலுள்ள குறைகளை எடுத்துச் சொல்லி, அவரை ஸ்ரீ வைஷ்ணவ தர்சனமாகிற வெளிச்சத்துக்கு இழுத்து, எம்பெருமானார் எனும் பெயரையும் சூட்டி மகிழ்ந்தார். ஆசார்யர்கள் எல்லாரும் உடையவர் திருவடிகளில் ஆச்ரயித்ததைக் கேட்டு அனந்தாழ்வான், எச்சான், தொண்டனூர் நம்பி, மருதூர் நம்பி ஆகிய அடியார்கள், உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கத் திருவரங்கம் வந்து சேர்ந்தார்கள்.

அதன் பிறகு உடையவர் திருவாய்மொழிக்கு அர்த்தம் சொல்லிக் கொண்டு கோஷ்டியை நடத்திக் கொண்டிருந்தார்.

அப்பொழுது "சிந்து பூமகிழும் திருவேங்கடம்" என்ற இடம் வந்தபொழுது, கோஷ்டியில் இருந்தவர்களை நோக்கி, "பெரிய திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு உவப்பாக நந்தவனம் அமைத்து மாலை கட்டி சாத்துபவர் யாராவது இருக்கிறார்களா?" என்று வினவினார். உடனே அங்கிருந்த அனந்தாழ்வான் எழுந்திருந்து, "அடியேன் அந்தக் காரியத்தைச் செய்யச் சித்தமாய் இருக்கிறேன். அருளவேணும்" என்றான். உடனே இராமானுஜரும் அனுமதி கொடுத்தார். திருமலைக்குச் சென்ற அனந்தாழ்வார் பெரிய அளவில் நந்தவனம் ஒன்று அமைத்து, அதற்கு "இராமானுஜன்" என்ற திருநாமம் இட்டு, மாலா கைங்கர்யத்தைத் தவறாமல் சிறப்பாகச் செய்து கொண்டு வந்தான். அங்கிருந்து வந்தோர் இராமானுஜரிடம் அதன் பெருமையைச் சொல்லி மகிழ்ந்தனர்.

ஒருநாள் "அடியேன் திருவேங்கடமுடையானைச் சேவித்து வர அனுமதி வேணும்" என்று ஸ்ரீரங்கநாதனைச் சேவித்துக் கொண்டார் உடையவர். "போய் விரைவில் வருக" என்று அனுமதியளித்தார் பெருமாள். உடனே அழகிய மணவாளனிடம் அனுமதி பெற்றுத் தமது ஸ்ரீவைஷ்ணவக் கோஷ்டியுடன் புறப்பட்டுத் திருக்கோயிலூர் சென்று தங்கி மறுநாள் அஸ்டசகஸ்ரம் என்ற பருத்திக் கொல்லை கிராமத்திற்குச் சென்றார். அச்சமயம் சமணர்கள் அங்கே கொடி கட்டி வாழ்ந்திருந்தார்கள். இராமானுஜர் வருகையறிந்து, அவர் வைணவம்பற்றிப் பேச வருவதறிந்து கொதித்தெழுந்து தங்களோடு வாதிட அழைத்தனர். அவரும் நிபந்தனையோடு அவர்களுடன் வாதிட நாள் குறித்தார். வாதப்பிரதிவாதங்களில் அனல் பறந்தது. வாதத்தின் முடிவில் சமணர்கள் இராமானுஜரிடம் தோல்வியைத் தழுவினர். நிபந்தனைப்படி சமணர்கள் கழுவேறத் தயாராகி விட்டனர். (பிறர் துன்பம் கண்டு ஐயோ என்று மனமிரங்கும் மனித நேயமுடையது வைணவம்) நீங்கள் கழுவில் ஏற வேண்டாம். வைணவர்களாகி மனிதநேயக் கருத்துக்களைப் பிரச்சாரம்

செய்யுங்கள் என்று இராமானுஜர் கூறினார். அங்கே அப்போது வாழ்ந்திருந்த எண்ணாயிரம் சமணர்களும் வைணவர்களாகி இராமானுஜரின் அடியார்களாகி மறுவாழ்வு பெற்றனர். அன்றுமுதல் பருத்திக்கொல்லையும் எண்ணாயிரமாயிற்று.

எண்ணாயிரத்தில் அழகிய நரசிங்கப்பெருமாள் கோயில் உருவாக்கப்பட்டது. பெருமாளையும், பெருமாளுக்கு ஒரு கோயிலையும் உருவாக்கிக் கொடுத்து இராமானுஜரும், இங்கே கோயில் கொண்டிருக்கிறார். நல்ல கருங்கல்லில் உருவாக்கப்பட்டுள்ள இச்சிலையில் சந்தோஷப் புஷ்டியோடு கம்பீரமாகக் காட்சியளிக்கிறார். உலோகத்தால் வார்த்தெடுக்கப் பட்டதோ என்று சொல்லும்படி நல்ல மழமழப்புடன் இருக்கிறார். பருத்திக்கொல்லை லட்சுமி அம்மாள் அளித்த விருந்தினாலோ, சமணர்களை வென்ற மகிழ்ச்சியினாலோ உடல் தளதளவென்றிருக்கிறது. (கலைமகள் ஜனவரி 1949 தொ.மு.பாஸ்கர தொண்டைமான் எழுதிய கட்டுரை). கோயிலுக்குச் சற்று தூரத்தில் பகவத் இராமானுஜர் தங்கிய பருத்திக்கொல்லை லட்சுமி, வரதாசார்யர் வாழ்ந்திருந்த வீட்டருகில் இராமானுஜரின் திருவடிகள் பதிந்திருந்த இடத்தில் கருங்கல்லாலான திருவடிகள் பதிக்கப்பட்ட ஒரு மண்டபமும் அந்தக் காலத்திலேயே கட்டப்பட்டிருந்தது. அது சிதிலமடைந்துவிட்டதால் பகவத் ஸ்ரீஇராமானுஜரின் புராதனச் சின்னங்களைப் புதுப்பித்து பாதுகாக்க வேண்டுமென்று எம்பெருமானாரின் ஜென்ம நட்சத்திரமான சித்திரைத் திருவாதிரையில் கடந்த சில வருடங்களுக்கு முன்பு சென்னை ஸ்ரீவைணவப் பேரவையினர், புதியதாக ஒரு மண்டபம் கட்டி அங்கே நித்திய பூஜைகள் சிறப்பாக நடத்தி வருகிறார்கள். இப்பெருமானாரின் பாதம் குடிகொண்டுள்ள மண்டபம் சென்று நாங்களும் தரிசனம் செய்தோம். மனம் நிறைந்து பரவசமானது. அந்த இடத்தை விட்டு நகர மனமில்லை. ஜீயரின் பாதம் பட்ட மண்ணல்லவா! இன்று இக்கிராம மக்கள் அனைவரும் வைணவ இலச்சினை அணிந்து பாசுரங்கள்

பாராயணம் செய்து மனதால், செயலால் வைஷ்ணவர்களாகி இருக்கிறார்கள்.

இராமானுஜர் எண்ணாயிரத்திலிருந்து தமது பாகவதக் கோஷ்டியுடன் காஞ்சி மாநகர் வந்து சேர்ந்தார். முதல் வேலையாக, தமது முதல் குருவும், வழிகாட்டியுமான திருக்கச்சிநம்பி மடத்தை அடைந்து அவரைத் தெண்டனிட்டுக் கைகூப்பி நின்றார். "ஸ்வாமி! மீண்டும் தேவரீரைச் சேவிக்கும் பாக்கியம் பெற்றேன். அந்தக் காலத்தில் ஸ்ரீவைஷ்ணவ கைங்கர்ய மார்க்கத்தைக் காட்டிய தேவரீர், அன்று கை கொடுக்கா விட்டால் அடியவன் எந்த நிலையில் இருப்பே னோ!" என்று விண்ணப்பித்துக் கொண்டார். அவருடைய பாராட்டுதலை ஏற்க விரும்பாத நம்பி, "உடையவரே! இதில் நாம் செய்தது யாதொன்றுமில்லை. பெருமாளின் நியமனத்தை நிறைவேற்ற நான் ஒரு கருவியாக இருந்தேன். அவ்வளவுதான்" என்று அடக்கமாகப் பதில் உரைத்தார்.

பிறகு உடையவரை அழைத்துக் கொண்டு, வரதராஜப் பெருமாளைச் சேவிக்கச் சென்றார். உடையவரைத் தரிசிக்க வழிநெடுக இருமருங்கிலும் மக்கள் நின்றார்கள். அவரைக் கண்டதும் மண்ணில் விழுந்து தெண்டனிட்டார்கள். அவர் களையெல்லாம் மனங்குளிர ஆசீர்வதித்துவிட்டு, கோயிலினுள் நுழைந்தார். அவருக்குப் பெருமாளைச் சேவை செய்தபின், மடத்துக்குத் திரும்பினார் நம்பி. அப்பொழுதுதான் தாம் திருமலைக்குச் சென்று கொண்டிருப்பதாகத் தெரிவித்தார் நம்பியிடம். திருக்கச்சிநம்பி விடைகொடுக்க ஸ்ரீ இராமானுஜர் திருப்பதியை நோக்கிப் புறப்பட்டார். ஏழுமலையானைச் சேவிக்க வேண்டுமென்று துரிதமாகச் சென்றார். உடன் வந்த பாகவதக் கோஷ்டியால் அவருடைய வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியவில்லை. இடையே வழி தெரியாமல் போகவே, பக்கத்துக் கிணறு ஒன்றிலிருந்து பயிருக்குத் தண்ணீர் பாய்ச்ச ஏற்றம் இறைத்துக் கொண்டிருந்த ஒருவனைப் பார்த்து ஸ்ரீ இராமானுஜர் வழி கேட்டார். அவனும் சரியான பாதையைக்

காட்டினான். அதற்குள் பாகவத கோஷ்டியர் அவரிடம் வந்து சேர்ந்து கொண்டார்கள்.

அப்பொழுது ஸ்ரீ இராமானுஜர் அந்த ஏற்றம் இறைத்தவனை நோக்கித் தரையில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கினார். அனைவரும் வியந்தார்கள். "இப்படி யாரோ ஒரு கீழ்க் குலத்தோனைத் தேவரீர் வணங்கலாமா?" என்று கேட்டார்கள். "பக்தி சாதிக்கு அப்பாற்பட்டது. இந்தப் பரமபாகவதன் இன்று நமக்குப் பேருபகாரம் செய்துள்ளான். திருமலைக்கு வழிகாட்டியிருக்கிறான். மோட்சத்துக்கு வழி காட்டுகிறான் திருமலையான். அவனை அணுக நமக்கு வழி காட்டுகிறான் இந்தப் பாகவதன். பகவானுக்கு வழிகாட்டு கிறவன் ஆசார்யனாகிறான்" என்று பரம பாவனமான வைஷ்ணவ சமத்துவத்தை உபதேசித்து, ஸ்ரீ இராமானுஜர் மேலும் பயணத்தைத் தொடங்கினார்.

நேரே சென்ற உடையவர், அங்கு சந்நிதி கொண்டிருந்த பத்து ஆழ்வார்களையும் சேவித்துக் கொண்டு, கீழைத் திருப்பதியிலேயே தங்கிவிட்டார். மலை ஏற வேண்டாமா என்று கேட்ட சீடர்களிடம், "இங்கு வந்த பத்து ஆழ்வார்களும் திருமலை ஆதிசேஷன் என்பதால் தங்கள் திருவடிகளை அவர்மீது வைக்க விரும்பாமல் கீழேயே தங்கிவிட்டார்கள். நான் என்ன அவர்களைவிட உயர்ந்தவனா?" என்று சொன்னார். உடையவர் அங்கு முகாமிட்டிருப்பதையறிந்த அந்நாட்டு மன்னன் உட்பட அநேகர், அங்கு வந்து அவரைத் தரிசித்து ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்துக்கு மாறினார்கள்.

ஸ்ரீ இராமானுஜர் வந்து பல நாளாகியும் மலைக்கு வராததைக் கண்ட அனந்தாழ்வான் மலை மீதிருந்து வேகமாக இறங்கி வந்து, "பெருமாள் உமக்காகக் காத்திருக்கிறார்" என்றார். "தேவரீர் ஏறாவிட்டால் தங்களை அனுசரித்து வேறு எவரும் மலைக்கு வரமாட்டார். அங்கு கோயிலிருந்து பயன்

என்ன?" என்றார் அனந்தாழ்வான். "எம்பெருமான் திருவுள்ளம் அப்படியானால் வருகிறோம்" என்று கூறித் தமது பாகவத கோஷ்டியுடன் மலையேற முற்பட்டார். பாதி தூரத்தில் தீர்த்தப் பிரசாதங்களுடன் எதிர்கொண்டார் பெரிய திருமலைநம்பி. தமது அன்பு மாமனான பெரிய திருமலை நம்பியின் திருவடிகளில் தெண்டனிட்ட ஸ்ரீ இராமானுஜர், "இந்தப் பிரசாதங்களைத் தேவரீருடைய சேவகர்களில் யாரிடமாவது அனுப்பக் கூடாதா?" என்று விசாரித்தார். "நான் எசமானாக இருக்கக்கூடிய சேவகர் எவரும் திருப்பதியில் காணோம்" என்று அடக்கமாகப் பெரிய திருமலைநம்பி பதில் கூறினார்.

அதுகேட்ட உடையவர், "திருப்பதி, பெருமாளுடைய இதயம் போன்றது என்று மக்கள் பேசுகிறார்கள். அதில் பொருள் இருப்பதை இன்று கண்டேன்" என்றார். இப்படி பிரதக்ஷிணத்தை முடித்துக் கொண்டு பெருமாள் சந்நிதிக்கு வந்து எம்பெருமானார் நீண்ட நேரம் சந்நிதியில் நின்றார். பெருமாளைச் சேவித்த பின்பு, "இது நானிருக்கத் தகுந்த இடமன்று. நித்யசூரிகளும், தவசிரேஷ்டர்களும் இருக்க வேண்டிய இடம் இது!" என்று கூறி அப்பொழுதே திரும்ப யத்தனித்தார் உடையவர். "திவ்ய தேசங்களில் மூன்று நாள்கள் தங்காமல் போகக் கூடாது என்று விதி இருக்கிறது" என்று சொல்லி பெரிய திருமலைநம்பி அங்கே மூன்று தினங்கள் தங்க வைத்தார். அதன் பிறகு கீழைத் திருப்பதிக்கு வந்து அங்கிருந்த பெரிய திருமலை நம்பியின் திருமாளிகையில் ஓராண்டு காலம் தங்கினார். அப்பொழுது ஸ்ரீஇராமாயண மகா காவியத்தை, பெரிய திருமலைநம்பியிடம் பாடம் கேட்டார்.

பிறகு ஸ்ரீரங்கத்திற்குக் கிளம்ப முடிவு செய்தார். அப்பொழுது அவரை நோக்கி, "ஸ்ரீ இராமானுஜரே! இங்கே எழுந்தருளி இத்தனை நாள் அடியேனுடன் இருந்த உமக்கு நான் ஏதும் தரப்பெற்றிலேனே!" என்று துயரத்துடன் சொன்னார்,

பெரிய திருமலைநம்பி. தமது தாய்மாமனும் குழந்தைப் பருவத்திலேயே தமக்குப் பெயரிட்டவரும் இதர வைதீக கர்மாக்களைச் செய்தவருமான பெரிய திருமலைநம்பி தம்மை அன்று மரியாதையான சொற்களால் அழைத்ததற்குக் காரணம் தமது சந்நியாச ஆசிரமமே என்பதைப் புரிந்து கொண்டு, பரமனை மனத்தினால் வணங்கினார் ஸ்ரீ இராமானுஜர்.

பிறகு, "ஸ்வாமி! தேவரீர் அடியவனுக்கு ஏதாவது தந்து அருளக் கிருபை கொண்டால், தங்களிடம் பணிவிடை செய்து கொண்டிருக்கும் கோவிந்தனை அடியேனுக்குக் கொடுக்க வேண்டும்" என்று பிரார்த்தித்தார். உடனே கோவிந்தனை அழைத்து "இதோ இப்பொழுதே அழைத்துக் செல்லலாம்" என்று ஒப்படைத்து ஆனந்தம் கொண்டார். பிறகு கோவிந்தனை அழைத்துக் கொண்டு தம் பரிவாரங்களுடன் திருவரங்கத்துக்குப் புறப்பட்டார் உடையவர். வழியிலிருந்த எல்லாத் திருத்தலங்களையும் சேவித்து மங்களாசாசனம் செய்து கொண்டு சென்றார்.

கடிகாசலம் என்னும் திருத்தலத்தில் அக்காரக்கனிப் பெருமாளைச் சேவித்து, திருப்புட்குழியிலே கிருத்ர புஷ்கரணியில் தீர்த்தம் ஸ்வீகரித்து பெரிய உடையார், சண்டப் பிரசண்டர்கள், மரகதவல்லித் தாயார், திருவனந்தாழ்வான் ஆகிய எல்லாரையும் சேவித்து, காஞ்சி வந்து திருவெக்கா விலுள்ள சொன்னவண்ணம் செய்த பெருமாளையும் வணங்கித் திருக்கச்சி நம்பியின் இல்லத்துக்கு வந்து சேர்ந்தார். இத்தனை திவ்யத் தலயாத்திரைகளிலும் ஒரு முக்கிய விஷயத்தை உடையவர் கவனித்தார். தம்முடன் வந்த கோவிந்தன் எதிலும் எந்த மகிழ்ச்சியும் காட்டாமல் சோர்ந்த முகத்துடன் இருந்ததைப் பார்த்தார். உடனே கோவிந்தன் உள்ளக் கிடக்கை யை ஒருவாறு அறிந்து கொண்டு, "நீர் மீண்டும் திருமலைக்குச் சென்று பெரிய திருமலைநம்பியிடம் சிலகாலம் இருந்து வாரும்" என்று அனுப்பி வைத்தார்.

கோவிந்தனும் மிக மகிழ்ச்சியடைந்து உடையவருக்குத் தெண்டனிட்டு உத்தரவு பெற்றுத் திருமலைக்குத் திரும்பினார். ஆனால் திருமலைநம்பி கோவிந்தனைத் தன் திருமாளிகையின் வாசலிலேயே நிற்க வைத்துவிட்டார். "கொடுத்ததைத் திரும்பப் பெறும் வழக்கம் வைஷ்ணவர்களிடம் கிடையாதே!" என்று கூறினார். அங்கிருந்தபடியே திருமாளிகையைத் தெண்டனிட்டு, உடனே காஞ்சிக்கே திரும்பிவிட்டார் கோவிந்தன். நடந்ததை உடையவரிடம் தெரிவித்தார். அதுகேட்ட உடையவர் பெரிய திருமலைநம்பியின் பெருமையையும் ஸ்ரீவைஷ்ணவ அஸ்திவார ஞானத்தையும் மனத்தில் ஏற்று அகம் குளிர்ந்து, கோவிந்தனைக் கண்குளிரக் கடாட்சித்து, அவரைத் திருத்திப் பணிகொள்ள வேண்டிய அனைத்தையும் செய்தார்.

ஒருநாள் கோவிந்தப் பெருமாள் ஒரு தாசி வீட்டு வாசலில் நின்றிருந்தார் என்ற செய்தியைக் கொண்டு வந்தனர் ஸ்ரீவைஷ்ணவர்கள். அதுகேட்டு, கோஷ்டியிலேயே விசாரித்தார் இராமானுஜர். "ஸ்வாமி! நான் அங்கு நின்றது உண்டு" என்று கூறியதன்றி, "தேவரீரைப்பற்றிய பாட்டு அந்த வீட்டினுள்ளிருந்து மதுரமாய் வந்து கொண்டிருந்தது. அதில் லயித்து அப்படியே நின்றுவிட்டேன்" என்று விளக்கமும் தந்தார் கோவிந்தன். கோவிந்தப் பெருமாளுடைய திரிகரண சுத்தியான பக்திப் பிரவாகத்தைக் கண்டு உடையவர் வியந்தே போனார். "அடியேனுக்கு சந்நியாச ஆசிரமம் அருளவேண்டும்" என்று தெண்டனிட்டார் கோவிந்தப் பெருமாள். உடனே கோவிந்தப் பெருமாளுக்குத் திரிதண்டம் காஷாயம் அளித்து "எம்பார்" என்ற திருப்பெயரையும் சூட்டினார். உடையவர் சந்நிதியிலேயே ஒரு மகிமை உண்டு. அவரது திருவடிகளைப் பற்றினோர் அவரைப்போலவே பரமவிரதர்களாய், அகங்கார, மமகார வியாதியால் பீடிக்கப்படாதவர்களாய், மிகவும் உயர்ந்தவர்களாய் இருந்தார்கள். அதனால் ஸ்ரீவைஷ்ணவ பிரபாவம் எங்கும் பரவலாயிற்று.

தூரதேசத்திலிருந்து வந்த ஸ்ரீ இராமானுஜப் பக்தர்கள் சிலர் திருவரங்கத்தை அடைந்து, "எம்பெருமானார் மடம் எதுவோ!" என்று விசாரித்தார்கள். "எந்த எம்பெருமானார்?" என்று ஒருவர் அவர்களைத் திரும்பிக் கேட்கவே, அவர்கள் பிரமிப்படைந்தார்கள். "அப்படியானால் ஸ்ரீவைஷ்ணவ மதத்தில் பிரிவு ஏற்பட்டுவிட்டதா? இரண்டு ஆச்சார்யார்கள் ஏற்பட்டு விட்டார்களா?" என்று வினவினார்கள். "இங்கு வாதம் புரிய வந்த யக்ஞமூர்த்தி, உடையவர் கதியென்று மாறி அருளாளப்பெருமாள் எம்பெருமானார் என்ற திருநாமத்துடன் தனி மடத்தில் இருந்து வருகிறார். அதனால் அப்படிக் கேட்டோம்" என்றார். "அவரைப்பற்றி நாங்கள் கேள்விப்பட்டதேயில்லை. நாங்கள் தரிசிக்க வந்தது ஸ்ரீ இராமானுஜரை. எங்களுக்கு அவர்தான் அசல் எம்பெருமானார்" என்றார்கள். பிறகு சரியான மடத்தைக் காட்டவே, அவர்கள் சென்று உடையவருக்குத் தெண்டனிட்டு அருளாசி பெற்றுச் சென்றனர்.

இந்தச் செய்தி அருளாளப் பெருமாள் எம்பெருமானார் காதில் விழவே, அவர் வேதனையடைந்தார். உடனே தன் மடத்தைத் தரைமட்டமாக இடிக்கச் சொல்லிவிட்டு உடையவரிடம் ஓடிவந்தார். "இந்த விநாடி முதல் நான் தேவரீரை விட்டுப் பிரியேன். எனக்குத் தனி மடம் தேவையில்லை" என்று பிரார்த்தித்தார். "அப்படியே ஆகட்டும்" என்று ஸ்ரீ இராமானுஜர் திருவாய் மலர்ந்தருளி தமது மடத்திலேயே அவரையும் வைத்துக் கொண்டார். இறுதிவரை அங்கேயே இருந்து அருளாளப் பெருமாள் எம்பெருமானார் ஞானஸாரம், பிரமேயஸாரம் என்று இரண்டு நூல்களை இயற்றியமைத்தார். அவர் பெயர் இன்றும் பிரசித்தமாயிருக்கிறது.

உறையூரில் வசித்து வந்த வில்லிதாசன் என்பவன் ஒரு மாபெரும் மல்லன். அவனைக் கண்டாலே போதும், அனைவரும் விலகிவிடுவார்கள். அவன் தாசி பொன்னாச்சியின் கண்

அழகில் மயங்கி, அவளுக்கு அடிமையாகக் கிடந்தான். திருவரங்கம் வசந்த உற்சவத்தைப் பார்க்க விரும்பிய பொன்னாச்சியைத் திருப்திப்படுத்த அவளை அழைத்துக் கொண்டு வந்த வில்லிதாசன், வெயிலின் கொடுமையிலிருந்து அவளைக் காப்பாற்ற ஒரு குடையைப் பிடித்துக் கொண்டு அவளது கண்களையே பார்த்துக் கொண்டு நடந்தான். காவிரியில் நீராடி சீடர்களுடன் திரும்பிக் கொண்டிருந்த ஸ்ரீ இராமானுஜர், வில்லிதாசனின் அந்தக் கோலத்தைக் கண்டு அதிசயித்தார். அவனை எப்படியும் திருத்தவேண்டும் என்று தீர்மானித்து மடத்திற்குச் சென்றதும், அவனுக்கு ஆள் விட்டனுப்பினார். வில்லிதாசனும் உடனே மடத்துக்கு வந்து சேர்ந்தான்.

"மல்லனே! போரில் பலத்தையும் அலட்சியத்தையும் காட்டும் நீ, இத்தனை அநாகரிகமாக நடந்து கொள்ளலாமா?" என்று கேட்டார் உடையவர். "ஸ்வாமி! நான் நாகரிகம் தெரியாதவனல்லன். அவள் அழகுக்கு ஈடு கிடையாது. அவள் கண்களின் அழகிற்கு உவமையேயில்லை. அவற்றின் ஆழத்தில் நான் மூழ்கிவிடுகிறேன்!" என்றான். "அந்தக் கண்களைவிட ஆழமானதும் அழகானதுமான கண்களைக் காட்டினால் நீ என்ன செய்வாய்?" என்று கேட்டார் உடையவர். "அப்படி ஒன்று இருக்குமானால் அதற்கு அடிமையாகி விடுவேன். வேறு எதையும் பார்க்கமாட்டேன்" என்றான் வில்லிதாசன். "அப்படியென்றால் என்னுடன் வா!" என்று அவனைக் கோயிலுக்கு அழைத்துச் சென்று அழகிய மணவாளன் முன் நிறுத்தி, "அதோ பகவானின் கண்களைப் பார். கடலிலும் பெரிய அழகிய கண்களைப் பார்" என்றார்.

அரங்கனும் தனது கருணை விழிகளால் வில்லிதாசனைப் பார்த்தார். அவ்வளவுதான். "ஆகா! எத்தனை அழகான கண்கள்!" என்று சொல்லிக் கொண்டே

தெண்டனிட்டு வணங்கினான். அன்று முதல் உலகத்து இன்பங்களை மறந்து, உடையவரின் அடிமையானான். அவனுடன் பொன்னாச்சியும் ஆசிரமவாசியானாள். அடுத்த நாள் உடையவர் காவிரியில் நீராடித் திரும்புகையில் வில்லிதாசன் கரங்களைப் பற்றிக் கொண்டு வந்தார். ஸ்ரீவைஷ்ணவத்தில் சாதியால் மட்டும் உயர்வு - தாழ்வு கிடையாது என்பதை இவ்வாறு நடத்திக் காட்டினார் உடையவர்.

அவருடைய சீடர் கோஷ்டியில் ஊமையான ஒரு பக்தனும் இருந்தான். அவன் எப்பொழுதும் உடையவரின் திருமுகத்தை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். ஒருநாள் அவனைத் தன் அறைக்குள் அழைத்துச் சென்று அவரது திருவடிகளைப் பிடித்துக் கொள்ளச் சொன்னார் உடையவர். பிறகு அவன் தலைமேல் கைவைத்து ஆசீர்வாதம் செய்தார். "ஆகா! நம் ஏக்கத்தைத் தீர்த்து வைத்தாரே!" என்று புளகாங்கிதம் கொண்டான் அவன். கதவு இடுக்கின் வழியாக இதைக் கண்ட மற்ற பாகவதர்கள், "ஆகா! இந்தப் பெருமை இன்னும் நமக்குக் கிடைக்கவில்லையே!" என்று ஏங்கினார்கள். ஸ்ரீரங்கத்திலே இத்தகைய விந்தை நிகழ்ந்து கொண்டிருந்த வேளையில், திருமலையில் இன்னொரு விந்தை நிகழ்ந்து கொண்டிருந்தது.

அங்கு ஸ்ரீ இராமானுஜரின் பெயரில் நந்தவனம் அமைத்து மாலாகைங்கரியம் செய்து கொண்டிருந்த அனந்தாழ்வான், ஒரு தடாகமும் அமைக்கத் தீர்மானித்தான். அந்தக் கைங்கரியத்தை தான் ஒருவனே செய்யவேண்டுமென்று தீர்மானித்து, வேளைக்கு உணவு எடுத்துக் கொள்ளாமல் கூடப் பணியாற்றி வந்தான். அப்பொழுது அந்தப் பக்கம் வந்த சிறுவன் ஒருவன், தானே முன்வந்து கரையிலிருந்த மண்ணை அள்ளி அப்புறப்படுத்தத் தொடங்கினான். "என் கைங்கரியத் தில் நீ எப்படியடா குறுக்கிடலாம்?" என்று அவனைத் துரத்திக்

கொண்டு போனார் அனந்தாழ்வான். அவன் முகவாய்க் கட்டையில் தன் கையில் இருந்த மண்வெட்டியாலும் அடித்தார். அச்சிறுவன் அவர் கையில் பிடிபடாமல் கோயிலினுள் ஓடி மறைந்து போனான். மறுநாள் சேவார்த்திகள் பெருமாள் முகவாய்க்கட்டையில் இரத்தம் வருவதைக் கண்டு, பச்சைக் கற்பூரத்தை வைத்து அழுத்தினார்கள். அதை ஒட்டி இன்றும் அந்தச் சம்பிரதாயம் கையாளப்பட்டு வருகிறது. இப்படி அச்சமற்ற சேவையில் கருத்துள்ள அடியார்களைப் பெற்ற ஸ்ரீ இராமானுஜர் ஈடிணையற்ற ஆசார்யராக விளங்கினார்.

ஸ்ரீரங்க கோயிலில், அவ்வூர் பிராமணர்கள் மிகுந்த ஆசாரசீலராகக் காட்டிக் கொண்டதை உடையவர் கண்டித்தார். "நீங்கள் அத்தனை உயர்ந்தவர்களாயிருந்தால் ஸ்ரீரங்கநாதனை நீங்கள் சேவிக்க கூடாது. அவருக்கு நிவேதனம் செய்யப்படும் பிரசாதத்தையும் ஏற்கக் கூடாது. தீண்டப்படாதவரான திருப்பாணாழ்வாரை அவர் தம்முடன் இணைத்துக் கொண்டதால், உங்கள் நோக்கப்படி ஸ்ரீரங்கநாதனும் தீட்டுள்ளவர்தான். அவர் அருகே செல்லாதீர்கள்" என்று மனம் கசந்து இரைந்தார். இத்தகைய திடசித்தமுள்ளவரான பிறவி வித்தியாசம் அற்ற, உலகிலேயே இணையற்றதான மதத்தை ஸ்தாபித்தருளிய ஸ்ரீ இராமானுஜர் பிரபாவம் எங்கும் பரவலாயிற்று.

வியாச பகவானின் பிரம்ம சூத்திரத்துக்கு அவர் விரிவுரை எழுதப் போவதைக் கேட்டதும் ஆண்டான், ஆழ்வான், எம்பார் எல்லாருமே பேருவகை கொண்டார்கள். அதை உடனடியாகத் தொடங்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அது விஷயமாக வியாசருடைய நேர் சிஷ்யரான போதாயனரிஷி எழுதிய மகாபாஷ்யத்தைப் பார்க்கத் தீர்மானித்தார். அது, அப்பொழுது காஷ்மீரத்து மன்னனிடம் இருந்தது. அதை முன்னிட்டு ஆழ்வானுடன் காஷ்மீரத்துக்குப் பயணப்பட்டார் உடையவர். காஷ்மீர மன்னனிடம் அங்கிருந்த

சரஸ்வதி பீடத்தில் இருந்த போதாயன விருத்தியைப் பார்க்க அனுமதி கேட்டார். அங்கிருந்த பண்டிதர்கள் அதை ஒருமுறை படிக்க அனுமதித்தார்கள். பிறகு அதை ஆழ்வான் படிக்க ஒருமுறை கேட்டார். "நீர் கேட்டதன் சுருக்கத்தை ஒருமுறை எழுதிக் கொடும். அதை சரஸ்வதி ஒப்புக் கொள்கிறாளா என்று பார்ப்போம்" என்றான் காஷ்மீர மன்னன்.

அப்பொழுதே அந்தச் சுருக்கத்தையும், அவருடைய கருத்தடங்கிய தத்துவத்தையும் ஓலையில் எழுதிக் கொடுத்தார் இராமானுஜர். அதை அப்படியே சரஸ்வதியின் சந்நிதியில் வைத்துக் கதவுகளை மூடிவிடும்படிக் கட்டளையிட்டான் மன்னன். மறுநாள் மன்னன் பண்டிதர்களுடன் சென்று கதவைத் திறக்க, அனைவரும் பிரமித்தனர். சரஸ்வதியின் காலடியில் வைக்கப்பட்ட ஸ்ரீ இராமானுஜரின் சுவடிகள் சரஸ்வதியின் கரத்திலிருந்தன. பெரிய மகான் தனது இராஜ்யத்துக்கு வந்துவிட்டதை உணர்ந்த மன்னன், போதாயன விருத்தியை உடையவர் எடுத்துப் போக உத்தரவிட்டான். அவருக்குப் பல பரிசுகளும் வழங்கி அனுப்பி வைத்தான்.

ஈடும் இணையுமற்ற பாஷ்யத்தை உருவாக்கியதைத் தொடர்ந்து பக்த இராமானுஜர் வேதாந்த தீபம், வேதாந்த சாரம், வேதாந்த சங்கிரகம், கீதா பாஷ்யம் முதலியவற்றை அருளிச் செய்தார். "இனி தேவரீர் யாத்திரை மேற்கொண்டு ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தைத் தேசமெங்கும் பரப்ப வேண்டும்" என்று விண்ணப்பித்துக் கொண்டார்கள் பாகவத உத்தமர்கள். அதற்கு செவி சாய்த்த உடையவர் தமது சிஷ்யகோஷ்டியுடன் புறப்பட்டு திவ்ய தேச யாத்திரையைத் தொடங்கினார். கும்பகோணம் முதலான திருப்பதிகளைச் சேவித்து அங்கு இதர சித்தாந்த வித்வான்களையும் வெற்றி கொண்டார். அங்கிருந்து திருமாலிருஞ்சோலை முதலிய திவ்யதேசங்களைச் சேவித்து, பாண்டி மண்டலத்திலுள்ள இதர மதவாதிகளையும் ஜயித்து, ஆழ்வார்திருநகரிலே நம்மாழ்வாரைச் சேவித்து

திருக்குறுங்குடிக்குச் சென்று, குறுங்குடிநம்பியைச் சேவித்து நின்றார். "உம் ஆராய்ச்சியின் முடிவென்ன?" என்றார் அவர். "எல்லா மந்திரங்களைவிட மிக உயர்ந்ததும் மங்களத்தைச் செய்வதும், நல்ல முறையில் ஸ்மரணம் செய்தால் பரம பதத்தை அளிக்கக் கூடிய மந்திர இரத்னமான வத்யம், சர்வ பலன்களையும் அளிக்க வல்லது" என்று விவரித்தார். அங்கிருந்து திருவனந்தபுரம் சென்று ஸ்ரீபத்மநாபப் பெருமாளைத் தரிசித்தார்.

பிறகு மேலைக்கரை வழியாக வடநாட்டுத் திருப்பதிகளைச் சேவிக்கச் சென்றார். ஒவ்வோர் இடத்திலும் ஒவ்வோர் அற்புத நிகழ்ச்சி நடந்தது. அப்பொழுது அவர் வரும் வழியில் நேர் எதிரே கீழ்க்குலப் பெண் ஒருத்தி வந்து கொண்டிருந்தாள். "நான் போகும் வரை சற்று ஒதுங்கி நின்றால் நன்றாய் இருக்கும்" என்றார் உடையவர். ஆனால் அவள் நகரவில்லை. "எந்தப் பக்கம் ஒதுங்கட்டும் பெரியவரே! உம்மை நோக்கி வரட்டுமா? அல்லது பின்புறத்திலிருக்கும் பெருமாள் கோயிலை நோக்கி நகரட்டுமா?" என்று கேட்டாள். இதுகேட்டு அசைவற்று நின்றுவிட்டார் இராமானுஜர். பிறகு, "பெண்ணே! என்னை மன்னித்து விடு. இன்னும் என் அகங்காரம் அழியவில்லை போலும். நீயே மேலானவள். என் கோஷ்டியில் உடனே சேர்ந்து கொள்ள உனக்கு அருகதை உண்டு" என்றார். அவளும் அக்கோஷ்டியில் உடனே சேர்ந்து கொண்டாள். பெரும் வைஷ்ணவப் பக்தையானாள்.

காஷ்மீரத்திலிருந்து வாரணாசி, ஸ்ரீகூர்மம், அஹோபிலம் முதலிய தலங்களில் யாத்திரை செய்த இராமானுஜர் கடைசியாகத் திருமலைக்கு வந்து சேர்ந்தார். அங்கு அவரை ஒரு பிரச்சினை எதிர்நோக்கி நின்றது. பெருமாளின் திருக்கோலம் சிவமா அல்லது விஷ்ணுவா ஏன்ற சர்ச்சை எழுந்தது. இந்த சர்ச்சையை ஸ்ரீ இராமானுஜர் தீர்த்து வைக்க எண்ணினார். "அங்கிருக்கும் உருவம் எதுவாயிருந்தா

லும் அதன் முன்பு மழு உடுக்கை முதலிய சிவச் சின்னங்களையும், சங்கு சக்கரங்களாகிய வைஷ்ணவச் சின்னங்களையும் கர்ப்பக்கிரகத்தில் வைத்துப் பூட்டி விடுவோம். அந்த விக்ரகம் எதை ஏற்றுக் கொள்கிறது என்று பார்ப்போம்!" என்றார். அவ்வண்ணமே வைக்கப்பட்டு சந்நிதி கதவும் சாத்தப்பட்டது. மறுநாள் இராமானுஜர் தீர்த்தமாடி பன்னிரண்டு திருமண்காப்பும் சாத்திக் கொண்டு, கழுத்தில் துளசிமணி மாலையுடன் கோயிலுக்கு எழுந்தருளினார். சந்நிதி திறக்கப்பட்டது. சிலை சங்கு சக்கரங்களை ஏந்தி நின்றதைக் கண்டார்கள். அப்பொழுது "உங்கள் விருப்பத்திற்கு இணங்க இப்படிச் சேவை சாதித்தானேயன்றி, சிவம் விஷ்ணு அபேதமே!" என்று அசரீரியும் எழுந்தது.

திருப்பதியிலிருந்து காஞ்சிபுரம், திருவல்லிக்கேணி, மதுராந்தகம், திருவஹீந்திபுரம் ஆகிய திருப்பதிகளையும் சேவித்துக் கொண்டு முடிவாகத் திருவரங்கத்துக்கு வந்து சேர்ந்தார். ஆசார்யரை வரவேற்க ஸ்ரீரங்கமே திரண்டிருந்தது. அனைவரும் தெண்டனிட்டு உடையவரை மனங்குளிரச் சேவித்தனர். ஸ்ரீ இராமானுஜர் அம்மக்களையெல்லாம் மனங்குளிர ஆசீர்வதித்தார். பிறகு கோயிலுக்குச் சென்று அரங்கனைச் சேவித்து நின்றார். "யாத்திரை எப்படி இருந்தது?" என்று பெருமாள் கேட்க, "எம் பெருமான் உடனிருக்கும் பொழுது அடியார்களுக்கு என்ன குறையிருக்க முடியும்!" என்று விண்ணப்பித்தார் உடையவர். பிறகு தீர்த்தப் பிரசாதம் பெற்று மடத்துக்குத் திரும்பினார்.

உடையவர் கோஷ்டியில் அனைவரும் சமமே என்றாலும், சாஸ்திர ஞானத்தாலும் அனுஷ்டான கிரமத்தாலும் முதல்வர் எனக் கூரத்தாழ்வானே கருதப்பட்டார். இவ் வண்ணம் மகாஞானியாய் திகழ்ந்த ஆழ்வானின் மனைவி ஆண்டாளும் பர்த்தாவுக்கேற்ற பதிவிரதையாய் நடந்து கொண்டாள். ஒருநாள் மழை அதிகமாகக் கொட்டவே, அந்தப்

புனித இல்லத்தில் அடுப்பு புகையவில்லை. அதனால் இருவருமே உபவாசம் இருக்க நேரிட்டது. அது அரங்கனுக்குப் பொறுக்குமா? ஆகவே அன்றிரவு திருமடப்பள்ளித் தலைவரான உத்தமநம்பியின் கனவில் தோன்றி, "நமது ஆழ்வான் பட்டினி கிடக்கிறான். இப்பொழுது எனக்குச் சமர்ப்பித்த பிரசாதத்தை நீர் தலையில் சுமந்து சென்று எனக்கு அளிக்கப்படும் மரியாதையுடன் ஆழ்வானுக்குக் கொடுத்து வாரும்" என்று கட்டளையிட்டார்.

உடனே வழக்கமான கொட்டுமேளத்துடன் பிரசாதத்தைத் தலையில் சுமந்து கொண்டு ஆழ்வான் இல்லத்துக்கு விரைந்தார். பெருமாள்தான் எழுந்தருள்கிறார் என்று எண்ணி வாசலுக்கு வந்தார் கூரத்தாழ்வான். உத்தமநம்பி தன் தலையிலிருந்த பிரசாதத்தை இறக்கி "பெருமாளே இதைக் கொடுத்து வரச் சொன்னார்" என்று உள்ளே கொண்டு வந்து வைத்தார். அதற்குமேல் ஆழ்வான் ஏதும் பேசவில்லை. "எல்லாம் அவன் சங்கல்பம்" என்று கோயிலிலிருந்து வந்ததில் இரண்டு திரளைப் பிரசாதத்தைத் தாமும் உண்டு, பத்தினிக்கும் அளித்தார். காலக்கிரமத்தில் இந்த இரண்டு திரளைப் பிரசாதங்களும் ஆழ்வான் குடும்ப வாழ்க்கையில் பெரும் விசித்திரத்தை விளைவித்தன. இரண்டு திரளைகளுக்கு பராசரன், வியாசன் என்ற இரு குழந்தைகளை, பெரும் மேதைகளை ஆண்டாள் ஈன்றாள். இதையெல்லாம் அறிந்த ஸ்ரீ இராமானுஜர் மனம் புளகிதம் கொண்டார். அரங்கனின் திருவிளையாடல்களை எண்ணி எண்ணி வியந்தார்.

எங்கும் வைஷ்ணவம் பரவி வருவதை விரும்பாத சிலர் உடையவர்மீது அசூயை கொண்டனர். எப்படியும் அவரைத் தீர்த்துக் கட்டவே எண்ணினர். இதையறிந்த வைஷ்ணவர்கள் சிலர் "சுவாமி! தாங்கள் இனி இங்கிருப்பது அபாயம். சிறிது காலம் வேறு எங்கேயாகிலும் போய் வருவது

நல்லது" என்று உடையவருக்கு எடுத்துக் கூறினர். ஸ்ரீ இராமானுஜர் அது கேட்டுத் தயங்கினார். மீண்டும் அவர்கள் வற்புறுத்தவே, உடையவர் மடத்திலிருந்த இவர்களை உடனழைத்துக் கொண்டு கிளம்பி மேல் திசை நோக்கிப் பயணமானார். அக்கோஷ்டியை அரச காவலர்கள் துரத்திச் சென்றார்கள். துரகர்கள் அஞ்சினார்கள். உடனே "ஸ்ரீ இராமானுஜர் கீழேயிருந்து ஒரு பிடி மண்ணை எடுத்து, "கோடி சூர்யப் பிரகாசமான சுதர்சன சக்கரத்தை ஏந்தி நிற்பவனே! உன் சார்ங்கம் இருப்பது அலங்காரத்துக்கு அல்லவே! இந்தப் படைகளைத் தடுப்பது உமக்கு எம்மாத்திரம்?" என்று கூறிக்கொண்டு, அங்கு வந்தோரை நோக்கி எறிந்தார். உடனே அத்தனையும் கூரிய அம்புகளாக மாறி அனைவரையும் துரத்தின. அவர்கள் திரும்பிக்கூடப் பார்க்காமல் ஓட்டம் எடுத்தார்கள். பிறகு உடையவர் தம் வழி நடந்தார். மேலும் மேல்திசை நோக்கிச் சென்றார்.

மைசூருக்கு மேற்கே அறுபது கி.மீ. தூரத்திலுள்ள புஷ்கரிணி கிராமத்தை அடைந்து அங்குள்ளவர்களையும் ஆட்கொண்டார். பிறகு உடையவர் அங்கிருந்து கிளம்பி தொண்டனூர் என்ற நகரத்துக்கு வந்து சேர்ந்தார். தொண்டனூர் என்பது ஹோய்சள வில்லாள மன்னர்களின் பிரதான நகரங்களில் ஒன்று. மைசூருக்கு வடக்கே இருபது கி.மீ. தூரத்திலுள்ள தெண்ணூரே அந்த தொண்டனூர் ஆகும். அந்நாட்டு மன்னன் விட்டலதேவராயனுக்கு ஒரு மகள் உண்டு. அவ்வரசகுமாரியைப் பிசாசு பிடித்திருந்தது. உடையவர் அங்கு வந்திருப்பதையறிந்து, அவரை அன்புடன் தன் அரண்மனைக்கு அழைத்து வந்தான் மன்னன். உடனே வீல் என்ற கூச்சலுடன் அரசகுமாரி அங்கு ஓடி வந்தாள். உடனே உடையவர் தம் சீடர் ஒருவரைத் திரும்பிப் பார்த்தார். அந்தச் சீடரும் தயாராகக் கொணர்ந்திருந்த கமண்டலத்திலிருந்து உடையவரின் ஸ்ரீபாத தீர்த்தத்தை எடுத்து அரசகுமாரிமீது தெளித்தார். அவ்வளவு தான். பிசாசு அரசகுமாரியை விட்டு ஓடியே போய்விட்டது.

அரசகுமாரி இராமானுஜருக்குத் தெண்டனிட்டு உள்ளே சென்றாள். அதுகண்ட மன்னனும், அவளைச் சேர்ந்தவர்களும் ரீவைஷ்ணவ தாசர்களாகி எங்கும் ஸ்ரீ இராமானுஜ மதத்தைப் பரப்ப உ ] கொண்டனர்.

இப்படியிருக்கும் ஒரு நாளில் தம்மிடமிருந்த திருமண் செலவழிந்து மிகவும் குறைந்துவிட்டதைக் கவனித்து கிலேசப்பட்டு வருத்தத்துடன் அன்றிரவு உறங்கினார். பெருமான் கனவில் தோன்றி, "அன்பனே! அண்மையில் உள்ள யதுகிரியில் நாம் உனது வரவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றோம். நீ விரும்பும் திருமண் நிறைய உண்டு. விரைவில் புறப்பட்டு வருக" என்று வாய்ச்சொல் அருளினார். இராமானுஜர் விடியற்காலையில் மிக்க மகிழ்ச்சியுடன் எழுந்து தம்முடன் வந்த முதலிகளுக்கும், மன்னனான சீவிட்டுணுவர்த்தன தேவராயனிடமும் தம் கண்ட கனவுபற்றிக் கூறினார். மன்னனும் யதுகிரிக்குச் செல்லும் வழியிலுள்ள காடுகளை வெட்டுவித்து, வேண்டியனவற்றைச் செம்மையுறச் செய்தான். இராமானுஜர் புடைசூழ யதுகிரியை அடைந்து வேதபுட்கரணிக் கரையிலே எழுந்தருளி, அங்குள்ள பரிதான சிலையைச் சேவித்து நீராடித், துவராடை தரித்து, நடந்து சென்று திருநாராயணப் பெருமானைத் தேடி அப்பெருமான் காணப்படாமையாலே நாம் என்ன குறை செய்தோமோ என்று மனம் கலங்கி கண்வளர்ந்தருளினார். திருநாராயணப் பெருமான் மீண்டும் அவர் கண் தோன்றி, "அன்பனே, கல்யாணப் பொய்கையின் தென்பால் மூலையில் உள்ள சண்பகச் சோலைக்கு அருகிலிருக்கும் திருமகிழ மரத்திற்குத் தென்புறத்தில் வளர்ந்திருக்கும் திருத்துழாயின் கீழுள்ள புற்றுக்குள் இருக்கின்றோம். திருமண்ணும் அப்பொய்கைக்கு வடபால் மூலையில் இருக்கின்றது. அது பெரியதிருவடியால் சுவேதத் தீவினின்று கொண்டு வந்து சேமித்து வைக்கப்பட்டதாகும். நீ திகைக்காமல் இருக்கும் இடந் தொடங்கி அப்புற்றுள்ள இடம் வரையிலும் திருத்துழாய்க்

கொழுந்தை இட்டுள்ளோம். அதனையே குறியாகக் கொண்டு வருக" என்றருளினான். இராமானுஜரும் அவ்வாறே அப்புற்றின் அருகிற்போய். அதனை வணங்கி, அங்குள்ள மண்காப்பை நீக்க உடனே அப்புற்றுக்குள் பொற்கோவில் தோன்றியது. அதைக் கண்டு மிக்க மகிழ்ச்சியடைந்து பாலாலே அப்பெருமானை மஞ்சனம் ஆட்டினார். திருவாய் மொழியின் கண் உள்ள "ஒரு நாயகமாய்" என்று தொடங்கும் திருவாய் மொழியை திருநாராயணப் பெருமானுக்கு உரியதாக்கினார்.

இராமானுஜர் கலியாணப் பொய்கையின் வடபால் மேல் மூலையில் திருநாராயணப் பெருமான் குறித்த இடத்தைத் தம்முடைய முக்கோலாலே கீற, அங்கு பாலாற்றைப் போலப் பொங்கிப் பொலியும் திருமண் குவைகளைக் கண்டுகளித்து அத்திருமண்ணை எடுத்து அருட் பெருமானுக்குச் சாத்திப் பின்பு தாமும் பன்னிரு திருநாமம் அணிந்து, திருநாராயணப் பெருமானைப் போற்றினார். பிறகு விட்டுணுவர்த்தன தேவராயன் என்னும் ' அரசன் ஆணையால் ஒரு திருக்கோயிலும் அங்கு எழுந்தது. சீரங்கராயபட்டர் என்னும் அருமறைப் பெரியாரைக் கொண்டு, சீபாஞ்சராத்திரம் என்னும் ஆகமத்திலுள்ள சாத்துவிதச் சங்கிதையின்படி செய்ய வேண்டுவனவற்றைச் செய்வித்து, நாள்வழிபாடும் திருவிழாக்களும் நடப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்தார். பிறகு உலாவரும் திருமேனி இல்லையே என்று கவலையோடு அன்றிரவு உறங்கினார். பெருமாள் கனவில் தோன்றி, "நம்முடைய உலவுதிருமேனிச்சிலை (பேரம்) ஆன இராமப்பிரியர் இப்போது மகம்மதிய மாமன்னனாகிய தில்லி வேந்தன் மனையில் இருக்கின்றார். அவ்வரசனிடமிருந்து, அவரைப் பெற்று வருக" என்றருளினான்.

இராமானுஜர், தில்லியிலுள்ள வேந்தன் அரண் மனைக்குச் சென்றார். தம் வருகையை அவ்வரசனுக்கு உணர்த்தி அவன் அனுமதியைப் பெற்று அவன்பால் சென்று அவனை

வாழ்த்தி நின்றனர். அவ்வேந்தன் அவர்களைக் கண்டவுடன் அவர்களுடைய முகப்பொலிவால் அவர்கள் ஞானச் செல்வர்களாகிய பெரியோர்கள் என்பதனை உணர்ந்து கொண்டு அவர்களுக்கு வணக்கம் கூறி, சிறந்த ஆதனங்களில் அவர்களை வீற்றிருக்கும்படி செய்து பெரியோர்களே! நீங்கள் என்பால் வந்ததன் காரணம் யாது? என்று கேட்டனன். அவ்வேந்தனை நோக்கி, "வேந்தரே! எங்கள் தேவர் ஆகிய இராமப்பிரியர், தங்களிடம் எழுந்தருளியிருக்கின்றார். அவரைப் பெற்றுச் செல்வதற்காக வந்தோம்" என்று கூறியருளினார். அவ்வரசன், "பெரியவரே, உங்கள் தேவர், இங்கு இருப்பாரானால், உங்கள் அன்பின் மேன்மையால் அவரை அழைத்துச் செல்வீராக" என்றான். இராமானுஜர் உடனே,

"தொடர்சங் கிலிகை சலார்பிலார் என்னத்
  தூங்கு பொன்மணி யொலிப்பப்
படுமும் மதப்புனல் சோர வாரணம்
  பையநின் றூர்வதுபோல்,
உடன்கூடிக் கிண்கிணி ஆரவா ரிப்ப
  உடைமணி பறைகறங்கத்
தடந்தா ளிணைக்கொண்டு சார்ங்க பாணி
  தளர்நடை நடவானோ?"

என்னும் பெரியாழ்வார் பாசுரத்தைப் கூற, உடனே இராமப்பிரியரும் இட்ட சட்டையும் அணிந்த சதங்கையும், நெற்றியில் விளங்கும் கத்தூரித் திருமண்ணும், மைவண்ண நறுங்குஞ்சியும் பொலிந்து விளங்க, காலில் அணிந்த சதங்கை சலன்சலன் என்று ஒலிக்க வந்து இராமானுஜர் மடியில் அமர்ந்தார்.

இராமானுஜர் இன்பக்கடலில் மூழ்கியவராய், மார்பும் தோளும் பூரித்து, என்னுடைய "செல்லப் பிள்ளையே!" என்று எடுத்துத் தம்முடைய மார்பில் அணைத்துக் கொண்டு

உச்சிமோர்ந்தார். அதனால் அப்பெருமானுக்குச் செல்லப் பிள்ளை என்னுந் திருப்பெயர் வழங்கி வரலாயிற்று. அப்பொழுது வைணவனாகிய ஒரு காவலன் தன் கையில் அழகிய ஒரு பெண் பொற்சிலையைக் கொண்டுவந்து இப்பெரியாருடைய மடியில் சென்று அமர்ந்திருக்கும் அத்தேவரீருடைய தேவியாரின் விக்கிரகம் ஆகும் என்று இராமானுஜரிடம் தந்தான். இராமானுஜர் அச்சிலைகளோடு யதுகிரியை அடைந்தார். செல்லப் பிள்ளையையும், யதுகிரி நாச்சியாரையும், திருநாராயணப் பெருமானுடைய திருவிழா விற்குத் தலைவர்களாக்கிப் பலவகையான திருவிழாக்களை நடப்பித்தார்.

பிறகு திருவரங்கத்துக்குப் பயணமாவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யும்படி சீடர்களுக்கு நியமித்தார். இதையறிந்த திருநாராயணபுரம் ஸ்ரீவைஷ்ணவர்கள் அவரைப் பிரிய வேண்டுமே என்ற வருத்தத்தில் ஆழ்ந்தார்கள். "எங்களையும் உடன் அழைத்துச் செல்ல வேண்டும்" என்று வேண்டினர். "உங்களையெல்லாம் அழைத்துச் சென்றால் இங்கு திருநாராயணனை யார் கவனித்துக் கொள்வது!" என்று சொல்லி அவர்கள் மனத்தை ஆசுவாசப்படுத்தினார். பிறகு அவர்களது வருத்தத்தைப் போக்குவதற்காகத் தம்மைப் போலவே ஒரு விக்ரகத்தைச் செய்து, அதில் தம் சக்தியையும் புகுத்தி அவர்களிடம் அளித்தார். அந்த விக்ரகத்தின் மூலம் அவர்களுடம் பேசவும் செய்தார் உடையவர். இன்றைக்கும் அந்த விக்ரகம் "தமர் உகந்த திருமேனி" என்ற புகழுடன் திருநாராயணபுரத்தில் விளங்குகிறது.

ஸ்ரீரங்கம் திரும்பிய இராமானுஜர் பெரிய கோயிலை அடைந்து, முன்புபோல் அடியவர்களுக்குத் திருவாய்மொழி முதலியவற்றின் நுண்பொருள்களைக் கூறியருள்வாராயினர். அங்ஙனம் கூறி வரும் இராமானுஜர், கோதை நாச்சியார் திருமொழியின் பொருள் கூறத் தொடங்கிக் கூறிவருகையில்,

திருமாலிருஞ்சோலை எம்பெருமானைப் பற்றி நாச்சியார் பாடிய "சிந்துரச்செம்பொடி" என்று தொடங்கும் திருமொழியின்,

"நாறு நறும்பொழில் மாலிருஞ்
சோலைநம் பிக்குநான்
நூறு தடாவில்வெண் ணெய்வாய் நேர்ந்து
பராவி வைத்தேன்
நூறு தடா நிறைந்த அக்கார
வடிசில் சொன்னேன்
ஏறு திருவுடையா னின்றுவந்
திவைகொள் ளுங்கொலோ"

என்னும் பாசுரத்தினுக்கும்,

"இன்றுவந் தித்தனையு மமுது செய்திடப் பெறில்நான்
ஒன்றுநூ றாயிர மாகக் கொடுத்துப் பின்னுமாளுஞ்செய்வன்
தென்றல் மணங்கமழுந் திரு மாலிருஞ் சோலைதன்னுள்
நின்ற பிரான்அடி யேன்மனத் தேவந்து நேர்படினே"

என்னும் பாசுரத்துக்கும் பொருள் கூறியவர், "கோதை நாச்சியார் வேண்டுகோளை நாம் செயல்படுத்த வேண்டும்" என்று எண்ணிப் புறப்பட்டுத் திருமாலிருஞ்சோலைக்கு எழுந்தருளி கோதையாரின் வேண்டுகோளின்படியே நூறு தடா நிறைந்த வெண்ணெயும், நூறு தடா நிறைந்த அக்காரவடிசிலும் திருமாலிருஞ்சோலையின்கண் எழுந் தருளியுள்ள பெருமானுக்கு மிக்க அன்புடன் அமுது செய்வித்தார். பிறகு விட்டுசித்தர் திருமாளிகைக்குச் சென்று, அவருடைய திருமகளாராகிய கோதை நாச்சியாரை வணங்கினார். கோதையாரும் தம்முடைய வேண்டுகோளை இராமானுஜர் செயல்பட்டதை எண்ணி மிகவும் மகிழ்வுற்று, அருச்சகர் மூலமாக எழுந்தருளி, அவருக்கு,

"நங்கோயிலண்ணர்" என்னும் திருப்பெயரை அளித் தருளினார்.

இராமானுஜர், கோதை நாச்சியாரைப் பணிந்து, விடைகொண்டு ஆழ்வார் திருநகரை அடைந்து, ஆழ்வாரை வணங்கிப் போற்றிச் சென்று மீண்டும் திருவரங்கத்தை அடைந்து அரங்கனுக்குக் கைங்கரியங்களைச் செய்து கொண்டு அங்கேயே எழுந்தருளியிருந்தார். ஆழ்வார்கள் அருளிச் செய்த தமிழ்ப் பாசுரங்களை வடமொழி வேதங்களுக்கு இணையாகக் கருதும்படிச் செய்தார். 120 ஆண்டுகள் வாழ்ந்தார். உடலில் சிறிது சிறிதாகத் தளர்ச்சி ஏற்பட்டது. எம்பாரின் மடியிலே தலை வைத்து, வடுக நம்பியின் மடியிலே திருவடிகளை நீட்டி, திவ்யமந்திரத்தை உச்சரித்துக் கொண்டே திருநாடு எய்தினார்.

இவருடைய திருமேனிகள் பற்பல வைணவத் தலங்களை அலங்கரிக்கின்றன. அவற்றுள் மூன்று அற்புதத் திருமேனிகளை நாம் அறிந்து இன்புற வேண்டியது அவசியமாகும்.

திருநாராயணபுரத்தில் வீற்றிருந்து அரும் பணிகள் ஆற்றிய ஸ்ரீஇராமானுஜர், திருவரங்கம் புறப்படும் வேளையில் இவர்தம் பிரிவாற்றலால் வருத்தமுற்றிருக்கும் சீடர்களின் துயர் தீர்க்க எண்ணி, தம்மைப் போன்ற திருமேனி ஒன்று வடிக்கச் செய்து, அதனை ஆலிங்கனம் செய்து தம் திவ்விய சக்தியை அதனுள் செலுத்தினார். அவர்தம் திருமேனி "தமர் உகந்த திருமேனி"யாகத் திருநாராயணபுரத்தில் விளங்குகிறது..

ஸ்ரீ இராமானுஜர் திருவரங்கத்திற்கு வந்த பிறகு அவர் பிறந்த திருப்பெரும்புதூர் அன்பர்கள் அவரைப்போல் திருமேனி வடிவமைத்துக் கொண்டு வந்து காட்டினர். ஸ்ரீ

இராமானுஜரும் அவ்விக்கிரகத் திருமேனியைக் கட்டி அணைத்துத் தன் பிராண ஜீவனை அவ்விக்கிரகத்திற்குக் கொண்டு செலுத்தினார். இராமானுஜரே உகந்த அவர் ஜீவசக்தி பொருந்திய அந்த விக்கிரகம் "தாம் உகந்த திருமேனி"யாக ஸ்ரீபெரும்புதூர் ஆலயத்தில் வீற்றிருக்கக் காணலாம்.

ஸ்ரீ இராமானுஜர் தன் 120வது வயது நிறைவில் திருமால் திருவடி சேர்ந்தார். அவரது திவ்விய திருமேனி திருவரங்கனின் திருக்கோயில் வளாகத்தில் பள்ளிப் படுத்தப்பட்டது. ஆயின் சில நாட்களில் அவர்தம் திவ்விய திருமேனி மேலே வந்து அமர்ந்த திருக்கோலத்தில் வீற்றிருக்க, இன்றும் அவர்தம் திருமேனி தனிச் சந்நிதியில் "தாமான திருமேனி"யாகச் சேவை சாதித்து வரும் அற்புதத்தைத் திருவரங்கத்தில் தரிசித்து மகிழலாம்.

ஸ்ரீ இராமானுஜர் திருவடிகளே போற்றி!

## திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த "பிரபந்த காயத்திரி" என்னும் இராமானுஜ நூற்றந்தாதி

"பூமன்னு மாது பொருந்திய மார்பன் புகழ்மலிந்த
பாமன்னுமாறன் அடிபணிந்து உய்ந்தவன்·பல்கலையோர்
தாம்மன்ன வந்த ராமானுசன் சரணார விந்தம்
நாம் மன்னிவாழ நெஞ்சே! சொல்லுவோம் அதன் நாமங்களே"

"அடையார் கமலத் தலர்மகள் கேள்வன், கை யாழியென்னும்
படையோடு நாந்தக மும்படர் தண்டும்,ஒண் சார்ங்கவில்லும்
புடையார் புரிசங்க மும்இந்தப் பூதலம் காப்பதற்கென்று
இடையே இராமானுச முனியாயின இந்நிலத்தே"

"மண்மசை யோனிகள் தோறும் பிறந்து,எங்கள் மாதவனே
கண்ணுற நிற்கிலும் காணகில் லா,உல கோர்களெல்லாம்
அண்ணல் இராமா னுசன்வந்து தோன்றிய அப்பொழுதே
நண்ணரு ஞானம் தலைக்கொண்டு நாரணற் காயினரே!"

"மொழியைக் கடக்கும்பெரும்புக ழான்,வஞ்ச முக்குறும்பாம்
குழியைக் கடக்கும்நம் கூரத்தாழ் வான்சரண் கூடியபின்,
பழியைக் கடத்தும் இராமா னுசன்புகழ் பாடியல்லா
வழியைக் கடத்தல், எனக்கினி யாதும் வருத்தமன்றே!"

"காரேய் கருணை இராமா னுச,இக் கடலிடத்தில்
ஆரே யறிபவர் நின்னரு ளின்தன்மை, அல்லலுக்கு
நேரே யுறைவிடம் நான்வந்து நீயென்னை உய்த்தபினுன்
சீரே யுயிர்க்குயி ராய், அடி யேற்கின்று தித்திக்குமே!"

"பொருந்திய தேசும் பொறையும் திறலும் புகழும்,நல்ல
திருந்திய ஞானமும் செல்வமும் சேரும், செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையி னால்வந் தெடுத்தளித்த
அருந்தவன், எங்கள் இராமா னுசனை அடைபவர்க்கே"

# திவ்ய தேசங்கள்

நாராயண மந்திரம் மூன்று பதங்களாயிருப்பதைப் போல இந்த ஸ்தலங்களை (திவ்ய தேசங்கள் என்று சொல்லப்படும் ஸ்தலங்களை) மூன்று திவ்யங்கள் சூழ்ந்துள்ளன. அதாவது கோவில் திவ்யமாகிறது. பெருமாள் ஒரு திவ்யம். மங்களாசாசனப் பாசுரம் திவ்வியப் பிரபந்தமாகிறது.

நாராயண மந்திரம் எனப்படும் திருமந்திரம் எட்டெழுத்துக்களால் (எட்டிழைகளால் ஆனது). இந்த திவ்ய தேசங்களும் சப்தபுண்யங்கள் எனப்படும். ஏழு புண்ணியங்களுடன் ஆழ்வார்களின் மங்களா சாசனத்தையும் சேர்த்து எட்டெழுத்தான திருமந்திரத்தின் சக்தியைப் பெற்று அஷ்டாச்சர மந்திரத்தின் பலனைத் தரக்கூடிய ஸ்தலங்களாக அமைகிறது..

"ஷேத்ரம் வநம் நதி ஸிந்துபுரம்
புஷ்கிணி ததா
விமானம் ஸப்த புண்யஞ்சயத்ரதேஸ!"

இவ்வேழு புண்ணியங்களும் ஒருங்கே அமையப் பெற்று ஆழ்வார்களின் மங்களாசாசனமும் ஒரு தலத்திற்கு அமையுமாயின் அது அஷ்டாச்சர மந்திரம் நிலை பெற்ற இடமாகும். இத்தனையும் ஒருங்குகூடிய ஸ்தலத்தைத் திவ்யதேசமெனச் சொல்வதில் என்ன தடை?

எனவே. எம்பெருமான் குடிகொண்டுள்ள இத்தனை உயர்வு ஸ்தலங்களில் ஒரு சில ஸ்தலங்களின் சிறப்புக்களை, இப்பதிகளுள் நுழைந்து - பதிகங்கள் கண்ட பரமனைப் பாடிப் பரவவும் வாரீர்.

# 1. திருவரங்கம் என்னும் ஸ்ரீரங்கம்

திருமாலின் திவ்ய தேசங்கள் 108ல் இத்திருவரங்கம் தலையாயது. சோழநாட்டுத் திருப்பதிகளுள் முதன்மையானது. கோயில், திருமலை, பெருமாள் கோயில் என்று பிரதானமாகச் சொல்லப்பட்ட மூன்றினுள் முதன்மையானது. அதாவது கோயில் என்றால் ஸ்ரீரங்கம். திருமலை என்றால் திருப்பதி. பெருமாள் கோயில் என்றால் காஞ்சி வரதராஜப் பெருமாள் சன்னதி

பெரிய கோயில் என்றும், பூலோக வைகுண்டம் என்றும், போக மண்டபம் என்றும் போற்றப்படும் இத்தலத்தை, அண்டர்கோன் அமரும் அணியரங்கமென்றும், தென்திருவரங்க மென்றும், செழுநீர் திருவரங்கமென்றும், திட்கொடிமதில் சூழ்த்திருவரங்கமென்றும் ஆழ்வார்கள் மாந்தி மகிழ்வர்.

பரமபதம். திருப்பாற்கடல் சூரிய மண்டலம் . யோகிகளுடைய உள்ளக்கமலம் இவையனைத்தும் இனியவை எனக் கருதி எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணன் தானே மனமுவந்து இங்கு வந்து தங்கி, தேனும் பாலும் கன்னலும், நெய்யும் அமுதும் கலந்தாற்போன்று மறைந்து உறைகின்றான். இங்கெல்லாம் மறைந்துறைகின்ற எம்பெருமான், இப்பூவுலகில் மாந்தரெல்லாம் தன்னைக் கண்ணாரக் கண்டு, தன் பேரழகை அள்ளிப் பருகிக் களிப்பெய்த தானே ஓர் அரங்கத்தைத் தெரிவு செய்து பள்ளிகொண்ட இடம்தான் ஸ்ரீரங்கம்.

எம்பெருமானின் பள்ளிகொண்ட திருக்கோலத்தையே பெயராகத் தாங்கி ஸ்ரீரங்கநாதன் பள்ளியென்றே அழைக்கப்பட்ட இவ்விடம், தமிழில் திருச்சீரங்க நாதன் பள்ளியாகி அவ்விதமே அழைக்கப்பட்டு, காலப்போக்கில் திருச்சிராப்பள்ளியாகி தற்போது திருச்சியாயிற்று.

சிறப்புகள்: இத்தலம்பற்றிய சிறப்புக்களைத் தொகுத்துத் தனி நூலொன்றே எழுதிவிடலாம். சிலவற்றை மட்டும் கண்டு நோக்குவோம்.

1. திருமகள் தினமும் வந்து பூஜித்துச் செல்லும் இத்தலம் இராமாயணக் காலத்தோடு தொடர்பு கொண்டு இந்தியாவின் தேசியத்திற்கு மதமும் ஒரு காரணம் என்பதைப் பறைசாற்றிக் கொண்டிருக்கிறது.

2. சிலப்பதிகாரத்தில் இத்தலம் கீழ்க்கண்டவாறு குறிக்கப் படுகிறது. விரிந்த அலைகளோடு கூடிய மிகப் பெரிய காவிரியாற்றின் இடைக் குறையில், திருமகள் விரும்பி உறையும் மார்பை உடையவனும்., நீலநிறம் கொண்ட வனுமாகிய திருமால் ஆயிரம் தலைகளுடைய வனுமாகிய ஆதிசேடன் என்னும் சிறந்த பாம்பணையாகிய பள்ளியணைமீது அழகுறச் சாய்ந்து கொண்டிருக்கும் தன்மை நீல நிறமுடைய ஒரு மேகமானது ஒரு பொன்மலையைச் சூழ்ந்து படிந்திருக்கும் பான்மையில் திகழ்கிறது.

> "நீல மேகம் நெடும் பொற்குன்றத்துப்
> பால் விரிந்து அகலாது படிந்தது போல
> ஆயிரம் விரித்தெழு தலையுடைய அருந்திறற்
> பாயற் பள்ளிப் பலர் தொழுதேத்த
> விரிதிரைக் காவிரி வியன் பெருந்துருத்தி
> திருவமர்மார்பன் கிடந்த வண்ணம்"

என்கிறார் இளங்கோவடிகள்.

3. பரமபதத்தில் இரண்டு மணத்தூண்கள் உள்ளது. பரமபதத்திற்குச் செல்வோர் இந்த மணத்தூண்களைத் தழுவி நித்ய சூரிகளாக விளங்குகின்றனர். (நித்ய சூரி

அழிவில்லாத பேரின்பமயமான சூழ்நிலையில் எம்பெருமானுக்குப் பணிவிடைபுரியும் ஆத்மாக்கள்) இதே போல் இங்குள்ள கருவறையிலும் மணத்தூண்கள் உள்ளன. இந்த மணத்தூணகளைத் தழுவிக்கொள்வோர் பரமபதத்து நித்ய சூரியாகும் பாக்கியம் பெறுவர் என்பது ஐதீகம். இந்த மணத் தூண்களை பற்றிக்கொண்டு எம்பெருமானை வாழ்த்தும் நாள் எந்நாளோ என்று குலசேகராழ்வார், மயங்கி நிற்கிறார். இதோ அவரின் பாடல்,

"கடியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
மாயோனை மணத்தூனே பற்றி நின்றென்
வாயாரா என்று கொலோ வாழ்த்தும் நாளே!"

4. உலகு போற்றும் காவியமான கம்ப இராமாயணத்தை கம்பர் இங்குதான் அரங்கேற்றினார். இவ்விடம் தாயார் சன்னதிக்கு எதிரே கம்பர் மண்டபம் என்ற பெயரில் நின்றிலங்குகிறது. கம்பர் தமது இராமாயணத்தில் இரண்யனை சம்ஹாரம் செய்த வரலாற்றை விளக்குகிறார். இராமாயணத்தில் இரண்ய வரலாறு வரக் கூடாது இதை ஏற்கமாட்டோம் என அறிஞர் பலரும் உரைக்கவே, அவ்வாறாயின் எம்பெருமான் திருமுன்பு அரங்கேற்றம் நடத்துவோம். அவர் ஒப்புக் கொண்டால் அனைவரும் ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான், என்று முடிவு கட்டி இவ்விடத்தே வந்து கம்பர் தமது இராமாயணத்தை அரங்கேற்றம் செய்யும் வேளையில் இச்சன்னதிக்குள் மேட்டுப்புறத்தில் எழுந்தருளியுள்ள அழகிய சிங்கப் பெருமாள், கம்பரின் இராமகாதையை நாம் அங்கீகரித்தோம் என்ற கர்ஜனையுடன் பெருமுழக்கம் செய்ததாகக் கூறுவர். இந்த மேட்டு அழகிய சிங்கர் கோவில் 5வது திருச்சுற்றுக்குள் (5வது மதிலுக்குள்) உள்ளது.

5. இப்பெருமானுக்கு அழகிய மணவாளன் என்பதும் ஒரு திருநாமம். அதாவது இவர் மிகவும் அழகான மாப்பிள்ளை ஆவார். எனவேதான் அழகிய மணவாளர் ஆனார். ஸ்ரீவில்லிபுத்தூரின் ஆண்டாளையும், உறையூர் கமலவல்லி நாச்சியாரையும் இவர் அழகான மாப்பிள்ளை திருக்கோலத்தில் ஏற்றுக் கொண்டார். தான் பேணி வளர்த்த பெண்ணான ஆண்டாளை இப்பெருமாள் பெண்டுகொண்டு போனதைப்பற்றி பெரியாழ்வார்,

ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால்
திருமகள்போல் வளர்த்தேன் செங்கண்மால்தான் கொண்டு போனான்
பெருமகளாய்க் குடிவாழ்ந்து பெரும்பிள்ளை பெற்ற யசோதை
மருமகளைக் கண்டுகந்து மணாட்டுப் புறம் செய்யுங்கொலோ

பெரியாழ்வார் திருமொழி 3-8-4

என்று மயங்கி மகிழ்வார்.

6. ஆழ்வார்கள் பன்னிருவரில் பதினோரு ஆழ்வார்களின் மங்களாசாசனத்தைப் பெற்ற திவ்யதேசமாகும் இது. 11 ஆழ்வார்கள் 247 பாக்களில் மங்களாசாசனம் பொழிந்த திவ்யதேசம். 108 திவ்யதேசங்களில் இப்பெருமை வேறெந்த திவ்ய தேசத்திற்கும் இல்லை. 12 ஆழ்வார்களில் மதுரகவியாழ்வார் வேறொன்றும் நானறியேன் என்று நம்மாழ்வார் ஒருவரை மட்( மங்களாசாசனம் செய்து உய்ந்தார். இவர் எந்தத் தேசத்தையும் பாடவில்லை. திவ்யதேசங்களை மங்களாசாசனம் செய்த ஆழ்வார்கள் மதுரகவியாழ்வார் தவிர்த்த மீதி 11 ஆழ்வார்கள்தான். இந்த 11 ஆழ்வார்களாலும் மங்களாசாசனம் செய்யப்பட்டதால் இவர் ஆழ்வார்களுக்குகந்த எம்பெருமான் என்று போற்றப்படுகிறார்.

7. திருமங்கையாழ்வார் திருவரங்கத்தில் மதில் கட்டினார். திருநறையூர் எம்பெருமான்மீது திருமடல் பாடியருளினார். தமக்கு மதில் எழுப்பியதால் சந்தோஷமடைந்த அரங்கநாதன் திருமங்கையாழ்வாரை விளித்து தீர்த்தம், மாலை, சடாரி. பரிவட்டம் போன்றன கொடுத்து எமக்கும் மடலுரைக்கலாகாதோ வென்றாராம். அதற்கு திருமங்கையாழ்வார் மிகவும் பக்தியோடு வாய்புதைத்து நின்று மதில் இங்கே மடல் அங்கே என்றாராம்.

8. வைணவ வளர்ச்சிக்கும், வைணவ மறுமலர்ச்சிக்கும் இத்திருவரங்கம் ஒரு பாசறையாக விளங்கியதென்றால் அது மிகையல்ல. ஆம் முதல்வன் இவன் என்று இராமானுஜரை அடையாளங்காட்டிய ஆளவந்தார் வைணவத் தலைமையேற்று இங்கிருந்து ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது. வியாக்யான சக்ரவர்த்தி என்னும் வைணவக் கடலும், பிள்ளை உலகாசரியன் என்னும் வைணவ மேதாவியும் இங்கு நெடுங்காலம் தங்கியிருந்து வைணவம் வளர்த்தனர். ஸ்ரீராமானுஜர் திருவரங்க கோவிலின் நிர்வாகத்தை ஏற்று ஸ்ரீரங்க ஜீயராக இருந்து திருக்கோவில் நிர்வாகப் பரிபாலனம் பண்ணி விசிஷ்டாத்வைதத்தை உலகுக்கு அளித்த இடம். திருவரங்கப் பெருமாளுக்குரிய ஆபரணங்கள் முதற்கொண்டு அன்றாடம் அரங்கனுக்கு அணிவிக்க வேண்டிய ஆடைகள், பிரசாதம், விழாக்கால நடைமுறைகள் போன்றவற்றை முறைப்படுத்தி நிர்வாகத்தை ஒழுங்குபடுத்தினார். இதனைத் திருவரங்கர் செல்வம் முற்றுந் திருத்தி என்ற அடைமொழியால் குறிப்பார். இவ்வொழுக்கு இராமானுஜருக்குப் பின்னால் இஸ்லாமியர்களின் படையெடுப்பு வரையில் பெரிதும் போற்றிப் பாதுகாக்கப்பட்டன.

9. திவ்யதேசங்களில் தமிழ்ப்பாசுரங்களை இசையோடு இசைத்து முன் செல்ல, அதனைச் செவிமடுத்தவண்ணம் பெருமாள் பின்னரே வர, தமிழ் முன் செலத் திருமால் பின்வர என்று தமிழ் பிரபந்தங்கட்கு முன்னுரிமை கொடுத்து சீர்திருத்தம் செய்து இராமானுஜர் இங்கு நெடுங்காலம் இருந்தார். இங்கு நடந்த இராமானுஜ வைபவங்களைப்பற்றி பெரிய நூலொன்றே யாத்து விடலாம். இறுதியில் இராமானுஜர் திருநாடு (மோட்சம்) அடைந்ததும் ரங்கநாதனே அவரை வஸந்த மண்டபத்தில் வைக்குமாறு பணிக்க இன்றும் அவரது திருமேனியை தரிசிக்கும் இத்தகைய கீர்த்தி வேறெந்த திவ்ய தேசத்திலும் இல்லை.

10. இங்கு எல்லாமே பெரியவைகள். ஆம் கோவில் பெரிது. இராமபிரானே நமக்குப் பெருமாள் ஆவார். அவரால் தொழப்பட்ட இந்த ரங்கநாதன் பெரிய பெருமாள் கோவிலும் பெரிது. அதனால் பெரிய கோவில் ஆயிற்று. 7 மதில்களும், எண்ணற்ற மண்டபங்களும் பெரிது. இதற்குச் சிகரம் வைத்தாற்போல் இத்தலத்தின் கோபுரம் ஆசியாவிலேயே பெரிது. இங்கு எழுந்தருளியுள்ள கருடன் மிகப் பெரியவர். இங்கிருந்த ஜீயரும் பெரிய ஜீயர். உரையாசிரியர், ஆச்சான் பிள்ளையோ பெரியவாச்சான் பிள்ளை. திருமதில்கள் பெரிது. இங்கிருந்த ஆச்சார்யார் நம்பிகளின் திருநாமமோ பெரிய நம்பி. தாயாருக்குப் பெரிய பிராட்டி என்பது பெயர். இங்கு செய்யப்படும் தளிகைக்கு பெரிய அவசரம் என்று பெயர். இங்குள்ள வாத்யத்திற்குப் பெரிய மேளம் என்று பெயர். இங்கு தயாரிக்கப்படும் பட்சணங்கட்குப் பெரிய திருப்பணியாரங்கள் என்று பெயர். ஆண்டாளை வளர்த்தெடுத்து அரங்கனுக்கு மணமுடித்துக் கொடுத்து மாமனார் ஸ்தானம் வகிக்கும் ஆழ்வாரோ பெரிய ஆழ்வார். இரண்டாகப் பிரிந்து ஓடும் காவிரியும்,

கொள்ளிடமும் தமிழ்நாட்டிலேயே பெரிய நதிகள். ஆழ்வார்களின் மங்களாசாசனங்களோ பெரிய மங்களாசாசனங்கள். ஆம் 108 திவ்ய தேசங்களில் 11 ஆழ்வார்களால் 247 பாக்களால் பெரிய மங்களாசாசனம் பெற்றவர் இப்பெருமாள். இராமாயணக் காலத்திற்கும் முற்பட்டு, இப்பூமிக்கு வந்த பெருமாள் இவரென்றால் இவரின் தொன்மைபற்றி ஆராய்வது பெரிய ஆய்வு. அப்பேற்பட்ட தொன்மையான பெருமாள் தமிழகத்தில் இங்கு வந்து பள்ளி கொள்ள விரும்பினாரென்றால் அது பெரிய விஷயம்.

11. தொண்டரடிப்பொடி திருமாலை கட்டித் தருகிறார். திருமங்கை மண்டபமும் மதிலும் கட்டித் தருகிறார். பெரியாழ்வார் பெண் கொடுத்து மாமனாகிறார். ஆண்டாள் மனையாட்டி ஆகிறாள். திருப்பாணாழ்வார் திருவடிகளில் சேர்த்தியாகிறார். இவர்களுடன் மற்றைய ஆழ்வார்களும் மங்களாசாசனப் பூக்களைச் சூட்டி மகிழ்கின்றனர். என்னே ஆழ்வார்கட்கும் அரங்கனுக்கும் உள்ள தொடர்பு!

12. அரையர் சேவை என்பது நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தை ராக தாளத்தோடு இன்னிசையாய் இசைப்பது. மார்கழி மாதத்து வைகுண்ட ஏகாதசியின்போது இங்கு அரையர் சேவை நடப்பது செவிகட்கு மட்டுமன்றி கண்களுக்கும் அருவிருந்து. ஒரு சில திவ்ய தேசங்களில் மட்டுமே இந்த அரையர் சேவை இன்று வழக்கிலிருந்தாலும் திருவரங்கத்து அரையர் சேவையே மிகச் சிறப்பான தாகும். வைகுண்ட ஏகாதசியன்று இங்கு சொர்க்க வாசல் திறப்பது மிகச் சிறப்பான விழாவாகும். இந்த பரமபத வாசலில் விரஜா நதி ஓடுவதாக ஐதீகம்.

13. திருவரங்கனை நேராகக் கைகூப்பி வணங்கியவண்ணம் உள்ள மிகப் பெரிய கருடன் இங்கிருப்பதைப் போல் பிரம்மாண்டமான வடிவில் இந்தியாவிலேயே வேறெங்கும் இல்லையென்று சொல்லலாம். இந்தக் கருடாழ்வாரின் சன்னதி வாயிலை சுக்ரீவனும், அங்கதனும் காவல் புரிவதாக ஐதீஹம். பாண்டிய மன்னன் சுந்தரவர்மன் காலத்தில் கட்டப்பட்டதாக இருக்கலாமென்று வரலாற்றாய்வர் பகர்வர். இச்சந்நதிக்கு எதிரே உள்ள பரமன் மண்டபத்தில் உள்ள சிற்பங்கள் பார்ப்பதற்குப் பேரழகு பொருந்தியவை.

14. இந்தத் திருவரங்கத்திற்கு மட்டும் ஏழு மதில்கள். ஒவ்வொன்றும் ஒரு வரலாற்றுச் சிறப்பு கொண்டவை. ஒவ்வொன்றும் ஒவ்வொருவிதமான தெய்வாம்சம் கொண்டவை.

15. இப்பெருமாள் திரேதாயுகத்துப் பெருமாள். இந்துக் களுக்கு மட்டுமன்றி உலகத்தோர் அனைவருக்கும் பொதுவான செல்வமாகி விட்டவர் நம் திருவரங்கச் செல்வர். இவ்வுரிமையை உறுதி செய்வது போல் 1987ல் அரங்கனுக்கு ஆசியாவிலேயே மிகப் பெரிய கோபுரத்தை ஜீயர் சுவாமிகள் அமைத்துக் கொடுத்து விட்டார்.

16. ஆம், திருவரங்கத்து இன்னமுது, வைணவர்களுக்கு மட்டுமன்றி, இந்துக்களுக்கு மட்டுமன்று, உலகத்தின் அனைத்து மக்களுக்கும் உரிய ஒரு தனிச் சொத்து. அதுதான் வைணவ சம்பிரதாயமும் ஆகும். அதனால் தான் ஆண்டாளும் "வையத்து வாழ்வீர்கள்" என்று வையத்து மாந்தரையெல்லாம் விளித்தார்.

# 2. திருப்புள்ளம் பூதங்குடி

"அறிவதறியா னனைத்துலகும்
உடையானென்னை யாளுடையான்
குறிய மாணி யுருவாய
கூத்தன் மன்னி யமருமிடம்
நறிய மலர்மேல் சுரும் பார்க்க
எழிலார் மஞ்ஞை நடமாட
பொறிகொள் சிறை வண்டிசை பாடும்
புள்ளம் பூதங்குடிதானே!"
(1348) பெரிய திருமொழி 5-1-1

என்று திருமங்கையாழ்வாரால் பாசுரம் பெற்ற இத்திவ்ய தேசம் திருஆதனூர் திவ்ய தேசத்திலிருந்து சுமார் 3 பர்லாங் தூரத்தில் உள்ளது.

இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது அவனை எதிர்த்துப் போரிட்ட சடாயு, இராவணன் வாளினால் துண்டிக்கப்பட்டு இராமா, இராமா என்ற சத்தத்துடன் குற்றுங்குலையுயிருமாய் கிடக்க அவ்வழியே வந்த இராம இலட்சுமணர்கள் இவ்வபயக்குரல் கேட்டு அருகில் சென்று பார்க்க, சீதையை இராவணன் கவர்ந்து சென்ற விவரத்தைத் தெரிவித்து விட்டு உயிர் துறக்க, ஜடாயுக்கு மோட்சமளித்துவிட்டு இராமன் அவருக்கு (ச்ரம பரிஹாரம்) இறுதிக்கடன் செய்த ஸ்தலம்.

சிறப்புகள்

1. சூரியனின் மகன் ஜடாயு. இவர் தசரத சக்கரவர்த்திக்குப் பல உதவிகள் செய்து உயிர்த் தோழராயிருந்தார். சம்பராசுர யுத்தத்தில் இவர் செய்த

உதவியை நினைத்து தசரதன் ஜடாயுவை உடன்பிறந்தானாகவும், தன்னை உடம்பாகவும் எல்லோரிடமும் கூறி அதுபோலவே பாவித்தான். எனவேதான் தசரதனின் மறைவை இராமாயணத்தில்,

"உயிர் கிடக்க உடலை விசும்பேற்றினார்
உணர்விறந்த கூற்றினாரே"

என்று கூறினார்.

இவர் தசரத குமாரர்களான இராமலக்குவர்களைத் தம் புதல்வர் போலவே பாவித்து அன்பு பாராட்ட அவர்களும் இவரைத் தமது பெரிய தந்தையாகவே பாவித்து வந்தனர். ஆதலால் ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் பெரிய உடையார் என்னும் பெயர் இவருக்குண்டாயிற்று.

2. இச்சடாயுவைப்பற்றி ஞானசம்பந்தர் தமது தேவாரத்தில் "மறங்கொண்டங்கி இராவணன் தன் வலி கருதி வந்தானை புறங்கொண்ட சடாயென்பான்" என்றும் "ஆதித்தன் மகனன்ன அகன் ஞாலத்தவரோடும் போதித்த சடாயென்பான்" என்றும் பரக்கப் புகழ்வார். கம்பரும் இவரை,

"தூய்மையின் இருங்கலைத் துணிந்த கேள்வியன்
வாய்மையின் மறுஇலன் மதியின் கூர்மை
ஆய்மையின் மந்திரத்து அறிஞன் ஆம் எனச்
சேய்மையின்நோக்குறு சிறு கணான்" என்பர்

3. ஜடாயு என்ற வட சொல்லுக்கு —— பல மயிர்கள் சேர்த்து திரித்த ஜடைபோல பலவாய்மிக்குத் திரண்ட ஆயுள் உடையவரென்றும் பொருள். இந்த ஜடாயுவானவர் தூய்மையின் இருங்கலை துணிந்த

கேள்வியர் - அதாவது ஜீவாத்மா, பரமாத்மா என்ற இரண்டு தத்துவங்களை அறிந்தவர். வாய்மையின் மறு இலன் - அதாவது வாக்குமாறாத் தன்மை பெற்றவர். மதியின் கூர்மை ஆய்மையின் மந்திரத்து அறிஞன் ஆம் என — அதாவது இவரின் அறிவானது திருமந்திரத்தை அறிந்த கூர்மையுடையது — செய்மையின் நோக்குறு சிறு கணான் - அதாவது வெகு தொலைவில் நடப்பதைக் காணக்கூடிய ஆற்றல் பெற்ற சிறிய கண்களை உடையவர் என்பதுமாம்.

4. சடாயுவாகிய புள்ளிற்கு மோட்சம் கொடுத்து அதன் பூத உடலுக்குச் செய்ய வேண்டிய கடன்களைச் செய்தமையால் புள்ள பூதங்குடியாயிற்று. வைணவ சம்பிரதாயத்தில் (ஸ்ரீவைணவர்கட்கு) இரண்டு பூதபுரிகள் உண்டு. ஒன்று ஸ்ரீபெரும்புதூர். மற்றொன்று புள்ளம் பூதங்குடி. இது தஞ்சையருகில் உள்ளது. அது காஞ்சியருகில் உள்ளது. இது இராமன் உகந்த இடம். அது இராமானுஜர் அவதரித்த இடம். இதை ஆழ்வார்கள் அபிமானித்தார்கள். அதை ஆச்சாரியார்கள் அபிமானித்தார்கள்.

5. இராமன் ஜடாயுவுக்கு சிரமப் பரிகாரம் செய்துவிட்டு இங்கு பள்ளி கொண்டான். திருமங்கையாழ்வார் இங்கு வந்த போது யாரோ இரண்டு கைகளையுடைய பிற தெய்வம் என்றெண்ணிக் கவனியாது செல்ல, திடீரென்று ஒரு பெரிய ஜோதி வெள்ளம் தெரிய திரும்பிப் பார்த்த திருமங்கையாழ்வாருக்கு நான்கு கரங்களுடன் சங்கு சக்ரதாரியாக ஸ்ரீராமன் காட்சி கொடுப்பதைக் கண்டு அறிய வேண்டியதை அறியாமல் சென்று விட்டேன் என்று கூறும் வகையில் "அறிவதறியான் அனைத்துலகும் உடையான்" என்ற

பாசுரத்தால் தொடங்கி 10 பாசுரங்களில் மங்களாசாசனம் செய்தார்.

6. தகப்பனாருக்குச் சிரம பரிஹாரம் பண்ணப் பெறாமையால் உண்டான குறை தீர ஜடாயுவுக்கு அதைச் செய்து அவனுக்கு மோட்சம் தந்து அம்மகிழ்ச்சியால் பொலிவுறத் திகழ்ந்த இராமனை வல்வில் இராமன் என்று தமிழில் வர்ணிக்க வடமொழியில் இதே பொருளில் த்ருட தந்வி என்று வர்ணிக்கின்றனர்.

7. சீதையைத் தேடிவந்த இராமன் சடாயுவுக்கு இங்கு இறுதிக் கடன் செய்ததை,

"தனமருவு வைதேகி பிரிய லுற்றுத்
தளர்வெய்திச் சடாயுவை வைகுந்தத்தேற்றி"

என்று குலசேகராழ்வார் (746) குறிக்கிறார்.

# 3. திருக்குடந்தை (கும்பகோணம்)

"பாலாலி லையில் துயில் கொண்ட
பரமன் வலைப் பட்டிருந்தேனை
வேலால் துன்னம் பெய்தாற் போல்
வேண்டிற் றெல்லாம் பேசாதே
கோலால் நிறை மேய்த் தாயனாய்க்
குடந்தை கிடந்த குடமாடி
நீலார் தண்ணந்துழாய் கொண்டு
என் நெறி மென்குழல் சூட்டீரே"
நாச்சியார் திருமொழி 13-2 (628)

என்று ஸ்ரீ ஆண்டாளால் காதற் பாமாலை சூட்டப்பட்ட மாயன் கிடக்கும் குடந்தை என்னும் கும்பகோணம் கோவில்களின் நகரமென்றும், தஞ்சைத் தரணியில் தனிப்பெருமை வாய்ந்த பதியென்றும் எவருக்குஞ் சொல்லாமல் எளிதில் விளங்கும்.

சிறப்புகள்

1. திருமலைக்கும் அரங்கத்திற்கும் அடுத்து இங்குதான் ஆழ்வார்களின் மங்களாசாசனம் அதிகம். இங்கு உள்ள இராஜகோபுரம் உயரத்தில் மூன்றாவதாகும். முதலாவது ஸ்ரீரங்கம் 236 அடி உயரம் ஆகும். இரண்டாவது ஸ்ரீவில்லிபுத்தூர் இராஜகோபுரம் உயரம் 165 அடி ஆகும். 150 அடி உயரமுள்ள இத்தலத்தின் இராஜகோபுரம் மூன்றாவது இடத்தைப் பெறுகிறது.

2. 108 திவ்ய தேசங்களில் இத்தலத்திற்கு மட்டுமே உபய பிரதான திவ்ய தேசம் என்ற மற்றொரு பெயரும் உண்டு. அதாவது மற்ற ஸ்தலங்களைப் போலன்றி இங்கு மூலவருக்குள்ள சகல மரியாதைகளும் சிறப்புக்களும்

உற்சவருக்குமுண்டு. இருவரும் ஒப்பிலா அழகில் திளைத்தவர்கள். உபயமாகப் பயன்படுவதே இங்கு பிரதானமானதாகவும் ஆவதால் இதற்கு "உபயப் பிரதான திவ்ய தேசம்" என்று பெயர்.

3. வடஇந்தியாவில் 12 ஆண்டுகட்கு ஒருமுறை கும்ப ராசியில் குருவரும் காலத்தில் கும்பமேளா கொண்டாடப் படுவதைப்போல் 12 ஆண்டுகட்கு ஒரு முறை சிம்ம ராசியில் உள்ள மகநட்சத்திரத்தில் வியாழன் வரும் காலத்தில் இங்கு மகாமகம் என்னும் நீராடல் விழா கொண்டாடப்படுகிறது. இந்தியாவில் உள்ள புண்ணிய நதிகளான கங்கை, காவேரி, யமுனை, ஸரஸ்வதி, கோதாவரி, நர்மதா, கிருஷ்ணா, சிந்து, சரயு முதலிய ஒன்பது நதிகளும் இங்கு வந்து இந்த மகாமகக் குளத்தில் நீராடித் தங்கள் பாவங்களைப் போக்கிப் புனிதம் அடை கின்றனவாம். இச்சமயத்தில் இச்சந்நதியில் உள்ள மகா மகப் பொற்றாமரைக் குளத்தில் நீராடுவது மிகப் பெரிய புண்ணியமாகும். இந்தக் குளக்கரையில்தான் 9 நதி கன்னிகைகட்கு அவர்களின் உருவத்திற்கொப்ப 9 சிலைகள் உள்ளன. இவ்வமைப்பு இங்கு மட்டுமுள்ளது.

4. இத்தலத்தில் அமைந்துள்ள சித்திரைத்தேர் அல்லது சித்திரத்தேர் எனப்படும் தேர் தென்னிந்தியாவில் உள்ள மிகப் பெரிய தேர்களுள் ஒன்றாகும். இத்தேரைத் திருமங்கையாழ்வாரே இப்பெருமானுக்கு அர்ப் பணித்தார். அழகிய சித்திரங்களும், நுண்ணிய வேலைப் பாடும் நிறைந்தது இத்தேர். இத்தேரினையே மங்களா சாசனம் செய்வதுபோல் திருவெழு கூற்றிருக்கை என்னும் பிரபந்தத்தை அருளிச் செய்தார். தேரின் உருவமைப்பை ஒத்தான பாடல்களைக் கொண்ட இத்திருவெழு கூற்றிருக்கை ரதபந்தம் என்ற பெயரில் அழைக்கப்படுகிறது.

5. நாலாயிரத் திவ்ய பிரபந்தத்தைத் தொகுப்பதற்கு இப்பெருமானே காரணமாக இருந்ததாகக் கூறுவர். ஆராவமுதன் என்று பெயர் கொண்ட இப்பெருமான் ஆழ்வார்களின் பாக்களைத் தொகுப்பதற்குக் காரணமாக இருந்தமையால் ஆராவமுதாழ்வாரென்ற பெயரையே இப்பெருமானுக்குச் சூட்டலாயினர். இக்கதை குரு பரம்பரையில் காட்டுமன்னார்குடியில் என்று காணப்படினும் ஆராவமுதாழ்வான் என்ற திருநாமம் இங்கு உள்ள பெருமாளை ஊர்ஜிதப்படுத்தும்.

6. திருமழிசையாழ்வார் இப்பெருமாளை நோக்கி இலங்கைக்கு நடந்த வருத்தத்தால் கால்கள் நொந்து களைத்துப் போய்ப் படுத்துள்ளீரோ, வராஹரூபியாய் உலகைத் தாங்கிய களைப்போ என்று கேட்டு கிடந்தவாறே எழுந்திருந்து பேசு கேசவனே என்று பாடியதும், சற்றே எழுகின்ற திருக்கோலத்தில் புஜத்தைச் சாய்த்து எழுந்திருக்க முயல்வதுபோல் காட்சி கொடுத்தாராம். இன்றும் இதுபோல் சாய்ந்த வாறே எழுந்திருக்க முயலும் திருக்கோலத்தில்தான் காட்சி தருகிறார். இந்த நிலைக்குத்தான் உத்தனன் சாயி (சாய்ந்து எழமுயலும் திருக்கோலம்) என்று திருப் பெயர்.

"நடந்த கால்கள் நொந்தவோ நடுங்கு ஞால மேனமாய
கிடந்த மெய் குலுங்கவோ விலங்கு மால் வரைச்சுரம்
கடந்த கால் பரப்பிக் காவிரிக் கரைக் குடந்தையுள்
கிடந்த வாறெ யெழுந் திருந்து பேசு வாழி கேசவனே"

பெருமாள் எழ ஆரம்பித்ததும், ஐயோ வீணாக நாம் சிரமப்படுத்திவிட்டோமே என நினைத்த ஆழ்வார், எழுந்திருக்க முயன்ற எம்பெருமானை நோக்கி, வாழி கேசவனே என்றார். அப்படியே எழ முயன்ற சாய்ந்த திருக்கோலத்திலேயே இருந்துவிட்டார்.

தாயார் கோமளவல்லி ஒருபோதும் வெளியில் உலா வராது இறைவன் திருப்பணியிலேயே இடையறாது ஈடுபட்டிருப்பதால் படிதாண்டாப் பத்தினி என்ற பெயரும் தாயாருக்குண்டு.

இங்குள்ள உற்சவமூர்த்தி சார்ங்கம் என்னும் வில்லை எப்போதும் கையில் வைத்திருப்பதால் சாரங்கபாணி என்ற திருநாமம் உண்டாயிற்று. சாரங்கமென்னும் வில்லாண்டான் தன்னை என்பது பெரியாழ்வாரின் மங்களாசாசனம்.

9. வைணவ மத வளர்ச்சிக்கு ஒரு பெரிய மலை போன்று விளங்கிய கிருஷ்ணதேவராயரால் இத்தலம் புதுப்பிக்கப் பட்டது.

10. முகலாயர்கள் படையெடுப்பின்போது இக்கோயிலை கொள்ளையிட்டு அழித்துவிட்டு எத்தனித்துவிடுங்கால் நெய்வாசல் உடையார் என்னும் பக்தர் தமது பக்தி மேலீட்டால் வைக்கோற்போரால் இப்பெருமானின் இருப்பிடத்தை மூடி மாடுகட்டும் இடம் என்று சொல்லி அவர்களை மருளச் செய்து திருப்பியனுப்பினார். நெய்வாசல் உடையார் வம்சத்தாருக்கு ஸாசனமும், மரியாதைகளும் இங்கு தொன்றுதொட்டு இருந்து வந்தது.

11. பாபங்களைப் போக்குவதில் வடநாட்டில் உள்ள காசிக்கு ஈடானது இத்தலம் என்று வடமொழி நூல்கள் பரக்கப்

12. முன்னொரு யுகத்தின் முடிவு நெருங்கும் வேளையில் பிரளயம் வரப்போவதை உணர்ந்த பிரம்மன் சிருஷ்டிக்குக் காரணமான விதையையும், வேதங்களை யும் அமுதத்தையும் இட்டு நிரப்பி வைத்த ஒரு குடத்தை

இமயத்தின் சிகரத்தில் வைக்க, பிரளயத்தின்போது ஏற்பட்ட பெரு வெள்ளத்தில் அக் குடம் மிதந்து வந்து சோழநாட்டை அடைய, அப்போது தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்க பரமசிவன் வேடன் உருக் கொண்டு ஓர் அம்பால் குடத்தின் மூக்கை உடைக்க, அக்குட மூக்கின் வழியாக உள்ளிருந்த அமுத வெள்ளம் கீழே பரவி, மீண்டும் சிருஷ்டிக்கு வழி வகுத்ததென்றும், அது இரு பிரிவுகளாகப் பிரிந்து ஒன்று மகாமகக் குளத்தையும், மற்றொன்று பொற்றாமரைக் குளத்தையும் சார்ந்ததென்று ஸ்தல புராணம் விளக்குகிறது. அவ்விதம் குட மூக்கின் வழியாக அமுதம் வெளிவந்த இடமாகை யால் இவ்வூருக்கு குடமூக்கு (திருக்குடந்தை) அல்லது கும்பகோணம் என்றும் பெயர் வந்ததாகக் கூறுவர்.

13. இச்சேத்திரத்தில் இவ்வெம்பெருமான் தவிர ஸ்ரீசக்ர பாணி, ஸ்ரீராமர், ஸ்ரீவராஹர், ஸ்ரீகோபாலன், ஸ்ரீவேத நாராயணன், ஸ்ரீவரதராஜன் போன்ற எம்பெருமான் களும் எழுந்தருளியுள்ளனர். இதில் ஸ்ரீராமர் பட்டாபிஷேகத்தின் திருக்கோலத்தில் உள்ள சந்நிதி பார்ப்பதற்குப் பேரழகு பொருந்தியதாகும்.

14. இவ்வூரில் வாழ்ந்த லெட்சுமி நாராயணசுவாமி என்னும் பக்தர் இப்பெருமானின் கைங்கர்யத்தில் பெரிதும் ஈடுபட்டு, தகப்பன், தன் மகளுக்கு ஆற்றும் கடமைகள் போல் வாழ்நாளெல்லாம் இப்பெருமானுக்குப் பணிவிடை செய்வதிலேயே காலங் கழித்தார். உறவினர் ஒருவரும் இல்லாத அவர் பரமபதம் அடைந்ததும் அவருக்குச் செய்ய வேண்டிய இறுதிச் சடங்குகளை ஊரார் செய்து வைத்தனர். மறுநாள் காலையில் கோவிலைத் திறந்து பார்க்க, இப்பெருமாள் ஈர வேட்டியுடனும் மாற்றியுள்ள பூணூலுடனும்

தர்ப்பணங்களுடனும் இறுதிக்கடன் சடங்குகள் செய்யும் கோலத்துடன் காட்சியளித்தார்.

15. குடந்தையில் "ஸெந்தர்யம் பிரஸித்தம்" என்பது வட மொழி. ஏரார் கோலம் திகழக் கிடந்தாய் என்பது ஆழ்வார்கள் மொழி.

16. துணில முற்றம் என்று பெரியாழ்வாரின் பாசுரத்தில் கூறப்படுவது இக்கோவிலின் வடக்குப் பிரகாரமாகும்.

17. உத்ராயண வாசல், தட்சிணாயன வாசல் என்ற இருவாசல்களுண்டு. முறைப்படி உத்ராயணக் காலத்தில் உத்ராயண வாசல் வழியிலும் தட்சிணாயனக் காலத்தில் தட்சிணாயன வாசல் வழியிலும் வழிபாடு செய்யப்படும் முறை இன்றும் விளங்குகிறது..

18. பொங்குதண்குடந்தை, நலத்தால் மிக்கார் குடந்தை, திசைவில் வீசும் செழுமாமணிகள் சேரும் செழுநீர் திருக்குடந்தை என்று மங்களாசாசனம் செய்யப்பட்ட இத்தலத்தை அடைந்த மாத்திரத்தில் சகல பாவங்களும் போகும்.

19. பெருமாளின் கருவறையைச் சுற்றிச் செல்லும்போது அந்த அழகான திருக்காட்சி நம் கண்ணைக் கவர்கிறது. சுவாமியின் கருவறையே தேர்வடிவில் அமைந்துள்ளது. மிகவும் பிரம்மாண்ட சக்கரங்கள் கொண்ட திருத்தேர். தாயாரைத் திருமணம் செய்யப் பெருமாள் வைகுண்டத்தி லிருந்து இறங்கிய தேரின் வடிவம் இது.

# 4. திருவிண்ணகர் என்னும் ஒப்பிலயப்பன் கோவில்

"பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டாங் குறைவார்க்கு கோயில் போல்
வண்டு வளங்கிளரு நீள் சோலை வண்பூங்கடிகை
இளங்குமரன் தன் விண்ணகர்"

-மூன்றாந் திருவந்தாதி - 61

பிரம்மாண்ட புராணத்தில் தன் தந்தையாகிய பிரம்மனிடம் நாரதர் இத்தலத்து மேன்மையை வினவ, நாரதனுக்குச் சொல்வதுபோல் இத்தல வரலாறு பேசப்படு கிறது.

ஒரு சமயம் திருத்துழாய்த் தேவி, திருமாலிடம் இலக்குமி பிராட்டியை மட்டும் மார்பில் தாங்கியுள்ளீர்கள், எனக்கும் அதுபோன்ற சிறப்பு வேண்டுமெனக் கேட்க, கடுந்தவம் புரிந்து என் மார்பில் இடம் பெற்ற இலக்குமி மீண்டும் பூவுலகு சென்று பூமிதேவி என்ற பெயருடன் காவிரிக்கரையில் தோன்றவிருக்கிறாள். அவளுக்கு முன் பாகவே நீ சென்று துளசிச் செடியாக அங்கே தோன்றவும், உன் மடியில் (நிழலில்) இலக்குமி அவதரிப்பாள். பின்னொரு நாள் நான் இலக்குமி தேவியை ஏற்றுக் கொள்வேன். இலக்குமி அவதரிப்பதற்கு நீ ஆதாரமாக இருந்தபடியால் இலக்குமியைவிட சிறந்த பேற்றினைப் பெறுவாய். இலக்குமி தேவியின் அருளைக் கூட கடுந்தவத் திற்குப் பின்பே ஒருவன் அடைய முடியும். ஆனால் உன் இதழ்களால் (துளசியால்) என்னைப் பூசிப்பவர்கள் அசுவமேதயாகத்திற்குண்டான பலனைப் பெறுவார்கள். உன் வனத்தை உறைவிடமாகக் கொண்டு உறைபவர்கள் வைகுண்டம் பெறுவார்கள். எப்போதும் நீ என் நெஞ்சை

அலங்கரிக்கும் மாலையாவாய். துளசி மாலையை ஏற்றுக் கொண்ட பின்புதான் நான் இலக்குமி தேவியை மணம் புரிவேன் என்று அருள, திருத்துழாய் தேவி உடனே அவ்விடம் வந்து துளசிச் செடியாய் மலர்ந்தாள். இந்தத் துளசியின் மகிமையைப்பற்றி நம்மாழ்வார் திருவிருத்தம் 53வது பாசுரம் பரக்கப் பேசுகிறது.

## சிறப்புகள்

1. திருப்பதி போக இயலாதவர்கள் வேங்கடேச னுக்குச் செய்து கொண்ட பிரார்த்தனைகளை இங்கேயும் செலுத்தலாம். திருப்பதி ஸ்ரீனிவாசனுக்குத் தமையனார் என்கிற ஐதீகம்.

2. 108 திவ்ய தேசங்களில் இங்கு மட்டுந்தான் உப்பில்லா நிவேதனம்.

3. சிரவண நட்சத்திரத்தன்று (திருவோண நட்சத்திரம்) சிரவண தீபம் எடுத்துக் குறி சொல்லுவது இங்கு விசேஷம்.

4. திருப்பதி வெங்கடாசலபதிக்கு உண்டானதுபோல் இப்பெருமானுக்கும் தனி சுப்ரபாதம் உண்டு.

5. நம்மாழ்வார் இருந்த இடத்திலேயே இருக்க பல ஸ்தலங்களில் இருக்கும் பெருமாள்கள் அவருக்குக் காட்சி கொடுக்க, அவர் ஆனந்தித்துப் பாடியதாக ஐதீகம். இத்தலத்துப் பெருமான் தானே மிகவும் உகந்து ஆழ்வாரை அணைந்து ஐந்து திருக் கோலங்களில் காட்சி கொடுத்தார். அவையாவன: பொன்னப்பன், மணியப்பன், முத்தப்பன்,

என்னப்பன், திருவிண்ணகரப்பன். இவ்வைந்து பெயரிட்டு,

"என்னப்ப னெக்காயிகுளாய் என்னைப் பெற்றவளாயப்
பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பனெனப்பனுமாய்
மின்னப் பொன் மதில் சூழ் திருவிண்ணகர் சேர்ந்தவப்பன்
தன்னொப் பாரில்லப்பன் தந்தனன் தனதாழ் நிழலே"

-என்பது திருவாய்மொழி 6-3-9 நம்மாழ்வாரின் பாசுரம்

6. இத்தலத்தையும், பெருமானையும்பற்றி நம்மாழ்வார் 11 பாசுரங்கள், திருமங்கையாழ்வார் 34 பாக்கள், பொய்கையாழ்வார் 1, பேயாழ்வார் 2 மங்களாசாசனம் செய்துள்ளனர்.

7. பிள்ளைப் பெருமாளய்யங்காரும் மங்களாசாசனம் செய்துள்ளார்.

8. வடமொழியில் இத்தலம் வைகுண்டத்திற்குச் சமமானதாகப் பேசப்படுகிறது. எனவே இதனை ஆகாச நகரி என்றே வடநூல்கள் கூறுகின்றன. வைகுண்டத்தில் ஓடக்கூடிய விரஜா நதியே நாட்டாறு (தட்சிண கங்கை) என்ற பெயரில் இங்கு ஓடுவதாக ஐதீஹம்.

# 5. திருநறையூர் என்னும் நாச்சியார் கோவில்

"அம்பரமும் பெரு நிலனும் திசைகளெட்டும்
அலைகடலும் குலவரையும் உண்ட கண்டன்
கொம்பமரும் வடமரத்தினிலை மேல் பள்ளி
கூடினான் திருவடியே கூடுகிற்பீர்
வம்பவிழும் செண்பகத்தின் வாசமுண்டு
மணிவண்டு வகுளத்தின் மலர் மேல் வைகு
செம்பியன் கோச் செங்கணான் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின் ,ளே!"
- பெரிய திருமொழி 6-6-1

இங்கு முக்கியமான 5 தீர்த்தங்களுண்டு.

| | | |
|---|---|---|
| மணிமுத்தா புஷ்கரணி | : | சோழன் தெய்வ வாள் பெற்றது. |
| ஸங்கர்ஷன தீர்த்தம் | : | பிரம்மாவின் தோஷம் விலகியது. |
| பிரத்யுமன தீர்த்தம் | : | பானுதத்தன் என்னும் அரக்கனின் சாபந் தீர்ந்தது. |
| அனிருத்தன தீர்த்தம் | : | இந்திரனின் சாபமகன்றது |
| ஸாம்ப தீர்த்தம் | : | சப்தரிஷிகள் தவம் செய்த பெருமை பெற்றது |

சிறப்புகள்

1. வியூக வாசுதேவனாக இவ்விடத்திற்கு எழுந்தருளிய எம்பெருமான் தனது 5 நிலைகளில் உண்டான சக்தியைத் தேவிக்கு அளித்து ஸ்ரீனிவாசன் என்னும் திருநாமத்தோடு தேவியைத் திருமணக் கோலத்தில் ஏற்றுக் கொண்டார். எனவே இத்தலத்தில் திருமாலும்

திருமணக் கோலத்திலேயே நின்று அருளுகிறார். இதுவே இத்தலத்தின் தனிச் சிறப்பாகும். வியூக ரூபத்துடன் எம்பெருமான் இங்கு எழுந்தருளியதும் ஒரு தனிச் சிறப்பாகும்.

2. திருமகளை மணம் புரிந்த கோலத்தில் வலது கையில் சக்கரமும், இடது கையில் சங்கும் ஏந்தி சற்றே முன்புறம் வருவதுபோல் ஒரு தோரணைக் காட்டி பஞ்ச சமஸ்காரம் என்னும் ஸ்ரீ வைஷ்ணவ லட்சணை செய்ய முற்படுதல் போல் (ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு வைணவ அடையாளம் இடுதல்) ஆகமசிற்ப சாஸ்திரத்தில் கூறப்பட்ட அனைத்து இலக்கணங்களுக்கும் ஒருங்கே பொருந்தியிருக்க எம்பெருமான் இங்கு எழுந்தருளி இருக்கும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும். இது போன்ற அழகுத் திருமேனியை வேறு எந்தத் திவ்ய தேசத்திலும் சேவித்து விட முடியாது. இப்பெருமானது அழகு திருமேனியில் திருமங்கையாழ்வார் ஆட்பட்ட விதம் சொல்லுந் தரமன்று.

3. பிராட்டிமார்களால் புகழ்பெற்ற ஸ்தலங்களில் இதுவும் ஒன்று. ஸ்ரீதேவியின் பெருமை திருவரங்கத்தில் என்றால், பூமாதேவியின் பெருமை திருவில்லிபுத்தூரில் என்றால், நீளாதேவியின் பெருமை பெற்றது இத்தலமாகும். பிராட்டிக்கு உண்டான நம்பிக்கை நாச்சியார் என்னும் திருநாமத்தாலே நாச்சியார் கோயில் என்றே பெயர் ஏற்பட்டது என்பர். ஸ்ரீவில்லிபுத்தூரரை நாச்சியார் திருமாளிகை

என்றும், இத்திருநறையூரை நாச்சியார் கோவில் என்றும் அழைப்பர்.

4. முக்தி தரும் 12 ஸ்தலங்களுள் ஸ்ரீனிவாசம் என்னும் தலமும் இதுதான்.

5. கருடாழ்வார் தனிச் சிறப்புற்றுத் திகழும் ஸ்தலமாகும் இது. இங்குள்ள கருடாழ்வார் மிக்க கீர்த்தியும், பெருஞ்சக்தியும் வாய்ந்தவர். மற்ற திவ்ய தேசத்துக் கருடாழ்வார்களைவிட இவருக்கு மகத்துவம் அதிகம்.

ஒரு சமயம் ஓர் ஊரில் ஒரு சிற்பி ஆகம விதிகட்கு உட்பட்ட முறையில் ஒரு கருடனைச் செதுக்கி வந்தாராம். சிற்பம் முடியும் தருவாயில் கருடனுக்கு இரண்டு புறமும் 2 சிறகுகளைச் செதுக்கி உயிரோவிய மாக செய்தாராம். உடனே உயிர்பெற்ற கருடன் மேல்நோக்கிப் பறக்க ஆரம்பிக்கவே அச்சமுற்ற சிற்பி தம் கையில் இருந்த கல் உளியை எடுத்துக் கருடன் மேல் எறிந்தாராம். மூக்கில் அடிபட்டதால் அந்தக் கருடன் இந்த நாச்சியார் கோவிலில் இறங்கி விட்டாராம். அதன் பின்பும் உயிர்பெற்று எம்பெருமானின் திருவருளால் இத்தலத்திலேயே அமர்ந்து தம்மை வேண்டினோர் அனைவருக்கும் இங்கிருந்தே அருள்பாலித்து வருகிறார் என்பது ஐதீகம். இவர் இத்தலத்தின் மூலஸ்தானத் திற்கு அருகேயுள்ள மகா மண்டபத்தில் சாளக்கிராம வடிவத்தில் நீள்சிறகும், நீள்முடியும், நீண்டு வளர்ந்த திருமேனியுடன் கம்பீரத் தோற்றத்தில் எழுந்தருளியுள்ளார்.

இவர் எழுந்தருளியுள்ள இடம் 10½ சதுர அடி. இவர் வாகன மண்டபத்திற்குப் புறப்படும் சமயம் இவர் திருப் பாதங்களை நால்வர் தாங்கி வருவாராம். இவரது இருப்பிடம் விட்டு வெளி வந்ததும் மூலைக்கு ஒருவராக மேலும் நால்வர். இவ்விதம் 16 பேர்கள் தாங்கிவர, படிகளில் இறங்கும் தறுவாயில் பலபேர்கள் தாங்க இந் நிகழ்வு கண்கொள்ளாக் காட்சியாக அமையும். இந்தக் கருடன்மீது எம்பெருமான் திருவீதி கண்டருள்வது நாச்சியார் கோவில் கருட சேவை எனப் பெரும் புகழ் பெற்றதாகும். பெரிய திருவடித் தரிசனம் என்றும் இதனைக் குறிப்பிடுவர்.

6. திருநறையூர் நம்பி, வைணவ சம்பிரதாயத்தில் மிக முக்கியமான கொள்கையான பஞ்ச ஸமஸ்காரத்தைத் திருமங்கையாழ்வாருக்குச் செய்துவித்து அவருக்கு ஆச்சார்யரானார். 108 திவ்ய தேசங்களில் வேறெந்தப் பெருமாளும் யாருக்கும் பஞ்ச ஸமஸ்காரம் செய்ததில்லை.

7. திருநறையூர் நம்பியை உற்று நோக்கினால் அவர் சற்றே முன்வந்து பஞ்ச ஸமஸ்காரம் செய்யும் தோற்றத்திலேயே இருப்பதுபோலத் தோன்றும். தானே ஆச்சார்யனாகவும், தானே சிஷ்யனாகவுமிருந்து பத்திரியில் எம்பெருமானே திருமந்திரத்தை உலகிற்கு இட்டு அருளினான் என்பர். தானே ஆசிரியனாகவும், தானே சீடனாகவும் இருந்ததால் பத்திரி எம்பெருமானை முழுமையான ஆச்சார்ய இலட்சணம் பெற்றவனென்று சொல்ல

முடியாது. ஆனால் நறையூரானோ தாம் முழு இலட்சணம் பெற்ற ஆச்சார்யனாய் இருந்து நீலன் என்னும் பக்தனைச் சீடனாகக் கொண்டு பஞ்ச ஸமஸ்காரம் செய்து திருமங்கை யாழ்வாராக ஆக்குகிறார். இதனால் எம் பெருமானின் 108 திவ்ய தேசங்களில் சிகரம் வைத்த பெருமையை இத்தலம் பெறுகிறது.

8. ஒரு பக்தனது வேண்டுகோளுக்கு இணங்கி அவரது கனவில் திருநறையூர் ஸ்ரீனிவாசனே நேரில் வந்து 108 திவ்யதேசத்து எம் பெருமான்களின் விக்கிரகங்களைக் கொடுத்த தாகவும், நெடுங்காலம் தமது இல்லத்தில் வைத்துப் பூஜித்த இவைகளைத் தமது அந்திம காலத்தில் இத்தலத்தில் ஒப்படைத்ததாகவும் கூறுவர். இந்த 108 திவ்யதேசத்து எம் பெருமானின் விக்ரகங்களை இத்தலத்தில் காணலாம்.

9. இத்தலம் திருமடல் பரிசு பெற்ற ஸ்தலம் என்றும் கொள்ளலாம். எம்பெருமான்மீது கொண்ட காதலை வெளிப்படுத்த மடல் விடுத்தார் திருமங்கை, பெரிய திருமடல், சிறிய திருமடல் என்னும் இரு மடல் விடுத்தார். இரண்டு திருமடல்களிலும் எம்பெருமான் எழுந்தருளியுள்ள பல திவ்யதேசங்களை திருமங்கையாழ்வார் குறிக்கிறாரென்றாலும் "மடலூர்ந்தது திருநறையூருக்காகவே" என்று பெரியோர்கள் தலைக்கட்டுவர்.

# 6. திருக்கண்ணபுரம்

## சிறப்புகள்

இத்தலம் எண்ணற்ற சிறப்புகளைக் கொண்டது. நூலாக எழுதினால் அது மென்மேலும் விரியும்.

1. முக்தியளிக்கும் ஸ்தலங்களான வேங்கடம், ஸ்ரீமுஷ்ணம், திருவரங்கம், தோத்தாத்ரி, ஸாளக்கிராமம், பத்ரிகாச்ரமம், நைமிசாரண்யம் இவற்றில் ஒவ்வொன்றிலும் அஷ்டாச்சரத்தின் ஒவ்வோர் எழுத்தாக இயங்கும் பெருமாள் இவ்விடத்து திருவஷ்டாச்சர எழுத்துக்களின் மொத்த சொரூபமாக இலங்குகிறார்.

2. சௌரி, சௌரி என்னும் சொல்லுக்கு யுகங்கள் தோறும் அவதாரம் எடுப்பவன் என்பது பொருள். 75 சதுர்யுகங்களைக் கொண்டது இந்த ஸ்தலம் என்றும் கூறுவர்.

3. இவ்விடத்தில் பெருமாள் மும்மூர்த்திகளாகக் காட்சி அருளுகிறார். வைகாசி பிரம்மோத்ஸவத்தில் 7ஆம் நாளில் "ஸ்திதி காத்தருளும்" நிலையில் மஹாவிஷ்ணுவாகவும், இரவு தர்ப்ப நாளங்களில் கட்டப்பட்டு தாமரை புஷ்ப மத்தியில் சிருஷ்டி நிலையில் பிரம்மாவாகவும், அன்றே விடியற்காலையில் ஒரு முகூர்த்த நேரம். (3¾ மணி நேரம்) ஸம்ஹாரம் செய்யும் ருத்ரனாகவும் (சிவனாகவும்) காட்சியளிக்கிறார். 108 திவ்ய தேசங்களில் இது எங்கும் இல்லாத பெருஞ்சிறப்பு.

4. நீ கிடந்த அழகைத் திருவரங்கத்திலே கண்டேன். நின் நடையழகையும் காண வேண்டும் என்று வீபிஷணர் கேட்க, கண்ணபுரத்தில் காட்டுவோம் வாவென்ன வீடணனுக்கு நடையழகு காட்டியதாக ஐதீகம். இன்றும் அமாவாசை தோறும் இந்நிகழ்சியை சித்தரிக்கும் திருவிழா இங்குண்டு.

5. தலம், வனம், நதி, கடல், நகரம், தீர்த்தம், விமானம் என்ற 7 புண்ணியங்களும் ஒருங்கே அமைந்துள்ள ஸ்தலம். இவ்வமைப்புள்ள இடத்தில்தான் அஷ்டாச்சர மந்திரம் சித்திக்கும் என்பது சூட்சமம்.

6. கிருஷ்ணாரண்யம் என்றும், தண்டகாரண்யம் என்றும் இத்தலம் வழங்கப்படும்.

7. இவ்வூரில் வாழ்ந்த "முனைய தரையர்" என்பவர், பெருமாளுக்கு வேண்டிய திருப் பணிகளைச் செய்து உண்மை பக்தராயிலங்கி வந்தார். அவர் பெருமாளுக்குத் திருவாராதனம் செய்யாமல் ஒரு நாளும் உண்பதில்லை. அவ்வாறிருக்கையில் ஒரு நாள் வெளியூருக்குச் சென்று விட்டு அர்த்த சாமத்தில் திரும்ப, அவர் மனைவி ஆக்கி வைத்த பொங்கலை மானஸிகமாக இறைவனுக்குப் படைக்க, மறுநாள் காலை கோவில் திறக்கும் போது பொங்கல் மணம் எங்கும் வீச, தம் அடியார் பொருட்டு பகவான் அப்பொங்கலை உகந்து ஏற்றுக் கொண்டார் என்றும், முனியோதரம் பொங்கல் என்றே பெயர் கொடுத்து, இன்றும் அர்த்த சாமத்தில் இப்பெருமானுக்கு

முனியோதரம் பொங்கல் வழங்கும் நிகழ்ச்சி நடைபெறுகிறது.

8. இத்திருத்தலத்திற்குத் திருவரங்கத்தைப் போன்று மதில்கள் இருந்தன என்றும், சோழ மன்னன் ஒருவன் இம்மதில்களை இடித்து கருங்கற்களை அருகிருந்த இன்னொரு கோயிலுக்கு எடுத்துச் சென்றான் எனவும், இது கண்டு மனம் வருந்திய இப்பெருமானின் பரம பக்தர் அறையர் என்பர் "பொருவரைமுன் போர் தொலைத்த பொன்னாழி மற்றொரு கை" என்பது பொய்த்ததோ என்று தம் கையில் உள்ள தாளத்தைப் பெருமானின்மீது விட்டெறிய, பெருமாள் தமது பிரயோகச் சக்கரத்தை ஏவி, மன்னனைக் கொன்றார். இதனால் இப்பெருமானின் நெற்றியில் தாளம் பட்டு புண்ணான "நெற்றி வடு" இன்றும் உள்ளதைக் காணலாம். 6 மதில்களை இடித்தது போக எஞ்சியிருப்பது இப்போது உள்ள மதில் ஒன்றுதான்.

9. 108 திவ்ய தேசங்களில் "கீழை வீடு" என்று குறிக்கப்படுவது இத்தலம்தான்.

10. இங்கே ஸ்ரீமணவாள மாமுனிகள் ஓராண்டு காலம் எழுந்தருளியிருந்து மங்களாசாசனம் செய்தருளினார்.

# 7. திருவழுந்தூர் (தேரழுந்தூர்)

மூலவரின் திருநாமம் தேவாதிராஜன் என்பதாகும். வட மொழியில் கோசகன் என்று இப்பெருமானைக் குறிக்கின்றனர். கோசகன் என்பதின் தமிழாக்கமே ஆமருவியப்பன் என்பதாகும். இப்பெயர் நம் மூலவருக்குண்டு.

## சிறப்புகள்

1. மொத்தம் 11 சந்நிதிகள் உள்ள திருத்தலம்.

2. கவிச் சக்ரவர்த்தி கம்பன் பிறந்தது இந்தத் தேரழுந்தூரேயாகும். இப்பெருமான் மீது கம்பன் அளவற்ற பக்தி கொண்டிருந்தார். கம்பருக்கும் அவர் மனைவிக்கும் இக்கோவிலில் சிலைகள் உள்ளன.

   "கம்பன் பிறந்தவூர், காவிரி தங்குமூர்
   குழ்பனி சாபம் குலைந்தவூர் செம்பதுமத்
   தாதகத்து நாண்முகனும் தாதையும் தேடிக் காணா
   ஓதகத்தார் வாழும் அழுந்தூர்"

   என்பது புலவர் புராணம் என்னும் நூலில் வரும் செய்தியாகும். இங்கு கம்பர் மேடு என்றழைக்கப்படும் பகுதியே கம்பன் வாழ்ந்த இடமாகக் கருதப்படுகிறது. இப்போது அழகான கம்பன் மண்டபம் கட்டி முடிக்கப்பட்டுள்ளது.

3. பிரகலாதன் நரசிம்ம அவதாரத்தைக் கண்டு பயந்து பெருமானின் சாந்த சொரூபத்தைக் காட்ட வேண்டுமென்று வேண்டிய போது, சினம்

அடங்கப்பட்ட சிங்கமாகப் பெருமாள் காட்சி தந்தும், பிரகலாதனின் அச்சம் குறையாதிருக்க இத்தலத்தில் அமர்ந்துள்ள ஆமருவியப்பனாகக் காட்சி தந்தார் என்பதும் ஒரு பெருஞ் சிறப்பு நிகழ்ச்சியாகும். இத்தலத்தில் பிரகலாதனும் இடம் பெற்று நித்திய பூஜைகள் பெறுகிறான்.

4. தேவேந்திரன் ஒரு சமயம் கருடனை அழைத்து, ஒரு வைர முடியினையும, ஒரு விமானத்தையும் தந்து, அவைகள் எந்தப் பெருமாளுக்கு உகந்தவைகளோ அவ்வவரிடம் சேர்ப்பிக்குமாறு வேண்ட, திருநாராயண புரத்தில் உள்ள (மைசூர்) செல்லப் பிள்ளை பெருமாளுக்கு வைரமுடியினையும், இந்தத் தேவாதிராஜனுக்கு விமானத்தையும் அளித்தார். இதனால் இப்பெருமாள் கருடனைத் தன் பக்கத்திலேயே அமர்த்திக் கொண்டார்.

5. "திருவுக்கும் திருவாகிய செல்வா" என்பது இப்பெருமானுக்குத் திருமங்கை சூட்டியுள்ள செல்லப் பெயராகும். திருமங்கையால் மட்டும் மங்களாசாசனம் செய்யப்பட்டதாகும். 45 பாசுரங்களில் பாடித் துதித்துள்ளார்.

# 8. சீர்காழி என்னும் காழிச்சீராம விண்ணகரம்

சிறப்புகள்

1. 108 திவ்ய தேசங்களில் ஐந்து திவ்ய தேசங்களைத் திருமங்கை ஆழ்வார் விண்ணகரம் என்று குறிக்கின்றார். விண்ணகரம் என்றால் விண்ணில் உள்ள பரமபதத்திற்குச் சமமான ஸ்தலம் என்பது பொருள். அந்த விண்ணகரங்களுள் இதுவும் ஒன்றாகும்.

    1. பரமேச்சுர விண்ணகரம்
    2. காழிச்சீ ராமவிண்ணகரம்
    3. அரிமேய விண்ணகரம்
    4. வைகுந்த விண்ணகரம்
    5. நந்திபுர விண்ணகரம்

    ஆனால் விண்ணகர் என்னும் சொல்லை நம்மாழ்வார் தான் முதன்முதலாகக் கையாண்டுள்ளார். உப்பிலியப்பன் கோவிலைத் திருவிண்ணகர் என்றே நம்மாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளார். ஆண்டாளும் நாச்சியார் திருமொழியில் மேகவிடு தூது பாசுரத்தில் இச்சொல்லைக் கையாண்டுள்ளார். எம்பெருமானின் கைங்கர்யத்திற்காகப் பொருளைக் கொள்ளையடிக்க முயன்ற திருமங்கையாழ்வார், பெருமாளை மங்களா சாசனம் செய்வதற்காக இச்சொல்லையும் "இலக்கியக் கொள்ளை" கொண்டு விட்டார்.

2. ஒரு சமயம் இத்தலம் அழிவுற்றபோது உற்சவப் பெருமாளை மட்டும் ஒரு மூதாட்டி தவிட்டுப் பானையில் வைத்துக் காத்து தினமும் திருவாராதனம்

முடித்து மீண்டும் தவிட்டுப் பானைக்குள்ளேயே வைத்துக் காத்து வந்தாள். திருமங்கையாழ்வார் இவ்வூருக்கு வந்த சமயம் அந்த மூதாட்டியின் கனவில் வந்த எம்பெருமான் தன்னைத் திருமங்கையிடம் ஒப்புவிக்குமாறு கூற அவ்விதமே திருமங்கையிடம் கொடுக்க அவர் இங்கே பிரதிஷ்டை செய்தார் என்பர். எனவே எம்பெருமானுக்குத் "தவிட்டுப் பானைத் தாடாளன்" என்ற பெயரும் உண்டு. திருமங்கையாழ்வார் இவ்வூருக்கு வரும்போது ஞானசம்பந்தர் வாதுக் கழைத்ததாகவும், அப்போதுதான் சுயமாக கவிபாட ஆராதன விக்ரகம் வேண்டுமென்று திருமங்கையாழ்வார் தெரிவிக்க, அவரது சீடர்கள் மூதாட்டியிடம் தாடாள விக்ரகப் பெருமாள் இருப்பதை அறிந்து அதனைப் பெற்று வந்து கொடுத்ததாகவும் கூறுவர்.

3. ஆற்காடு நவாபின் ஆட்கள் இவ்வூருக்குத் தண்டாலுக்கு (வரி வசூலுக்கு) வரும்போது தாடாளப் பெருமாளைத் தூக்கிச் சென்று நவாபின் மகளிடம் கொடுக்க அவளும் படுக்கையறையிலும், உப்பரிகையிலும் வைத்து விளை யாட, சீர்காழியில் உள்ள சிதம்பரப் படையாச்சி கனவி லும், அர்ச்சகரின் கனவிலும் வந்து தாம் இருக்கு மிடத்தைத் தெரிவிக்க, நாங்கள் வந்து எப்படி உம்மைக் கொணர்வது என்று கேட்கக் காவல்கட்டுகளை கடந்து மதிற்சுவர் அருகே வந்து வெண்ணெய் உண்ட தாடாளா வா, தவிட்டுப் பானைத் தாடாளா வா என்று அழைக்க, நான் வந்துவிடுவேன் என்று கூறினார். அவ்விதமே அவ்விருவரும் வரும்போது காவலர்கள் அனைவரும் தூங்கிக் கொண்டிருக்க மதிற்சுவரை அடைந்து.

"தாடாளா வா தாடாளா வா
வெண்ணெய் உண்ட தாடாளா வா
தாடாளா வா தாடாளா வா
தவிட்டுப் பானைத் தாடாளா வா"

என்று கூற உப்பரிக்கையில் நவாபின் மகள் அப்பெருமா னைத் தூக்கிப்போட்டு விளையாடிக் கொண்டிருக்க, சரேலென்று சாளரத்தின் வழியாகப் பாய்ந்து இவர்களின் கரத்தில் சேர, ஓட்டமும் நடையுமாகக் கொண்டு வந்து அப்பெருமானை ஊர் சேர்த்ததாகக் கூறுவர்.

4. திருமங்கையாழ்வாரின் மேன்மைக்கும் புகழுக்கும் இத்தலம் ஓர் உந்துகோலாக அமைந்தது என்றால், அது மிகையல்ல. ஞானசம்பந்தரை வாதில் வென்று அவரது வேலை மங்கையாழ்வார் பரிசாகப் பெற்றது இந்தத் தலத்தில்தான். வடதேச யாத்திரை சென்று இவ்வூரின் வழியாகத் திரும்பும் சமயம், அவரின் சீடர்கள் திருமங்கையின் பட்டப் பெயர்களை உரக்கக் கூவிக் கொண்டு வர அங்கு நின்றிருந்த சிவனடியார்கள் இப்போது ஞானசம்பந்தர் இங்கு எழுந்தருளியிருப்பதால் நீங்கள் யாரும் உங்கள் தலைவரின் விருதுப் பெயர்களை இங்கே கூவிக்கொண்டு செல்லலாகாது என்று கூற, இவர்கள் அப்படித்தான் சொல்லிக் கொண்டு செல்வோம் என்று கூற வாதம் வளர்ந்து, இறுதியில் ஞானசம்பந்தரும், மங்கையாழ்வாரும் வாதுக்குத் தயாரானார்கள். திருமங்கையை நோக்கிய ஞான சம்பந்தன் உம்மைப் பெரிய வரகவியென்று விருதோதிச் செல்கிறார்களே, உம்மால் ஒரு குறள் சொல்ல முடியுமா என்று கேட்க, உடனே மங்கை மன்னன்,

"ஒரு குறளாய் இருநிலம் மூவடி மண்வேண்டி
உலகனைத்தும் ஈரடியா லொடுக்கி - ஒன்றும்
தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த
தாடாளன் தாளணைவீர் தக்க கீர்த்தி
அருமறையின் திறன் நான்கும் வேள்வியைந்தும்
அங்கங்கங்கள வைகளாறும் இசைகளேழும்
தெருவில் மலிவிழா வளம் சிறக்கும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மினீரே!"

என்று அவர் கூறிய குறள் என்னும் வார்த்தையையே கவியின் முதலடியாகக் கொண்டு,

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு என எண்ணைப் பாடித் தொடர்ந்து வரும் பத்துப் பாடல்களில் திருமாலின் பத்து அவதாரங்களை விளக்கி நிற்க, இத்திறன் கண்டு வியந்த ஞானசம்பந்தர் நாலுகவிப்பெருமாள் என்பது உமக்கே செல்லும், விருதோதிச் செல்லும், விருதோதிச் செல்லும் என்று கூறி, கையிலிருந்த வேலினையும் பரிசாகக் கொடுத்துத் திருமங்கையின் கால்களுக்கு தண்டை அணிவித்து மகிழ்ந்தார்.

5. திருஞான சம்பந்தரும், திருமங்கையாழ்வாரும் சம காலத்தவர்கள் என்பது வரலாறறிந்தார் கூற்று. மதத்தால் இருவரும் வேறு பட்டவராயினும் மனத்தால் "கற்றானைக் கற்றோனே காமுறுவான்" என்பதற்கொப்ப ஒருவரை யொருவர் சந்திக்கப் பேராவல் பூண்டவராயிருந்தனர் என்பதும் ஒருவருடன் ஒருவர் கன்னித்தமிழில் கலந்துரையாடக் காலங்கருதிக் காத்து

6. பக்திச் சோலையிலே திளைத்துப் பாசுரங்களைத் தமிழன்னைக்கு வாரித்தெளித்த இவ்விரு கவி வள்ளல்களும் கண நேரத்தில் இரண்டு காதற்பூக்களைத் தமிழன்னைக்குச் சொருகி விட்டுச் சென்று விட்டனர்.

# 9. திருநகரி

திருமங்கையாழ்வாரின் வரலாற்றோடு நெருங்கியத் தொடர்பு கொண்ட திவ்யதேசம்.

காவிரிக்கு வடக்கு, நூபுரக் கங்கை என்னும் கொள்ளிடத்திற்கும் உரோமச க்ஷேத்ரமாகிய சீர்காழிக்கும் சமுத்திரத்திற்கும் மத்தியில் பில்வாரண்யம் அமைந்துள்ளது.

"காவேர்யாற்ச் சேத்தர த்ரே நூபுராயஸ்ச தட்சிணே
ரோமஸ் சோரு தன்வதார் மத்யே பில்வாரண்ய மிதிச்ருதம்
பில்வ முலஸ்திதளொ பூத்வா நரசிம்மஸய சன்னிதென
ஐயேதஷ்டாஷரம் மந்தரம் மந்திரசித்தம் அவாப்துயாது"

என்பது கருட புராணம்

பில்வாரணம் அல்லது வில்வாரண்யம் என்று அழைக்கப்படும் இப்பகுதி பஞ்ச நரசிம்ம க்ஷேத்ரங்களுள் ஒன்றாகும். இங்கு யோக நரசிம்ம மூர்த்தி சுயம்புவாக எழுந்தருளியுள்ளார். ஸ்ரீபுரி என்றும், ஆலிங்கன புரி என்றும் பில்வாரண்ய க்ஷேத்ரம் என்றும் இதற்குப் பெயர்.

சிறப்புகள்

1. திருமங்கையாழ்வாரால் பூஜிக்கப்பட்ட சிந்தனைக் கினியான் என்னும் விக்ரகம் இராமானுஜர் காலத்தில் திருக்குறுங்குடியிலிருந்து கொண்டுவரப்பட்டு இத் தலத்தில் வைக்கப்பட்டுள்ளது. சிந்தனைக் கினியானின் திருவாரத் தனத்திற்கு நந்தவனமாக இருந்த பகுதி இப்போதும் சிந்தனைக்கினியான் தோட்டம் என்றே அழைக்கப்படுகிறது.

2. திருஞான சம்பந்தரை வாதில் வென்று அவரிடம் பெற்ற வேலோடு ஒரு வேடனைப்போல் திருமங்கை இங்கு காட்சியளிப்பது காணத் தெவிட்டாத பேரழகாகும்.

3. திருமங்கையாழ்வார் திருக்குறுங்குடியிலிருந்தபோது தம்மைப்போலவே ஒரு பிம்பம் (தங்கத்தால் விக்ரகம்) செய்து தான் அப்பிம்பத்தின் நேரில் நின்று கொண்டு வா என்று அழைக்க, அப்பிம்பம் நடந்து வர, அதனைக் கட்டித் தழுவி தம் சக்தி முழுவதையும், அப்பிம்பத்தில் செலுத்திவிட்டு அதன் பிறகே திருமங்கையாழ்வார் திருவரசு (மோட்சம்) எய்தினார். இப்பிம்பம்தான் இப்போது திருநகரியில் வைக்கப் பட்டு நித்ய பூஜைகளும் நடைபெறுகின்றன.

4. நம்மாழ்வாரின் அவதாரஸ்தலம் ஆழ்வார் திருநகரி யாயிற்று. இவரின் அவதாரஸ்தலம் திருவாலி திருநகரி யாயிற்று.

5. ஆண்டாள் மனத்துக்கினியானிடம் ஈடுபட்டார். இவரோ சிந்தனைக்கினியானிடம் ஈடுபட்டார்.

6. இங்குள்ள இலாக்ஷ்ண புஷ்கரணியைக் கங்கையின் அம்சமாக நூல்கள் சிலாகித்துப் பேசுகின்றன.

# 10. சிதம்பரம் என்னும் திருச்சித்திரக் கூடம்

## சிறப்புகள்

1. சிவபெருமானின் நடனத்தைக் காணத் திருமால் வந்துற்றதை மாணிக்கவாசகர் தமது திருக் கோவையாரில்

   "புரங்கடந்தான் அடிகாண்
   பாண் . . . . . . . . . . . . . .
   . . . . . . . . . தில்லையம்பல
   மூன்றில் அம்மாயவனே"

   என்ற வரிகளால் உணரலாம்.

2. இராமன் சித்திரக்கூட மலையில் மிகவும் மகிழ்வோடு இருந்தான். அதே இராமன்தான் கோவிந்தராஜன் என்ற பெயரில் இந்த திருச்சித்திரக் கூடத்திலே திகழ்கிறான் என்பதை குலசேகராழ்வாரும் திருமங்கை யாழ்வாரும் தமது பாக்களில் பாடிப் பரவுகின்றனர்.

3. கி.பி.10ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த முதலாம் பராந்தக சோழன் தில்லைக் கோவிலுக்குப் பொன் வேய்ந்தான்.

4. தன் எதிரில் நடராஜப் பெருமான் நடனமாடியதைப் பெருமாள் ரசித்ததாகவும், எம்பெருமான் பள்ளி கொண்ட அர்ச்சா விக்ரகத்திற்கு அருகில் இன்றும் நடராஜன் நடனமாடும் கோலத்தில் இருப்பது காண்டற்குரியதாகும்.

5. தில்லைவாழ் அந்தணர்கள் மூவாயிரவர். இப் பெருமானைத் துதிக்க வந்தனர் என்பதை,

"தில்லை நகர் திருச்சித்ர கூடந் தன்னுள்
அந்தணர்களொரு மூவாயிரவ ரேத்த
அணிமணி யாசனத் திருந்த வம்மான் றானே"
என்று குலசேகராழ்வாரும்

"மூவாயிரநான் மறையாளர் நாளும்
முறையால் வணங்க அணங்காய சோதி
தேவாதி தேவன் திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்று சேர்மின்களே"
என்று திருமங்கையாழ்வாரும் குறிப்பதிலிருந்து அறியலாம்.

6. உலகில் உள்ள எல்லாவித நடனங்களையும் இங்குள்ள சிற்பச்சாலையில் காணலாம்.

7. மிகப் பெரும் மாடமதில்களையும், உயர்ந்த கோபுரங்களையும் எதிரிகளும் அஞ்சக்கூடிய நெடிய வாசல்களையும் பெற்றதாய்த் தில்லை விளங்குவதை

"தெவ்வரஞ்சு நெடும்புரிசை யுயர்ந்த பாங்கர்த்
தில்லைநகர் திருச்சித்திரக் கூடந்தன்னுள்"

என்று குலசேகராழ்வார் சொல்வதிலிருந்து தில்லையின் தொன்மை மாண்பைச் சிறப்புற உணரலாம்.

8. சிதம்பர ரகஸ்யம் என்பது நடராஜர் சன்னதியில் மூலஸ்தானத்தில் உள்ளது.

9. நாதமுனிகளின் அவதார ஸ்தலமான காட்டுமன்னார் கோவில் இங்கிருந்து மிகச் சமீப தொலைவில் உள்ளது.

# 11. திருவயிந்திரபுரம்

திருமங்கையாழ்வார் பாடிப் பரவசித்த இத்தலம் கடலூர் நகரத்திலிருந்து சுமார் 3 கி.மீ. தொலைவில் உள்ளது. திருவஹிந்தபுரம் என்று அழைக்கப்பட்ட இத்தலம் தற்காலத்தில் அயிந்தை என்று வழங்கப்படுகிறது. நடு நாட்டுத் திருப்பதிகள் இரண்டில் இது ஒன்றாகும்.

சிறப்புகள்

1. இப்பெருமானுக்கு 1) தாஸ ஸத்யன் 2) அச்சுதன் 3) ஸ்த்ரஜ்யோதிஷ் 4) அனகஞ்யோதிஷ் 5) த்ரிமூர்த்தி என்று ஐந்து பெயர்களைப் புராணம் சூட்டி மகிழ்கிறது. இவற்றில் தாஸ ஸத்யன் என்பதை அடியார்க்கு மெய்யன் என்றும், ஸ்தரஜ்யோதிஷ் என்பதை மேவு சோதியன் என்றும், த்ரிமூர்த்தி என்பதை மூவராகிய ஒருவன் என்றும் திருமங்கை எடுத்தாண்டுள்ளார்.

2. ஆதிசேடன் பூமியைப் பிளந்து உடனே நீர் கொண்டு வந்தான். ஆகாயத்தில் பறந்து சென்ற கருடன் சற்றுத் தாமதித்து வைகுண்டத்திலிருந்து விரஜா தீர்த்தத்தைக் கொண்டு வந்தான். இவ்விதம் பரமனின் இரண்டு வாகனங்களால் தீர்த்தம் கொண்டுவரப்பட்ட சிறப்பு வேறெந்த திவ்ய தேசத்திற்குமில்லை.

   கருடனால் கொண்டுவரப்பட்ட தீர்த்தமே இங்கு நதியாக மாறி கருடாழ்வார் தீர்த்தமாகி, காலப்போக்கில் கெடில நதியாகப் பெயர் மாறி தற்போதும் கெடிலமாகவே ஓடிக்கொண்டிருக்கிறது.

3. வெகுகாலத்திற்கு முன் கோவில் பிரகாரத்திலிருந்த ஒரு பழைய புன்னை மரத்தின் வேரிலிருந்து சக்ரவர்த்தித் திருமகனுடன் (ஸ்ரீராம பிரானுடன்) நம்மாழ்வாரும் தோன்றினாரென்றும், அதனாலே இங்கு இரண்டு நம்மாழ்வார்கள் சேவை சாதிக்கின்றனர் என்பதும் வரலாறு.

4. ஞானத்தையும் கல்வியையும் தரும் ஹயக்ரீவப் பெருமாள் இங்கு எழுந்தருளியுள்ளார். ஹயக்ரீவப் பெருமாள் ஆதித் திருமேனிகள் இந்தியாவில் இரண்டு இடங்களில் உண்டு. ஒன்று இங்கு, மற்றொன்று மைசூரில் உள்ள பரகால மடம்.

5. குதிரை முகம் கொண்ட இந்த ஹயக்ரீவம் சகல வித்தைகட்கும் ஆதாரமாக விளங்கக்கூடிய அவதார நிலையாகும். வித்தைகளின் இருப்பிடம், அதாவது இவர் கல்விக் கடவுள்,

"ஞானாந்த மயம் தேவம்
நிர்மல ஸ்படிகாக் ருதம்
ஆதாரம் ஸர்வ வித்யானாம்
ஹயக்ரீவம் உபாஸ மஹே"

ஞானமயமாகக் கலக்கமற்ற ஸ்படிகம்போல் திகழும் இந்தத் தேவனே சகல வித்தைகட்கும் ஆதாரமான ஹயக்ரீவமாகும்.

6. கலியுகத்தில் இவ்விடத்தில் திருமால் அணிந்துள்ள மணியின் அம்சமாக ஒரு மகான் அவதரிக்கப் போகிறாரென்று புராணங்களில் கூறியதற்கொப்ப ஸ்ரீமாந் நிகாமந்த தேசிகர் இங்கே 40 ஆண்டு காலம் எழுந்தருளியிருந்து வடகலை சம்பிர

19

தாயத்திற்கு அருந் தொண்டாற்றி வளர்த்தார். வடகலை சம்பிரதாயத்திற்கு இத்தலம் ஒரு பாசறை போல் விளங்கிறது என்றால், அது மிகையல்ல.

7. இங்கு ஸ்ரீதேசிகர் தம்மைப்போல ஒரு திருமேனி செய்தார். உமது திருமேனிக்கும் உம்மைப்போல் உயிரோட்டம் தரமுடியுமா என்று ஒரு சிற்ப சாஸ்திரி கேட்க, ஸ்ரீராமனுஜர் பெரும்புதூரில் வடித்ததைப் போன்று இங்கு தேசிகரும் தம்மைப் போல் ஒரு திருமேனி செய்தார். திருமேனி செய்து முடிக்கப்பட்டவுடன் மேற்படி சிற்ப சாஸ்திரி அத்திரு மேனியைத் தொட்டபோது அதில் விரல் கீறல் பட்டு இரத்தம் கசிந்ததாகவும், ஸ்ரீதேசிகரின் மகிமை அறியாது அவரிடம் ஆணவத்துடன் நடந்து கொண்ட முறைக்கு அச்சிற்ப வல்லுனர் தேசிகரின் பாதங்களில் வீழ்ந்து மன்னிப்புக் கேட்டான் என்றும் சொல்வர்.

# 12. திருக்கோவலூர்

"நீயும் திருமகளும் நின்றாயால் குன்றெடுத்துப்
பாயும் பணிமறைத்த பண்பாளா — வாயில்
கடைகழியா வுள்புகா காமர் பூங்கோவல்
இடைகழியே பற்றியினி" - (2167)
முதல் திருவந்தாதி - 86

என்று பொய்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட இத்திருக்கோவிலூர் தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ளது. பகவான் தனது வாமன அவதாரத்தைத் தம்மைக் குறித்துத் தவமிருந்த முனிவர்கட்காக இத்தலத்தில் மீண்டும் ஒருமுறை வாமன அவதாரத்தைக் காட்டிக் கொடுத்ததாக ஐதீஹம். அதே அவதாரத்தை இத்தலத்திற்கும் செய்து காட்டியதால் மூன்று உலகங்களாலும் புகழ் பெற்றதாக விளங்குகிறது இத்தலம்.

சிறப்புகள்

1. இங்குதான் ஆழ்வார்கள் மூவரும் முதன் முதலாகப் பகவானைத் தூய தமிழ்ப் பாக்களில் பாடித் துதிக்க ஆரம்பித்தனர். அதுவே பின்னர் ஆழ்வார்களால் நாலாயிரத் திவ்ய பிரபந்தமாக விரிந்தது.

2. முதன் முதலில் ஆழ்வார்களால் பாடப்பட்ட திவ்யதேசம் இதுதான். இங்கு ஆழ்வார்கள் மூவரும் பெருமாளை அனுபவித்ததை ஸ்ரீமந் நிகாமந்த தேசிகன் இப்படி வர்ணிக்கிறார்.

மூன்று ஆழ்வார்களாகிய கரும்பாலையில் மூன்று உருளைகள் கரும்பைப் பிழிவதைப்போல, தீங்கரும்பான

எம்பெருமானை நெருக்கி அவருடைய திருக்குணங்களாகிய ரஸத்தைப் பருகுகிறார்கள்.

3. இந்தத் தலத்தில் கிருஷ்ணன் மகிழ்ந்துறைவதை யெண்ணிய துர்க்கை விந்திய மலையிலிருந்து புறப்பட்டுத் தானும் இவ்விடத்தே கோவில் கொண்டாள். துர்க்கைக்கு இங்கே கோவிலும், வழிபாடுகளும் உண்டு. இது மற்ற எந்தத் திவ்ய தேசத்திற்கும் இல்லாச் சிறப்பம்சமாகும். திருமங்கையாழ்வார் இந்தத் துர்க்கையை "விந்தம் மேவிய கற்புடை மடக்கன்னி காவல் பூண்ட கடிபொழில்" என்று புகழ்கிறார்.

4. கிருஷ்ணராண்யத்திலும், ஸ்ரீமுஷ்ணத்திலும் நான் பக்தர்களுடனே சஞ்சரித்துக் கொண்டே இருக்கிறேன் என்று பகவானால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட இத்திவ்ய தேசத்தை முதலாழ்வார்கள் மூவரும் திருமங்கையாழ்வாரும் பாசுரங்களில் மங்களாசாசனம் செய்துள்ளனர். மணவாள மாமுனிகளும் மங்களாசாசனம் செய்துள்ளார். சுவாமி தேசிகரால் இயற்றப்பட்ட "தேஹளீசஸ் துதி" இப்பெருமாளுக்கு அளிக்கப்பட்ட பக்திரசம் ததும்பிய பாமாலையாகும்.

5. இந்த ஸ்தலம்தான் திவ்ய பிரபந்தத்திற்கு விளை நிலமாகும். உலகில் முக்கியமாக, ஒரு ஜீவன் மிக முக்கியமாக அறிய வேண்டிய ரகசியங்களான திரு மந்திரம், துவயம், சரமச் லோகார்த்தம் முதலியவைகளை மூன்று பிரபந்தங்களாக முதல் மூன்று ஆழ்வார்கள் இங்கு வெளியிட்டருளியமையால் இத்தலம் ஜீவாத்மாக்கள் கடைத்தேற வித்திட்ட விளைநிலமாகும். ஆழ்வார்களின் மங்களாசாசனத்திற்கு அடிகோலிய ஸ்தலமாகும்.

திருவிளக்கு ஏற்றல் என்ற வியாஜ்யத்தாலே பொய்கையாழ்வார் மறையின் குருத்தின் பொருளையும், செந்தமிழ் தன்னையும், ஒன்றாய்க் கூட்டித் திரித்து ஒரு திருவிளக்கு ஏற்றினார் என்பர் இத்தலத்து ஜீயர் சுவாமிகள்.

6. இடைகழியில் ஆழ்வார்கட்கு எம்பெருமான் காட்சி கொடுத்ததால் இத்தலப் பெருமாளுக்கு இடைக்கழி ஆயன் என்னும் பெயர் உண்டு. நடுநாட்டின் முதலாவது ஸ்தலமாகையாலும் விண்ணுலகிற்கும், பாதாள லோகத்திற்கும் நடுவுபட்டு நின்றமையால் நடுநாட்டான் என்னும் பெயர் வந்தது என்பர்.

7. இங்கு தற்போதுள்ள எம்பெருமானார் ஜீயர் சுவாமிகளின் ஒரு பணி இராமானுஜரையே நினைவுபடுத்துகிறது. நாராயண மந்திரத்தை அனைவர்க்கும் உபதேசித்து அரிஜனங்களைத் திருக்குலத்தார் என்று பெயரிட்டு அழைத்து அவர்களை வைணவ அடியார்களாக்கினார் இராமானுஜர். அதுபோல் இந்த ஜீயர் சுவாமிகளும், ஆயிரக்கணக்கான அரிஜன சகோதரர்கட்குத் தீட்சை அளிக்கிறார். அதாவது வருடாவருடம் தமது திருமாளிகையில் சமபந்தி போஜனம் அளிக்கிறார். சமபந்தி போஜனம் எப்போதோ தோன்றிவிட்டது பார்த்தீர்களா?

8. மிருகண்டு முனிவர்கட்கு திருவிக்ரம அவதாரத்தைக் காட்டிக் கொடுக்கும் முன்பு கிருஷ்ணனாகப் பகவான் எழுந்தருளியிருந்த சன்னதி தற்போது இத்தலத்தின் முன்புறத்திலேயே அமைந்துள்ளது. ஆதி சன்னதி இது தான். சாளக்கிராமத் திருமேனியுடன் இவர் பொலிந்து தோன்றுகிறார்.

# 13. திருக்கச்சி அத்திகிரி (காஞ்சிபுரம்)

"அத்தியூரான் புள்ளை யூர்வான் அணிமணியின்
துத்திசேர் நாகத்தின்மேல் துயில்வான் - முத்தீ
மறையாவான் மாகடல் நஞ்சுண்டான் றனக்கும்
இறையாவான் எங்கள் பிரான்" - (2277)
இரண்டாம் திருவந்தாதி - 96

கருடனாகிய புள்ளை வாகனமாகக் கொண்டு ஊர்பவன். அழகார்ந்த மணிகளுடன் கூடிய நாகமான ஆதிசேடனைப் படுக்கையாகக் கொண்டு அறிதுயில் செய்பவன். மூன்று வகையான அக்னியானவன். வேதங்களுமாகி நிற்பவன். திருப்பாற்கடலைக் கடைந்தபோது உண்டான ஆலகாலம் என்னும் கொடிய நஞ்சை உண்ட சிவனுக்கும் இறையானவன். அவன்தான் இந்த அத்தியூரான். எங்கள் பிரானும் அவன்தான் என்று பூதத்தாழ்வாரால் மங்களா சாசனம் செய்யப்பட்ட இத்தலம் காஞ்சிபுரத்திலேயே உள்ளது. காஞ்சி என்றதும் நமக்கு நினைவுக்கு வரக்கூடியது பிரமமாண்டமான இந்த வரதராஜன் சன்னதியேயாகும். இத்தலம் சின்னக் காஞ்சிபுரத்தில் அமைந்துள்ளது.

*சிறப்புகள்*

1. திருவேங்கடம் போன்றும், திருவரங்கம் போன்றும் எண்ணற்ற பெருஞ்சிறப்புகள் கொண்ட திவ்ய தேசமாகுமிது. காஞ்சியில் உள்ள வைணவத் தலங்கட்குத் தீபம் போலவும், தொண்டை நாட்டுத் தலங்கட்குத் திலகம் போன்றும் திகழ்வதாகுமிது. விஷ்ணு காஞ்சியென்றும், அத்திகிரியென்றும், திருக்கச்சி என்றும், ஸ்தய விரத சேஷத்ரமென்றும் பெயர்கொண்ட இத்தலம் வைணவ சம்பிரதாயத்தில்

வடகலைக்குத் தமிழகத்தில் ஒரு தலைமை இடமாகத் திகழ்கிறது. மாமேதைகளும் வடகலை ஞானியரும், வைணவ வல்லுனர்களும், பாகவதோத்தமர்களும், பக்தர்களும் எந்நேரமும் சுற்றிச் சூழ வந்து கொண்டிருக்கும் திவ்யமான திவ்யதேசமாகுமிது.

2. இங்குள்ள குளத்தில் மூழ்கியிருக்கும் அத்திவரதர் என்றழைக்கப்படும் அத்திமரத்தாலான சிலையை 40 வருடங்கட்கு ஒருமுறை வெளியே எடுத்துப் பூஜை செய்து 10 தினங்கட்குப் பொதுமக்கள் தரிசனத்திற்கு வைக்கப்படுகிறது.

3. சித்ரா பௌர்ணமியன்று இப்போதும் ஒவ்வோர் ஆண்டும் இரவு 12 மணிக்கு மேல் பிரம்மனே இங்கு நேரில் வந்து எம்பெருமானை வழிபடுவதாக ஐதீஹம். இந்தத் தினத்தில் எம்பெருமானுக்குப் பிரசாதம் செய்து வைத்து விட்டுப் பட்டர்கள் வெளியே வந்து விடுவார்கள். ஒரு நாழிகை (24 நிமிஷம்) கழித்து எடுத்துப் பார்த்தால் அதில் தூய நறுமணம் கமழும் இக்காட்சி ஆண்டுதோறும் இங்கு நடைபெறும் வைபவமாகும்.

4. சித்திரை மாதம் பௌர்ணமி கழிந்த 15 தினங்கட்கு சூரியன் மறையும்போது சூரியனிடமிருந்து வரக்கூடிய கதிர்கள் மூலவரின் திருமுகத்தில் விழுமாறு அமைக்கப்பட்டுள்ளது. 15 நாட்களும் கண்டுகளிக்கக் கூடிய இவ்வரிய காட்சி மற்றெந்த திவ்ய தேசத்திலும் இல்லாததாகும்.

5. பல்லவ மன்னர்களும், விஜய நகர மன்னர்களும் இத்தலத்திற்குப் பெருந்தொண்டாற்றியுள்ளனர். இச் சன்னதியின் கிழக்கு கோபுரம் கிருஷ்ண

தேவராயராலும், மேற்கு கோபுரம் பல்லவர்களாலும் கட்டப்பட்டதாகும். பல்லவர்களின் கவினுறு கலைச்சிற்பங்களை இந்தச் சன்னதியிலும், காஞ்சியில் உள்ள பிற சன்னதிகளிலும் காணலாம். பல்லவ மன்னவர்கள் இக்கோவிலுக்குக் கணக்கற்ற நிலங்களைத் தானமாக வழங்கியிருக்கிறார்கள். கி.பி.7ம் நூற்றாண்டில் பல்லவ மன்னவர்களின் தலைநகரமாக இந்நகர் விளங்கியது. இது பின்னரும் பல தலைமுறைக்குத் தொடர்ந்தது. விஜயநகர மன்னர் 17 கிராமங்களை வரியின்றி மானியமாகத் தந்திருந்தார். கிருஷ்ண தேவராயர் புண்ணியகோடி விமானத்தில் சிற்ப வேலைகள் செய்வித்தார். அச்சுத தேவராயர் எடைக்கெடை தங்கம் தந்தார். சோழ மன்னர்களும் பல திருப்பணிகள் செய்துள்ளனர். திருமலை நாயக்கர் பெரும் விலைமதிப்புள்ள ஆபரணங்களை இப்பெருமாளுக்கு அணிவித்துள்ளார். ராபர்ட் கிளைவ் இப்பெருமாளிடம் ஈடுபாடு கொண்டவர். அவரால் தரப்பட்ட மகரகண்டி மிகப் புகழ் பெற்றதாகும்.

6. அபாரமான கலைச் சிற்பங்கள் கொண்ட நூற்றுக்கால் மண்டபம் ஒன்றும் இங்கு உள்ளது. இந்த மண்டபமும் தாயார் சன்னதியின் முன்புறம் உள்ள மண்டபமும் அழகிய மணவாள ஜீயரால் கட்டப்பட்டதாகும்.

7. திருமங்கையாழ்வாரால் 4 பாசுரங்களாலும், பூதத் தாழ்வாரால் இரண்டு பாசுரங்களாலும், பேயாழ்வா ரால் ஒரு பாசுரத்தாலும், மங்களாசாசனம் செய்யப் பட்டுள்ளது. ஸ்ரீஆளவந்தார், இராமானுஜர், ஸ்வாமி தேசிகன், மணவாள மாமுனிகள், திருக்கச்சி நம்பிகள், பெரிய நம்பி ஆகியோருக்கும் இந்த

வரதராஜப் பெருமாளுக்கும் உள்ள சம்பந்தம்பற்றித் தனி நூலொன்றே எழுதிவிடலாம்.

8. ஒவ்வொரு வெள்ளிக்கிழமையன்றும் பிராட்டி திருவீதிவுலா புறப்பட்டு (பிரகாரங்களுக்குள்) வருவார். இதே போன்று ஒவ்வொரு மாதமும் ஏகாதசியன்று பெருமாள் புறப்பாடாவார். எப்போ தெல்லாம் வெள்ளிக்கிழமையும், ஏகாதசியும் சேர்ந்து வருகிறதோ அப்போதெல்லாம் பெருமாளும் பிராட்டி யும் சேர்ந்து புறப்பட்டு உலா வருவர். மாலையில் நடைபெறும் வைபவத்தில் பெருமாளையும், பிராட்டி யையும் தொடர்ந்து வரும் வைணவ அடியார்கள் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் இசைத்து வருவது இங்கு செவிக்கினிய விருந்து மட்டுமின்றிக் கண்கொள்ளாக் காட்சியாகும்.

9. 108 வைணவத் திருத்தலங்களில் கோயில் என்று திருவரங்கத்தையும், திருமலை என்று திருவேங்கடத் தையும், பெருமாள் கோயில் என்று இத்தலத்தையும் குறிப்பர். இந்தப் பிரகாரத்திற்குள்தான் ஸ்ரீஆளவந்தார் இராமானுஜரை முதன் முதலில் கண்டு "ஆம் முதல்வனிவன்" என்றருளினார்.

10. நம்மாழ்வார் தமது திருவாய் மொழியில் அயர்வறு அமரர்கள் அதிபதி என்றது இப்பெருமாளைத்தான் என்று பெரியோர்கள் பொருள் கூறுவர். இதற்கொப்பவே வேறெங்குமில்லாதவாறு இத்தலத் தில் உள்ள நம்மாழ்வார் "துயரறு சுடர் அடி தொழுதொழு என் மனமே" என்று கூறுவதுபோல் ஞான முத்திரையின்றித் தம் நெஞ்சில் கை வைத்து எழுந்தருளியுள்ளார்.

11. திருக்கச்சி நம்பி என்னும் இந்தக் காஞ்சி பூர்ணரை ஆச்சார்யராகக் கொண்ட இராமானுஜர் அவரிடம் கீழ்க்காணும் நான்கு கேள்விகளைத் தம் பொருட்டுக் கேட்டார்.

1. உபாயங்களில் எது நல்லது?
2. மோட்சம் அடைவதற்கு முன் அந்திம ஸ்ருதி வேண்டுவது எப்போது?
3. எந்த ஜென்மத்தில் மோட்சமடைவது?
4. எந்த ஆச்சார்யரை நான் ஏற்றுக் கொள்வது?

இக்கேள்விகளை இராமனுஜர் கேட்பதாகத் திருக்கச்சி நம்பிகள் தேவப்பெருமாளான வரதரிடம் கேட்க அவர் 6 வார்த்தைகள் பதில் கூறுகிறார்.

1. அஹம் மேவபரம்தத்வம்

நானே, ஸ்ரீமந் நாராயணனே உலகிற்கும், உலக காரணிகட்கும் தத்துவமாய் விளங்கும் பரம்பொருள்.

2. தர்சனம் பேத ஏவச

ஜீவாத்மா, பரமாத்மா (ஜீவன் - ஈஸ்வரன்) இரண்டும் வெவ்வேறானவை.

3. உபாயேஷ் பரப்த்திய ஸ்யாத்

பகவானை அடைய (மோட்சம் அடைய) சரணாகதியே சிறந்தவழி.

4. **அந்திம ஸ்மருதி வர்ஜனம்**

அந்திமக் காலத்தில் பெருமாளை நினைக்க முடியாவிட்டால் தவறில்லை.

5. **தேக வஸானே முக்தில் ஸ்யாத**

என்னை உபாயமாகக் கொண்ட இத்தகைய பக்தர்கட்கு இந்த உடல் கழிந்தவாறே (இப்பிறவி முடிந்ததும்) மோட்சம் நானே அருளுகிறேன்.

6. **பூர்ணசச்யார்ய ஸமாச்ரய**

நற்குணப் பண்டிதராய் இருக்கும் மகா புருஷரான பெரிய நம்பியை ஆச்சார்யராக ஏற்றுக் கொள்ளத் தக்கது.

இவ்விதம் திருமங்கையாழ்வாரிடம் திருநறையூரான் ஈடுபாடு கொண்டதுபோல ஸ்ரீஇராமானுஜரிடம் வரதராஜன் ஈடுபாடு கொண்டு அவருக்கு வழிகாட்டினார்.

12. எம்பெருமான் இங்கு புண்யகோடி விமானத்துடன் எழுந்தருளியதால் இங்கு செய்யப்படும் ஒரு புண்ணியமானது கோடியாக விருத்தியடைகிறது என்பது ஐதீகம்.

# 14. திருவெக்கா

"இசைந்த வரவமும் வெற்புங் கடலும்
பசைந்தாங் கமுது படுப்ப - அசைந்து
கடைந்த வருந்தமோ கச்சி வெக்காவில்
கிடந்ததிருந்து நின்றதுவு மங்கு"
(2345) மூன்றாந் திருவந்தாதி - 64

இத்தலம் காஞ்சி வரதராஜப் பெருமாள் சன்னதிக்கு மேற்கே, அட்டபுயக்ரப் பெருமாளின் சந்நிதிக்கு எதிரில் அமைந்துள்ளது.

சிறப்புகள்

1. பொய்கையாழ்வார் அவதாரம் செய்த தலமாகும் இது. இங்குள்ள பொய்கையொன்றின் பொற்றா மரையில் அவதாரம் செய்தமையால் பொய்கை யாழ்வாரானார்.

2. எல்லா ஸ்தலங்களிலும் சயன திருக்கோலமானது இடமிருந்து வலமாக அமைந்திருக்கும். ஆனால் இங்கு மட்டும் பெருமாள் வலமிருந்து இடமாகச் சயனித்துள்ளார்.

3. சங்ககாலத்திலும் இத்தலம் மிகப் புகழ் பெற்று இருந்தது. சங்க இலக்கியங்களில் இத்தலம் குறிக்கப்படுகிறது.

4. நம்மாழ்வார் தமது முதல் பிரபந்தமான திருவிருத்தத்தில் கோயில், திருமலை, திருவெக்கா ஆகிய 3 திவ்யதேசங்களை மட்டும் பாடியிருப்பதால்

பெருமாள் கோயில் என்பது இத்தலத்தையே குறிக்கும் என்பது ஆய்வாளர்கள் கருத்து.

5. தொன்மைமிக்க இத்தலத்தையும் இங்கு எழுந்தருளிய பெருமாளையும் கிடந்தான் என்ற சொல்லாலே ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர். கிடந்தான் என்னும் சொல் இப்பெருமாளைக் குறிப்பதாகவே பூவாச்சார்யர்கள் பொருள் கொண்டுள்ளனர். தலத்தின் பெயரைக் குறிப்பிடாமல் கிடந்தான் என்ற சொல்லுக்கே இப்பெருமாளையும் இத்தலத்தையும் மங்களாசாசனம் செய்துள்ளதாகக் கொண்டுள்ளனர்.

# 15. திருவள்ளூர்

"தையலாள் மேல் காதல் செய்த
தாளவன் வாளரக்கன்
பொய்யிலாத பொன்முடிக
ளொன்ப தோ டொன்றும் அன்று
செய்த வெம்போர் தன்னிலங்கோர்
செஞ்சரத் தாலுருள
எய்த வெந்தை யெம்பெருமா
னெவ்வுள் கிடந்தானே!" (1059)
பெரிய திருமொழி 2-2-2

இராவணனைக் கொன்ற இராமபிரான் தான் எவ்வுள்ளில் கிடக்கிறாரென்று திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பட்டது இத்தலம்.

சிறப்புகள்

1. இந்த க்ஷேத்திரத்திற்கு வீச்சாரண்ய க்ஷேத்ரம் என்றும் இங்கு செய்யப்படும் புண்ணியமாவது பல்லாயிரம் மடங்காக விருத்தியாவதால் புண்யாவார்த்த க்ஷேத்ரமென்றும் எவ்வுள்ளூர் என்றும் இத்தலத்திற்குப் பல திருநாமங்கள்

2. திருவேங்கடவனுக்குள்ள சுப்ரபாதம் போன்று இப்பெருமானுக்கும் வீரராகவ சுப்ரபாதம் உண்டு.

3. இத்தலம் புத்திரப் பேறளிக்கும் தலமாகவும், திருமணமாகாதவர்கள் வேண்டிக் கொண்டால் திருமணம் சித்திக்கும் தலமாகவும், எத்தகைய

கொடூர நோயாளியும் இப்பெருமானை மனமுருக வேண்டி இங்குள்ள ஹ்ருத்த பால நாசினியில் நீராடி நோய் நீங்கப் பெறுவதால் நோய் நீக்கும் ஸ்தலமாகவும், ஒரு பெரிய பிரார்த்தனை ஸ்தலமாக விளங்குகிறது. இப்பெருமானை வேண்டினோர்க்கு நோய் நீங்கப் பெறுவது கண்கூடு. எனவே இப்பெருமானுக்கு வைத்திய வீரராகவன் என்னும் சிறப்புத் திருநாமமுண்டு.

4. சகல பாபங்களையும் போக்கும் பாபநாசினியாகத் திகழ்கிறது இத்தலம். அமாவாசையன்று இதில் நீராடுவது சகல பாபங்களையும் போக்குமென்பது ஐதீகம். தை அமாவாசையன்று இங்கு பெருந்திரளாகப் பக்தர்கள் கூடியிருந்து நீராடுவர். ஹ்ருத்த, இருதயத்தில் உள்ள, பாபநாசினி-பாபங்களை நாசம் செய்யவல்லதால் இத் தீர்த்தத்திற்கு ஹ்ருத்த பாபநாசினி என்னும் பெயருண்டாயிற்று.

5. இப்பெருமானைப் பரிபூர்ண அன்போடு வழிபட்டவர்கட்கு உத்தியோகக் காரியங்கள் எல்லாம் கைகூடும். பதவிகள் கிடைக்கும். உலகை யாளும் தகுதியைப் பெறுவர். அவ்வாறில்லாவிடின் அமருலகையாழ்வார் என்கிறார் திருமங்கையாழ்வார். எனவே உத்தியோக வாய்ப்புக்களின் பொருட்டு இப்பெருமானை வேண்டிக் கொள்வோரின் வேண்டுதல்களும் நிறைவேறுகின்றன.

# 16. திருவல்லிக்கேணி

"இன்துணைப் பதுமத்து அலர்மகள் தனக்கும்
இன்பன், நற்புவி தனக்கு இறைவன்
தன்துணை ஆயர் பாவை நப்பின்னை
தனக்கிறை, மற்றையோர்க் கெல்லாம்
வன் துணை, பஞ்ச பாண்டவர்க்காகி
வாயுரை தூது சென்று இயங்கும்
என்துணை எந்தை தந்தை தம்மானை
திருவல்லிக் கேணி கண்டேனே!" (1072)
பெரிய திருமொழி 2-3-5

தண்டமிழ்த் தலைநகரில் அலைபுரளும் கடலோரம் அருள் செழிக்க வீற்றிருக்கும் திவ்ய தேசமிது.

**சிறப்புகள்**

1. ஐந்து மூர்த்திகள் ஒருங்கே எழுந்தருளியுள்ள ஸ்தலம்.

அத்திரி முனிவரின் தவத்திற்கு மகிழ்ந்த திருமால் அவர் விருப்பப்படி நரசிம்ம மூர்த்தியாக எழுந்தருளியுள்ளார்.

மதுமான் மகரிஷி என்னும் முனிவரின் தவத்திற்கு இசைந்து அவர் விரும்பியவண்ணம் இராமனாக இத்தலத்து எழுந்தருளினார். சீதை, இலக்குவன், பரத, சத்ருக்கனரும் பின் தொடர்ந்தனர்.

சப்ரோமர் என்னும் ரிஷியின் தவத்திற்குகந்து கஜேந்திரவரதர் கோலத்தில் இங்கு காட்சி தந்தார்.

சுமதி என்னும் மன்னனின் விருப்பத்திற் கிசைந்து வேங்கட கிருஷ்ணனாய் அவதாரம் செய்தார்.

திருமாலுடன் ஊடல் கொண்ட திருமகள் வைகுண்டத்தை விட்டுப் பிரிந்து இவ்விடத்தில் தவஞ் செய்து கொண்டிருந்த பிருகு மகரிஷியின் குடிசைக்கருகில் குழந்தையாய் உருவாகி நிற்க, வேதங்களில் கூறப்பட்ட தேவமகள் இவளேயென உணர்ந்து "வேதவல்லி" என்று பெயரிட்டு வளர்த்துவர தக்க பருவம் வந்ததும், ரங்கநாதனே இளவரசர் வடிவம் பூண்டு திருமகளை ஏற்றுக் கொண்டார். திருமகள் ரங்கநாதரைக் கண்டதும் இவரே மந்நாதர் (என் கணவர்) என்றுரைத்ததால் மந்நாதர் என்ற பெயரும் உண்டு. எனவே திருமணக் கோலத்திலான ரங்கநாதராக (மந்நாதர்) எழுந்தருளினார்.

இவ்விதம் ஐந்து மூர்த்திகளும் ஒருங்கே எழுந்தருளியிருப்பது இந்த ஒரு திவ்ய தேசத்தில் மட்டும்தான்.

2. திருமலை வெங்கடேசனே வேங்கட கிருஷ்ணனாக எழுந்தருளியிருப்பதால் இரண்டாவது திருப்பதி என்றழைக்கிறார்கள். புரட்டாசி சனிக்கிழமைகள் திருப்பதியைப்போல் இங்கும் விசேடம்.

3. கண்ணன் அர்ஜுனனுக்குத் தேரோட்டியாக இருந்து பீஷ்மர் விட்ட அம்புகளை அர்ஜுனனுக்காக ஏற்றுக் கொண்டதை காண்பிக்க இன்றைக்கும் ஸ்ரீபார்த்தசாரதி (உற்சவர்) திருமுகத்தில் வடுக்களைக் காணலாம்.

4. வைணவத் தலங்களில் முக்கிய மூன்றான வேங்கடம், அரங்கம், கச்சி என்ற முத்தலத்துப் பெருமாள்களும் இங்குள்ளது ஒரு சிறப்பு.

5. "பார்த்தன் தன் தேர்முன் நின்றானை" இத்தலத்துக் கண்டே னென்றும் "தெள்ளிய சிங்கமாகியத் தேவைத் திருவல்லிக்கேணி கண்டேனென்பதும்" திருமங்கையின் பா உரைக்கும் அவதார நினைவூட்டுகளாகும்.

6. 108 திவ்ய தேசங்களிலே தான் வளர்ந்த குலவழக்கப்படி பெரிய மீசையுடன் எழுந்தருளியுள்ள ஸ்தலம் இது ஒன்றுதான்.

# 17. திருநீர்மலை

நின்ற, இருந்த, கிடந்த, நடந்த என்ற நான்கு திருக் கோலங்களில் திருநீர்மலையில் பெருமாள் காட்சி தருகிறார்.

இந்தத் தலம் அமைந்துள்ள பகுதியைக் காண்ட வனம் என்றும், இத்தலம் அமைந்துள்ள மலையினைத் தோயத்தரி என்றும் புராணம் செப்புகிறது. இத்தலம் "ஸ்வயம் வ்யக்த ஸ்தலம்" அதாவது தானாகவே தோன்றிய தலமாகும். முக்தி அளிக்கும் 8 தலங்களுள் இதுவும் ஒன்றாகும். மற்ற ஏழு ஸ்தலங்களின் விபரம் பின்வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவரங்கம் | 2. | ஸ்ரீமுஷ்ணம் |
| 3. | திருப்பதி | 4. | சாளக்கிராமம் |
| 5. | நைமிசாரண்யம் | 6. | புஷ்கரம் |
| 7. | நாராயணபுரம் | | |

இத்தலங்களில் எல்லாம் பெருமாள் தாமாகவே உகந்து எழுந்தருளியுள்ளார்.

சிறப்புகள்

1. பூலோகத்தில் அவதாரம் முடிந்தபின் வைகுண்டத்திற்கு திரும்பும் காட்சி இங்கு ஸேவையாகிறது. அதாவது

| | | |
|---|---|---|
| அமர்ந்த நிலையில் | - | நரசிம்மராக |
| நின்ற நிலையில் | - | நீர்வண்ணராக |
| சயன நிலையில் | - | ரெங்கநாதனாக |
| நடந்த நிலையில் | - | உலகளந்த திரிவிக்ரமனாக |

அதாவது மேலே கண்ட அவதாரங்களின் முடிவில் எம்பெருமான் நேராக மீண்டும் வைகுண்டம் சென்று விடுகிறார். அவதார ரகஸ்யம் முடிந்து விடுகிறது..

2. இந்த ஸ்தலம் ஆயுள் விருந்தியைத் தரக்கூடியது. திருமணப் பிராப்தி ஸ்தலமாகவும் விளங்குகிறது. இங்கு செய்யக்கூடிய புண்ணியங்கட்கு (தர்மங் கட்கும் யாகங்கட்கும் 100 மடங்கு பலம் அதிகரிப்பதால்) பலமான பலன் கிடைக்கிறது.

108 திவ்ய தேசங்களில் சோளிங்கபுரம்போல் இப்பகுதி வாழ்மக்களும் இதையொரு பிரார்த்தனை ஸ்தலமாகவே கொண்டு வழிபாடியாற்றுகின்றனர்.

3. பூலோக வைகுண்டமென போற்றப்படும் திருவரங்கம், திருமலை, திருக்கோட்டியூர் ஆகிய ஸ்தலங்கட்கு உண்டான புகழோடு இத்தலத்தையும் இணைத்துப் பாசுரித்திருக்கிறார் பூதத்தாழ்வார்.

4. திருக்கோவிலூர் அஹோபிலம் (சிங்கவேள் குன்றம்) திருவரங்கம், அயோத்தி ஆகிய திவ்ய தேசங்களை ஒரு சேர சேவித்த உணர்வை இம்மலையில் உள்ள பெருமாள்களை தரிசித்துத் திரும்பும்போது உணர முடிகின்றது.

5. திருமங்கையாழ்வாராலும், பூதத்தாழ்வாராலும் 20 பாசுரங்களால் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம்.

# 18. திருவிடவெந்தை (திருவடந்தை)

திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட இத்தலம் சென்னையிலிருந்து மாமல்லபுரம் செல்லும் சாலையில் கோவளத்திற்கு அடுத்த ஊராக அமைந்துள்ளது.

### சிறப்புகள்

1. தினமும் ஒரு திருமணம் செய்து கொண்டதால் பெருமாளுக்கு நித்ய கல்யாணப் பெருமாள் என்றும், ஊருக்கு நித்ய கல்யாணபுரி என்றும், வராக அவதாரம் எடுத்தமையால் வராகபுரி என்றும் பெயருண்டு. அசுரகுல கால நல்லூர் என்பதே கல்வெட்டுகளில் காணப்படும் பெயர். ஸ்ரீயின் அவதார ஸ்தலமாதலால் ஸ்ரீபுரி என்றும் இந்த ஊருக்கு நான்கு பெயர்கள் உண்டு.

2. நித்ய கல்யாண அவதாரத்தில் எழுந்தருளியிருப்பதாக ஐதீகம். இவ்விருவர் திருமேனியில் (முகத்தில்) தாடையில் பொட்டு இயற்கையாகவே அமைந்திருப்பது கண்கூடு. இந்தப் பொட்டு அமைந்திருப்பது திருமகள் திருமண வைபவத்தை நினைவு கூறும் நிகழ்ச்சியாகும்.

3. இங்கு பெருமாள் எழுந்தருளியுள்ள முறை மிகச் சிறப்பான ஒன்றாகும். ஒரு திருவடி பூமியிலும் மற்றொன்று ஆதிசேடனும் அவன் பத்தினியான இருவர் முடியிலும் வைத்துக்கொண்டு, அகிலவல்லி நாச்சியாரை இடது தொடையில் தாங்கிக்கொண்டு, சரம ஸ்லோகத்தை உபதேசிக்கும் வராஹ மூர்த்தியாய் நின்றிலங்குகிறார்.

4. நித்ய கல்யாணப் பெருமாள் எழுந்தருளியிருக்கும் இத்தலத்தில் மணமாகாத ஆண்களும், பெண்களும் திருமணத்தின் பொருட்டுவேண்டிச் செல்வர் அவர்கட்குத் திருமணம் நடைபெறுவதும் கண்கூடு.

## 19. திருக்கடன் மல்லை (மாமல்லபுரம்)

இத்தலம், பல்லவ வேந்தர்களின் கலைக களஞ்சியமான மகாபலிபுரத்தில் இருக்கிறது.

சிறப்புக்கள்

1. சங்க காலத்திலேயே சலசயனம் என்னும் சொல் அக்காலத் தமிழ்ச்சொல்லான நீர்ப்பாயல் என்றே குறிக்கப்படுவதிலிருந்து இதன் தொன்மை விளங்கும்.

2. ஒரு காலத்தில் இங்கு ஏழு கோயில்கள் இருந்ததாகவும், அவைகள் கடல்கோளால் அழிக்கப் பட்டுவிட்டன வென்றும் அப்போது இந்நகரத்திற்கு 7 கோயில் நகரம் என்னும் பெயர் விளங்கியதாகவும் அறிய முடிகிறது.

   கடலுக்குள் அமிழ்ந்த கோவிலில் இருந்த பெருமாளைக் கொணர்ந்து கடற்கரைக்குச் சற்றுத் தொலைவில் ஊருக்குள் அமைத்துள்ளனர். இங்கு பள்ளிகொண்ட நிலையில் உள்ள பெருமாளுக்கே ஸ்தல சயனத்துறைவார் என்பது திருநாமம். இக்கோவில் தான் மங்களாசாசனம் செய்யப்பட்ட திவ்யதேசமாகும். இதுதான் தலசயனமாகும்.

   சிலர் இரண்டு கோவில்களும் (அதாவது சலசயனம், தல சயனம்) மங்களாசாசனம் என்று கூறுவர். இருப்பினும் தற்போது பெயர் பெற்றிருப்பது ஊருக்குள் அமைந்திருக்கும் தலசயனப் பெருமாள் கோவில் மட்டுமே.

3. கடற்கரைக் கோவிலின் மூலவர் தலசயனத் துறைவார். உற்சவரின் திருநாமம் உலகுய்ய என்பதாகும். இங்கு உற்சவர் தம் கையில் ஒரு தாமரை மொக்குடன் திகழ்கிறார். இதை அவரே மூலவரின் பாதங்களில் சேர்ப்பிப்பதாகவும் ஐதீகம். பார்ப்பதற்கு மிக்க ரம்மியமானவர் இவர். கையில் தாமரை மொட்டுடன் இருக்கும் உற்சவர் 108இல் இவர் ஒருவர்தான்.

4. பல்லவ மன்னர்கள் கலைத்தாய்க்குச் சிற்பக் கலையைக் காணிக்கையாக அர்ப்பணித்த இவ்விடத்திற்கு அர்த்தசேது என்றும் ஒரு பெயரும் உண்டு.

5. இப்பெருமாள் (ஏனப்பிரான்) வலது திருக்கரத்தைத் தமது திருமார்பின்மீது உபதேச முத்திரையாக வைத்து ஞானத்தமிழ் புரிந்த நான் என்பதை விளக்குகிறார்.

6. பல்லவ மன்னர்கள் மட்டுமன்றி, இராஜராஜ சோழன் தொண்டை நாட்டு மன்னர்கள், விஜய நகர சாம்ராஜ்ய மன்னர்கள் ஆகியோரும் இங்குள்ள கோவில் கட்டுமானங்களில் பங்குபெற்றுள்ளனர்.

7. மாமல்லபுரத்திலும் மற்றும் இதன் மருங்கமைந்த குன்றுகளிலும் அமைந்துள்ள மண்டபங்கள், குகைகள், தேர்கள், சிறிய கோவில்கள், சிற்பங்கள் ஆகியன பல்லவர்களின் ஆட்சிக் காலம் இன்னும் சிறிதே தமிழகத்தில் நீடித்திருந்தால் மாமல்லையை உலக அதிசயங்களுள் ஒன்றாக வைப்பதற்குத் தகுதி பெற்றதாகச் செய்திருப்பர்.

# 20. சோளசிம்மபுரம் என்னும் திருக்கடிகை

இத்தலத்தைப் பற்றி விஷ்ணுபுராணமும், பாத்ம புராணமும் துணுக்குத் துணுக்குத் தகவல்கள் தருகின்றன.

சப்தரிஷிகளும், வாமதேவர் என்னும் முனிவரும் பிரஹலாதனுக்காகப் பெருமாள் காட்டின நரசிம்ம அவதாரத்தைக் காண வேண்டுமென்ற ஆவலால் இம்மலையில் வந்து தவமியற்றத் தொடங்கினர். அவர்கள் ஏன் இம்மலையைத் தேர்ந்தெடுத்தனர் என்றால் முன்னொரு காலத்தில் விசுவாமித்திரர் இம்மலையில் ஒரு கடிகை நேரத்தில் (ஒரு நாழிகை நேரத்தில்) நரசிம்மனைக் குறித்து துதித்து பிரம்மரிஷி பட்டம் பெற்றாராம். எனவே கடிகை நேரத்தில் தாமும் நரசிம்ம மூர்த்தியைக் காணலாம் என்ற பேரவா காரணத்தால் இம்மலையைத் தெரிவு செய்து தவமியற்றத் தொடங்கினர்.

இவ்வாறிருக்க ஸ்ரீஇராமவதாரம் முடிந்ததும் ஸ்ரீராமன் வைகுண்டத்திற்கு எழுந்தருளுந் தருவாயில் தாமும் உடன்வருவதாக ஆஞ்சநேயர் கூற, கடிகாசலத்தில் என்னைக் குறித்துத் தவம் செய்யும் ஸப்த ரிஷிகட்கு உண்டாகும், இன்னல்களைக் களைந்து அதன்பின் வைகுந்தம் வருவாயாக என்று கூற, அவ்விதமே ஆஞ்சநேயனும் இம்மலை வந்து சேர்ந்தார். காலன், கேயன் என்னும் இரு அரக்கர்கள் இம்மலையில் நாராயணன் குறித்துத் தவஞ்செய்யும் ரிஷிகட்கு பெருத்த இடையூறு விளைவிக்க அவர்களோடு பொரிதும் களைத்துப்போன ஆஞ்சநேயர் ஸ்ரீராமனைத் துதித்து நிற்க ஸ்ரீராமன் அனுமனுக்குக் காட்சி தந்து சங்கு சக்கரங்களை வழங்க, அவற்றால் இரு அரக்கர்களின் தலையைக் கொய்து

ரிஷிகளுக்குத் தடையற்ற நிலையை உண்டாக்குகிறார். இறுதியில் ரிஷிகளின் தவத்தை மெச்சிய பகவான் நரசிம்ம மூர்த்தியாக அவர்களுக்குக் காட்சி கொடுத்து நின்றான்.

நரசிம்ம அவதாரத்தைக் கண்டுகளித்த ஆஞ்சநேயர் ஆனந்த பஜனம் செய்து நிற்க ஆஞ்சநேயா நீ நமது முன்பமர்ந்து யோக ஆஞ்சநேயராக மக்களுக்குத் தீராத பிணிகளையுந் தீர்த்துக் கலியுகம் முடியும் தறுவாயில் எம்மை வந்தடைவாயாக என்றருளி மறைந்தார்.

இதனால்தான் யோக நிலையில் அமர்ந்த (சங்கு சக்கரத்துடன்) ஆஞ்சநேயருக்கும் தனிச்சன்னதி உள்ளது. இப்பிரதான கீர்த்தி அனுமனுக்கு வேறெந்த திவ்ய தேசத்திலும் இல்லை. கலியுகம் முடியும் வரை அனுமனும் கலியுகத்திலேயே வாழ்வதாக ஐதீஹம். எனவேதான் பக்தி ரசத்தோடு இராமாயணம் படிக்கும் இடம் தோறும் அனுமன் அருவமாகவோ உருவமாகவோ பிரத்யட்சம் ஆவதாய் ஐதீகம்.

சிறப்புகள்

1. சுமார் ஒரு கடிகை (24 நிமிடம்) இங்கு தங்கியிருந்தாலே மோட்சம் கிடைக்கும் என்று ஐதீகமிருப்பதால் இதற்குத் திருக்கடிகை என்னும் பெயர் வந்தது. கடிகை - நாழிகை அசலம் - மலை எனவே கடிகாசலமானது.

2. இது ஒரு விசேஷமான பிரார்த்தனைத் தலம் பேய், பிசாசு, சூனியம் என்று சொல்லப்படும் அதீத நோய்கள், தீர இங்கே வந்து விரதம் கடைபிடித்து பிரதி தினமும் தக்கான் குளத்தில் நீராடி, மலைமீதேறிப் பெருமானையும்

ஆஞ்சநேயரையும் வழிபட்டு மகிழ்ச்சியுடன் செல்லும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும்.

3. இராமானுஜர் தமது விசிஸ்டாத்வைத வைணவக் கோட்பாடுகளை தழைக்க நியமித்த 74 சிம்மாசனங்களில் இதுவும் ஒன்று.

4. தொட்டையாசார் பல அற்புதங்கள் செய்து காட்டித் தமது பக்தியை வெளிக்காட்டிய இடம். இவரைப்போன்று எறும்பியப்பா என்னும் ஞானியும் இங்குதான் வாழ்ந்தார்.

5. ஸ்ரீமந் நாதமுனிகளும், திருக்கச்சி நம்பிகளும், மணவாள மாமுனியும், இராமானுஜரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

6. அஹோபில மலைதான் எம்பெருமான் நரசிம்ம அவதாரம் எடுத்த இடம். மீண்டும் ஒருமுறை முனிவர்க்காக அந்த அவதாரத்தை இங்கே மேற்கொண்டதால் தமிழகத்தில் எம்பெருமான் அமர்ந்துள்ள மலைகளிலேயே இது மிகச் சிறப்பானதாகும்.

7. ஏகசிலா பர்வதமென்றும் இதற்குப் பெயர். பிரிவுகளும் சேர்க்கைகளுமின்றி ஒரே கல்லில் அமைந்த சிலைபோல் ஒரே கல்லில் இம்மலை அமைந்திருப்பதால் ஏகசிலா பர்வதம்.

8. இங்குள்ள பெரியமலையில் யோக நரசிம்மர் எழுந்தருளியுள்ளார். இது 1500 படிகள் கொண்டது. இவரைத் தரிசித்துவிட்டுத்தான்

சிறிய மலையில் எழுந்தருளியுள்ள ஆஞ்சநேய ரைத் தரிசிக்க வேண்டும்.

9. பெருமாளுக்கு ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் ஒவ்வொரு விதமான வழிபாட்டு நியமம் உள்ளது. சில தலங்களில் உண்டியல் போடுவது. சில தலங்களில் மொட்டை. ஆனால் இங்கு பக்தர்கள் படியேறி வந்து தம்மைச் சேவிப்பதைப் பெருமாளே விரும்புவ தாக ஐதீகம். (இங்கு விஞ்ச் ரயில் போட முயற்சிக்கப்பட்டு தோல்வி கண்டு விட்டது)

10. கடிகாசலம் என்னும் இங்கு ஒரு நாழிகை நேரம் தங்கியிருந்து அக்காரக் கனியான எம்பெருமானைச் சேவித்தாலே மோட்சம் சித்திக்கும் என நூல்கள் மொழிகின்றன. அவ்விதம் திருக்கடிகை செல்ல முடியாத வர்களும் இருக்கலாம். அவர்கள் ஒரு நாழிகை திருக்கடிகையை மனதில் நினைத்து நரசிம்மரைச் சிந்தித்தாலே போதுமென்கிறார் பிள்ளைப் பெருமாளையங்கார்.

# 21. திருவனந்தபுரம்

இத்தலத்தின் தோற்றம்பற்றி இரண்டுவிதக் கருத்துகள் உண்டு.

1) திவாரகமுனி என்பவர் துளுநாட்டுச் சன்னியாசி. துளு என்பது கேரளாவின் ஒரு பகுதியே. இவர் சீராப்தி நாதனைக் (பாற்கடல் வண்ணனை) காணவேண்டு மென்று ஆதர்த்த தேசத்தில் கடுந்தவம் செய்து கொண்டிருந்தார். தவத்தை மெச்சிய மஹாவிஷ்ணு 2 வயது குழந்தையாக இவர்முன் தோன்றினார். இக்குழவியின் அழகில் பேராவல் கொண்ட திவாகர முனிவர் தன்னுடனேயே தங்கியிருக்குமாறு அக்குழந்தையை வேண்டினார். அதற்கு அக்குழந்தை தனக்கு எவ்விதத் துன்பமும் நேராமல் காத்து வந்தால்தான் உடன் இருப்பதாகவும், தனக்குச் சிறு துன்பம் நேர்ந்தாலும் விலகி விடுவதாகத் தெரிவிக்கவே குழந்தையின் கட்டளைக்கு முனிவரும் ஒப்புக் கொண்டார்.

அவ்விதமே அவருடன் வளர்ந்துவரும் ஒரு நாளில் முனிவர் பூஜையில் ஈடுபட்டுக் கொண்டிருந்த சமயம் அங்கிருந்த சாளக்கிராமம் ஒன்றை அக்குழந்தை எடுத்துக் கடிக்கவே, முனிவர் வெகுண்டு கண்டிக்க அக்குழந்தை ஓட அவரும் பின் தொடர என்னைக் காண வேண்டுமானால் அனந்தன் காட்டுக்கு வர வேண்டுமெனக் கூறி அக்குழந்தை மறைந்துவிட்டது.

முனிவரும் மிகுந்த பக்தி ஏக்கத்தோடு பல இடத்திலும் தேடியலைந்து இறுதியில் அனந்தன்

காட்டில் கடலோரமுள்ள ஓர் { 'பை மரப் பொந்தில் அக்குழந்தையைக் கண்டுவிட்டார்.

அம்மரம் திடீரென நிலத்தில் வீழ்ந்து அனந்தசயன வடிவமாக இறைவன் காட்சியளித்தார். அவ்வடிவின் தலை திருவல்லத்திலும் (அனந்தபுரம் துறைமுகத்தி லிருந்து 3 மைல்) பாதம் திருப்பாப்புரத்திலும் (அதற்கெதிர்புறம் 5 மைல்) சரீரம் திருவனந்த புரத்திலும் அமையக்கண்ட அவர் வியந்து, திகைத்துப் பயந்து தமக்கு மிகச்சிறு வடிவாகக் காட்சியளிக்க வேண்டுமென்று கேட்க அவ்விதமே அம்முனிவர் கையில் வைத்திருந்த யோக தண்டத்தின் அளவிற்குத் தம்மைச் சுருக்கி காட்சியளித்தார்.

2) இப்புரத்தைப்பற்றிய மற்றொரு கதை வில்வமங்கலத் திலிருந்த நம்பூதிரி வகுப்பைச் சார்ந்த சன்னியாசி ஒருவர் அனந்த சயன வடிவிலிருந்த இப் பெருமானைக் கண்டு மோகித்து வழிபட ஆரம்பித்தார். ஒரு நாள் நிவேதிக்க (நைவேத்தியத் திற்கு, வழிபாட்டிற்கு) கைவசம் யாதுமில்லாததால் அருகிலிருந்த மாமரத்தில் சில மாங்காய்களைப் பறித்து ஒரு சிரட்டையில் (தேங்காய் மூடியில்) வைத்து நைவேத்தியம் செய்தார். இதை நினைவு கூறும் முகத்தான் இன்றும் தங்கத்தாலான தேங்காய்ச் சிரட்டையில் மாங்காய் ஊறுகாய் வைத்து நைவேத்யம் செய்யும் முறை இங்கு வழக்கத்தில் உள்ளது.

இவ்விரண்டு பாரம்பரியங்களையும் இன்றும் பின்பற்றி இக்கோவிலின் பூஜா உரிமைகள் துளு நாட்டவர்க்கும், நிர்வாகம் நம்பூதிரிகளிடமும் விடப்பட்டுள்ளது.

## சிறப்புகள்

1. எம்பெருமானின் திருமேனி மிகப்பெரிய வடிவமான தால் சிரசு, உடல், திருவடிகள் இவற்றை மூன்று வாசல்கள் வழியே தனித்தனியே தரிசிக்க வேண்டும். திருவட்டாற்றிலும் இதேபோன்று மூன்று வாசல்கள் வழியேதான் எம்பெருமானைத் தரிசிக்க வேண்டும்.

2. இந்த அனந்த சயனனைக் குறித்து இங்கு விரதமிருந்து சில நாட்கள் மட்டும் தங்கியிருப்பது மிகவும் விசேஷமானதாகும்.

3. இச்சன்னதியின் தெற்கில் (தெற்குப் பிரகாரத்தில்) யோக நரசிம்மனும், சன்னதிக்கு முன்புறம் ஆஞ்சநேயரும், பின்புறம் கிருஷ்ணனும் காட்சியளிக் கிறார்கள். இந்த அனுமான்மீது சாத்தப்படும் வெண்ணெய் எவ்வளவு நாட்களானாலும் எத்தனை வெயில் அடித்தாலும் உருகுவதே இல்லை.

4. இத்தலத்திற்கு அஸ்திவாரமிட்டு வேலையைத் துவக்கியவர் சேரமான் பெருமாள் நாயனார் என்று (கி.பி.1050) கல்வெட்டுக் கூறுகிறது.

5. கி.பி.1673 முதல் 1677 வரை பூஜையின்றி இக்கோவில் அடைக்கப்பட்டிருந்தது. 1686இல் இக்கோவில் தீப்பிடித்து மூலவிக்ரகம் தவிர பிறவெல்லாம் பழுதுற்றது. கி.பி.1729ல் ராஜமார்த்தாண்ட வர்மாவினால் புதுப்பிக்கப்பட்டு மரத்தாலான மூல விக்ரகம் அகற்றப்பட்டு 12000 சாளக்கிராமங் களினாலும், கடுசர்க்கரா என்ற அஷ்டபந்தனக் கலவையாலும் நிறுவப்பட்ட புது அனந்த சயன மூர்த்தியே இப்போது நாம் காண்பதாகும்.

1750 ஆம் ஆண்டில் ராஜா மார்த்தாண்ட வர்மர், தனது உறவினர்களுடனும், தளபதி சேனா பரிவாரங்களுடன் இச்சன்னதிக்கு வந்து தன் ஆட்சிக்குட்பட்ட இராஜ்யம் மற்றும் பிற செல்வங்களையும் அனந்தபுரம் பத்மநாபனுக்கே பட்டயமெழுதிக் கொடுத்து தன் உடைவாளையும் அவரின் திருப்பாதத்தில் வைத்து எடுத்துக்கொண்டு பரிபூரண சரணாகதி அடைந்தார். அன்றுமுதல் திருவிதாங்கூர் அரசப் பரம்பரையினர் பத்மநாப தாசர் என்றே அழைக்கப்பட்டனர். தினமும் காலையில் வந்து பத்மநாபரை வணங்கி ஆசிர்வாதம் பெற்று ஆட்சி நடத்தினர். இன்றும் அவர்கள் பத்மநாப தாசராகவே வாழ்ந்து வருகிறார்கள். தனி வழியே வந்து (தரிசனத்தின் பொருட்டு) தனிவழியே திரும்பிச் செல்கிறார்கள்.

இந்தியா சுதந்திரம் பெற்றபின், திருவிதாங்கூர் இந்திய யூனியனுடன் இணைக்கப்பட்டாலும் இக்கோவில் மட்டும் அரசால் எடுக்கப்படாது, மகாராஜாவால் மட்டுமே நிர்வகிக்கப்பட்டு வந்துள்ளது.

இக்கோவிலின் உள்ளே மண்டபம் ஒன்று பல இசைத் தூண்களைக் கொண்ட தாயும், ஒவ்வொன்றிலும் தசாவதாரச் சிறப்பை விளக்கும் சித்திர மேம்பாட்டுடன் கூடியதாகவும் விளங்குகிறது. இதைக் குலசேகராழ்வார் கட்டினார் என்றும் கூறுவர். ஆனால் கல்வெட்டு செய்தி இராமவர்ம மகாராஜாவால் கட்டப்பட்டதென்றும் கூறுகிறது. ஆயினும் இதைக் குலசேகர மண்டபம் என்றழைக்கப்படுவதே மரபாயிருந்து வருகிறது. இதனைச் சப்த ஸ்வர மண்டபம் என்றும் கூறுவர். இதில் உள்ள தூண்களை லேசாகத் தட்டினால் ஒவ்வொரு தூணிலும்

ஒவ்வொரு இசைக் கருவியின் நாதம் எழுகிறது. ஒரு தூணில் எழுகின்ற நாதத்தை மற்றொரு தூணில் காது வைத்து ரசிக்கலாம்.

6. இக்கோவிலைக் கட்டி முடிக்க 40 ஆண்டுகள் ஆயிற்று 4000 கொத்தர்கள், 6000 ஆட்கள், 100 யானைகள், யானைப்பாகர்கள் வேலையில் ஈடு பட்டனர். 30 மைல் தொலைவிலிருந்து பெரிய தேக்கு மரம் ஒன்று கொணரப்பட்டு தங்கக் கவசம் அணிவிக்கப்பட்டு துவஜஸ்தம்பமாக நிறுத்தப்பட்டது. ஆலயத்தின் வெளிப்பிரகாரம் மட்டும் அமைக்க 7 ஆண்டுகள் ஆயிற்றாம்.

7. சிலப்பதிகாரம் திருவனந்தபுரத்தை ஆடகமாடம் என்று வர்ணிக்கிறது. சேரமன்னன் செங்குட்டுவன் வடபுலத்தின்மீது படையெடுத்துச் செல்கின்றபோது ஆடகமாடமாகிய திருவனந்தபுரத்தில் அறிதுயலமர்ந்த மணிவண்ணன் அணிந்த மாலையை வாங்கி செங்குட்டுவன் சூடிச் சென்று "தொடுத்த தூவாய்முடி சூடிக்களைந்தன சூடுமித் தொண்டர்களோம்" என்ற பெரியாழ்வாரின் வாக்குப்படி சென்றான் என்பதை,

"ஆடகமாடத்து அறிதுயில் அமர்ந்தோன்
சேடம்கொண்டு சிலர் நின்றேத்த
ஆங்கது வாங்கி அணிமணி புயத்துத் தாங்கினன்
ஆசித்தகை மையின் செல்வுழி"

என்கிறார் இளங்கோவடிகள்

ஆடக மாடம் - திருவனந்தபுரம்
சேடம் - மலர்மாலை

## 22. திருவட்டாறு

இத்தலம் மலைநாட்டுப் பதிகளிலே மிகத் தொன்மையானது மட்டுமின்றி மிகப் பிரம்மாண்டமானதும் மிகப் புகழ் பெற்றதுமாகும்.

கலியுகத்தில் 950வது நாளில் திருவனந்தபுரம் பத்மநாபசுவாமி சன்னதி தோற்றுவிக்கப்பட்டது. இதைவிட திருவட்டாறு 1284ஆம் ஆண்டுகள் முற்பட்டது என்று மதிலக கிரந்தம் என்ற நூலில் சொல்லப்பட்டுள்ளது.

திருவட்டாறு தேவஸ்தானத்தில் கிடைத்த வட்டெழுத்துக்களாலான ஓலைச்சுவடியில் இத்தலம் திரேதா யுகத்தில் தோற்றுவிக்கப்பட்டது எனக் கூறப்பட்டுள்ளது.

மூலவர்

ஆதிகேசவப் பெருமாள் புஜங்க சயனம் மேற்கு நோக்கிய திருக்கோலம். இடது கை தொங்கவிட்ட நிலையிலும் வலது கை யோக முத்திரை காட்டித் தெற்கே சிரசும் வடக்கே திருவடியும் ஸ்ரீசேஷ சயனமாக மேற்கு நோக்கிய திருக்கோலம். நாபித் தாமரையோ பிரம்மாவோ இல்லை. 23 அடி நீளமான திருக்கோலம். இவரின் சிரசருகே ஹாதலேயே மஹரிஷி உள்ளார்.

சிறப்புகள்

1. வளமிக்க வாட்டாறு என்பது நம்மாழ்வார் திருவாக்கு. திருவனந்தபுரம் போலவே இங்கு மூன்று வாசல். 20 படிகள் ஏறி சென்று இச்சன்னதியை அடைய

வேண்டும். சுற்றுப் பிரகாரத்தில் 224 தூண்கள் உண்டு. கேரளத்துப் பாணியில் ஒவ்வொன்றும் ஒரு பாவை விளக்கேந்திய பெண்.

2. சந்திரனும், பரசுராமனும் இத்தலத்து எம்பெருமானை வழிபட்டு இங்கு தவமியற்றினர். திரேதா யுகத்தில் பரசுராமன் சந்திரத் தீர்த்தத்தில் இப்பெருமானைப் பூஜித்தார் என்று புராணம் கூறுகிறது.

3. அமெரிக்காவில் பாஸ்டன் நகரிலிருந்து வந்து அனந்த சைதன்யன் என்னும் சன்னியாசி இந்தக் கோவில் அமெரிக்காவில் உள்ள கதீட்ரல் ஆலயம், செயிண்ட் பால் பீட்டர் ஆலயம் இவ்விரண்டையும் விட இங்கு தெய்வ சான்னித்தியம் அதிகம் இருப்பதை உணர்ந்து அதனால் ஈர்க்கப்பட்டு சிலகாலம் இங்கே தங்கி பாவ சமாதியில் ஆழ்ந்துவிட்டார் என்று தேவஸ்வம் போர்டின் குறிப்புகள் கூறுகின்றன.

4. சங்க காலத்தே சிறப்பாகப் பேசப்படும் எழினி ஆதன் பிறந்த ஊர் இந்த திருவட்டாறுதான். புறநானூறு புரந்த எழினி ஆதன் ஊர் என்று மாங்குடிக் கிழார் கூறுகிறார்.

5. வைகுண்ட ஏகாதசி திருவிழாவும் மேற்படித் தினத்தில் சொர்க்கவாசல் திறப்பதும், முறைப்பாரி உற்சவமும் இங்கு மிகச் சிறப்பானதாகும்.

6. இத்தலத்தில் எண்ணற்ற கல்வெட்டுக்கள் காணப்

7. இங்குள்ள கொடிக்கம்பத்தில் தமிழ்க் கல்வெட்டுக்கள் உள்ளது. இதில் 9 கைவிளக்குகள் உள்ளன.

# 23. திருவண்பரிசாரம்

சிறப்புகள்

1. இங்குள்ள மூலவர் கடுகு, சர்க்கரை மற்றும் மலைத்தேசத்து மூலிகைகளால் செய்யப் பட்டுள்ளதால் (சூடிப்புனையப்பட்டுள்ளதால்) இவருக்குத் திருமஞ்சனம் கிடையாது..

2. நம்மாழ்வாரின் அன்னை ஸ்ரீஉடையநங்கை அவதரித்த தலம்.

3. திருப்பதிசாரத்தில் பிறந்த உடையநங்கை ஆழ்வார் திருநகரியைச் சார்ந்த காரி என்பா ருக்கு மணமுடித்துக் கொடுக்கப்பட்டு உடைய நங்கை புத்திரப்பேறு வேண்டி இத்தலத்தில் 41 நாட்கள் வரதமிருந்து பெருமாளுக்கு ஊஞ்சல் உற்சவம் நடத்தி கலி 43வது நாள் நம்மாழ்வாரைப் பெற்றெடுத்தார்.

   வைகாசி விசாகத்தன்று அவதரித்த நம்மாழ்வாரை ஆழ்வார் திருநகரியில் உள்ள ஆதிப்பிரான் சன்னதியில் விட அந்தக் குழந்தை தவழ்ந்து புளியமரப் பொந்தில் புகுந்து யோக முத்திரையுடன் பத்மாஸன யோகத்தில் ஆழ்வாராய் அமர்ந்தார்.

4. குலசேகர ராஜன் (குலசேகர ஆழ்வார்) கி.பி.8ஆம் நூற்றாண்டில் இத்தலத்தைப் புதுப்பித்து வாகனம், மதில் போன்ற திருப்பணிகள் பலவும் செய்து, கொடிக்கம்பத்

தையும் (துவஜஸ்தம்பத்தையும்) நிர்மாணித்து பிரம்மோத்ஸவமும் செய்து வைத்தார்.

5. இப்பெருமான் பிரஸன்ன மூர்த்தியாகி 4 கரங்களுடன் சங்கு சக்கரங்களுடன் காட்சியருளுவது கண்கொள்ளாக் காட்சியாகும்.

6. நம்மாழ்வார் குழந்தையாகத் தவழ்ந்துள்ளது போன்ற மிக அழகிய விக்ரகம் இங்கு ஒன்றுள்ளது.

7. இப்பெருமாள் சங்கு சக்கரங்களோடு காட்சி தரும் மாட்சிமை நம்மாழ்வாரையே கவர்ந்திருப்பதைத் தலைப்பில் இட்ட பாடல் மூலம் அறியலாம்.

# 24. திருக்குறுங்குடி

நாகர்கோவில் செல்லும் பாதையில் உள்ள வள்ளியூரில் இறங்கித் திருக்குறுங்குடிக்குச் செல்லலாம்.

**சிறப்புக்கள்**

1. இத்திருத்தலத்தின் பெருமை சொற்களால் விரித்துச் சொல்லத்தக்கதன்று. சொல்லி மாள முடியாத பெருமை கொண்டது. ஈண்டு சிலவற்றை மட்டும் தருவோம். இங்கு உள்ள கோபுரத்தில் குடிகொண்டிருக்கும் எண்ணற்ற சிற்பங்கள் அவைகளின் நேர்த்திக்கும், கலையம்சத்திற்கும் சிற்பக் கலைக்கும் உன்னதமான எடுத்துக்காட்டாய்த் திகழ்கின்றன. சிற்பங்களின் எண்ணிக்கை அளவு கடந்தது. எனவே இதனைச் "சித்திரகோபுரம்" என்றும் கூறுவர்.

2. நம்மாழ்வாரின் தந்தையாகிய காரியாரும் தாயாராகிய உடைய நங்கையாரும் தமக்கு நெடுங்காலம் புத்திரப் பேறில்லாது போக இந்த திருக்குறுங்குடி நம்பியை வந்து வேண்டிக் கொள்ள, நாமே வந்து உங்கட்குப் பிள்ளையாகப் போகிறோம் என்று இப்பெருமான் கூறி அவ்விதமே நம்மாழ்வாராக அவதரித்தார். வேதம் தமிழ் செய்த மாறனாகப் பிறந்தது இந்நம்பியே. அதனால் இத்தலத்தில் நம்மாழ்வாருக்கு விக்ரகம் இல்லை.

3. திருமங்கையாழ்வார் இத்தலத்தில் தான், பரமபதம் பெற்றார். அரங்கனுக்குப் (ஸ்ரீரங்கம்) பல பணிவிடைகள் செய்த திருமங்கை ஆழ்வார் தனக்கு மோட்சம் வேண்டுமென அரங்கனிடம் வேண்டினார். அவ்வாறாயின் நீ நம் தெற்கு வீட்டுக்குப் போ என்று அரங்கன் கூற, அவ்விதமே

தெற்கு வீடான திருக்குறுங்குடி வந்து சேர்ந்து இங்கும் எம்பெருமானுக்குப் பல நற்பணிகள் புரிந்து இறுதியில் திருக்குறுங்குடி நம்பியிடம் மோட்சம் வேண்ட, அவரும் இவருக்கு வீடு தந்து ஏற்றுக்கொண்டார். திருமங்கை யாழ்வார் கடைசியாக மங்களாசாசனம் செய்தது இந்தத் திவ்ய தேசம்தான். இங்கு கழனிகளின் நடுவே அமைந் துள்ள திருவரசு எனப்படும் திருமங்கையாழ்வார் முக்தி பெற்ற இடம் இன்றும் நித்ய பூஜைகளை ஏற்றுக் கொள்கிறது. இறைவனிடம் வீடுபேற்றை வேண்டி தமது இருகரத்தையும் கூப்பிய வண்ணம் திருமங்கையாழ்வார் இங்கு எழுந்தருளியுள்ளார். இதற்கடுத்து திருவாலி திருநகரியில் மட்டுமே இதே போன்று அமைந்துள்ளது.

4. இராமானுஜர் வைணவத்தைப் பரப்பி எல்லோரையும் எம்பெருமானிடம் ஈடுபாடு செய்து வரலானார். இராமா வதாரம், கிருஷ்ணாவதாரத்தில் தம்மால் செய்ய முடியாத இக்காரியத்தை நீர் இவ்வளவு சுலபமாய்ச் செய்த விந்தை எப்படி என்று திருக்குறுங்குடி எம்பெருமான் கேட்க, அதற்கு இராமானுஜர் கேட்கும் விதத்தில் கேட்டால் பதில் தருவோம் என்று சொல்ல இத்தலத்தின் நம்பியும் சீடனாக அமர்ந்து இவரைக் குருவாக ஏற்று விளக்கம் கேட்க இராமானுஜர் நம்பியின் செவியில் நாராயண மந்திரத்தை ஓதியது இம்மந்திரத்தால்தான் என்றார்.

திருமங்கையாழ்வாருக்குத் திருநறையூர் எம்பெருமான் நாராயண மந்திரத்தை உபதேசித்தார். ஆனால் இங்கு இறைவனுக்கு எம்பெருமானாரே (எம்பெருமானார்) திருமந்திர உபதேசம் செய்து ஆசிரிய ஸ்தானம் பெற்றது இத்தலத்தில்தான்.

5. வராகமூர்த்தியின் மடியிலிருந்த பூமிப்பிராட்டி அவரால் உரைக்கப்பட்ட கைசிக மகத்துவத்தைக் கேட்டுத் தாமும்

பூலோகம் சென்று இறைவனின் பெருமையைப் பரப்ப வேண்டுமென்று நினைத்து ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாளாக அவதாரம் செய்தார். எனவே ஆண்டாள் அவதாரத்திற்கு வித்திட்ட விளைநிலம் இதுதான்.

6. இத்தலத்தில் சிவபெருமானுக்கும் சன்னதி உள்ளது. திருமங்கையாழ்வார் "அவரொருவர் பக்கம் நிற்க நின்ற பண்பர்" என்று சிவன் இவரோடு இருக்கும் இருப்பை உணர்த்துகிறார். இப்பொழுதும் திருக்குறுங்குடி ஜீயர் சுவாமிகள் பக்கம் நின்றார்க்குக் குறையேதும் உண்டோ என்று கேட்கும் வழக்கம் நடைமுறையில் உள்ளது.

7. இங்குதான் நாத முனிகளின் வம்ஸத்தவர்கள் சுமார் 50 குடும்பங்களுக்கு மேல் வசித்துவந்தார்கள். அவர்கள் தமது வீட்டின் பின்னால் உள்ள அவரைக் கொடி பந்தலின்கீழ் தனது குமாரர்கட்குத் தாளத்துடன் பாசுரங்களைக் கற்றுக் கொடுக்கும் சமயம் இந்நம்பியே ஒரு வைணவன் வேடத்தில் வந்து அதைக் கேட்டு ரசித்தாராம்.

"வளர் அரையர் திருமனையில்
வந்து அவரை நிழல்தனில்
வன்காணம் கேட்ட பெருமான்"

என்ற பாடலால் உணரலாம்.

8. இச்சன்னதி திருக்குறுங்குடி ஜீயர் ஆதிக்கத்தில் உள்ளது. இராமானுஜரால் இந்த ஜீயர் மடம் உருவாக்கப்பட்டது.

9. திருக்குறுங்குடி மேன்மையை நன்கு அறிந்து கற்றாலே அவன்தான் முழு வைணவன். அப்போதுதான் வைணவ சித்தியுண்டாகும். வைணவ பூரண ஞானமே திருக்குறுங்குடி எம்பெருமானின் திவ்ய விஷயங்களை அறிந்து அவன்பாற் அன்பு பூண்டலால் ஏற்படுகிறது என்று நம்மாழ்வாரே அறுதியிட்டுள்ளார்.

# 25. ஸ்ரீவைகுண்டம்

நம்மாழ்வாரால் பாடப்பட்ட இத்தலம் திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர் செல்லும் சாலையில் உள்ளது.

## சிறப்புகள்

1. மற்றெல்லா ஸ்தலங்களிலும் ஆதிசேடனில்தான் பெருமாள் பள்ளி கொண்டிருப்பார். ஆனால் இங்கு நின்ற திருக்கோலத்தில் உள்ள பெருமானுக்கு ஆதிசேடன் குடைபிடிக்கும் வண்ணத்தில் அமைந்துள்ளது.

2. 108 வைணவ திவ்ய தேசங்களில் விண்ணுலகில் இருப்பதாகக் கருதப்படும் ஸ்ரீவைகுண்டம் என்னும் திருப்பெயரை மண்ணுலகில் தாங்கி நிற்கும் ஒரே [illegible] ான.

3. சோரநாதன் என்று பெயர்கொண்ட இப்பெருமானின் மீது வடமொழியில் இயற்றப்பட்டுள்ள "ஸ்ரீசோரநாத சுப்ரபாதம்" மிகவும் பிரசித்தி பெற்றதாகும்.

4. காலதூஷகனுக்கு அருள்பாலித்து ஸ்ரீவைகுண்ட நாதனாக எழுந்தருளியிருந்த பெருமானும், அச்சிறு சன்னதியும் வெகுகாலத்திற்குப்பின் பூமியில் புதையுண்டு போனது. ஒரு சமயம் பாண்டிய மன்னர்கள் நெல்லையில் தமது அரசாட்சியைச் செலுத்துங்கால் மணப்படை, கொற்கை போன்றன பாண்டியர்களின் முக்கிய பிரதேசமாக விளங்கின. அவ்வமயம் பாண்டியனின் பசுக்களை மேய்ப்பவன் சந்நிதி மூடிய இவ்விடத்திற்குப் பசுக்களை ஓட்டி வந்ததும் ஒரு பசு

மாடு மட்டும் தனித்துச் சென்று வைகுண்ட பெருமாள் பூமியில் மறைந்துள்ள இடத்தில் பால் சொரிவதை வழக்கமாகக் கொண்டிருந்தது. இதைக் கண்ட பசு மேய்ப்பவன் இதனை மன்னனுக்குத் தெரிவிக்க மன்னன் தன் பரிவாரங்களுடன் சூழ இவ்விடம் வந்து தோண்டிப் பார்க்கையில், அங்கே வைகுண்டப் பெருமான் சன்னதியிருப்பதைக் கண்டு மிகவும் ஆனந்தித்துத் தற்போதுள்ள கோவிலை அமைத்தான் என்பர்.

5. இங்குள்ள கள்ளப்பிரானின் திருமேனியை உருவாக்கிய சிற்பி அப்பேரழகில் பெரிதும் மயங்கி தன் உள்ளத்தைப் பறிகொடுத்து ஆசைமிக்குப் போனதால் செல்லமாகக் கன்னத்தில் கிள்ளி விட்டார். ஆத்மார்த்தமான பக்தியில் கிள்ளிய வடுவை எம்பெருமான் கன்னத்தில் ஏற்றுக் கொண்டார். இன்றும் இப்பெருமானின் கன்னத்தில் கிள்ளப்பட்ட வடுவைக் காணலாம்.

6. இந்த இறைவனைத் "திருவழுதி வளநாட்டு ஸ்ரீவைகுந்தத்து நாயனார் கள்ளப்பிரான்" என்று கல்வெட்டு கூறுகிறது.

7. இத்தலத்து எம்பெருமானை ஆண்டுக்கு இருமுறை சூரியதேவன் வந்து வழிபாடு செய்கிறான். அதாவது சித்திரை 6ம் தேதி, ஐப்பசி 6ந் தேதி. இவ்விரு தினங்களிலும் இளஞ்சூரியனது பொற்கிரணங்கள் கோபுர வாயில் வழியாக வைகுந்தநாதனின் திருமேனிக்கு அபிஷேகம் செய்கிறது. இத்தகைய அமைப்பில் இக்கோவிலின் கோபுர வாசல் அமைக்கப்பட்டது. எண்ணியெண்ணி வியக்கத் தக்கதாகும். சூரியவழிபாடு 108 திருத்தலங்களில் இங்கு மட்டுமே உள்ளது.

## 26. திருக்குருகூர் என்னும் ஆழ்வார் திருநகரி

இத்தலம் ஆதியில் தோன்றியதால் "ஆதிஷேத்திரம்" என்றும், வராஹ ரூபத்தை காட்டியருளியதால் "வராஹ ஷேத்திரம் என்றும் ஆயிரம் தலை கொண்ட ஆதிசேடன் உறங்காப் புளியாக அவதரித்தமையால் க்ஷேத் க்ஷேத்திர மெனவும், தாமிரபரணியாலும், சங்கணித்துறையாலும் வளம் கெழுமிய ஊராகையால் "தீர்த்த சேஷத்திரம்" எனவும், தாந்தன் என்னும் கீழ்குலத்தானுக்கு மோட்சம் நல்கியதால் தாந்த ஷேத்திரம் எனவும், இந்தக் குருகூரை "பஞ்சமஹா ஷேத்திரம்" என்றும் பெரியோர் போற்றிப் புகழ்வார்.

### சிறப்புகள்

1. ஆழ்வார்கள் என்றாலே அது ஸ்ரீ நம்மாழ்வாரைத்தான் குறிக்கும். சின்முத்திரையோடு சிறு குழவியாக தவழ்ந்து வந்து இந்தப் புளியமரத்தின் பொந்தில் அமர்ந்த நம்மாழ்வார் 16 ஆண்டுகள் கழித்து வாய் திறந்து திருவாய் மொழி மலர்ந்தருளினார். வேதத்தின் சாரத்தைத் திருவாய் மொழியாக நம்மாழ்வார் வடித்துக்கொடுத்த இடம்தான், இது. ஸ்ரீ நம்மாழ்வாரும் எந்த திவ்ய தேசத்திற்கும் நேரில் செல்லாது இந்தப் புளியமரத்தின் பொந்தில் இருந்து கொண்டே திவ்ய ஸ்தலங்கட்குப் பாசுரம் அருளினார்.

2. இத்தலத்திற்கு அருகாமையிலமைந்த திருக்கோளூரில் பிறந்த மதுரகவியாழ்வார் வடநாட்டிற்கு யாத்திரை சென்ற போது திடீரென்று அவருக்குத் தென்திசையில் ஒரு ஜோதி தோன்றி அவரைக் கவர்ந்திழுக்க, இது விந்திய மலையில் தோன்றக் கூடுமென நினைத்த அவர் அங்கு வந்து கண்டால் மேலும் தெற்கே தள்ளித் தெரிய இறுதியில் இவ்விடம் வந்து நம்மாழ்வாரின் அவதார மேன்மையைத் தெரிந்து "வேறொன்றும் நானறியேன்"

என்று நம்மாழ்வாருக்கு அடிபணிந்து உய்தலே தொழிலெனக் கொண்டு அவரால் மொழியப்பட்ட திருவாய் மொழியினை ஏட்டில் எழுதலுற்றார்.

3. நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தைத் தொகுக்க வந்த நாதமுனிகள் மதுரகவியின் வம்சத்தாரிடம் கண்ணி நுண் சிறுத்தாம்பைப் பெற்று அதைப் பன்னீராயிரம் முறை ஜெபித்து ஸ்ரீ நம்மாழ்வாரே பிரத்யட்சமாகி ஒரு திரையிட்டு அதனுள் அமர்ந்து கொண்டு நாலாயிரம் பாக்களையும் அருள நாதமுனியே அவற்றை எழுதி தமிழன்னைக்குப் பக்தி அணிகலனாகச் சூட்டினார்.

4. இராமானுஜர் இவ்வூருக்கு எழுந்தருளினார். இராமானுஜர் இந்த ஊருக்கு வெகுதொலைவில் வரும்போதே தாமிரபரணி நதிக்கரையில் இத்தலம் காட்சியளிக்க மிகவும் உணர்ச்சிவசப்பட்டு,

இதுவோ பரமபதத்து எல்லை இதுவேதான்
வேதம் பகர்ந்திட்ட மெய்பொருளின் உட்பொருளை
ஓதும் சடகோபன் ஊர்"

என்று திருவாய் மலர்ந்தருளினார். இராமானுஜர் ஆழ்வார் திருநகரியைப் பரமபதத்து எல்லை என்கிறார். இது பரமபதத்து எல்லையாகின்றது. ஸ்ரீரங்கம் பூலோக வைகுண்டமாகிறது.

5. இங்கு ஆழ்வார் சன்னதியும், ஆதிப்பிரான் சன்னதியும் தனித்தனியே உள்ளது. பெருமாள் சன்னதியிலிருந்து சுமார் 60 அடி தூரம் தள்ளி ஆழ்வார் சன்னதி உள்ளது. பெருமாள் விமானத்தையும் விட ஆழ்வார் சன்னதி விமானம் சற்று பெரியது.

இங்கு ஆதிநாதரைவிட நம்மாழ்வாருக்குத்தான் ஒரு படி ஏற்றம். ஊரின் பெயரையே மாற்றிவிட்ட பெருமை அவருக்கு உண்டல்லவா? ஆழ்வார் தங்கித் தவம் செய்த புளியமரம் 7 கிளைகளோடு உள்ளது. ஆழ்வார் கோவிலைச் சூழ இருந்த பகுதிக்கு ஸ்ரீ பராங்குச சதுர்வேதி மங்கலம் என்பதே பெயர். சுமார் 700 வருடங்களுக்கு முன்பு வரை இப்பெயரே பிரசித்தமாயிருந்தது.

6. இங்குள்ள நம்மாழ்வார் விக்ரஹம் எந்தவிதமான உலோகத்தாலும் செய்யப்பட்டதன்று. தாமிரபரணி தண்ணீரைக் காய்ச்சி அதில் ஆழ்வார் தமது சக்தியைப் பிரயோகித்துள்ளார். எனவே பார்ப்பதற்கே பேரதிசயமாகத் தோன்றும் காட்சி இதுவாகும்.

7. இந்தக் கோவிலில் மிகவும் அருமையான வேலைப் பாடமைந்த கல்நாதஸ்வரம் ஒன்றுள்ளது. இது கருங்கல்லில் குடைந்த அதிசய இசைக் கருவி யானாலும், மரத்தால் செய்யப்பட்டது போலத்தான் தோன்றுகிறது. இது நீளம் 1 அடி மேல்ப்பாகம் ¼ அங்குலம். அடிப்பாகம் 1 அங்குலம் குறுக்கள வுடையது. இதனடிப்பாகம் பித்தளைப் பூணால் செய்யப்பட்டுள்ளது. இது இந்தக் கோவிலில் பரதநாட்டியம் நடைபெறும் பொழுது வாசிப்பதற்குப் பயன்பட்டதாகத் தெரிகிறது. இது சுமார் 350 வருடத்திற்கு முன்னால் கிருஷ்ணப்ப நாயக்கர் மன்னர் காலத்தில் கொடுக்கப்பட்டது. இதற்கு மோகன வீணை என்று ஒரு பெயரும் உண்டு.

8. இங்கு எழுந்தருளியுள்ள பெருமான் சுயம்பு பெரிய திருமேனியுடைய இந்த மூலவரின் பாதங்கள் பூமிக்குள் இருப்பதாக ஐதீகம்.

# 27. ஸ்ரீவில்லிபுத்தூர்

இத்தலம் காமராஜர் மாவட்டத்தின் மிக முக்கிய நகரங்களில் ஒன்றாகவும், "கோதாதேவி அவதார ஸ்தலம்" என்று வட இந்தியாவில் புகழ் பெற்றதுமான இந்நகரம் இயற்கை எழில் கொஞ்சும் அமைதியான சூழலில் திகழ்கிறது. சிவகாசியிலிருந்து (டவுன்பஸ்) நகரப் பேருந்தில் செல்லலாம். மதுரையில் இருந்து இராஜபாளையம், தென்காசி, குற்றாலம் வழித்தடத்தில் செல்லும் எல்லாப் பேருந்துகளும் ஸ்ரீவில்லிபுத்தூர் வழியாகவே செல்லும்.

சிறப்புகள்

1. பாண்டியநாட்டு 18 ஸ்தலங்களில் இரண்டு ஆழ்வார்கள் தந்தையும், மகளுமாய் அவதரித்தது, இந்தத் திவ்ய தேசத்தில் மட்டும்தான்.

2. எம்பெருமானின் பல்வேறு அம்சங்கள் 12 ஆழ்வார்களாய் அவதாரமெடுத்த காலையில், பிராட்டியே ஆழ்வாராக அவதரித்த பேறுபெற்ற ஸ்தலம்.

3. தமிழ்நாடு அரசு முத்திரையில் இடம் பெற்றிருப்பது இக்கோவிலின் இராஜகோபுரமாகும்.

4. ஆண்டாள் அவதரித்த இடத்தில் துளசிச் செடியும், நந்தவனமும் இன்றும் உள்ளன.

5. தந்தைவழிப் பிள்ளை என்பது போல பெரியாழ்வாரும் ஆண்டாள் தேவியும் கிருஷ்ணாவதாரத்தில் மூழ்கிப் பேரானந்தம் அடைந்த இடம். பெரியாழ்வார்

கண்ணனைக் குழந்தையாக வரித்து பூச்சூட்டி, நீராட்டி, முலையூட்டி, கொஞ்சிக் குலாவும் தீந்தமிழ் பாக்களைத் தெய்வீகச் சுவை ததும்ப வழங்கினார். ஆண்டாள் தேவியோ கண்ணனை, காதலனாக அவனுக்கு மையல்பட்டு நிற்கும் மங்கையாக நின்று மயங்கும் பாக்களை அள்ளித் தெளித்து இறுதியில் அவரோடு இரண்டறக் கலந்தார்.

6. பாண்டிய நாட்டோடும், வைணவ சம்பிரதாய மேன்மையோடும் தொடர்பு கொண்ட ஸ்தலம்.

7. பெருமாளுடன் கருடாழ்வார் எழுந்தருளியிருப்பது இங்கு ஒரு சிறப்பம்சமாகும்.

8. ஸ்ரீரங்கத்தில் இருப்பதுபோல் அரையர் சேவையும் இங்குண்டு. சுதாப முனிவர் வராஹ க்ஷேத்திரத்திற்கு வந்து அழகர் மலையானை நினைத்துத் தியானஞ் செய்ய அங்கே எழுந்தருளிய திருமாலிருஞ்சோலை சுதபா முனிவரின் வேண்டுகோளுக்கிணங்கி அங்கேயே இருந்து பக்தர்களின் பாவம் போக்க நித்ய வாசம் செய்து வருகிறார். இத்தலம் காட்டழகர் கோவில் என்றும், காட்டழகர் சுந்தரராஜப் பெருமாள் கோவில் என்றும் அழைக்கப்படுகிறது. இந்தக் கோவிலின் முன்புறமுள்ள நூபுரக் கங்கையில் எப்போதும் தண்ணீர் வந்து கொண்டே இருக்கும். கடுமையான பஞ்சக்காலத்திலும் இங்கு தண்ணீர் வரும். இந்தத் தண்ணீர் எங்கிருந்து வருகிறது என்பது தான் மிகவும் ஆச்சர்யமான விஷயமாகும். சுமார் 50 அடி அகலத்தில் கற்களால் தொட்டி கட்டி வைத்துள்ளார்கள். இங்கு பெருமாள் பூதேவி, ஸ்ரீதேவி சமேதரராய்க் காட்சி தருகிறார்.

9. பெரியாழ்வாரின் வம்சத்தார் இன்றும் இவ்வூரில் வாழ்கின்றனர். மார்கழி. பகற்பத்து முதற்நாளன்று ஆண்டாள் ரங்கமன்னார் துணையுடன் சந்நதி தெருவில் எழுந்தருளும்போது பெரியாழ்வாரின் வம்சத்தில் வந்த வேதப்பிரான் பட்டர்கள் அவர்களை எதிர்கொண்டழைக்கிறார்கள். தங்கள் வீட்டு வாசலில் அவர்களை நிறுத்தி பிறந்த வீட்டு உபசாரங்களையும் செய்கிறார்கள். வாசலிலும், திண்ணையிலும் காய்கறி களையும், கனிவர்க்கங்களையும் நிரப்பி பாலும் பருப்பும் (இவ்விதம் காய்கறிகளைப் பரப்பி வைத்து பெண் வீட்டுச் சீதனமாக வழங்குவதை பச்சை பரத்தி என்றும், பொரி கடலையுடன் சர்க்கரைப்பால் கலந்து கொடுப்பதை மணிபருப்பு என்றும் வழங்குவர்) நிவேதனம் செய்து தம் குடும்பத்து பெண்ணான ஆண்டாளையும், மாப்பிள்ளை அரங்கனையும் அன்போடு உபசரிக்கிறார்கள்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாள் அவதார தினமான ஆடி மாதம் பூர நட்சத்திரத்தன்று நடைபெறும் திருவாடிப்பூரத் திருவிழாவும், ரத உற்சவமும் மிகப் பிரசித்தி பெற்றதாகும். அப்போது இங்கு நடைபெறும் 5 கருட சேவை வேறெங்கும் இல்லாததாகும். 5 கருட சேவையில் பங்குபெறும் எம்பெருமான்கள்:

1. திருவண்ணாமலை (ஸ்ரீவில்லிப்புத்தூருக்கு மருங்கமைந்த வெங்கிடாசலபதி பெருமாள்)
2. திருத்தங்காலப்பன், திருத்தங்கல் பெருமாள்
3. வடபத்ரசாயி
4. ரெங்கமன்னார்
5. காட்டழகர் சுந்தரராஜன்

இந்நிகழ்ச்சி இன்றும் நடைபெறக்கூடிய தெய்வீகம் கமழும் இனிய நிகழ்ச்சியாகும்.

# 28. திருக்கூடல் என்னும் மதுரை

.ல் என்னும் திவ்யதேசம், நான்மாடக்கூடல் என்றும், மூதூர் என்றும், தண்டமிழ் இலக்கியங்கள் போற்றும் நம் மதுரை மாநகரமேயாகும். இத்திவ்ய தேசத்தில் விளைந்த பெரியாழ்வார் அருளிய திருப்பல்லாண்டுதான் எல்லாத் தலங்களிலும் இறைவனுக்குத் திருப்பல்லாண்டாக முதன் முதலில் பாடுபவதாக அமைந்துவிட்டது..

சிறப்புகள்

1. முன்னொரு யுகத்தில் சத்யவரதன் என்னும் பாண்டியன் அந்தி வேளையில் ஜல தர்ப்பணம் செய்கையில் அவன் அஞ்சலி செய்யும் நீரில் மீனுருவமாக (மச்சாவதாரமாய்) வந்த திருமால் அவனுக்கு அருமறைப்பொருளை உபதேசித்தார் என்று ஸ்ரீமத் பாகவதம் கூறுகிறது. எனவே தான் பாண்டிய மன்னர்கள் திருமாலிடம் பெரும் பக்தி பூண்டது மட்டுமன்றி, தமது கொடிகளிலும் மீன் உருவத்தையே தங்கள் சின்னமாய்ப் பொறிக்கலாயினர்.

2. துவரைக் கோமான் என்ற பெயரில் கூடலழகரே சங்கப்புலவராக வீற்றிருந்தார் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். கூடல் அழகர் என்ற இச்சொல்லைத்தான் "வ்யூக சுந்தரராஜன்" என்று வடநூலார் மொழியாக்கஞ் செய்து கொண்டனர்.

3. திருமங்கையாழ்வாராலும் திருமழிசை யாழ்வாராலும் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலம். பெரியாழ்வார் இம்மதுரையில் பல்லாண்டு பாடியதால் திருப் பல்லாண்டால் இப்பெருமானையும் மங்களாசாசனம் செய்தாரென்பர்.

4. இராமானுஜரால் இத்தலம் பெரிதும் உவப்பாகப் பேசப்பட்டுள்ளது. பல்லாண்டு பாடப்பட்ட ஸ்தலமாத லால் இதனைப் பரமபதத்திற்கு ஈடாக அவர் கருதினார்.

5. ஒரு சமயம் பூமியெங்கும் பெரும் மழை பொழிய மழை நிற்பதற்கான அறிகுறிகள் யாதும் தென்படாத நிலையில் பக்தர்கள் மழை நிற்க வேண்டுமென்று இப்பெருமானை வேண்ட, அவர்களின் வேண்டுகோளை ஏற்ற பகவான் நான்கு மேகங்களை ஏவ, அவை மாடங்கள் போல் ஒன்று கூடி மழையைத் தடுத்தமையால் இந்நகருக்கு "நான் மாடக் கூடல்" என்று பெயருண்டாயிற்று என்பர். சிற்பக் கலைக்கும் எடுத்துக்காட்டாக இயங்கும் அஷ்டாங்க விமானங் கொண்ட இத்தலம் மூன்று தலங்களும் 5 சிகரங்களும் கொண்டு (அஷ்ட அங்கம்) மிக்க எழிலுடன் தோன்றுகிறது. அஷ்டாங்க விமானத்தின் நிழல் தரையில் விழுவதில்லை. இவ்விமானத்தை 45 நாட்கள் தொடர்ந்து தினமும் 11 முறை சுற்றினால் எண்ணிய காரியம் கைகூடும் என்பது இங்கு அனுபவ உண்மையாகும்.

6. வைகானஸ ஆகமம் என்ற ஆராதனைக் கிரம முறைக்கு உட்பட்டது இத்தலம்.

7. இங்கிருக்கும் ஆண்டாள் திருச்சன்னதி மிகவும் சக்தி வாய்ந்ததாகும். தம் தகப்பனாரால் பல்லாண்டு பாடப் பெற்ற தலமாதலால் தனது தனிப் பெருமானை மகள் நிலைநாட்டிக் கொள்வதில் தடை என்ன இருக்க முடியும்.

8. இந்த மதுரையில் ஒரு காலத்தில் வைணவம் தழைத்தோங்கியிருந்தது. இங்கு கருடாழ்வார்க்கும், பலராமனுக்கும் கோவில்கள் இருந்ததைச் சிலப்பதிகாரம் செப்புகிறது.

# 29. திருமாலிருஞ்சோலையென்னும் அழகர்மலை

இத்தலம் மதுரைக்கு வடக்கே 12 மைல் தொலைவில் எழிலார்ந்த மலையடிவாரத்தில் அமைந்துள்ளது. சுந்தர ராஜன் கள்ளழகர் என்னும் திருநாமம். இங்கு உற்சவர் மிகவும் பேரழகு வாய்ந்தவர். இந்த உற்சவர் அபரஞ்சியால் செய்யப்பட்டவர். இந்தியாவிலேயே இங்கும் திருவனந்த புரத்திலும் மட்டுமே அபரஞ்சியால் செய்யப்பட்ட உற்சவர் கள் உள்ளனர். சோலைமலைக்கரசர் என்றே திவ்ய பிரபந்தம் இந்த உற்சவ மூர்த்தியை வர்ணிக்கிறது. மூலவரை விட உற்சவர் பெரும் புகழ் பெற்ற தலங்களுள் இதுவும் ஒன்று. இங்கு உற்சவரும் பஞ்சாயுதங்களுடன் திகழ்கிறார்.

*சிறப்புகள்*

1. கிழக்கு மேற்காக 10 மைல் தூரமும், 1000 அடி உயரமும் உள்ள இம்மலை எண்ணற்ற பூம்பொழில்களையும், பல சுனைகளையும், அரிய மூலிகைகளையும் நிறைந்த குளிர்ச்சியினையும் கொண்டு திகழ்கிறது. இந்த மலையில் ஆயிரம் தலைகள் உடைய ஆதிசேஷன் வாழ்ந்து வருவதாக ஐதீஹம்.

2. பெரியாழ்வார், ஸ்ரீ ஆண்டாள், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பேயாழ்வார், பூதத்தாழ்வார் ஆகிய 6 ஆழ்வார்களால் 123 பாக்களால் பாமாலை சூட்டப்பட்ட மாண்புடைத்து இத்தலம்.

3. திருப்புகழ் இத்தலத்தைப்பற்றிக் குறிப்பிடுகிறது. சங்க இலக்கியங்களிலும் இம்மலை பேசப்படு

கிறது. பிள்ளை பெருமாள் ஐயங்கார் என்னும் அழகிய மணவாளதாசர் இந்த அழகரைப் பற்றி அழகர் அந்தாதி பாடியுள்ளார். "கவிக் குஞ்ச பாரதி" சோலை மலைக் குறவஞ்சி என்னும் நூலின் மலையழகையும், அங்குள்ள கோவில்களையும், இயற்கைக் காட்சிகளையும் வருணிக்கிறார். கோவில் ஒழுகு என்னும் நூலும் இத்தலம்பற்றிய குறிப்புகளைக் குறிக்கின்றது.

4. சுமார் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பாக "இடைக்காடர்" என்பவரால் இந்த அழகர்மலையில் மருத்துவ மன்றம் ஏற்படுத்தப்பட்டு சித்த வைத்ய சாஸ்திரங்கள் வளர்க்கப்பட்டுள்ளது. இங்குள்ள மரங்கள், உயர்ந்த மூலிகைகள் பற்றி சித்த வைத்ய நூல்கள் அரிய குறிப்புகளைத் தருகிறது.

5. இந்த அழகர் மலையில் உள்ள அழகிய கிணற்றில் தான் முகம்மதியர் படையெடுப்பின்போது ரங்க நாதனை இருமுறைக் கொணர்ந்து பத்திரப்படுத்தி வைத்தனர் என்று கோவில் வரலாறு கூறுகிறது.

6. இங்குள்ள 18ஆம்படி கருப்பண்ணசாமி மிகவும் பிரசித்தி. மலையாளத்தரசன் ஒருவன் இவ்வழகரை அங்கு கொண்டு செல்ல வேண்டுமென்று திருடிச் செல்ல முயன்றான். அது முடியாமல் போகவே 18 பேர்களை (மந்திர தந்திரங்களில் தேர்ச்சி பெற்ற பணிக்கர்கள்) இங்கு அனுப்பி எப்படியாவது அழகரைக் கொண்டு செல்ல வேண்டுமென்று திட்ட மிட்டான். இதையறிந்த இங்கிருந்த ஒரு சாஸ்திரி தமக்கு வேண்டியவர்களை அழைத்துக் கொண்டு வந்து பதினெட்டுப் பேரையும் பிடித்துப் படிக் கொருவராக புதைத்து வைத்தனர்.

7. இந்தப் பதினெட்டுப் பேரின் மந்திர சக்திக்குக் கட்டுப்பட்டு அவர்களுக்குத் துணையாக வந்த காவல் தெய்வம் ஒன்று இப்பெருமானின் பேரழகில் மயங்கி இவரைக் கொண்டு போக முடியாவிட்டா லும் பரவாயில்லை, இவருக்குக் காவலாக இருப் போம் என்றெண்ணி, அங்கிருந்த அர்ச்சகரையும், பிறரையும் நோக்கித் தான் இந்தப் பெருமாளின் வாசலையும், இந்தப் பதினெட்டுப் படிகளையும் காப்பதாக உறுதி கூறி அதற்கு அர்த்தஜாம பூஜாப் பிரசாதங்களைத் தமக்கு அளிக்கவேண்டுமென்று கேட்க அவர்களும் அதற்கு ஒப்புக் கொண்டனர். அந்தக் காவல் தெய்வமே பதினெட்டாம்படி கருப்பண்ண சாமியாவான். இவ்விதம் கருப்பண்ண சாமி கள்ளழகருக்கு காவல் கடன் பூண்டான்.

8. இன்றும் பொய், சூது, குற்றம், களவு போன்றன பற்றி நடக்கும் பஞ்சாயத்துக்கள் இவன் முன்னிலையில் பேசப்படுகிறது.. நிதர்சனமின்றி தண்டிப்பவன் கருப்பண்ணசாமி என்பது மக்கள் நம்பிக்கை.

9. சித்தர்களில் ஒருவராகிய போகர் என்னும் முனிவர் தாம் இயற்றிய ஜெனன சாகரம் என்னும் நூலில் சிலம்பு குறிக்கும் சிலம்பாற்றுடன் திரவியங்கள் கிடைப்பதையும் 18ஆம் படி கருப்பண்ணனையும் குறிப்பிட்டுள்ளார்.

# 30. திருக்கோட்டியூர்

இத்திருப்பதி பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டத்தில் உள்ளது.

## சிறப்புகள்

1. மூன்று தலங்களுடன் கூடிய அஷ்டாங்க விமானம் இத்திருத்தலத்தின் தனிச் சிறப்பாகும். இங்கும் திருக்கூடல் என்னும் மதுரையிலும் அஷ்டாங்க விமானம் அமைந்துள்ளது. பாற்கடலில் இருந்து எழுந்து வந்த காரணத்தால் க்ஷீராப்தி நாதனாக முதல் தளத்திலும், அதன் பிறகு இரண்டாவது தளத்தில் நின்ற திருக்கோலத்திலும், மூன்றாவது தளத்தில் அமர்ந்த திருக்கோலத்திலும், பெருமாள் எழுந்தருளி யுள்ளார்.

2. மற்ற ஸ்தலங்களில் உள்ளதைப்போன்று பஞ்ச லோகங்களால் அமையாது, தூய வெள்ளியில் உற்சவருக்கு விக்ரகம் இருப்பது இன்னொரு சிறப்பாகும். (இச்சிலை இந்திரன் கொடுத்ததாக ஐதீகம்) வெள்ளியான் கரியான் மணி நிற வண்ணன் என்று திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்டது.

3. அஷ்டாங்க விமானத்தின் மூன்றாவது தளத்தில் இருந்து கொண்டுதான் இராமானுஜர் திருமந்திர இரகசிய அர்த்தத்தை வெளியிட்டார். இந்த மூன்றாவது மாடியில் கோபுரத்தின் உச்சியில் ஊரைப் பார்த்தவண்ணம் இராமானுஜருக்குச் சிலை வைக்கப் பட்டுள்ளது.

திருக்கோட்டியூர் நம்பியின் அவதார ஸ்தலமான இங்கு அவருக்குச் சிலை வைக்கப்பட்டுள்ளது. திருக்கோட்டியூர் நம்பியின் வம்சாவழியினர் இன்னமும் இவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

பத்ரிகாச்ரமத்தைப்போல இத்தலம் பெருமை வாய்ந்த தெனவும், அதனால் இதனைத் தென் பத்ரி என்றும் கூறுவர். "நைமிசாரண்யத்தில் செய்த தவப் பயனும், கங்கை கரையில் நேர்ந்த மரண பலமும் (ஆயுள் விருத்தி) குருச்சேத்திரத்தில் செய்த தனப் பிரயோஜனமும்" ஆகிய இம்மூன்றும் திருக்கோட்டி யூரைச் சேவிப்பதால் கிடைக்குமென்று பிரம்மாண்ட புராணத்தின் 47வது ஸ்லோகம் கூறுகிறது.

6. உரக மெல்லணையான் என்று பெரியாழ்வார் மூலவரையும், திருமாமகட்கினியான் என்று உற்சவரையும் மங்களாசாசனம் செய்கிறார். திருமங்கை யாழ்வார், திருப்பிரிதி என்னும் திவ்யதேசத்தில் தொடங்கிய பதிகம் மூலமான அர்ச்சாவதார மங்களாசாசனத்தைத் திருக்கோட்டியூரில் நிறைவு செய்கிறார்.

# 31. திருஅயோத்தி

"சுற்ற மெல்லாம் பின் தொடர
தொல்கானம் அடைந்தவனே
அற்றவர்கட் கருமருந்தே
அயோத்தி நகர்க் கதிபதியே
கற்றவர்கள் தாம் வாழும்
கணபுரத் தென் கருமணியே
சிற்றவை தன் சொல் கொண்ட
சீராமா தாலேலோ" (724)
பெருமாள் திருமொழி 8-6

இத்திருத்தலம் வட இந்தியாவில் உத்திரபிரதேச மாநிலத்தில் அமைந்துள்ளது. எங்கு நோக்கினும் இராம, சீத்தா பிராட்டியின் கோவில்களும், இராம பஜனையும், இராம பக்தர்களுமாகத் திகழ ஒரே இராம மயமாகத் திகழ்கிறது இந்த இராமஜென்ம பூமி.

சிறப்புகள்

1. முக்தி தரும் 7 ஸ்தலங்களுள் ஒன்றான இந்த அயோத்தியில் திரேதாயுகத்தில் உதித்த இராம நாமம் இந்தியா முழுவதும், ஏன் உலகம் முழுவதும் எந்நேரமும் இடைவிடாது ஒலித்துக் கொண்டிருக்கிறது. இராம நாமம் ஜென்ம ரட்சக மந்திரம் என்றார் போல் இராம நாமத்தை உலகிற்குப் பயந்த சிறப்பே அயோத்தியின் தனிச் சிறப்பும், தலையாய சிறப்புமாகும்.

2. இட்சுவாகு வம்சத்தார்கள் தவமிருந்து பிரம்மனிடம் பெற்ற பள்ளிகொண்டநாதனை முதன்முதலில்

பூவுலகில் வைத்துத் தலைமுறை தலைமுறையாக வழிபட்டது இங்குதான். பிற்காலத்தில்தான் அந்த இட்சுவாகு குலதனம் விபீடணன் மூலமாகத் திரு வரங்கத்தில் அரங்கநாதனாக பள்ளி கொண்டது. பரமபதத்தின் ஒரு பகுதி பூலோகத்திற்கு வந்ததும் இந்த அயோத்திக்குத்தான். திருப்பாற்கடலில் பள்ளி கொண்டவன் பூவுலகிற்கு வந்து முதன் முதலாக வழிபாடுகளையும் பூஜைகளையும் ஏற்றுக் கொண்டது இங்குதான். திரேதாயுகத்தில் ஸ்ரீமந் நாராயணனே ஸ்ரீராமனாக இங்கு அவதரித்தார்.

3. சூரிய வம்சத்து மன்னர்களால் ஆளப்பட்டு 7 புண்ணிய மோட்சபுரிகளில் முதன்மை பெற்றதும், சரித்திரக் கோசல இராஜ்யத்தின் தலைநகரமாக விளங்கியதும், மனு என்னும் மன்னரால் கட்டப் பட்டதுமான இந்த அயோத்தியைப் புகழ் பெற்ற சூரிய வம்சத்து மன்னர்கள் ஆட்சி புரிந்தனர்.

4. பெரியாழ்வார், குலசேகராழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகிய ஐந்து ஆழ்வார்களால் 13 பாக்களில் மங்களாசாசனம் செய்யப்பட்ட ஸ்தலமாகும். குலசேகராழ்வார் இராமாயணம் முழுவதையும் 10 பாக்களில் பாடி இராமாயண காவியத்தையும் மங்களாசாசனம் செய்துவிட்டார்.

5. இராம சரித்திரத்தின் பல்வேறு நிகழ்ச்சிகள் நடந்த இடங்களை இன்றும் அயோத்தியில் காணலாம். சீதாதேவி தினமும் துளசி பூஜை செய்த துளசி மாடம், இராமபிரானுக்கும் அவரது தம்பிகட்கும் திருமணம் நடந்த இடம், இராமன் பட்டாபிசேகம் செய்த இடம், சீதையின் தகப்பனார் ஜனகர்

தங்கியிருந்த இடம், அஸ்வமேத யாகம் நடத்தப்பட்ட இடம் சீதையைப் பிரிந்த பிறகு ராமர் ஜடாமுடி தரித்த இடம், போன்ற பல்வேறு நிகழ்ச்சிகள் நடந்த இடங்களைக் காணலாம்.

6. அயோத்தி என்றதும் சரயு நதிதான் நினைவுக்கு வரும். இந்நதி இமயத்திற்குள் உற்பத்தியாகி அயோத்தியில் நுழைகிறது. அயோத்திக்குள் நுழையுமுன் இதனுடன் காளி என்னும் நதி கலக்கிறது. ஸ்ரீராம அவதாரத்தின் காலகட்டம் முடிவுற்றதை எமதர்மன் ஒரு தபசியின் ரூபத்தில் வந்து இராமனுக்கு நினைவுபடுத்த இராமன் இந்தச் சரயு நதிக்குச் சென்று தமது சரீரத்தைச் சரயுநதியில் கரைத்துவிட்டுப் பரம பதம் சென்றார். இந்த இடம் குப்தகாட் என்று தற்போது அழைக்கப்படுகிறது.

# 32. திருநைமிசாரண்யம்

"வம்புலாங் கூந்தல் மனைவியைத் துறந்து
பிறர்பொருள் தாரமிவற்றை
நம்பினாரிறந்தால் நமன்றமர் பற்றி
எற்றிவைத்து எரியெழுகின்ற
செம்பினாலியன்ற பாவையைப் பாவீ
தழுவென மொழிவதற்கஞ்சி
நம்பனே வந்துன் திருவடியடைந்தேன்
நைமிசா ரண்யத்து ளெந்தாய்!" (1001)
பெரிய திருமொழி 1-6-4

இத்திருத்தலம் மேற்கு வங்க மாநிலத்தில் உள்ளது. ஒரு சமயம் தவ வலிமையில் சிறந்த முனிவர்கள் எல்லாம் ஒன்று கூடி 12 ஆண்டுகளில் செய்யக் கூடிய சத்திர வேள்வியைச் செய்ய விரும்பினர். அதற்குகந்த இடத்தைத் தெரிவு செய்து தருமாறு எல்லோரும் பிரம்மனிடம் வேண்டினர். பிரம்மன் ஒரு தருப்பைப் புல்லை எடுத்து அதை ஒரு வளையமாக வளைத்துக் கீழே உருட்டி அது எங்கு விழுகிறதோ அதுவே தவம் செய்ய சிறந்த இடம் என்று தெரிவித்தான். இந்தப் பாரத தேசத்தில் அலகநந்தா நதி தீரத்தில் உள்ள இவ்விடத்தில் வந்து விழுந்தது. இவ்விடமே தமது சத்திர வேள்வியைச் செய்ய உகந்தது என்று முனிவர்கள் கண்டு தமது வேள்வியைத் தொடங்கினர். நேமி என்ற சொல்லுக்குச் சக்கரம் அல்லது சக்கரவளையம் என்பது பொருள். நேமி சார்ந்த ஆரண்யம் ஆனதால் நேமிச ஆரண்யமாகி நைமிசாரண்யம் ஆயிற்று.

## சிறப்புகள்

1. இயற்கை வழிபாடு முறைப்படி எம்பெருமானை ஆரண்ய ரூபியாக எண்ணி வழிபடும் முறை 108 திவ்ய தேசங்களில் இங்கு மட்டும்தான் உண்டு.

2. இங்குள்ள சக்ர தீர்த்தம் சகல பாவங்களையும் போக்க வல்லது. எம்பெருமானுக்கும் சக்ர நாராயணன் என்றொரு திருநாமம் உண்டு. இந்த சக்ர நதிக்கரையில் சக்கரத்தாழ்வார் இராம, இலட்சுமண, சீதை முதலியோருக்கும் சன்னதி கள் உண்டு. விநோதமான முறையில் இங்கு விநாயகருக்கும் சன்னதி உண்டு. இதுவும் வேறெந்த திவ்ய தேசத்திலும் இல்லாதது..

3. இங்கிருந்து கோமுகி நதிக்குப் போகும் வழியில் வியாஸ கட்டி என்ற இடத்தில் வேத வியாசருக்கும் ஆலயம் உள்ளது. வியாச முனிவரும், சுகப்பிரும்ம முனிவரும் இங்கிருந்து கொண்டுதான் பாரதம், பாகவதம் போன்றவற்றை உருவாக்கினார்கள். இதனால் வேறெந்த ஸ்தலத் திற்கும் இல்லாத பெருமை (வேத நூல்களை உருவாக்கிய முனிவர்கள் வாஸம் செய்தது) இத்தலத்திற்குண்டாகிறது.

4. இதே ஊரில் மற்றொரு புறத்தில் உள்ள குன்றின் மீது அமைந்துள்ள ஹனுமான் கட்டி என்றழைக்கப்படும் ஆலயத்தில் உள்ள பிரும் மாண்ட அனுமார், இராம இலட்சுமணர்களைத் தமது தோளில் தாங்கி எழுந்தருளியுள்ள காட்சி

# 33. திருக்கண்டமென்னும் கடிநகர்

அழகான பொழில் சூழ்ந்த கங்கைக் கரைமேல் அமைந்துள்ள கண்டமென்னும் கடிநகரில் எழுந்தருளி யுள்ளான் என்று பெரியாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பட்ட இத்தலம் ரிஷிகேசத்திலிருந்து பத்ரிநாத் செல்லும் வழியில் 45வது மைலில் கடல் மட்டத்திலிருந்து 1700 அடி உயரத்தில் அமைந்துள்ளது. ரிஷிகேசத்தில் இருந்து நேராக பத்ரிநாத் சென்றுவிட்டும் திரும்பும் வழியிலும் சேவித்து விட்டு வரலாம். பத்ரியிலிருந்து சுமார் 60 மைல் தூரமாகும்.

இவ்விடத்திற்குத் தேவப்ரயாகை என்றும் பெயர். ப்ர-சிறந்த, யாகம்-வேள்வி. மிகச் சிறந்த யாகத்தைப் பிரம்மன் இங்கு துவங்கியதால் இவ்விடத்திற்கு ப்ரயாகை என்னும் பெயராயிற்று. ஸ்ரீமந் நாராயணனையே தேவனாகக் கருதி இவ்விடத்தில் யாகம் செய்யப்பட்டதால் தேவ ப்ரயாகை என்றாயிற்று என்றும் சொல்வர். தேவ லோகத்திற்குச் சமானமான சக்தி இவ்விடத்தில் பரவி யிருப்பதால் தேவப்ரயாகை ஆயிற்றென்றும் சொல்வர்.

சிவனது சிரசிலிருந்து பெருகி வரும் பாகீரதியும், விஷ்ணுவின் பாதத்திலிருந்து பெருகி வரும் அலக்நந்தாவும் சங்கமம் ஆகும் இடத்தில் புண்ணியதீர்த்த நீராடல் செய்தல் நன்று. இங்கு பெரியாழ்வார் மங்களாசாசனம் செய்திருக் கிறார் என்றும், இதைக் "கண்டம் எனும் கடிநகர்" என்று அவர் குறிப்பிட்டுள்ளார். இவர் இங்கு திவ்ய தேசங் களைத் தரிசிக்க வந்தபோது தேவப் பிரயாகையின் இயற்கை வனப்பில் பறிகொடுத்துப் பத்துப் பாசுரங்களை பாமாலை யாகச் சூடியுள்ளார்.

ஒவ்வொரு பாசுரத்திலும் முதலிரண்டு அடிகளைப் புருஷோத்தமன் கீர்த்தி பற்றியும், பின்னிரண்டு அடிகளிலே கங்கையின் மகிமையும் புகழ்கிறார். இரண்டாவது பாசுரத்தில்,

"நலம் திகழ் சடையான்
முடிகொன்றை மலரும்
நாராயணன் பாதத்துழாயும்
கலந்து இழி புனலால்
புகர்படு கங்கை"

அங்கு கலக்கிறதாம். அந்தப் [illegible] பிரவாகம் எழில் மிகு கங்கையாகப் பாய்கிறதாம். பாகீரதி-அலகநந்தா நதிகளின் சங்கமத்தின் தத்துவத்தைக் கவிநயத்துடன் அனுபவிக்கிறார்.

இங்கே தூய்மையான மனத்துடன் யாகம் செய்பவர்கள் நற்கதி (மோட்சம்) அடைகின்றனர் என்றும், இங்கே உயிர் விடுபவர்கள் மோட்சம் பெறுகின்றனர் என்றும் ரிக் வேதம் பகர்கிறது.

தேவேந்திரன் ப்ரயாகையைப் பாதுகாக்கிறான். இங்குள்ள ஆலமரம் தான் ப்ரளய காலத்தில் அழியாமல் இருக்குமென்றும் அதனிலையில்தான் பெருமாள் குழந்தையாகப் பள்ளிகொள்வார் என்றும் மாத்ஸய புராணம் கூறுகிறது.

இத்தலத்தைச் சேவிப்பதும், ப்ரயாகையில் நீராடுவதும் ஒவ்வொரு இந்துவும் செய்ய வேண்டிய கடமையாகும்.

## சிறப்புகள்

1. மகாபுண்ணிய தீர்த்தமான இந்த ப்ரயாகையில் பல தீர்த்தங்களும், பல நதிகளும் சங்கமிக்கின்றன. கங்கையும், யமுனையும் கலப்பதோடு அளகநந்தாவும், பாகீரதியும் இங்கு சங்கமிக்கின்றன. ப்ராயாகையில் நீராடும் போது மிக கவனத்துடன் நீராட வேண்டும். பிரம்மன், பரத்வாஜர், தசரதன் ஆகியோருடன் ஸ்ரீராம பிரானும் இங்கு தவமேற்றினார். இங்குள்ள ஆலமரம் அழிவற்றது. அதில் வேணிமாதவன் என்ற பெயரில் விஷ்ணு, ஆடலங்கேசர் என்ற பெயரில் சிவன், மற்றும் பிரம்மனும் இதில் வாசம் செய்கின்றனர். பாண்டவர்கள் போருக்குப் பின் தனது சத்ருக்களைக் கொன்ற பாவங்களைப் போக்க யாது வழி என்று மார்க்கண்டேயரிடம் கேட்க, அவர் ப்ரயாகை ஒன்றே சகல பாவங்களையும் போக்க வல்லது என்று பாண்டவர்களை இங்கு அனுப்பி வைத்ததாக மாத்ஸய புராணம் கூறுகிறது.

# 34. திருவதரியாச்சரமம் (பத்ரிநாத்)

அழகிய பூக்கள் சூழ்ந்து திகழும் பத்ரி எனப்படும் இடத்தில் எழுந்தருளியுள்ள நெடுமாலைப்பற்றி மங்கை நாட்டின் வேந்தனான கலியன் சொன்ன பாடல்களைக் கூட்டமாய்ச் சேர்ந்து ஆடிப் பாடும் தொண்டர்கள் நீள்விசும்பில் பரமபதம் எனப்படும் வைகுந்தத்தில் சென்று ஆட்சி செய்திருப்பார்கள் என்று திருமங்கையாழ்வாரால் பாடப்பட்ட இத்தலம் வடநாட்டுப் பதிகளில் மிக முக்கியமான பத்ரிகாச்ரமம் எனப்படும் பெரும் திவ்ய தேசமாகும்.

கடல மட்டத்திலிருந்து சுமார் 10,500 அடி உயரத்தில் இமயமலையில் பனிக்குன்றுகட்கு மத்தியில் பனிபடர்ந்த சூழலில் இலந்தை மரக் காடுகள் நிறைந்து விளங்கும் இடத்தில் அமைந்துள்ளது. பத்ரி என்றால் இலந்தை என்று பொருள்.

சிறப்புகள்

1. எம்பெருமான் தானாக சுயம்புவாக எழுந்தருளியிருக்கும் இடமாகவும், மோட்சத்தைத் தரத்தக்க ஸ்தலங்களில் ஒன்றாகவும் அமைந்துள்ள இத்தலம் பற்றித் தனி நூலொனறே யாக்கும் அளவிற்கு வடநாட்டுப் புராணங்களும், வடநாட்டு நூல்களும் குறிப்புக்களை வாரிவாரியிறைக்கின்றன.

2. மகாலெட்சுமிக்கு மிகவும் பிடித்தமான பத்ரி (இலந்தை) எனப்படும் மரத்தின் கீழே அமர்ந்ததால் பத்ரிகா-ஆஸ்ரமம்-பத்திரகாச்ரமம் ஆயிற்றென்பர். உபதேசம் செய்வதற்கு ஆஸ்ரமம் அவசியமன்றோ.

எம்பெருமான் திருமந்திரத்தை உபதேசிக்க இந்த இடத்தை ஓர் ஆஸ்ரமமாகத் தேர்ந்தெடுத்ததால் பத்திரகாஸ்ரமம் ஆயிற்றென்பர். இங்கு கோயிலைச் சுற்றிலும் பனிமலைகள் உள்ளன. இதற்கு எதிர்ப்புறம் அமைந்துள்ள நீலகண்ட பர்வதம் காண்பதற்குப் பேரெழில் பொலிந்ததாகும்.

3. மூலவர் பத்ரி நாராயணன், சங்கு சக்கரத்துடன் சதுர் புஜங்களுடன் கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம்.

4. எம்பெருமான் மலைமேல் எழுந்தருளியுள்ளான். கடல் நடுவே எழுந்தருளியுள்ளான். பரம பதத்தில் எழுந்தருளியுள்ளான். அந்தர்யாமியாக பக்தர்களின் உள்ளத்தில் எழுந்தருளியுள்ளான். பனிபடர்ந்த சூழலில் மட்டும் இருக்க வேண்டாமா என்ன? சீதள மானவன், க்ஷீராப்தியாக இருப்பவன், தண் என்னும் குளிர் மலர்கள் கொண்ட மாலை பூண்டவன், பனிக்கடலில் பள்ளி கோளைப் பழகவிட்டு ஓடி வந்தவன். பனிபடர்ந்த சிகரங் களுக்கு ஊடே மட்டும் இருக்க வேண்டாமா என்ன, இருக்க வேண்டுமென நினைத்ததால்தான், எம்பெருமான் எந்நேரமும் பனிகொட்டிக் கொண்டிருக்கும் இந்த இமயமலைச் சாரலில் பனிபடர்ந்த சூழலில் அமர்ந்தான் போலும்.

5. 108 திவ்ய தேசங்களிலேயே இங்குதான் பகவான் ஆச்சாரியான் ரூபத்தில் எழுந்தருளிய ஸ்தலமாகும். மற்றெல்லா ஸ்தலங்களிலும் அவனருள் காட்டி அவனது பலத்தைக் காட்டி நின்றாலும் இங்கு மட்டும்தான் ஆச்சார்ய . திருக்கோலத்தில் திகழ்கின்றான். பக்தர்களுக்காகவும், இவ்வுலகிற்

காகவும், பிராட்டிக்காவும், பிற ஸ்தலங்களில் தன்னை வெளிகாட்டிய எம்பெருமான் திருமந்திரத்தை உபதேசம் செய்ய தன்னை ஆச்சார்யனாக வெளிப்படுத்திய ஸ்தலம் இது ஒன்றுதான். எனவேதான் இ கு தனது இடது கைகளை யோக முத்திரையாகக் கொண்டு ஒரு தபஸ்வியின் வடிவில் மரத்தடியில் பத்மாசனத்தில் எழுந்தருளியுள்ளார்.

6. இங்கு செல்வதற்கு டெல்லியிலிருந்து முதலில் ஹரித்துவார் வந்து விட வேண்டும். எப்போதும் பனி பெய்வதால் கடும் குளிரில் அமிழ்ந்திருக்கும் இப்பிரதேசத்திற்குச் செல்வதற்கு குளிர்தாங்கும் பருவம் இளமை என்பதால் (கிளரொளியிளமை கெடுவதன் முன்னம் என்றாற்போல்) மிக இளமை வயதிலேயே இங்கு சென்று வந்துவிட வேண்டும். மிக்க இளம் வயதில் இங்கு செல்ல வேண்டும் என்பதைத் திருமங்கையாழ்வார் தமது பாசுரங்களில் குறிப்பிட்டுள்ளார். ஹரித்துவாரில் தங்குவதற்குப் பல வசதிகள் உண்டு. இங்கு தங்கி இங்குள்ள பிரம்ம குண்டம் என்னும் தீர்த்தத்தில் நீராடி 15 மைல் தொலைவில் உள்ள ரிஷிகேசம் சென்று அங்கிருந்து சுமார் 80 மைல் தூரம் பஸ் மூலம் சென்று பத்ரியை அடையலாம். ரிஷிகேசத்திலிருந்து பத்ரி செல்லும் வழியில்தான் கண்டமென்னும் கடிநகர் உள்ளது. எனவே பத்ரியைச் சேவித்து விட்டுத் திரும்பும்போது கண்டமென்னும் கடிநகர் செல்வதே நன்று.

7. பத்ரிநாத்தானது, அலகநந்தாவும், தோலி கங்காவும் சங்கமமாகும் இடத்தில் அமைந்துள்ளது. அலகநந்தாவின் கரையில்தான் கோவில் அமைந்துள்ளது.

இந்தப் பத்ரிநாதனைக் குறித்து நாரதர் அஷ்டாச்சர மந்திரத்தால் ஜபம் செய்து மஹா விஷ்ணுவின் அருள் பெற்றார் என்னும் ஓர் வரலாறும் உண்டு.

8. பத்ரி நாராயணன் ஆலயத்திற்கு எதிரில் தப்த குண்டம் என்னும் தீர்த்தம் உள்ளது இது ஒரு வெந்நீர் ஊற்றாகும். தப்த குண்டத்தில் நீராடிவிட்டுச் சில படிகள் ஏறிச்சென்றதும் கருடாழ்வார் நமக்கு காட்சி தருகிறார். கருடாழ்வாரைத் தரிசித்துவிட்டுத் தான் பத்ரிநாராயணன் ஆலயத்திற்குச் செல்ல வேண்டும். இங்கு பத்ரி நாராயணன், கருடாழ்வார், நாரதர், நாராயணன் முதலானோர் மிக்க பேரெழில் பொங்க வீற்றிருக்கின்றனர்.

9. தரைமட்டத்திலிருந்து 50 அடி உயரத்தில் ஆலயம் இருக்கிறது. கிழக்கு பார்த்த கோபுர வாயில். தென் பிரகாரத்தில், வடக்கே பார்த்து ஸ்ரீமகாலெட்சுமியின் திருச்சன்னதி. சிறு சாளக்கிராம சுயம்பு மூர்த்தி அது. அங்கு சேஷ சாளக்கிராமமும் ஒன்று உண்டு. கருவறையினுள் ஸ்ரீபத்ரி நாராயணர் சர்வ அலங்காரத்துடன் தரிசனம் தருகிறார். வலதுபுறக் கோடியில் குபேரன் பெரிய முகத்தில் மந்தஹாசம் தவழ இருக்கிறார். இரவில் பூஜை சயனாரத்தி ஆகிறது. பகவானின் பெருமைகளைப் பாடிக் கொண்டு ராவல், ஒவ்வொரு அலங்காரமாகக் களைய, சயனாரத்தி ஆகிறது. அப்போது ஸ்ரீநாராயண மூர்த்தியின் சுயம்பு சாளக்கிராமச் சிலையை நாம் நன்றாகத் தரிசனம் செய்யலாம். இரண்டு கைகளையும் கோர்த்துக் கொண்டு, தவநிலையில் பத்மாசனத்தில் பகவான் அமர்ந்திருக்கிறார்.

10. இங்கு பெருமாளுக்கு நடைபெறும் சகல விதமான பூஜைகளும் (திருமஞ்சனம்) திருவாராதனம், சாத்து மறை மக்களுக்கு எதிரிலேயே நடைபெறுகின்றன. திரை போடுவது இல்லை. இங்கு நடைபெறும் பூஜாமுறைகளை பக்தர்கள் நேருக்கு நேர் நின்று காணலாம்.

11. இங்கு கோவிலின் வடபுறம் கங்கை கரையில் பிரம்ம கபாலம் என்னும் ஓர் இடம் உள்ளது. மேடு பள்ளங்கள் நிறைந்த ஒரு பெரிய பாறையைத்தான் பிரும்ம கபாலம் என்கிறார்கள். அதை அணைத்துக் கொண்டுதான் அலகநந்தா ஓடுகிறது. மறைந்த மூதாதையர்களுக்கும், பிரிந்து விட்ட உறவினர் களுக்கும் நினைவாஞ்சலி செலுத்துமிடம். நம் பாரதத்திலேயே பிண்டதானம் செய்து, திதி கொடுப்பதற்கு இதைவிடச் சிறந்த இடம் கிடையாது என்கிறார்கள். நாம் அறிந்தோ அறியாமலோ செய்த பாவங்கள் எல்லாம் இவ்விடத்தில் துடைக்கப்பட்டு விடுகின்றனவாம்.

12. பத்ரிநாத்துக்கு வருபவர்கள் மகா சங்கல்பம் செய்து, பிரம்ம குண்டத்தில் ஸ்தானம் செய்து விட்டு, பிரும்ம கபாலத்தில் பிண்டதானம் செய்வதைக் கிடைத்தற்கரிய வாய்ப்பாகக் கருதுகிறார்கள். பத்ரி நாராயணருக்கு நைவேத்யம் செய்யப்படும் சாதத்தை விலை கொடுத்து வாங்கித்தான், இங்கு பிண்டங்கள் வைக்க வேண்டும். பித்ருபட்சத்தில் பிண்ட தானம் செய்வது மிகவும் சிறப்பானதாகக் கருதப்படுகிறது. இங்கு பிண்டம் அளிப்பது இதர இடங்களில் அளிப்பதை விட ஆயிரம் மடங்கு பலன் உள்ளதாகக் கருதப்படுகிறது. நாம் பத்ரிக்கு வருகிறோம் என்று தெரிந்ததும், நம்

முன்னோர்களின் ஆவிகள் முன்னதாகவே அங்கு வந்து நம் வருகைக்காகவும், நாம் அளிக்கப் போகும் பிண்டங்களுக்காகவும் ஆவலுடன் காத்துக் கொண்டிருக்குமாம்.

13. இத்தலம் 6 மாதங்களுக்கு மட்டுமே பக்தர்களின் தரிசனத்திற்குத் திறந்துவிடப்படும். அதாவது குளிர்காலமான 6 மாதத்தில் விடாது பனி பெய்து இத்தலத்தையே மூடுமளவிற்கு வருவதால் குளிர்காலமான 6 மாதத்திற்கு இத்தலம் மூடப்பட்டு சித்திரை மாதம் சித்ரா பௌர்ணமியன்று மீண்டும் திறக்கப்படும். பூட்டப்பட்ட 6 மாதத்தில் தினந் தோறும் இரவில் தேவர்கள் இங்கு வந்து பாரிஜாத மலர்களால் எம்பெருமானை அர்ச்சிப்பதாகக் கூறுவர். அதாவது பனிக்காலத்தில் கோவிலை அடைத்து விட்டு 6 மாதங்கழித்து திறந்து பார்க்கும்போது முதல்நாள் இரவில் பெருமாளுக்குச் சூட்டிய மலர் மாலைகள் மறுநாள் காலையில் பார்த்தால் எந்த அளவுக்கு லேசாக வாடியிருக்கு மோ அந்த அளவிற்குத்தான் மலர்களின் வாட்டம் இருக்குமாம். அதனால்தான் மூடப்பட்ட 6 மாத காலமும் தேவர்கள் வழிபட்டுச் செல்கின்றனர் என்னும் ஐதீகம் உண்டானது.

# 35. திருச்சாளக்கிராமம்

இத்தலம், நேபாளம் காட்மண்டு பகுதியில் அமைந்துள்ள கண்டகி நதி பிராந்தியத்தில் உள்ளது. அதாவது கண்டகி நதி முழுவதுமே சாளக்கிராமப் பகுதியாகும். நேபாளத்தின் தலைநகரான காட்மண்டு நகரிலிருந்து 170 மைல் தூரத்தில் கண்டகி நதிக் கரையில் அமைந்துள்ளது. இமயத்தின் அடிவாரத்தை ஒட்டினாற் போல் ஹரிபர்வதம் என்னும் ஒரு மலை உள்ளது. இங்கு சக்கர தீர்த்தம் என்னும் பகுதியில் கண்டகி நதி உற்பத்தியாகிறது. இந்தப் பகுதிதான் சாளக்கிராமம் என்று அழைக்கப்படுகிறது. இந்த ஹரி சேத்திரத்தில் உள்ள சகல கற்களிலும், (குளிர், காற்று இவைகளில்லாமல் அமைந்துள்ள சைலகர்ப்பத்தில்) விஷ்ணுவின் சகல அம்சங் களோடு பொருந்திய சாளக்கிராம மூர்த்திகள் புண்ணிய காலங்களில் தோன்றுவதாகக் கூறப்படுகிறது. இங்குள்ள மூலவர் மூர்த்தியும் சாளக்கிராம வடிவத்தினர்தான்.

## சிறப்புகள்

1. சாளக்கிராமம் என்பது கண்டகி நதியில் உருவாகும் ஒரு வகையான அழகிய தெய்வீகம் நிறைந்த கற்களாகும். இவைகள் நத்தைக் கூடு, சங்கு போன்ற பல வடிவங்களிலும், பல வண்ணங்களிலும் கிடைக்கின்றன. மஹாவிஷ்ணு தாமாகவே தங்க மயமான ஒளியுடன் திகழும் வஜ்ரகிரீடம் என்ற பூச்சியின் வடிவம் கொண்டு சாளக்கிராமத்தைக் குடைந்து அதன் கர்ப்பத்தை அடைந்து அங்கு ரீங்காரமான சப்தத்தில் இருந்து கொண்டே தன் முகத்தினால் பலவிதமான சுருள் ரேகையுடன் கூடின பல சக்கரங்களை வரைந்து பலவித

ரூபங்களில் பல மூர்த்திகளைப் (அதாவது தனது அவதார ரூபங்களை) பல வடிவங்களில் விளையாட்டாக வரைந்து வெகு காலத்திற்கு அங்கேயே இருந்து பின் மறைந்து விடுவதாகக் கூறப்படுகிறது.

இப்பேர்ப்பட்ட வடிவங்களே நாம் சேவிப்பதற்கு உகந்தவையாகும். இவைகளில் ஸ்ரீமந் நாராயணனின் ஜீவரூபம் கலந்திருப்பதாக ஐதீஹம். இந்நிகழ்ச்சி (சாளக்கிராம உற்பத்தி) தொடர்ந்து அவ்வப்போது நடைபெற்றுக் கொண்டிருப்பதாகவும் ஐதீகம.

2. சாளக்கிராமங்கள் உருண்டையான வடிவத்திலும் தட்டையான வடிவத்திலும் முக்கோணத்தில் பாதிக்கூறான அரை முக்கோண வடிவிலும் சங்கு, நத்தைக் கூடு வடிவிலும் சுருள் சுருளான ரேகைகளுடன் கூடினதாகவும், துவாரங்களுடன் கூடினதாகவும், இன்னும் வடிவு சொல்லவியலாத சில வடிவங்களிலும் தோன்றுகின்றன. இங்குள்ளவர்கள் இதனைச் சாளக்கிராவா என்று அழைக்

3. சாளக்கிராமங்கள் எந்தவிதமான வண்ணத்தில் அமைந்துள்ளனவோ, அந்த ரூபங்கொண்ட விஷ்ணுவாசம் செய்யும் ஸ்தலமாகவே அவைகள் கருதப்ப(

1. வெண்மை நிற சாளக்கிராமம் வாசுதேவ க்ஷேத்திரம்.
2. கருமை நிற சாளக்கிராமம் விஷ்ணு க்ஷேத்தி ம.

3. பச்சை நிற சாளக்கிராமம் ஸ்ரீநாராயண க்ஷேத்திரம
4. பசும்பொன் (அ) மஞ்சள் சற்று மஞ்சள் கலந்து சிகப்பு நிற சாளக்கிராம் ஸ்ரீநரசிம்ம க்ஷேத்திரம்.
5. மஞ்சள் நிற சாளக்கிராமம் ஸ்ரீகிருஷ்ண க்ஷேத்திரம்.

இந்த வண்ணங்களுக்கேற்ப அவற்றின் பூஜாபலன்களும் மாறுபடுகின்றனவாம்.

| | | |
|---|---|---|
| நீல நிறம் | -- | செல்வத்தையும், சுகத்தையும் |
| பச்சை | -- | பலம், தைரியம் |
| வெண்மை | -- | ஞானம், பக்தி, மோட்சம் |
| கருப்பு | -- | புகழ், பெருமை |
| புகை நிறம் | -- | துக்கம், தரித்திரம் |

4. சாளக்கிராமத்தில் தெய்வீக சக்தி இருப்பது மட்டுமன்றி, அவற்றில் 14 உலோகங்கள் (உலோகங்களின் சக்திகள்) இருப்பதாகக் கூறப்படுகிறது. பூஜிக்கப்பட்ட சாளக்கிராமங்களை சாஸ்திர ஞானம் பெற்றவர்களிடமிருந்து வாங்கிக் கொள்ள வேண்டுமென்பது நியதி. இதைப் பால் அல்லது அரிசிமீது வைத்திருந்து பின்னர் எடுத்துப் பார்த்தால் அதன் எடை முன்பு இருந்ததை விடக் கூடுதலாக இருக்கும். துண்டிக்கப்பட்டிருந்தாலும் அல்லது விரிந்து போனதாய் இருந்தாலும் சாளக்கிராமம் எங்கு இருக்கிறதோ அங்கு தோசமில்லை. சாளக்கிராமம் உடைந்திருந்தாலும் அதில் சக்கர ரேகைகள் இருந்தால் அது மிகவும் சிறப்பம்சமாகும்.

5. "பாற்கடல் பிறந்தாலும் நத்தைதான் சாளக் கிராமமோ" என்ற முதுமொழி ஒரு பழைய தமிழ் நூலில் (சேது புராணம்) மேற்கோளாக எடுத்தாளப் பட்டுள்ளது. இதிலிருந்து நத்தை போன்ற, ஆனால் வேறொரு உயிரின் படிவமே சாளக்கிராமம் என்று நம் முன்னோர்கள் அறிந்திருக்கின்றனர்.

6. எம்பெருமான் ஜாதி சமய வேறுபாடற்றவர் என்பதும், அவர் விரும்புவது அன்பு நெஞ்சம் மட்டுமே என்பதற்கும எமது இல்லத்தையே ஒரு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். முறையாக சாளக்கிராமங்களைப் பூஜிக்கும் குடும்பமும் அன்று. அப்படிமத்தை யாரும் பார்த்தது கூட கிடையாது. பெருமாள் கோவிலில் தூர இருந்து மட்டுமே பார்த்திருக்கிறோம். ஆனால் முக்தி நாராயண சேத்திர சாளக்கிராம ஸ்தலத்தில் இருந்து எங்கள் வீட்டில் வந்து அன்புடன் குடிகொண்டுள்ளார். ஜன்மாந்திரத் தொடர்பிருந்தால் தான் இப்படி அவரே தேடி வருவாரென்று இதைக் கண்ணுற்ற பெரியவர்கள் கூறினார்கள். கடந்த 35 வருடங்களாக எங்களுக்குத் தெரிந்தவகையில் நாங்கள் செய்யும் அபிஷேக பூஜைகளை பிரியமுடன் ஏற்றுக்கொண்டு எங்களுக்கு எவ்விதக் குறைவும் வராமல் பாதுகாத்து வருகிறார். இதையே நாங்கள் பெற்ற பெரும் பேறாகக் கருதுகிறோம்.

7. இயற்கையில் மிகத் தொன்மையான அற்புதமான இந்தச் சிருஷ்டியில் நம் முன்னோர்கள் இறைத் தத்துவத்தைக் கண்டது நமது மரபாகும்.

## 36. திருவடமதுரை (மதுரா)

ஸ்ரீ ஆண்டாளால் மங்களாசாசனம் செய்யப்பட்ட இத்தலம் வடநாட்டில் மதுரா என்றழைக்கப்படும் கிருஷ்ணபூமியாகும். இராமஜென்ம பூமியைப் போலவே இத்தலமும் பெருஞ்சிறப்புற்றுப் பக்திலயத்தில் திளைத்துக் கொண்டிருக்கிறது.

### சிறப்புகள்

1. கிருஷ்ண ஜென்ம பூமியாகிய மதுரா, கிருஷ்ணன் ஆடியும் பாடியும், ஆநிரை மேய்த்தும் கன்றுகள் பின்திரிந்தும் களித்திருந்த பிருந்தாவனம், ஆநிரை களையும் கோபால கோபியரையும் காக்க குன்றைக் குடையாக எடுத்துப் பிடித்த கோவர்த்தன கிரி என்னும் கோவர்த்தனம் இம்மூன்றும் சேர்த்தே மங்களாசாசனமாகக் கொள்வர். இந்த மூன்று இடங்களும் ஒரு முக்கோண வடிவில் அமைந்துள்ளது. ஆழ்வார்கள் பிருந்தாவனத்திற்கும் கோவர்த்தனத்திற்கும் தனித் தனிப் பதிகங்களால் மங்களாசாசனம் செய்துள்ளனர்.

2. மதுராவில் ஸ்ரீகிருஷ்ணன் பிறந்த சிறைச்சாலை இருந்த இடத்தில் ஜென்மபூமி என்ற பெயரில் ஒரு புதிய கோவில் கட்டப்பட்டுள்ளது. இதுதான் மதுராவாகும்.

3. மதுரா செல்பவர்கள் மதுரா, பிருந்தாவனம், கோவர்த்தனகிரி, இங்கிருந்து சற்றுத் தொலைவில் அமைந்துள்ள கோகுலம் இவைகளை வரிசைப் படுத்திப் ஒவ்வோர் இடத்திலும் ஒவ்வொரு நாள்

தங்கி கண்ணன் லீலைகளை மானசீகமாக உணர்ந்து திவ்யமான பக்தி உணர்வில் திளைத்துத் திரும்பி வரலாம். கோகுலாஷ்டமி சமயத்தில் இங்கே சென்றால் ஆடல் பாடல்களும் திவ்ய நாம பஜனைகளும், உபந்யாசங்களும், கிருஷ்ண நாடகங்களும் ஒரே விழாக் கோலமாகத்தான் இருக்கும்.

4. ஆழ்வார்களால், மங்களாசாசனம் செய்யப்பட்ட கோவில்களும், மூர்த்திகளும் தற்போது இல்லை என்று சொல்கிறார்கள். இருப்பினும், இந்தப் பிரதேசம் முழுவதுமே ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப்பட்டுள்ளதால் இப்பகுதி முழுவதுமே திவ்யதேசம்தான். தற்போது இந்த இடங்களில் இரண்டு ஆலயங்கள் எழுப்பப்பட்டு துவாரகா நாத்ஜி, மதுரா நாத்ஜி என்று அழைக்கப்படுகின்றன.

# 37. கோகுலம் (ஆய்ப்பாடி)

பெரியாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப்பட்ட இந்தக் கோகுலம் என்னும் ஆயர்பாடி டெல்லியிலிருந்து ஆக்ரா செல்லும் இரயில் பாதையில் உள்ள மதுரா இரயில் நிலையத்திலிருந்து சுமார் 8 மைல் தூரத்தில் உள்ளது.

இத்தலம்பற்றியும், கோகுலம்பற்றியும் ஸ்ரீமத் பாகவதம் உட்பட எண்ணற்ற வடமொழி நூல்கள் எடுத்தியம்பியுள்ளன. சுருக்கமாக இதன் வரலாற்றை ஒரே வரியில் சொன்னால் கண்ணனின் பால பருவ வளர்ச்சி தான் கோகுலம்.

சிறப்புகள்

இங்கு யமுனையை அடைந்ததும் கண்ணன் வாசனை வந்து விடுகிறது. புராண்கோகுல் என்றழைக்கப்படும் இந்த பழைய கோகுலத்தில் யமுனை நதிக்கரையில் ஒரு ஸ்தலம் அமைந் துள்ளது. இங்கு நந்தகோபர், யசோதை, பலராமன், மற்றும் தொட்டில் கிருஷ்ணர் ஆகியோர் எழுந்தருளியுள்ளனர். இங்குள்ள விக்ரகங்கள் யாவும் மரத்தினால் செய்யப்பட்டவையாகும். மர விக்ரகங்கள் காண்பதற்குப் பேரெழில் பொருந்திய வையாகும்.

2. இது கண்ணன் வளர்ந்த ந்டமல்லவா. எனவே தான் சீர் மல்கும் ஆய்ப்பாடி என்றார். இங்கு தினமும் ஆட்டமும், பாட்டமும், கூத்தும் கொண் டாட்டமாகத் திகழ்ந்ததென்பதைப் பெரியாழ்வார் கூறுகிறார்.

அயோத்தியைப் போலவும், துவாரகை போன்றும் பரபரப்பாகக் காணப்படாவிடினும் அமைதி தவழும் ஆரண்யம்போல் திகழ்கிறது கோகுலம்.

கண்ணன் பூதகியைக் கொன்றது, கம்சவதம் செய்தது, கன்றுகள் மேய்த்துத் திரும்பியது, நந்தகோபர் வீட்டுக்கு முன் இருந்த மரங்களை முறித்தது, கோபியரோடு ஆடியது, சிற்றில் சிதைத்தது என்று ஆயர்பாடி வரலாற்றை நாளெல்லாம் சொல்லிக் கொண்டிருக்கலாம்.

எம்பெருமானை "ரஸோ வைஸா" என்று வேதம் வர்ணிக்கிறது. அதாவது நீதான் சிறந்த ரஸம். பகவானைவிடச் சிறந்த ரஸனை உள்ளவன் இல்லை என்று வேதம் வர்ணிக்கிறது.

ரஸோ வைஸ என்பது கிருஷ்ணா வதாரத்திற்கே அதிலும் குறிப்பாக, கோகுல வாசத்திற்கே சாலவும் பொருந்தும் என்பது பெரியோர் வாக்கு.

# 38. திருத்துவாரகை

குஜராத்தின் தலைநகரமான ஆமதாபாத்திலிருந்து வீராம்காம் வழியாக ஓகா செல்லும் இரயில் ஏறி இத்தலத்தை அடையலாம். ஓகா செல்லும் பாதையில் துவாரகா ஓர் இரயில் நிலையமாகும்.

தற்போதுள்ள ஆலயம் 1500 ஆண்டுகட்கு முன் கட்டப்பட்டதாகும். உண்மையான துவாரகை கடலுள் மூழ்கி விட்டது. இக்கோவிலை இங்குள்ள மக்கள் துவாரகா நாத்ஜி ஆலயம் என்றே அழைக்கிறார்கள். இப்போதுள்ள கோவிலும் நான்காவது முறையாகக் கட்டப்பட்டதாகும். கடந்த 5000 ஆண்டுகளாக அவ்வப்போது ஏற்பட்ட கடல் கோளாலும், பிற இன்னல்களாலும் இத்தலம் பாதிக்கப்பட்ட போதெல்லாம் மீண்டும் மீண்டும் புதுப்பிக்கப்பட்டுள்ளது. தற்போதுள்ள அமைப்பு சுமார் 1500 ஆண்டுகட்கு முன்பு புதுப்பிக்கப்பட்ட அமைப்பாகும்.

கண்ணபிரானின் சரித்திரத்தோடும், பாரதப் போரினோடும் பின்னிப் பிணைந்து கிடக்கும் இந்தத் துவாரகாபுரி அமைந்துள்ள மாநிலம்தான் இன்றைய இந்தியா சுதந்திரம் பெறக் காரணமான மகானையும் ஈன்று அன்றுபோல் இன்றும் தன் ஒல்காப் புகழை நிலைநிறுத்திக் கொண்டிருக்கிறது.

*சிறப்புகள்*

1. இங்கு செங்கோல் செலுத்தி மன்னாதி மன்னனாக வாழ்ந்த கண்ணபிரானைத் துவாரகா நாத்ஜி என்றே இங்குள்ள மக்கள் அழைப்பர். எவ்வளவு அதிசய

மாற்றங்கள் வந்தாலும் இங்குள்ள மக்கள் கண்ணனே தங்கள் மன்னன் என்று எண்ணி வாழ்கின்றனர். தங்களைத் துவாரகா நாத்ஜியின் பிரஜைகளாக இன்றும் எண்ணி இறுமாப்பெய்துகின்றனர்.

2. இங்குள்ள ஸ்ரீகண்ணன் கோவில் மிகப் பெரிய அரண்மனைபோன்று அமைந்துள்ளது. இங்கே கண்ணனுக்கு உணவும், உடையும் ஓயாமல் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். ஒரு நாளைக்கு 17 முறை உணவு கொடுத்து மணிக்கொரு தரம் உடை மாற்றுகிறார்கள். காலையில் இங்கு நடைபெறும் திருப்பள்ளி எழுச்சியை உடாபன் என்றழைக்கிறார்கள். அப்போது தங்கப் பல் குச்சியால் பல் விளக்கி லட்டும், ஜிலேபியும் தருகிறார்கள். 7.30 மணிக்குள் தீர்த்தமும் பிரசாதமும் படைக்கப்படுகிறது. உண்ட களைப்பு மாறுவதற்குள் மீண்டும் 8.00 மணிக்கெல்லாம் சர்க்கரை, பால், தயிர் போன்றன பரிமாறுகிறார்கள். பிறகு அப்பமும், அக்காரம் பாலிற் கலந்த சிற்றுண்டியும், அமுதும் செய்கிறார்கள். அதன் பிறகு கனி வர்க்கங்கள் இவ்வாறு சாப்பிட்டுக் கொண்டேயிருக்கிறார். இதனால் பயந்து போய் உணவு செரிமானம் ஆயிற்றோ என்னவோ என்று கருதி செரித்தலுக்கான லேகியம் தருகிறார்கள். இதன் பின் கண்ணன் சயனம் கொள்கிறான். இவ்விதம் கண்ணனுக்கு உணவு கொடுக்கும் இந்த முறைக்கு (திருவாராதனத்திற்கு) "போக்" என்று பெயர்.

3. அரண்மனை எவ்வாறு கலகலப்பாக இருக்குமோ அதேபோல் இங்கு யாத்ரீகர்கள் (பாடிக் கொண்டும், ஆடிக் கொண்டும்) கூட்டம் கூட்டமாக வருவதால் எந்நேரமும் கலகலப்பு களைக் கட்டியிருக்கின்றது. இங்கு பெண்கள் கூட்டங்களையும் அவர்களின்

உடைகளையும் பார்க்கும்போது ஆயர்ப்பாடி கோபிகைகளின் நினைவே நமக்கு வருகிறது. கண்ணன் இருக்கிறான், கோபியர்கள் இருக்கிறார்கள். ஆநிரைகள் மட்டும் எங்கே சென்று விடும். இங்கே ஊருக்குள் திரியும் ஆநிரைகளை மக்கள் கண்ணனின் ஆநிரைகளாகவே அவைகளைத் தொடுவதில் மகிழ்ச்சி கொள்வதும், அவைகட்கும் பூச்சூட்டி மகிழ்வதும் அவைகள் பொலிவு தோன்ற இறுமாந்து நின்று செம்மாந்து திரிவதும் சிந்தனையைத் தூண்டுவது மட்டுமன்றிக் காணக் கிடைக்காத ஒரு தெய்வீகம் கலந்த காட்சியாகும்.

4. முக்தி தரும் 7 ஸ்தலங்களுள் இதுவும் ஒன்று. கேட்டதும் கொடுப்பவனுமான கிருஷ்ணன் தன்னை நாடிவரும் பக்தர்கட்கு இங்கிருந்து கொண்டு மோட்சம் கொடுப்பதால் மோட்சத்திற்குத் துவாரமாக இந்த ஸ்தலம் கருதப்படுகிறது. இதனாலும் துவாரகை என்று பெயர் வந்தது என்பர்.

5. இங்கு கடலுக்குள் தற்போதும் ஒரு துவாரகை உள்ளது. இது ஒரு தீவு. எனவே இதனைத் தீவுத் துவாரகை என்பர். இங்குள்ள மக்கள் இதனை பேட்துவாரகா என்று அழைக்கின்றனர்.

6. இந்த பேட்துவாரகையைச் சேவித்துவிட்டு விராவல் என்னும் இரயில் நிலையத்தில் இறங்கினால் பிரசித்தி பெற்ற சோமநாதர் ஆலயம் செல்லலாம். இதற்கு அருகாமையில் அமைந்துள்ள பாலகா என்ற இடத்தில் ஒரு கிருஷ்ணன் ஆலயம் உள்ளது. கிருஷ்ணன் வைகுண்டம் போவதற்கு முன் இங்குள்ள அரசமரத்தடியில் சயனத் திருக்கோலத்தில் இருந்ததாக ஐதீகம். இன்றும் இந்த இடத்தில் கிருஷ்ணரின்

அரசரடி சயனத் திருக்கோலத்தைக் காணலாம். கிருஷ்ணன் சயன திருக்கோலத்தில் இருப்பது அநேகமாக 108 திவ்ய தேசங்களில் இந்த ஒரு இடத்தில் மட்டுமே என்று கூறலாம். துவாரகா புரியை மட்டுமே ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்திருப் பினும் நிகழ்ச்சிகளால் ஒன்றோடு ஒன்றாகப் பின்னிப் பிணைந்து கிடக்கும் இங்குள்ள ஸ்தலங்கள் யாவற்றையும் மங்களாசாசனம் செய்வதாகக் கொள்ளலாம்.

7. இங்கு செல்பவர்கள் தனிப் பிரயாணத் திட்டம் வகுத்து சுமார் 6 நாட்கள் வரை தங்கி ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் வாழ்க்கையோடு தொடர்புடைய இடங்கள், பேட்துவாரகை, விராவல் இரயில் நிலையத்திற்கு அருகில் உள்ள ஸ்தலங்கள் மற்றும் இங்குள்ள ப்ராபஸ தீர்த்தம், ஜீனகட் எனப்படும் இரயில் நிலையத்திலிருந்து 100 மைல் தொலைவில் உள்ள கிரிதார் என்னும் ரைவதமலை மற்றும் இங்கு வாழும் பெரியவர்களாலும், பக்தர்களாலும் சொல்லப்படும் புனித ஸ்தலங்களைத் தரிசித்து தீர்த்தாடனம் செய்து வருவது மிக்க விசேஷம்.

# 39. திருச்சிங்கவேள் குன்றம் (அகோபிலம்)

சென்னை பம்பாய் இரயில் பாதையில் உள்ள கடப்பா என்னும் இரயில் நிலையத்தில் இறங்கி அங்கிருந்து சுமார் 85 கி.மீ. தூரம் உள்ள அர்லகட்டா என்ற ஊருக்குச் சென்ற பின்னர் அங்கிருந்து அகோபிலம் செல்லும் பேருந்துகளில் ஏறி இத்தலத்தை அடையலாம். இங்கு மலையடிவாரத்தில் ஒரு கோயிலும், மலையின் மேல் ஒரு கோயிலுமாக இரண்டு கோயில்கள் உண்டு. மலையடிவாரத்திலிருந்து மலை மேல் உள்ள கோவில் சுமார் 10 கி.மீ.தூரமாகும். பிலம் என்றால் குகை. அஹோ என்னும் சொல் சிம்மத்தைக் குறிப்பது. ஆதலின் வடமொழியில் அஹோபிலம் ஆயிற்று. சிங்கவேள் என்று தூய தமிழால் சுட்டப்பட்டு குன்றத்தையும் சேர்த்து சிங்கவேள் குன்றாயிற்று.

கருடனுக்கு எம்பெருமானின் நரசிம்ம அவதாரத்தைத் தரிசிக்க வேண்டும் என்ற பேராவல் உண்டாக அவ்வவதாரத் தைத் தரிசிக்க இந்த மலைகளடங்கிய காட்டுப்பகுதியில் வந்து கடுந்தவமியற்றி வர, கருடனின் தவத்தை மெச்சிய எம்பெருமான் இந்த அஹோபிலம் மலையில் மீளவும் நரசிம்ம அவதாரம் செய்து காட்டினார். தூணிலிருந்து வெளிப்பட்டது. இரணியனைப் பிடித்து, கூர்நகங்களால் ஆக்ரோஷம் அடங்காமல் கர்ஜித்தது. பிரகலாதனின் வேண்டுகோளுக்கு இசைந்து சாந்த நரசிம்மனாக அமர்ந்தது போன்ற நரசிம்ம அவதாரத்தின் 9 தத்துவங்களை அர்ச்சா ரூபமாக 9 திருக்கோலங்களில் இங்கு காட்டி கொடுத்ததாக ஐதீகம். கருடன் தவமிருந்ததால் இந்த மலைக்குக் கருடாசலம் என்றும், கருடாத்ரி என்றும் பெயருண்டு. சேஷாத்ரியாக உயர்ந்திருப்பது வேங்கடமென்றால், கருடாத்ரியாக உயர்ந்திருப்பது அஹோபிலமாகும்.

## மலையடிவாரக் கோயில்

இதனைக் கீழ்அஹோபிலம் என்று சொல்வர். மூலவர் பிரகலாதவரதன், லட்சுமி நரசிம்மன் கிழக்கு நோக்கி வீற்றிருந்த திருக்கோலம் தாயார் அமிர்தவல்லி செஞ்சுலெட்சுமி.

## மலையின் மேல் உள்ள கோவில்

மூலவர் அஹோபில நரசிம்மர். தாயார் லெட்சுமி. இங்கு தான் நரசிம்ம அவதாரம் நிகழ்ந்ததாகவும் கூறுவர்.

## சிறப்புகள்

1. இங்கு 9 நரசிம்மர் கோவில்கள் உள்ளன. எனவே இதனை நவ நரசிம்ம சேத்திரங்கள் என்றும் வழங்குவர். மலையடிவாரத்திலும், மலையின் மேலுமாக மொத்தம் 9 நரசிம்மர்கள்

    1. அஹோபில நரசிம்மன்
    2. வராக நரசிம்மன்
    3. பாவந நரசிம்மன்
    4. காரஞ்ச நரசிம்மன்
    5. சக்ரவட நரசிம்மன்
    6. பார்க்கவ நரசிம்மன்
    7. ஜ்வாலா நரசிம்மன்
    8. மாலோலா நரசிம்மன்
    9. யோகாநந்த நரசிம்மன்

    இங்கு நரசிம்மன் வேடுவனாக வந்து லட்சுமி தேவியை மணந்ததாக ஐதீஹம். அதாவது கருடனுக்குக் காட்சி கொடுக்க, பெருமாள் வைகுண்டத்தை விட்டதும்,

பிராட்டியும் இவ்விடம் புக்கு வேடுவ குலமகளாய் அவதாரம் செய்தனர் என்பர். லெட்சுமி தேவி இங்கு செஞ்சு லெட்சுமி என்ற பெயரில் வளர்ந்து வர பெருமாள் வேடனாக வந்து திருமணம் புரிந்தார். பெருமாள் இங்கு வேடர்களுடன் வேடராய் என்றும் சொல்வர்.

இங்கு மலையின் மேல் பாவநாசினி என்னும் நீர்வீழ்ச்சி உள்ளது. இதன் தரைவழியே மேலே சென்றால் வராஹ நரசிம்மன் சந்நதியைச் சேவிக்கலாம். இங்கிருந்து 1½ மைல் தூரம் சென்றால் மாலோல நரசிம்ம சேத்திரம் உள்ளது. இங்கிருந்து மேலும் 2 மைல் தொலைவு சென்றால் ஸ்ரீநரசிம்ம அவதாரம் எடுத்த தூண், நரசிம்மன் தூணிலிருந்து வெளிப்பட்ட இடம் உள்ளது. இங்கு தகுந்த துணையுடன் செல்ல வேண்டும். அல்லது பிரம்மோத்ஸவம் நடைபெறும் சமயமான மாசி மாதம் சென்றால் கூட்டமாகச் செல்லும் பக்தர் குழாத்துடன் செல்லலாம். பொதுவாகவே இங்கு மலைமேல் உள்ள எல்லா நரசிம்மர்களையும் சேவிப்பது கடுமையான செயலாகும். கரடு முரடான பாதைகள் மட்டுமின்றி, காட்டு மிருகங்கள் நடமாடக் கூடிய இப்பகுதிகள் உண்டு.

3. அஹோபிலமடம் வைணவ சமய வளர்ச்சியில் ஒரு தனிப்பெரும் இடம் வகிக்கிறது. வானமா மலைபோல், திருவரங்கம்போல், திருமலை போல் வைணவ சம்பிரதாய வளர்ச்சியில் அஹோபிலமடம் முதன்மையும் முக்கியத்துவ மும் வகிக்கிறது. அஹோபில மடத்தின் நிர்வாகத்தின் கீழ் எண்ணற்ற கோவில்களும்,

நூலகங்களும், கல்விக் கூடங்களும் மத சம்பந்தமான ஆய்வுகளும் நடந்து வருகின்றன. அஹோபில மடங்களுக்குத் தலைமைப் பீடம் இதுதான். இங்கு தற்போது பெரிய மடங்களும் விசாலமான மண்டபங்களும், உயர்ந்த கட்டிடங் களும் நிறைந்து அஹோபிலம் களைகட்டி நிற்கிறது. வடகலை சம்பிரதாயப்படி இயங்கி வரும் இந்த அஹோபில மடத்தின் ஒவ்வொரு ஜீயர் சுவாமிகளும் ஒரு குறிப்பிடத்தக்கப் பெரும் பணியைச் செய்திருக்கின்றனர். இந்த மடத்தின் அழகிய சிங்க ஜீயர் சுவாமிகள்தான் ஸ்ரீரங்கம் தெற்குராய கோபுரத்தின் நின்றுபோன பணியைத் துவக்கி அதனை ஆசியாவிலேயே பெரிய கோபுரம் ஆக்கி அரங்கனுக்குச் சமர்ப்பித்து அழியாப் புகழ் படைத்துப் பெருஞ்சாதனை புரிந்துவிட்டார்.

4. அழகிய சிங்கர் என்ற பெயரில் இங்குள்ள நரசிம்மனைச் சேவிக்க ஓர் இளைஞர் வந்தார். அப்போது பெருமாளே ஒரு சந்நியாசி ரூபத்தில் வந்து அவருக்குக் காட்சி கொடுத்து மந்திர உபதேசம் செய்து அவரைத் துறவறத்தில் சேர்த்து இங்குள்ள இராமானுஜர் சந்நதியில் இருந்து துறவாடையினையும் திரிதண்டத் தையும் கொடுத்து ஸ்ரீசடகோபஜீயர் என்ற திருநாமத்தையிட்டு ஒரு வைணவ ஸ்தாபனத் தை நிறுவுமாறு அருளியதாக ஐதீகம்.

அப்போது அந்த ஜீயருக்கு வயது 17. பெருமாளால் ஜீயர் சுவாமிகட்கு உபதேசிக்கப் பட்ட மந்திரத்திற்குப் பிரேஷ மந்திரம் என்று பெயர். தான் எந்த உற்சவ மூர்த்தியை வைத்துக் கொண்டு திருவாராதனத்தில் ஈடுபடுவதென்று ஜீயர் பெருமாளிடம் வேண்ட, பெருமாள் இங்குள்ள உற்சவ மூர்த்தியான மாலோல

நரசிம்மனை ஜீயரின் கரங்களில் ஒப்படைத்தார். அன்று முதல் தொடர்ந்து வரும் அனைத்து ஜீயர்களும் இந்த மூர்த்தியைத்தான் தாம் செல்லும் இடங்களுக்கு எல்லாம் எழுந்தருளப் பண்ணி, ஆராதனை செய்து வருகின்றார்கள். ஸ்ரீரங்கம் கோபுரத்தைக் கட்டி முடித்த அழகிய சிங்கர் ஜீயர் திருவரங்கம் வந்தபோது இந்தப் பெருமாளும் திருவரங்கம் வந்து விட்டார்.

ஜ்வாலா நரசிம்மன், மாலோல நரசிம்மன், நரசிம்மம் வெளியான தூண் இன்னும் மலைமேல் உள்ள முக்கியமான இடங்கள் ஆகியவற்றைத் தரிசிக்க சுமார் 3 நாட்களாவது தங்க வேண்டும். மலைமேல் உள்ள கோவில்களுக்குச் செல்வது மிகவும் கடினம் என்பதால் தகுந்த துணையுடன் செல்வது அவசியம். பெரும்பாலும் மாலைப்பொழுதுக் குள் தரிசனம் முடித்துவிட்டு கீழே இறங்கி, பிறகு மறுநாளும் மலைமீது ஏறி தரிசனம் முடித்து விட்டு மாலைப்பொழுதுக்குள் திரும்பி வருமாறு பயணம் அமைத்துக் கொள்ளலாம். பல்வேறு கோணங்களில் ' மலை மேல் செல்ல வழிகள் இருப்பதால் நிதானமாக எல்லா வழிகளையும் தெரிந்துக்கொண்டு ஒரு நாளைக்கு ஒரு வழி வீதம் சென்று மலை ஏறி பெருமாளைச் சேவித்துத் திரும்பலாம்.

# 40. திருவேங்கடம் (திருப்பதி)

தமிழகத்தின் வட எல்லையாகத் திகழும் வேங்கடம் இன்று ஆந்திராவிற்குள் இருக்கிறது. பண்டைத் தமிழ்நாட்டிற்கு எல்லையாகத் திகழ்ந்து தமிழ் மணம் பரப்பிய வேங்கடம் ஆங்கிலேயரை விரட்டி அடித்து சுதந்திர இந்தியா மாகாணங்களாக உருப்பெற்ற போது ஆந்திராவிற்குள் நுழைந்து விட்டது. சென்னையைத் தமிழ்நாட்டுக்குக் கொடுத்து விட்டு வேங்கடத்தை ஆந்திராவிற்குத் தந்து விட்டனர். நிலத்தால் பிரிந்து நின்றாலும் அடியார்கள் நினைவில் நீங்காது இடம் பெற்று விட்டது திருப்பதி.

இத்தலம்பற்றி எழுதப்புகின் அல்லது அறியப்புகின் கிடைக்கின்ற ஆதாரங்களும், விவரங்களும் ஏராளம் ஏராளம். இத்திருமலைக்கு ஒவ்வொரு யுகத்திலும் ஒரு சிறப்பான நிகழ்ச்சியால் ஒவ்வொரு விசேடமான பெயர் வழங்கி வந்தது.

கிரேதாயுகத்தில் : கருடாத்ரி அல்லது கிரிடாத்திரி
திரேதாயுகத்தில் : வ்ருஷபாத்ரி
துவாபர யுகத்தில் : அஞ்சனாத்ரி
கலியுகத்தில் : வேங்கடாத்ரி (வேங்கடாசலம்)

இத்திருமலையின் வைகுண்ட வாசனான ஸ்ரீனிவாசப் பெருமாள் மிகவும் விருப்பம்கொண்டு நேரில் வர விரும்பி அவ்விதமே அவதார ரூபத்தில் எழுந்தருளி வசித்து வருவதாகவும், கலியுகம் முடியும் வரை பக்தர்கள் குறைத்தீர்க்க இங்கேயே வசித்து வருகிறார் என்றும் அதன் காரணமாகவே முப்பத்து முக்கோடி தேவர்களும் சகல ரிஷிகளும் இத்திருமலைமேல் வந்து எம்பெருமானைத்

துத்தவண்ணம் வாழ்ந்து வருகின்றனர் என்றும் புராணங்கள் கூறுகின்றன. திருமலைக்குச் செல்ல நினைப்பதும், செல்வதும் பாக்கியம். அங்கு சென்று ஸ்ரீனிவாசனை சேவிப்பது பெரும்பாக்கியம். கேட்ட வரங்களை எல்லாம் தரும் கலியுகத் தெய்வம் இந்த திருவேங்கடத்தான் என்று வேதங்கள் அறுதியிடுகின்றன.

ஸ்ரீனிவாசனாகப் பெருமாள் இங்கு எழுந்தருளுவதற்கு முன்பே வராக மூர்த்தியாக இவ்விடத்து எழுந்தருளி வராகரூபியாய்க் காட்சித் தந்தருளினார். வராக சேத்திரம் என்றே ஒரு காலத்தில் இது புகழ் பெற்றிருந்தது. தற்போதும் இங்குள்ள ஸ்வாமி புஷ்கரிணிக்கு அருகில் அமைந்துள்ள ஆதிவராகரைச் சேவித்த பின்பே ரீனிவாசனைச் சேவிக்கச் செல்ல வேண்டும் என்பது

ஆதிவராக சேத்திரம் என்னும் திருவேங்கடம் மொத்தம் மூன்று பிரிவுகள் கொண்டது.

முதல் பிரிவு

திருப்பதி. இதனைக் கீழ்த்திருப்பதி எனவும் பகர்வர். இங்கு பெருமாள் சயனத் திருக்கோலம்.

மூலவர் கோவிந்தராஜப் பெருமாள். கிழக்கு நோக்கிய புஜங்க சயனம்.

தாயார் புண்டரீகவல்லி. இங்கு ஆண்டாள் உடையவருக்கும் தனித் தனி சன்னதிகள் உண்டு.

இரண்டாம் பிரிவு

திருமலை. இது மலைமேல் உள்ள கோவில். மூலவர் திருவேங்கடமுடையான், ஸ்ரீனிவாசன், வெங்கடாசலபதி,

பாலாஜி, ஏழுமலையான், வேங்கடத்தான் என்று பல திருநாமங்கள். கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலம்.

மூன்றாம் பிரிவு

திருச்சானூர். இதை அலமேலு மங்காபுரம் என்றும் கூறுவர். தாயார்தான் மூலவர். அலர்மேல்மங்கை, பத்மாவதி என்னும் திருநாமங்கள். கிழக்கு நோக்கி அமர்ந்த திருக்கோலம்.

சிறப்புகள்

1. வேங்கடகிரி என்றும், சப்தகிரி என்றும் பல பெயர்களில் அழைக்கப்படும் இம்மலை ஏழு மலைகளால் ஆனது. ஸப்த என்பதற்கு ஏழு என்பது பொருள். கிரி என்னும் சொல் மலைகளைக் குறிக்கும். எனவே ஸப்தகிரி என்றும் ஸப்தபர்வதங்கள் என்றும் இம்மலை குறிக்கப்படுகிறது. அந்த 7 மலைகள் எவையெனில்,

    1. வேங்கடாத்ரி
    2. சேஷாத்ரி
    3. வேதாத்ரி
    4. கருடாத்ரி
    5. விருஷபாத்தரி
    6. அஞ்சனாத்ரி
    7. ஆனந்தாத்ரி

2. தொண்டரடிப் பொடியாழ்வார், மதுரகவியாழ்வார் ஆகிய இருவர் தவிர மற்ற 10 ஆழ்வார்களும் இம்மலையைப் பற்றியும், வேங்கடவனைப்பற்றியும் பாசுரங்கள் சமர்ப்பித் துள்ளனர். மொத்தம் 202 பாக்களுக்கு மேல் மங்களா சாசனம் செய்யப்பட்டுள்ளது. வேங்கடவனுக்கு

ஆழ்வார்கள் அருளிய மங்களாசாசன பாக்களைத் தொகுத்து ஸ்ரீவேங்கட மங்களாசாசனம் என்னும் தனிப் பெரும் நூலொன்றே செய்து விடலாம். ஒவ்வொரு ஆழ்வாரும் ஒவ்வொரு வகையில் வேங்கடவனின் மகிமை களைக் கூறி நிற்பதை எழுத்துக்களில் அடக்கிவிட முடியாது.

3. குலசேகர ஆழ்வார் திருமலையில் வாழும் தாவரங்களி லோ, பிராணிகளிலோ, ஒன்றாகப் பிறக்க மாட்டேனா என்று மன்றாடுகிறார். திருமலையில் ஒரு படிக்கல்லாகக் கிடந்து வேங்கடவனைத் தரிசிக்க மாட்டேனா என்று படியாய்க் கிடந்து பவளவாய் காண்பேனா என்கிறார். இதனால்தான் திருவேங்கட முடையானின் முன் இருக்கும் பொற்படிக்கு குலசேகரப்படி என்றே பெரியோர் பெயரிட்டுள்ளனர்.

4. கலியுகம் முடியும் வரை தனது சானித்தியத்தை இங்கே இருந்து வழங்கி பக்தர்கட்கு அருள்பாலித்து பாவங்களைப் போக்கி நிற்கிறார் என்பது ஐதீகம்.

5. அஹோபில மடத்தின் முதல் ஜீயர் சுவாமிகளான ஸ்ரீஆதிவன் சடகோப தீந்தரமகாதேசிகன் என்னும் ஜீயர் திருமலைக்குப் படிக்கட்டுக்களை முதன் முதலில் அமைத்தவர்.

6. இத்திருமலையில் தீர்த்த கைங்கர்யம் செய்து கொண்டிருந்த திருமலை நம்பிகள் இராமனுஜருக்கு இராமாயணப் பாடம் கற்றுத் தந்தவர் ஆவர். மணவாள மாமுனிவரும் இங்கு பலமுறை எழுந்தருளியுள்ளார்.

7. திருமலை வேங்கடவன் கோவில் திருச்சானூர், அலமேல்மங்கை கோவில் இரண்டினையும்

தொண்டைமான் கட்டியதாக வரலாறு. இங்குள்ள சுற்று மண்டபங்கள், யாகசாலை, கோபுரங்கள். தானியக் களஞ்சியம், கொடியேற்று மண்டபம் போன்றன தொண்டைமான் கட்டியதாகும். இங்கு காணப்படும் கல்வெட்டுகளில் தொண்டைமானின் கட்டிடப் பணி குறிக்கப்பட்டுள்ளது. இன்றும் இத்தலத்தின் உட்புறச் சுவர்களில் மூலஸ்தானத்தைச் சுற்றி வரும் நடைபாதைகளும், மண்டபங்களைத் தாங்கி நிற்கும் தூண்களிலும், தமிழ் கல்வெட்டுகள் உள்ளன. பண்டைய நாகரி எழுத்துக்களினாலான கல்வெட்டுக்களும், தமிழின் தற்போதைய எழுத்து முறை உருவாவதற்குச் சமீப காலத்திற்கு முன்னிருந்த தமிழ் எழுத்துக்களைக் கொண்ட கல்வெட்டுக்களும் உள்ளன. நூல்கள் பலவற்றிலும் தொண்டை மன்னன் எனவும் கூறப்பட்டுள்ளதேயன்றி மன்னனின் பெயர் குறிப்பிடப்படவில்லை.

8. இராமானுஜர் திருமலைக்கு வந்தபோது இப்பெருமானின் கைகளில் சங்கு சக்கரங்கள் இல்லாததால், இத்தெய்வத்தை சிவன் என்றும் இந்து மதத்தின் வேறு பிரிவுகளில் தெய்வமென்றும் பலவாறு கூறி நிற்க, இதையறிந்த இராமானுஜர் தொண்டைமானின் வேண்டுகோளுக் கிணங்க மற்றவர்கட்கு தெரியாமல் இருந்த சங்கு சக்கரங்களை யாவரும் காண அருளவேண்டுமென்று வேங்கடவனை வேண்ட அவ்விதமே ஆயிற்று என்பர்.

9. இராமானுஜர் திருவேங்கடத்தில் சங்கு சக்கரங்கள் தோன்றக் காரணமாய் இருந்தார். திருக்கோட்டியூரில் திருமந்திரம் உலகுக்குத் தோன்றக் காரணமாயிருந்தார். திருவரங்கத்தில் கைங்கர்யம் உலகப் பிரசித்திப் பெறக் காரணமாயிருந்தார். மேலக்கோட்டை, திருநாராயண புரத்தில் செல்லப்பிள்ளை தோன்றக் காரணமாயிருந்தார்.

செல்லும் இடங்களில் எல்லாம் வைணவம் தழைத்தோங்கக் காரணமாயிருந்தார்.

10. தீர்த்த மகிமை மிக்க திருவேங்கடத்தில் சுமார் 40 நாட்கள் தங்கி அனைத்துத் தீர்த்தங்களிலும் நீராடி அங்கப் பிரதட்சணம் செய்தும், சுப்ரபாதத்தின் போதும் வேங்கடவனைச் சேவிப்பவர்கள் தெளிவு பெற்ற மதியினராகவும், பெரும் பொலிவு பெற்ற தோற்றத்தையும் பெற்றவராகின்றனர் என்பதில் ஐயமில்லை. தீர்த்தாடனம் செய்யும் முறைபற்றியும் ஈண்டு சற்றுச் சொல்ல விரும்புகிறோம். தீர்த்தாடனம் செய்வதற்கு நித்தியம், நைமித்தியம், காமியம் என்ற மூன்று முறைகள் உள்ளன. நாள்தோறும் அதிகாலையில் நீராடுவது நித்தியம். சூரியனும் சந்திரனும் சேரும் அமாவாசையிலும், சூரியனும் சந்திரனும் சரிவிகிதக் கோணத்தில் இருக்கும் பௌர்ணமி தினங்களிலும், கிரகண காலங்களிலும், சூரியன் ராசிகளில் பிரவேசிக்கும் மாதப்பிறப்பு நாட்களிலும் புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவது நைமித்தியம். இன்ன தீர்த்தத்தில் மூழ்கினால் இன்ன பலன் கிடைக்கும் என்று எண்ணி அந்தத் தீர்த்தத்தில் மூழ்குவது காமியம். தீர்த்தயாத்திரையை நைமித்தியமாகச் செய்வது சிறப்பு. பலம் கருதாது புண்ணிய தீர்த்தத்தில் நீராடும்போது பகவான் நாமத்தை உச்சரிக்க வேண்டும். அவ்வாறு செய்யாதவர்கள் தீர்த்தத்திலேயே கிடப்பினும் தவளையைப் போன்றவர்கள்தான்.

11. இத்தகைய சிறப்பு பெற்ற இந்த வேங்கடவன் சகல பிணிகளையும் தீர்க்கும் மருத்துவன் என்றும் ஆழ்வார்கள் பாடியுள்ளனர்.

12. வேங்கடவனின் பெருமையை ஆழ்வாராலேயே உணர்த்த முடியாது என்று தலைக்கட்டும்போதும் பாவியேன் எங்ஙனம் கூற இயலும்.

# 41. திருப்பாற்கடல்

"பையர விணைப் பாற்கடலுள்
பள்ளி கொள்கின்ற பரம மூர்த்தி
உய்யவுலகு படைக்க வேண்டி
உந்தியில் தோற்றினாய் நான்முகனை
வையமனிசரைப் பொய் யென்றெண்ணிக்
காலனையு முடனே படைத்தாய்
ஐயனி யென்னைக் காக்க வேண்டும்
அரங்கத் தரவணைப் பள்ளியானே!"
- 427 பெரியாழ்வார் திருமொழி 4-10-5

பரமபதத்தில் வீற்றிருக்கும் பரமபதநாதன் பூவுலகைப் படைக்க எண்ணினான். மனிதர்களையும் செடிகொடிகளையும், மலை கடலையும் படைக்க எண்ணினான். உடனே தன்னை வ்யூக நிலைக்கு (ஆக்கல், காத்தல், அழித்தல் மற்றும் எல்லாம் செய்யவல்ல தேவர்களையும் படைக்க எண்ணி) மாற்றித் திருப்பாற்கடலுக்கு எழுந்தருளினான். பரமபதத்தில் இருந்தால் சிங்காசனமாகத் திகழ்ந்த ஆதிசேடன் திருப்பாற்கடலில் மெத்தையாகத் தன்னை விரித்துக் கொள்ள எம்பெருமான் சயன திருக்கோலத்தில் அணிகிளர் அரவின் அறிதுயிலமர்ந்த மணிவண்ணனாக அதாவது உலகமெல்லாம் வாழ உள்ளத்தில் சங்கல்பம் செய்து உறங்குவதுபோல உணர்வகலாது சயனித்திருப்பதே அரிதுயில் என்னுமாப்போலே எழுந்தருளினான். (உறங்குவான்போல் போகு செய்து என்று நம்மாழ்வார் தலைக் கட்டினாற்போலும் எழுந்தருளினான்)

உலகைச் சிருஷ்டிக்க எண்ணியவன் தன் நாபிக் கமலத்திலிருந்து செல்லும் தாமரையில் பிரம்மனைப் படைத்து உலகுண்டாக்கச் செய்தான். நிலையற்ற இம்மானிடத்தை அழிக்க எமனையும் படைத்தான். இவ்விதமான பரமனே நீ

தான் திருவரங்கத்திலே அர்ச்சாரூபியாக எழுந்தருளியுள்ளாய். என்னைக் காக்க வேண்டும் ஐயனே என்று பெரியாழ்வார் திருப்பாற்கடலில் எம்பெருமான் எழுந்தருளியிருப்பதை மங்களாசாசனம் செய்கிறார்.

திருப்பாற்கடல் என்பது இந்நிலவுலகில் இல்லை. பரமபதம் போன்று அதுவும் விண்ணுலகிலேயே உள்ளது. இந்த ஸ்தூல சரீரத்துடன் அங்கு செல்ல முடியாது. 106 திவ்ய தேசங்களைச் சேவித்த பின் இறைவன் திருவடிப்புகச் செல்லும் பக்தன் ஒருவனைப் பெருமாளே திருப்பாற்கடலுக்கு நேரில் அழைத்துச் சென்று சேவை சாதிக்கிறான் என்பது ஐதீகம்.

இதற்கு வெள்ளையந்தீவு என்ற பெயருமுண்டு. க்ஷீராப்தி என்னும் இந்த பாற்கடலில் பக்தர்களின் தரிசனத்திற்காக தன்னை வ்யூகப்படுத்தி அதாவது பல பிரிவாகப் பிரித்து வியூக வாசுதேவன் என்ற திருநாமத்தோடு யோக நித்திரையில் தம்மைச் சங்கர்ஷணன், ப்ரத்யுமனன், அநிருத்தன் என்னும் 3 உருவங்களாகப் பிரித்து ஆதிசேடனின் படுக்கையில் நிலமகளும் திருமகளும் திருவடி வருட பள்ளி கொண்ட நிலையாகும் திருப்பாற்கடல் வடிவம்.

**"செங்கமலத் திருமகளும் புவியும் செம்பொன்**
**திருவடியி னிணை வருட முனிவரேத்த**
**வங்கமலி தடங்கடலுள் அனந்தனென்னும்**
**வரியர வின்னணைத் துயின்ற மாயோன் காண்மின்"(1618)**

என்கிறார் திருமங்கையாழ்வார். இதில்

கிழக்கு பக்கம் சிரிப்புடன் கூடின —— வாசுதேவனாகவும்
தெற்கு நோக்கி சிங்கமுகமாக —— சங்கர்ஷணனும்
வடக்கு —— பிர்த்யுமனனாகவும்
மேற்கு —— அநிருத்தனாகவும் திகழ்கிறார்.

பக்தர்களின் அபயக் குரல், குறிப்பாக தேவர்களின் அபயக்குரல் கேட்டு பகவான் அபயமளிப்பது இவ்விடத்தில் தான். அதனால் இவ்வுலகுக்குக் கூப்பாடு கேட்கும் உலகு என்று பெயர். பாட்டுக் கேட்கும் உலகான பரமபதத்திற்கு தேவர்களும் செல்ல முடியாது. அது சித்திப்பது நித்ய சூரிகள் எனப்படும் முக்தர்கட்கு மட்டும் தான். எனவேதான் தேவர்கள் தங்கட்கு பிரச்சனை வரும் போதெல்லாம் அல்லது பிரச்சினைகளை உண்டாக்கிக் கொண்டு அல்லற்படும் போதெல்லாம் திருப்பாற்கடல் கரையருகில் நின்று எம்பெருமானைப் பள்ளியெழுப்பித் தமது முறையீட்டைத் தெரிவிப்பது வழக்கமாம்.

ப்ரளய காலம் வரைதான் திருப்பாற்கடல் வாசம். ப்ரளயம் முடிந்ததும் மீண்டும் பரமபதம். எனவே ப்ரளய காலத்தில் திவ்யதேசங்கள் மீண்டும் அவனுள் ஐக்கியமாகி விடுகின்றன. திவ்யதேசங்களுக்குத் தொடக்க திவ்ய தேசமாகவும் இதனைக் கொள்ளலாம்.

சங்கர்ஷணன் அநிருத்தன், ப்ரத்யுமனன் என்னும் 3 உருவங்களும் ப்ரளயகாலத்தில் வ்யூக வாசுதேவனோடு ஐக்கியமாகி விடுகின்றனர்.

*சிறப்புகள்*

1. குறிப்பிட்ட ஒன்றிரண்டு ஸ்தலங்களை 10 ஆழ்வார்களும் மங்களாசாசனம் செய்துள்ளனர். நிலவுலகில் இல்லாத இந்தத் திருப்பாற்கடலை ஒட்டுமொத்தமாகப் பத்து ஆழ்வார்களும் மங்களாசாசனம் செய்துள்ளனர். மொத்தம் 51 பாக்களை நல்கியுள்ளனர்.

2. இங்குதான் பிரம்மதேவன் படைக்கப்பட்டான். இதுவொன்றே இதன் தனிச் சிறப்பம்சமாகும்.

3. திருப்பாற்கடல் விண்ணில் எங்கோ உள்ளது. ஆனால் வடநாட்டுத் தலங்களில் ஒன்றாக இதனைக் கொண்டு நூற்றெட்டுத் திருப்பதிகளில் கணக்கிடப்பட்டுள்ளது. நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியிலும் அவ்வண்ணமே உள்ளது.

4. திருப்பாற்கடல் என்பது வங்கக்கடல் அல்ல என்பதும், பூர்வாச்சார்யார்களால் ஞானதிருஷ்டியால் நோக்கப்பட்ட விண்ணுலகில் உள்ள திருப்பாற்கடல் என்பதே சாலவும் பொருந்தும். பேயாழ்வாரின் மங்களாசாசனப்படி திருப்பாற்கடல் என்பது விண்ணுலகில் உள்ளதேயன்றி நில உலகில் உள்ள வங்கக்கடல் அல்ல.

5. வராகம், கூர்மம், மச்சம் என்னும் மூன்று அவதாரங்களை பாற்கடலில் கிடந்த வண்ணத்திலிருந்தே பெருமாள் மேற்கொண்டார் என்கிறார் பெரியாழ்வார்.

"பன்றியு மாமையு மீனமுமாகிய
பாற்கடல் வண்ணா" - 250

இம்மூன்று வெண்மை நிறத்தன என்பதும் இவ்வவதாரங்கள் கூப்பாடு கேட்கும் பாற்கடலில் இருந்து எடுக்கப்பட்ட அவதாரங்கள் என்பதும் ஆழ்ந்து சிந்திக்கத் தக்கதாகும்.

6. ஸ்ரீமகாவிஷ்ணுவின் பஞ்ச வ்யூகங்கள் (திருமால் தனது 5 நிலைகளில் தோன்றுதல் இங்குதான் ஆரம்பமாகிறது)

அ) திருப்பாற்கடலுக்கு சஷ்ராப்தி நாதனாக (பாற்கடல் வண்ணனாக) வந்துற்றது முதல் வாசுதேவன் அநிருத்தன், ப்ரத்யுமணன், சங்கர்ஷணன் என்றும் 4 வியூகங்களாகப் பிரிந்த நிலைகளும் சேர்ந்து பஞ்ச

வ்யூகங்கள் ஆகும். இந்த வ்யூக மூர்த்திகட்கும் சில திவ்யதேசங்கட்கும் தொடர்புண்டு.

1. **சஷ்ஷிராப்தி நாதன் என்னும் பாற்கடல் வண்ணன்**

திருக்கோட்டியூர் உரக மெல்லணையானாக ஸ்ரீதேவி பூமிதேவியுடன் எழுந்தருளியது.

2. **வாசுதேவன்**

திருநறையூரில் திருமகளை மணந்த திருக்கல்யாணக் கோலம்.

3. **அநிருத்தன்**

திருஅன்பில் அழகிய வல்லிநாச்சியாருடன் அருளல்.

4. **ப்ரத்யுமனன்**

திருவெள்ளறை. இங்கு ஸ்ரீதேவி மனித உருவில் நின்று கைங்கர்யம்.

5. **ஸங்கர்ஷ்ணன்**

உறையூர் கமலவல்லி என்ற பெயரில் சோழன் மகளாக வளர்ந்த திருமகளை மணத்தல். அதாவது பாற்கடலில் முதல்நிலையில் தேவிமாரோடு எழுந்தருள்கிறான். இதர வ்யூகங்கட்குப் பிராட்டிகள் மேற்படி திவ்யதேசங்களில் மேற்படி 4 நிலைகளில் நின்ற பெருமாளைச் சேர்ந்து எழுந்தருளுகின்றனர் என்பது ஐதீகம்.

# 42. திருப்பரமபதம்
## (திருநாடு, வைகுண்டம் பரம்)

"ஏன்றேன் அடிமை இழந்தேன் பிறப்பிடும்பை
ஆன்றேன் அமரர்க் கமராமை — ஆன்றேன்
கடன் நாடும் மண்ணாடும் கைவிட்டு, மேலை
இடநாடு காண இனி".

(2476) நான்முகன் திருவந்தாதி 95

பல்பிறப்பும் பிறந்து பெரும் துன்பமுற்று இழிவு பட்டேன். திருமாலே அமரர்கட்கும் வணங்காது உனக்கு அடிமையாக இருந்து கடல்நாடு மற்றும் மண்ணுலகில் உள்ள திவ்யதேசங்களில் எல்லாம் அமிழ்ந்தேன். அங்கெல்லாம் என்னை ஆற்றுப்படுத்திக் கொண்டேன். அமரர்கட்கு அடிமைப்படவில்லை. எனக்கே அடிமைப்பட்டு ஆன்றேன். இனி நான் இப்பூவுலகில் காணத்தக்க நின்திருவுருவ அச்சாவதாரங்கள் ஏதுமில்லை. இனி நான் அடைய வேண்டியது மேலை நாடான பரமபதம் ஒன்று தான். எனவே எனக்கு முக்தி வீடாகிய வைகுண்டத்தை கொடு. அதுவே இனிநான் அடைய வேண்டிய நாடாகும் என்று திருமழிசையாழ்வாரால் பாடப்பட்ட இத்திருநாடு என்பது யாண்டுள்ளது என்று எப்படிக் கூற முடியும்.

விஷ்ணுவின் அடியவர்கட்கு முக்தியில் நாட்டம் கொண்ட முக்தர்கட்கு திவ்ய தேசங்களில் ஊறித் திளைத்துப் போன பக்தர்கட்குத் திருநாடு மிகவும் சமீபம். அவனது சாயுஜ்யம் அவர்கட்கு மிகவும் சாமீப்யம். ஆம் இதிலெல்லாம் திளைத்தவர்களை அவனே வந்து தன் திருநாட்டுக்கு இட்டுச் செல்கிறான் என்பது ஐதீஹம். எனவே இந்த நாட்டிற்கு வழி அவனுக்கு மட்டுமே தெரியும்.

வைணவ அடியார்கட்கு, அவனையன்றித் தமக்குப் புகலிடம் யாதுமில்லை என்றெண்ணி அடியவர்கட்கு மோட்சத்தை நல்கும் இந்தப் பரமபதமே வைணவர்களின் கடைசி இலக்காகும்.

பரமபதத்திலிருந்து தன்னை வ்யூகப்படுத்தி விபவ, அர்ச்சாவதாரங்களில் தன்னைக் காட்டிக் கொடுத்து இவைகளைப் பரத்திலும் மேலானவை என்று எண்ணி ஆட்பட்ட அடியவர்களை, பூவுலகில் அவர்கட்கு விதிக்கப்பட்ட காலம் முடிவுற்றபின் அவனே வந்து அழைத்துச் செல்கிறான்.

மோட்சம் பெறுவதைக் குறிக்கோள் என்றெண்ணும் அடியார்கட்கு இந்தப் பரமபதமே எல்லை நிலமாகும். இத்திருநாட்டை அடைய இரண்டு பாதைகள் உண்டு.

1) எல்லாவற்றையும் துறந்து விட்டு அவன் ஒருவனே பற்றுக்கோடு என்றெண்ணி, மாயையில் இம்மியும் சிக்காது இருந்து அவனுக்கே கைங்கர்யம் கொண்டிருத்தல்.

2) வைணவ அடியார்கட்குப் பேதமற்ற தொண்டு செய்தல்.

சிறப்புகள்

1. இங்கு செல்லும் ஜீவாத்மாக்கள் நித்ய சூரிகள் ஆகின்றன. அதாவது எப்போதும் அழிவற்ற சக்தியைப் பெறுகின்றனர். இங்கு பகவானைப் போலவே சொரூபம் அவர்கட்கும் உண்டாகிறது. ஆயினும் பகவானோடு இரண்டறக் கலக்காமல் உடனிருந்து

கைங்கர்யம் செய்து கொண்டு எப்போதும் பல்லாண்டு இசைத்துக் கொண்டிருப்பர்.

2. நமக்கு இந்தப் பூவுலகில் இருக்கும்போதும், விசும்பைப்பற்றி (ஆகாயத்தைப்பற்றி) ஒன்றும் புரியாத புதிராக இருக்கும் நித்திய சூரியாகி இங்கு சென்றுவிட்டால் படைப்புகளும், பிரபஞ்சங்களும் என்னவென்று தெளிவாகத் தெரிவதால் இதற்குத் தெளி விசும்புத் திருநாடு என்று பெயர்.

3. இதற்கு மேல் அறிவதற்கு ஒன்றுமில்லையாதலால் எல்லை நிலம் என்பது பொருள்.

4. இங்கு அடையும் இன்பத்திற்கும் நலத்திற்கும் முடிவே இல்லாததால் நலமந்தமில்லதோர் நாடு என்பதும் இதற்குப் பெயர். இங்கு கிடைக்கும் இன்பத்திற்கு "அந்தமில் பேரின்பம் " என்று நம்மாழ்வார் பெயர் சூட்டியுள்ளார்.

5. வாசுதேவன் வைகும்படியான (வாழும்படியான) இருப்பிடமாதலால் வைகுந்தம் என்றும் பெயருண்டு.

"வைகுந்தா மணிவண்ணனே என்பொல்லா திருக்குறளா
வைகும் வைகல்தோறும் அமுதாய வானேறே!"
என்கிறார் நம்மாழ்வார்.

6. எம்பெருமானின் சகல ரூபங்களுக்கும் ஆதியானதாக, மூலமானதாக, உற்பத்தி ஸ்தானமாய்ப் பரமாய் இருப்பதால் பரமபதம் என்று பெயர்.

7. 8 ஆழ்வார்களால் 36 பாசுரங்களில் மங்களாசாசனம் செய்யப்பட்ட நாடாகும் இது. நம்மாழ்வார் வைகுந்தம்

செல்லும் காட்சிகளைப் பத்துப் பாசுரங்களில் விளக்குகிறார்.

8. திருநாடு செல்வோரை (மோட்சம் புகுவோரை) மண்ணும் விண்ணும் தொழும். அவர்கள் திருநாட்டிற்கு எழுந்தருளிய உடனே மண்ணுலகைச் சூழ்ந்துள்ள மேகக் கூட்டங்கள் எல்லாம் தூரியம் போல் முழங்குகின்றன. கடல் அலைகள் கையெடுத்து வணக்கம் செய்கின்றன. பூவுலகு இவ்வாறு மரியாதை செய்தால் விண்ணுலகில் தேவர்கள் விரைந்து வந்து எமதில்லத்தில் தங்குங்கள், எமதிருப்பிடத்திற்கு வாருங்கள் என்றழைத்து மரியாதை செய்கின்றனர்.

"சூழ்விசும் பணி முகில்
தூரியம் முழக்கின
ஆழ்கடலை திரைக்
கையெடுத்தாடின - என்றும்
எதிரெதிர் இமையவர்
இருப்பிடம் வகுத்தனர் - என்றும்
மாதவன் தமரென்று
வாசலில் வானவர்
போதுமின் எமதிடம்
புகுதுக வென்றலும் !"

என்று நம்மாழ்வார் திருநாடு செல்வோருக்கு வழிநடை கிடைக்கும் மாண்புயர் வரவேற்புகளை 10 பாக்களில் மங்களாசாசனம் செய்துள்ளார்.

# பிற்சேர்க்கை

## அஷ்டாங்க விமானம்

பகவான் எழுந்தருளியிருக்கும் விமானங்கள் 96 வகை என்று ஆகம சாஸ்திரங்கள் கூறும். அவற்றுள் மிக அருமையானது அஷ்டாங்க விமானம். திருக்கோட்டியூர், கூடல்மாநகர், உத்திரமேரூர் போன்ற ஸ்தலங்களில் விமானங்கள் அஷ்டாங்க அமைப்புடன் கூடியவை. இவை 8 அங்கம், 3 (தளம்) அடுக்குடையவை. அதாவது திருமந்திர மானது எட்டு எழுத்துக்களாகவும், மூன்று பதமாகவும் இருப்பதைப்போல திருவஷ்டாச்சர மந்திரத்தின் ஸ்தூல வடிவமாக இவைகள் திகழ்கின்றன. ஸ்ரீமந்நாராயணன் திருமேனி இந்த மந்திரத்தில் அடங்கி 8 அம்சங்களாக விமானத்தில் நிறைந்திருக்கின்றன என்பது பொருள்.

## துளசியைப்பற்றி பாத்ம புராணம்

எந்த இடத்தில் துளசிச் செடி வளர்ந்திருக்கிறதோ அங்கே மும்மூர்த்திகளுடன் சகல தேவதைகளும் வாசம் செய்கிறார்கள். சூரியனைக் கண்டதும் இருள் மறைவது போல துளசியின் காற்றுப் பட்டாலே பாவங்களும் ரோகங்களும் விலகி விடும். துளசி இலையைத் தெய்வப் பிரசாதமாக உண்பவர்கட்கு சகல பாபங்களும் தொலையும்.

எவரது இல்லத்தில் துளசிச் செடிகள் நிறைய இருக்கிறதோ அந்த இடம் புண்ணியமான திருத்தலம். அங்கு அகால மரணம், வியாதி முதலியன ஏற்படாது. துளசிச் செடிகளைத் திருமாலின் அம்சமாக மதித்துப் பூஜை செய்ய வேண்டும். துளசி தளத்தால் திருமாலை அர்ச்சனை செய்து பூஜிப்பவர்க்கு மறுபிறவி கிடையாது.

அனுமார் இலங்கையில் சீதா தேவியைத் தேடி அலைந்தபோது ஒரு மாளிகையில் துளசி மாடத்தையும், நிறைய துளசி செடிகளையும் கண்டு இங்கு யாரோ ஒரு விஷ்ணு பக்தர் இருக்கிறார் என்று யூகித்தாராம். அங்கு இறங்கி விசாரித்தபோது அது விபீஷ்ணரின் மாளிகை என்று தெரிய வந்ததாம்.

சீதை துளசியைப் பூஜை செய்ததின் பயனாக அவளுக்கு இராமபிரான் கணவராக கிடைத்தார் என்று துளசி இராமாயணம் கூறுகிறது.

துளசி தளம் கலந்த ஸ்ரீமந்நாராயணனின் ஸ்ரீபாத தீர்த்தத்தைப் பருகுபவர்களுக்கு மறுபிறப்பு இல்லை. அகால மரணம், உடல், உள்ளம்பற்றிய வியாதிகள் எல்லாமே விலகும் என்கிறது ஆயுர்வேதம்.

துளசி எடுப்பதை ஸ்ரீவைஷ்ணவர்கள் திருத்துழாய் எழுந்தருளப் பண்ணுதல் என்பர். நம்மாழ்வார் திருவிருத்தத்தில்

**"வாராயின முலையாளிவள் வானோர் தலைமகனாம்**
**சீராயின தெய்வ நன்றோயிது தெய்வத் தண்ணந்துழாய்**
**தாராயினும், தழையாயினும் தன் கொம்பதாயினும் கீழ்**
**வேராயினும் நின்ற மண்ணாயினும் கொண்டு வீசுமினே!"**
**(2530)**

என்ற பாசுரத்தில் விஷ்ணுவுக்கு துளசி மாலை, தழை, கொம்பு, வேர் நின்ற மண், ஆகிய ஏதாகினும் ஒன்றால் அர்ச்சிக்க வேண்டும்.

கருடாழ்வார்

நாம் பெருமாள் கோயிலுக்குள் சென்றதும் முதலில் வணங்க வேண்டியது கருடனைத்தான். அவர் சன்னதிக்கு எதிரே பெருமாளை நோக்கிக் கைகூப்பி வணங்கிய நிலையில் ஒருபுறமும், மறுபுறம் ஆஞ்சநேயரும் வீற்றிருப்பர். இவர்களைப் பெரிய திருவடி என்றும், சிறிய திருவடி என்றும் கூறுவர். இவர்களை வணங்கிய பின் சன்னதிக்குள் நுழைய வேண்டும்.

கருடன் என்ற சொல் "கருட்" என்ற சொல்லில் இருந்து பிறந்ததாகும். கருட் என்றால் "இறக்கை" என்று பொருள். கருடனுக்கு அழகே அதன் பெரிய இறக்கைகள் தான். இதிலிருந்தே கருடன் என்ற பெயர் ஏற்பட்டது. கருடன் சப்தமிடும் ஓசை சாமவேதத்தை ஒலிப்பதுபோல் இருக்கும். அது மட்டுமல்ல. இப்பறவை பறவைகளின் அரசனாகக் கருதப்படுகிறது. இராமாயணத்தில் ஜடாயு என்ற கழுகரசன் காட்டின் ஒரு பகுதிக்கு தலைவனாக இருந்தது பற்றிக் கூறப்பட்டுள்ளது. கருடனைப் பட்சி ராஜா என்றும் சொல்வர்.

தட்சன் சிவபெருமானின் மாமனார். இவரது மகள் வினதாவுக்கும், காஷ்யப முனிவருக்கும் குழந்தையாக அவதரித்தார் கருடன். இவருக்குத் தாயின் பெயரே முதலில் சூட்டப்பட்டது. விநதேயன் என்று வழங்கப்பட்டார். ஆவணி மாதம் சுக்ல பஞ்சமி திதியில் பிறந்தவர். நட்சத்திரம் சுவாதி. பெரியாழ்வாரும் சுவாதியில் பிறந்தவர். எனவே இவரைக் கருடனின் அம்சம் எனக் கூறுவதுண்டு. சூரியன் துலாம் ராசியில் உலா வரும் போது சுவாதி நட்சத்திர நாளில்தான் கடலில் கிடக்கும் சிப்பிகளில் முத்து உருவாகும். அதே போன்று முத்துக்கு முத்தாகப் பிறந்தவர் கருடாழ்வார். இவர் திருமாலின் வாகனமாக இருந்து

அவருக்குத் தொண்டு செய்கிறார். திருப்பதியில் புரட்டாசி பிரம்மோற்சவத்தின் ஐந்தாம் நாள் நடக்கும் கருடசேவை மிகவும் விசேஷமானது. காணக் கண் கோடி வேண்டும்.

ஆஞ்சநேயர்

பஞ்சபூதங்களில் ஒன்றான வாயு தேவனுக்கும், அஞ்சனா தேவிக்கும் பிறந்தவர் அனுமன். மார்கழி மாத மூல நட்சத்திரத்தில் பிறந்தவர். மார்கழி மாதம் அதிகாலையில் வாயுபுத்திரர் ஆஞ்சநேயரை வணங்குவது மிகவும் நல்லது.

ஸ்ரீராம நாம சங்கீர்த்தனங்களும், பஜனைகளும் எங்கெல்லாம் ஒலிக்கிறதோ அங்கெல்லாம் நிச்சயமாகச் சிறிய திருவடியாகிய ஆஞ்சநேயர் வீற்றிப்பார் என்பது நிதர்சனமான உண்மை.

"அஞ்சிலே ஒன்று பெற்றாள்
அஞ்சிலே ஒன்றைத் தாவி
அஞ்சிலே ஒன்றாக ஆரியர்க்காக ஏகி
அஞ்சிலே ஒன்று பெற்ற அணங்கைக்
கண்டு அயலார் ஊரில்
அஞ்சிலே ஒன்றை வைத்தான் அவன்
எம்மை அளித்துக் காப்பான்!"

இதில் வரும் "அஞ்சிலே" என்ற சொல்லுக்குரிய விளக்கம் பற்றி சற்று பார்ப்போம்.

முதல் "அஞ்சிலே" என்பது பஞ்சபூதங்களில் ஒன்றான வாயுவுக்குப் பிறந்தவன் அனுமன். அடுத்த "அஞ்சிலே" என்பது பஞ்சபூதங்களில் ஒன்றான தண்ணீர் (கடல்) தாண்டி இலங்கை சென்றது. அடுத்த "அஞ்சிலே"

என்பது ஆகாய மார்க்கத்தில் பறந்து, அடுத்த "அஞ்சிலே" என்பது பூமி தேவியின் மகளான சீதையைக் கண்டு, (ஜனகர் தங்கக் கலப்பையால் யாககுண்டத்திற்குப் பூமியைத் தோண்டும்போது கிடைத்தவள்) அடுத்த "அஞ்சிலே" என்பது இலங்கைக்குப் பஞ்சபூதங்களில் ஒன்றான நெருப்பையும் வைத்தான் என்பதாகும். கவிநயம்மிக்க இச் செய்யுள் இனி நமக்கு மறக்காதல்லவா!

**அத்யயனோத்ஸவம்**

திருவாய்மொழிக்கு வேதத்துக்குச் சமமான ஏற்றங் கொடுத்து ஆண்டுதோறும் மார்கழி மாதத்தில் நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழியைப் பாராயணம் பண்ணவும், அத்திருவாய் மொழிக்கென ஒரு பத்து நாள் விழா நடக்கவும், இராமானுஜர் ஏற்பாடு செய்து திவ்யதேசங்களில் வேத ஒலிகளுக்கு இருந்த முக்கியத்துவத்தைத் தீந்தமிழ்ப் பாசுரங்களுக்கு உண்டாகச் செய்தார். இதற்கு "அத்யயனோத்ஸவம்" என்று பெயர்.

ஆண்டுதோறும் திருவரங்கத்தில் வைகுண்ட ஏகாதசிக்குப் பின் 10 நாட்களுக்கு அத்யயனோத்ஸவம் என்ற பெயரால் திருவாய்மொழித் திருவிழா நடந்து வருகிறது. இது பின்னால் திவ்யதேசங்களிலும் பின்பற்றப்படலாயிற்று.

இவ்விதம் தமிழ்ப் பாக்களுக்கு ஆலயங்களில் 10 நாள் திருவிழா எடுத்துத் தமிழுக்கு விழா எடுக்கும் புதுமையை முதன் முதலில் செய்தவர் இராமானுஜரே.

மார்கழி மாதம் வளர்பிறை பிரதமை திதி முதல் தசமி திதி முடிய 10 நாள் விழாவிற்குப் பகல்பத்து என்று பெயர். இதில் திருப்பல்லாண்டு, முதலாயிரம், கண்ணி நுண்

சிறுத்தாம்பு, திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் ஆகிய இரண்டாயிரம் பாசுரம் இசைக்கப்படும்.

தசமிக்கு மறுநாளான வளர்பிறையின் ஏகாதசி திதி முதல் தேய்பிறையின் பஞ்சமி திதி முடிய 10 நாள் விழாவிற்கு இராப்பத்து என்று பெயர். இதில் திருவாய்மொழி, ஆயிரம் பாசுரம் இசைக்கப்படும். இதற்கு மறுநாளான இருபத்தியோராவது நாள் இயற்பா ஆயிரமும் இசைக்கப்படும்.

இப்பாடல்களை எம்பெருமானே இனிமையுடன் கேட்பதால் தாளத்தோடு இசைக்க இசை வல்லாரான அரையர்களையும் இராமானுஜர் நியமனம் செய்தார். எனவே இதற்கு அரையர் சேவை அல்லது அரையர் இசை எனப் பெயருண்டு.

உத்திராயணம் தேவர்கட்கு உரிய காலமாகும். தை முதல் ஆனி முடிய உள்ள 6 மாதகாலமே உத்திராயணமாகும். நமது ஒருவருடம் தேவர்கட்கு ஒரு நாளாகும். இதில் உத்திராயணம் பகற்பொழுதாகவும், தட்சிணாயணம் இரவுப் பொழுதாகவும் கணக்கிடப்படும்.

உத்திராயணம் தை மாதம் துவக்கம் என்றால் அதற்கு முதல் மாதமான மார்கழி மாதம் (பகல் பொழுதுக்கு முன்பாக உள்ள) பிரம்மமுகூர்த்தமான அதிகாலைப் பொழுதாகும்.

இந்தத் தேவர்களின் அதிகாலைப் பொழுதான மார்கழி மாதத்தில் நாலாயிர திவ்யபிரபந்தத்தைத் தாள ஜதி சேர்ந்த இன்னிசையுடன் இசைப்பது 12 வருடம் செய்த பூஜா பலனுக்கு உரியதாகும்.

## ஸ்ரீபவிஷ்ய புராணம்

இது 18 புராணங்களில் ஆறாவது புராணமாகும். பவிஷ்யவெனில் வரப்போவது எனப் பொருள். இதனை பவுடிய புராணம் என்றும் சொல்வர். இப்புராணம் பரமேஸ்வரன் பரந்தாமனுக்குக் கூறியது. பரந்தாமன், நாரதனுக்கும், நாரதன் சுக்கிரனுக்கும், சுக்கிரன் பராசுரனுக்கும், பராசுரன் வியாசருக்கும் உபதேசித்தது.

கலியுகத்தில் தோன்றப் போகின்ற அரசவம்சம், காலநிலை, கல்கி அவதாரம் போன்றவைகளுடன் புண்ணிய பாரத தேசத்தில் மட்டுமின்றி அயல்நாட்டு ஆட்சியாளர்கள், அவர்களது மதம், பழக்கவழக்கம்பற்றியும் இந்நூலில் வியத்தகு முயற்சியில் விவரிக்கப்பட்டுள்ளது.

## இராமானுஜரின் ஆலயச் சீர்த்திருத்தம்

இன்று ஆலயச் சீர்த்திருத்தம்பற்றி பல மேடைகளில் பேசுகின்றனர். ஆனால் இவைகளை எல்லாம் சொல்லிலும், செயலிலும் காட்டியவர் இராமானுஜர். தாழ்த்தப்பட்டவர் கட்குச் சமத்துவம் தரவேண்டும் என்று இன்று பேசுகிறார்கள். ஆனால் அன்றைக்கே இராமானுஜர் பிற்பட்டவர் என்று சொல்லும் ஆதிதிராவிடர்களைத் திருக் குலத்தார் என்று பெயரிட்டு ஆலயப் பிரவேசம் செய்வித்துப் புரட்சி செய்தவர். இன்றைக்கும் திருநாராயண புரத்தில் வருடத்தில் 3 நாட்கள் ஆதிதிராவிடர்கள் பெருமளவில் கோவிலின் கர்ப்பக் கிரஹத்திற்குள் நுழைந்து பெருமாளை ஆலிங்கனம் செய்து வணங்கும் வழிபாடு நடைமுறையில் உள்ளது. ஸ்ரீபெரும்புதூரிலும் ஆதி திராவிடர்கட்கு ஏற்றமுண்டு. இங்கு நடைபெறும் உற்சவத்தின் ஏழாம் நாளன்று ஆதி திராவிடர்கள் வந்து இறைவனை வணங்கித்

தேர் வடம் தொட்டு இழுக்கின்றனர். இதற்குப் பின்னே மற்றவர்கள் உள்ளே அனுமதிக்கப்படுகின்றனர்.

அனுஜன் என்றால் தம்பி என்று பொருள். ஆகவே இராமானுஜன் என்றால் இராமனின் தம்பி என்று பொருள். இராமனின் தம்பி இலக்குவன். ஆதிசேஷன்தான் இலக்குவன். அதே ஆதிசேஷன்தான் இராமானுஜனாகவே வந்தான். இராமானுஜன் சந்நதி எங்கெல்லாம் இருக்கிறதோ அவ்விடத்தில் ஒரு இராம விக்ரகம் மாடத்திலாவது இருக்கும். இந்த விஷயம் பலபேருக்குத் தெரியாதபடியால் இராமானுஜன் சந்நதியில் அவரை மட்டுமே சேவித்து விட்டுத் திரும்புவர்.

**இராமானுஜருக்கு 5 ஆச்சார்யார்கள்**

1. பெரியநம்பி
2. பெரியதிருமலைநம்பி
3. திருவரங்கப் பெருமாளரையர்
4. திருமலையாண்டான்
5. திருக்கோட்டியூர் நம்பி

பிரம்ம சூத்திரம்

வேதவியாசர் எழுதிய பிரம்ம சூத்திரத்திற்கு மூன்று உரைகள் உள்ளன.

1. ஆதிசங்கரர் அத்வைத பரமாக எழுதிய உரை ஒன்று
2. மத்வர் துவைத பரமாக எழுதிய உரை ஒன்று
3. ஸ்ரீராமானுஜர் வசிஷ்டாத்வைத பரமாக எழுதிய உரை

ஸ்ரீஇராமானுஜர் காஷ்மீரில் உள்ள சாரதா பீடத்திற்கு எழுந்தருளியபோது சரஸ்வதி தேவி இவரிடமே தனது ஐயங்களைத் தீர்த்துக் கொண்டதன்றி இவரது ஸ்ரீபாஷ்யத்தைச் சிராவகித்து, ஸ்ரீபாஷ்யகாரர் என்ற பட்டத்தையும் இவருக்கு அருளினார்.

## வைகுண்ட ஏகாதசிபற்றிய ஒரு குறிப்பு

திருப்பாற்கடலைக் கடையும்போது வைகுண்ட ஏகாதசி அன்று விஷம் தோன்றியது. மறுநாள் துவாதசி அன்று பக்தர்கள் அகத்திக்கீரை செய்து சாப்பிடுவார்கள். அகத்திக்கீரைக்கு அமிர்தபிந்து என்று ஒரு பெயருண்டு. அமிர்தபிந்து என்றால் அமிர்த துளி என்று பொருள். இதை அகத்திய முனிவன் மூலிகை என்றும் கூறுவர். துவாதசி அன்று அகத்தியைச் சாப்பிடுதல் திருப்பாற்கடல் அமிர்தத்தை சாப்பிட்டதற்கு ஒப்பாகும்.

## அஷ்ட திக்கஜங்கள்

இந்த சிஷ்ய வர்க்கத்தை உருவாக்கியவர் மணவாள மாமுனிகள்.

1. வானமாமலை ஜீயர்
2. பட்டர் பிரான் ஜீயர்
3. திருவேங்கிட ராமானுஜ ஜீயர்
4. கோயில் அண்ணன் ஜீயர்
5. பிரதிவாதி பயங்கரம் ஜீயர்
6. எறும்பியப்பா
7. அப்பிள்ளை
8. அப்பிள்ளாய்

## வாழி திருநாமம்

"அத்திகிரியருளாளரடி பணிந்தோன் வாழியே
அருட்கச்சி நம்பியுரை யாறு பெற்றோன் வாழியே
பத்தியுடன் பாடியத்தைப் பகர்ந்திட்டான் வாழியே
பதின்மர் கலையுட் பொருளைப் பரிந்துகற்றான் வாழியே
சுத்தமகிழ் மாறனடி தொழுதுய்ந்தோன் வாழியே
தொல் பெரியநம்பி சரண் தோன்றினான் வாழியே
சித்திரையிலாதிரை நாள்சிறக்க வந்தோன் வாழியே
சீர்பெரும்பூதூர் முனிவன் திருவடிகள் வாழியே!"

"எண்டிசையெண் ணிளையாழ்வாரெதிராஜன் வாழியே
எழுபத்துநால் வர்க்கெண்ணான் குரைத்தான் வாழியே
பண்டை மறையைத் தெரிந்த பாடியத்தோன் வாழியே
பரகால னடியிணையைப் பரவுமவன் வாழியே
தண்டமிழ்நூல் நம்மாழ்வார் சரணானான் வாழியே
தாரணியும் விண்ணுலகும் தானுடையான் வாழியே
தெண்டிரைசூழ் பூதூரெம்பெருமானார் வாழியே
சித்திரையிற் செய்ய திருவாதிரையோன் வாழியே!"

"அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே
அடர்ந்துவரும் குதிட்டிகளை யறத்துரந்தான் வாழியே
செறுகலியைச் சிறிது மறத்தீர்த்துவிட்டான் வாழியே
தென்னரங்கர் செல்வ முற்றுந்திருத்தி வைத்தான் வாழியே
மறையதனில் பொருளனைத்தும் வாய் மொழிந்தான் வாழியே
மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே
அறமிகு நற்பெரும்பூதூர் அவதரித்தான் வாழியே
அழகாரும் எதிராஜர் அடியிணைகள் வாழியே!"

## தனியன்கள்

"நேற்றுளார் இன்றுமாளா நின்றனர் அதனைக்கண்டும்
போற்றிலேன் நின்னை அந்தோ போக்கினேன் வீணேகாலம்
ஆற்றிலேன் அகண்டானந்த அண்ணலே அளவில்மாயைச்
சேற்றிலே இன்னம்வீழ்ந்து திளைக்கவோ சிறியனேனே!"

"இருப்பதுபொய் போவதுமெய் யென்றெண்ணி நெஞ்சே
ஒருத்தருக்கும் தீங்கு யுன்னாதே - பருத்த தொந்தி
நம்மதென்று நாமிருகக நாய் நரிகள் பேய் கழுகு
தம்மதென்று தாமிருக்குந் தான்!"

"நொந்துடலம் கிழமாகித் தளர்ந்தபின்
நோயில் நடுங்கிடும்போது - ஜீவ
நாடிகள் நைந்திடும்போது - மனம்
எண்ணிடுமோ தெரியாது - இன்று
சிந்தை கசிந்துனைக் கூவுகின்றேன் அருள்
செய்திடுவாய் ஹரி நாராயணா!"

"நீடுகபம் கோழை ஈழை நெருக்கி என்
நெஞ்சை அடைத்திடும் போது - விக்கி
நாவும் குழறிய போது - மனம்
எண்ணிடுமோ தெரியாது - நான்
அன்றுனைக் கூவிட இன்றழைத்தேன் எனை
ஆண்டருள்வாய் ஹரி நாராயணா!"

"ஐம்பொறியும் கரணங்களும் வாயுவும்
ஆடி அடங்கிடும்போது - எந்தன்
ஆவி பிரிந்திடும்போது - மனம்
எண்ணிடுமோ தெரியாது - இன்று
நம்பி உனைத்தொழுதே அழைத்தேன் ஜகன்
நாயகனே ஹரி நாராயணா!"

"உற்றவர் பெற்றவர் மற்றவர் சுற்றமும்
ஒவென்று நின்றழும் போது - உயிர்
ஓசைகள் ஒய்ந்திடும் போது - மனம்
எண்ணிடுமோ தெரியாது - இன்று
பற்றி உனைப்பணிந்தே அழைத்தேன் ஆபத்
பாந்தவனே ஹரி நாராயணா!"

"என்பொருள் என்மனை என்றதெல்லாம் இனி
இல்லை என்றாகிடும் போது - மனம்
எண்ணடுமோ தெரியாது - நீ
அன்றுவரும் பொருட்டின் றழைத்தேன் அருள்
அச்சுதனே ஹரி நாராயணா!"

"வந்தெம தூதர் வளைந்து பிடித்தெனை
வாவென் றிழுத்திடும் போது - மனம்
எண்ணிடுமோ தெரியாது - அந்த
அந்தியம் நீவர இன்றழைத்தேன் ஸச்சி
தானந்தனே ஹரி நாராயணா!"

**********

"எந்தரோ மஹானுபாவுலு -- அந்தரிகி வந்தனமுலு"

சுபம்

இந்நூலை எழுதுவதற்கு உறுதுணையாக இருந்த வணக்கத்துக்குரிய ஆசிரியர்களும், அவர்கள் இயற்றிய நூல்களும்:

1. வைணவ புராணங்கள் - டாக்டர். ந. சுப்புரெட்டி

2. திருஅருள்மொழி - ஸ்ரீராம கிருஷ்ண மடம் அச்சகம்

3. ஆழ்வார்கள் வழிக்குரவர் வரலாறு - கா.ர. கோவிந்தராச முதலியார்

4. ஸ்ரீ நாலாயிர திவ்யப் பிரபந்தம் - ஸ்ரீவத்ஸன்

5. 108 வைணவ திவ்ய தேச ஸ்தல வரலாறு - டாக்டர். R. எதிராஜன்

6. தமிழ் இலக்கிய வரலாறு - டாக்டர். பூவண்ணன்

7. திவ்விய பிரபந்த இலக்கிய வகைகள் - டாக்டர்.ம.பெ.சீனிவாசன்

நூலாசிரியர்

## திருமதி. பிரேமா விநாயகம்



அரசவைக் கலைஞர் கலைமாமணி வயலின் மாமேதை திரு. வி. கோவிந்தசாமி நாயக்கர், திருமதி. கோ. எத்திராஜம்மாள் அவர்களுக்கு 06.07.1946 அன்று மகளாய்ப் பிறந்தார். பள்ளிக் கல்வி இறுதியாண்டுவரை பயின்று திரு. D.விநாயகம் அவர்களை மணம் புரிந்து, தன் கடமைகளைச் செவ்வனே செய்துவிட்டு, ஆன்மீகப் பணிகளில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டுள்ளார்.

இவர் எழுதிய "சைவமும் வைணவமும் வழி காட்டும் ஆன்ம நெறி" என்னும் நூல், நல்ல பெயரைப் பெற்றுத் தந்ததுடன் வைணவ மகா சங்கத்தாரால் "வைணவ நூல் செல்வர்" என்ற பட்டத்தையும் பெற்றுத் தந்தது. இந்நூல் இந்திய ஜனாதிபதி **A.P.J.** அப்துல் கலாம் அவர்களின் பாராட்டைப் பெற்றது குறிப்பிடத்தக்கதொன்றாகும்.

திருவாசகம் அருளிய மாணிக்கவாசகரின் வாழ்க்கைக் குறிப்பை விரிவாகவும், பதிகக் கருத்துக்களை மிகத் தெளிவாகவும் கூறி, "திருவாதவூர் அமுதம்" என்னும் அரிய நூலை வெளியிட்டதில் பெருமகிழ்ச்சி அடைகிறார்.

இவர் எழுதிய ஆன்மீக இசைச் சித்திரம் அகில இந்திய வானொலியில் ஒலிபரப்பாகியுள்ளது, நிறைய கவிதைகளும், நாளேடுகளில் கட்டுரைகளும் எழுதியுள்ளார். தற்போது "ஆழ்வார்கள் அருளிய திவ்யபிரபந்தப் பிரவாகம்" எனும் வைணவ நூலை வெளியிட்டு அனைவரின் ஆசியை வேண்டியிருக்கிறார்.